இறுதியாக, இந்நூலை வெளியிட உரிமையளித்த திருவேங்கடவன் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பேராசிரியர் ஸ்ரீமான் S. V. J. லக்ஷ்மணன் அவர்களுக்கும் மற்றும் பலருக்கும் என் நன்றி உரித்தாகுக.

இந்நூல் புத்தக வடிவில் வெளிவரப் பேருதவி புரிந்தவர்கள் பலர், சிறப்பாக, திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார், ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி பெரிய கோவில் கேள்வியப்பன் திருவேங்கட ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி, சின்ன ஜீயர் ஸ்வாமி, ஸ்ரீஸ்ரீஸ்ரீ த்ரிதண்டி ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமி, சீதாநகரம், T. V. S. நிறுவனத்தார், ஸ்ரீமான் K. V. ரகுநாதன் (Bhimas) பகவத் விஷயத்தில் போது போக்கி வரும் என் தந்தை வழிப் பாட்டி ஸ்ரீமதி செ. மா. தங்கம்மாள் ஆவர். இவர்கள் அனைவர்க்கும் என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தெய்வப் பணிச் செம்மல் கோமதி அச்சகத்தாருக்கும், அவர்களைச் செயல்படுத்திய ஸ்டார் பதிப்பக உரிமையாளர் ஸ்ரீமான் இராமநாதன் செட்டியார் அவர்களுக்கும், தமிழ் வித்வான் ஸ்ரீமான் பூபதி அவர்களுக்கும், மற்றும் ஆழ்வார் திருமுகப் படத்தை அளித்துதவிய ரகு போட்டோ நிறுவனத்தாருக்கும் என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவிக்கிறேன். என்னை ஈன்றெடுத்துத் தெய்வத் திருமால் திருவருளையே நினைக்குமாறு வளர்த்து ஆளாக்கி அருளிய என் தாய்க்கும் தந்தைக்கும் என்ன கைம்மாறு செய்வேன்?

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

மதுரகவிதாஸன்

டாக்டர் M. வரதராஜன்

# பொருளடக்கம்

# நெறிமுறை விளக்கங்கள்

1. திவ்வியப் பிரபந்த உரையாசிரியர்கள் எங்கும் 'பதிகம்' என்ற சொல்லைப் பயன்படுத்தவில்லை. எனினும் இக்கால வழக்கத்தின்படி 'பதிகம்' என்ற சொல் 'ஒரு திருவாய்மொழி' என்று முன்னோர் குறித்த தொகுதியைக் காட்டுவதாக இவ் ஆய்வேட்டில் ஆளப் பட்டிருக்கிறது.

2. பதிகங்களின் முதற்குறிப்பை உணர்த்தும் முறையில் 1.4 என்று அடிக்குறிப்பில்/பின்னிணைப்பில் வந்த இடத்தில், முதல் எண் திருவாய்மொழியின் பெரும் பகுதியான பத்தையும், இரண்டாம் எண் அப் பத்தில் பதிகத்தின் இட வரிசையையும் குறிக்கும். இங்கு 1.4 என்றால் திருவாய்மொழியின் முதல் பத்தில் நான்காவது பதிகமான 'அஞ்சிறைய' என்பதாகும். மேலும் அது சீயர் அவதாரிகையையும் குறிக்கும்.

3. 6.1.8. என்ற முவ்வெண் குறியீடு ஆறாம்பத்தில் முதல் திருவாய்மொழி / பதிகம், எட்டாவது பாடல் என்பதனையும், அதற்கு உரிய சீயர் உரையையும் (12 படி) குறிக்கும்.

4. 4.1.6, 36, 24, 12— என்ற குறியீடு, நான்காம் பத்து, முதற் பதிகம், ஆறாவது பாடல், 'ஈடு', 'இருபத்து நாலாயிரப்படி'. 'பன்னீராயிரப்படி' என்று காட்டும்.

5. திருவாய்மொழிப் பாடல் மட்டும் காட்டும் இடங்களில் 'திரு- 2.4.3' என்று குறிக்கப்பட்டுள்ளது.

6. சீயா உரையிலிருந்து எடுத்தாளும் மேற்கோள் பகுதி களில் வரும வடசொற்களை ( ) என்ற குறியீட்டில் அடக்கி, அதற்குரிய தமிழாக்கம் முன்னர் குறிக்கப் பட்டுள்ளது.

7. இவ்வாய்வேட்டில பொதுவாகச் சீயர் என்றும், ஆழ்வார் என்றும், வருமிடங்களில் முறையே அழகிய மணவாளச் சீயர் என்றும், நம்மாழ்வார் என்றும் பொருள் கொள்ளவேண்டும்.

8. ஆய்வேட்டில் பாடலுக்கு அடிக்குறிப்புக் கொடுத்த எணகளெல்லாம் அப்பாடலைக் குறிப்பதோ டல்லாமல் சீயர் உரையையும் குறிப்பிடும்.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| ஆ.இ.நூ | ... | ஆசார்ய இருதயம் நூற்பா |
| இ.நூ.அ | ... | இராமாநுச நூற்றந்தாதி |
| உ.ஆ | .... | உரையாசிரியர் |
| உ.ர.மா.பா / உ.மா.பா | ... | உபதேசரத்னமாலை பாடல் |
| திரு. | ... | திருவாய்மொழி |
| தொல். பொருள் | ... | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| தொல்.உவ.நூ. | ... | தொல்காப்பியம் உவமவியல் நூற்பா |
| ந.நூ | ... | நன்னூல் |
| ப. | ... | பக்கம் |
| பக். | ... | பக்கங்கள் |
| ப.ஆ | ... | பதிப்பாசிரியர் |
| பா. | ... | பாடல் |
| பி.ப/பிர.ப | .... | பிரதிவாதி பயங்கரம் |
| பெ.திரு | .... | பெரியாழ்வார் திருமொழி |
| மு. நூ | .... | முன்னர்க் குறிப்பிட்ட நூல் |
| மேலது | ... | அந்த நூல் |
| ய.வே | .... | யஜுர்வேதம் |
| வா.ரா. | .... | வால்மீகி ராமாயணம் |

# இயல்—1

# தமிழிலக்கிய உரைவளர்ச்சியும் வைணவ பக்தி இலக்கிய உரைகளும்

இலக்கண உரை அறிவடிப்படையில் அமைவதால் உரையாசிரியருக்கிடையே பெரிதும் வேறுபாடின்றி அவ்வுரை அமையக் காணலாம். ஆனால், இலக்கிய உரை உணர்வின் அடிப்படையில் அமைவது ஆகவே, உரையாசிரியர்களின் வாழ்க்கை அநுபவத்திற்கேற்ப, உணர்வு நிலைக்கேற்ப, ஓரளவு வேறுபாடு நிகழ ஆங்கு வாய்ப்பு உள்ளது. பக்தி இலக்கிய விளக்கமோ, அறிவு நிலை, உணர்வு நிலை ஆகிய இவ்விரு தன்மைகளோடு மெய்யுணர்வு அநுபவத்தையும் தன்னகத்தே கொண்டது. எனவே, அதற்கு உரை எழுதப் புகுந்தார் தம் அறிவுத் திறத்திற்கேற்ப, உணர்வுப் பெருக்கத்திற்கேற்ப, மெய்யுணர்வு அநுபவத்திற்கேற்ப, அதன் உரையில் விளக்கமும் வேறுபாடும் அமைவது இயற்கையே. அதற்கு விளக்கம், வேறுபாடு, தனித்தன்மை ஆகியன பிற உரைகளின் பின்னணியில் ஈயர் உரையில் எவ்வெவ்வாறு அமைந்துள்ளன எனக் காண்பதே ஆய்வின் பொது நோக்கம். அந்நோக்கத்தின் ஒரு பகுதி பண்டைத் தமிழ் இலக்கிய உரைநூல்களும் உரையாசிரியர்களும், தமிழ் மற்றும் திவ்வியப் பிரபந்த உரைகளுள் பன்னீராயிரப்படி பெறும் இடம். வாழையடி வாழையென வளர்ந்த உரைகள்— ஒன்பதாம் நூற்றாண்டு முதல் பதினான்காம் நூற்றாண்டு வரை வளர்ந்த நிலைமை, உரைகள் எழுந்த வகையும் திருவாய்மொழியை உரையால் காத்த குணவாளர்களும் என்னும் நான்கு அடிப்படையில் விரிவாக இவ்வியலில் ஆயப் பெறுகிறது.

# தமிழிலக்கிய உரைவளர்ச்சியும் வைணவ பக்தி இலக்கிய உரைகளும்

## 1. 0. பண்டைத் தமிழிலக்கிய உரைநூல்களும் உரையாசிரியர்களும்

இந்திய நாட்டின் இருகண்கள் என்னும் சிறப்பை இலக்கியமொழிகளாகத் திகழும் தமிழும் வடமொழியும் எய்தியுள்ளன. அவற்றில் நீண்ட இலக்கிய வரலாற்றைப் படைத்த தமிழில் முதற்கண் மனிதன் அன்றாட வாழ்க்கையில் இன்புற்று வாழ வழிகாட்டும் நோக்குடன் சங்க இலக்கியங்கள் முகிழ்த்தன. அவை உரை விளக்கத் தேவையின்றி இயல்பாகவே அக்கால மக்கட்குப் புரியலாயின. இலக்கண நூல்கள் "உள்நின்று அகன்ற உரையோடு தான்" வரவேண்டுமாயினும் உரையின்றியும் நெடுங்காலம் வழங்கி வந்தன என்பர் பேராசிரியர்.[1] பிற்காலத்தில் இத்தகைய இலக்கியங்களைப் புலவர்கள் மட்டுமே ஆராய்ந்து அறியும் நிலை ஏற்பட்டது. ஆராய்ந்தறிந்தனவற்றை விளக்கும் பணியையும் அவர்கள் தொடர்ந்து மேற்கொண்டனர். இவ்வாறு நெடிது வாய்மொழி மரபிலேயே வாழ்ந்து வந்த இலக்கிய விளக்கங்கள் சுவடிகளில் உருப்பெற்றன. கற்றறிந்த சிலரே அந்நூல்களைப் பெரும்பாலும் செவிவழியாகக் கற்கும் வாய்ப்புப் பெற்றனர். அவை யாவும் மிகப் பிற்காலத்திலேயே, அச்சு எந்திரம் வந்த பிறகே, எல்லோருக்கும் கிட்டும்படியான உரைநூல் வடிவம் பெற்றன. இவ்விடைக் காலத்தில், காலந்தோறும் மாறுபட்ட சமூகத்திற்கு ஏற்ப இலக்கியங்கள் வளர்ச்சி பெற்றன. உரை விளக்கப் பகுதிகள் செய்யுள் நூல்களிலும் இடைப்புகுந்தன. பழம்பெருங் காப்பியமாகத் திகழும் சிலப்பதிகாரம் 'உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்' என்பதால் உரைநடையின் செல்வாக்கை உணரலாம். இவ்வாறு எழுந்த உரைநூல்களில், கி. பி எட்டாம் நூற்றாண்டில் எழுந்த களவியல் என்னும் நூலுக்கு நக்கீரர் எழுதிய உரையே மிகப் பழைமையானது என்பர்.[2]

பின்னர் அவ்வக் காலங்களில் வாழ்ந்த சான்றோர்களான புலவர்கள் தங்கள் சொல்வன்மையினாலும் கல்விச் சிறப்பினாலும் பழங்காப்பியங்களுக்கு உரையெழுதி உலகை வாழ்விக்க முற்பட்டனர். அவ்வகையில் எழுந்தது அடியார்க்குநல்லார் என்னும் உரையாசிரியர் எழுதிய சிலப்பதிகார உரை. இஃது அடியார்க்குநல்லார் உரை என்றே இன்றும் வழங்கி வருகிறது. அடுத்தது, இலக்கிய விளக்கங்களாக எழுதப்பட்ட உரைகளுக்குச் சான்று காட்ட வேண்டிய தேவை எழுந்தது. ஆதலால் சான்றாதாரங்களான இலக்கண நூல்களுக்கும் அவர்கள் உரை விளக்

கங்கள் எழுத முற்பட்டனர். அவ்வகையில் தொல்காப்பியத் திற்கு முற்பட உரையெழுதியவர் இளம்பூரணர் அதற்குப் பின் பேராசிரியர், நச்சினார்க்கினியர், சேனாவரையர் முதலான தமிழ்ப்புலவர்கள் உரைப்பணியைத் தொடர்ந்து செய்தனர். திருக்குறளுக்கு முதன்முதலாக உரையெழுதியவர் மணக்குடவர். அவர் உரையைத் தொடர்ந்து மேலும் உரைகள் எழுந்தன. இவ் வாறு திருக்குறளுக்கு அதன் திறனைப் போற்றும் வகையில் பண்டு பத்து உரைகள் எழுதப்பெற்றன.[3]

## 1. 1. உரையாசிரியர் உயர்தொண்டு

உரையாசிரியர்கள் ஆற்றிய உரைவிளக்கத் தொண்டு பெரிது. தமிழிலக்கியத்திற்கும் இலக்கணத்திற்கும் பெருமை தேடித் தந்த வர்கள் உரையாசிரியர்களே யாவர் இவ்வுண்மையைப் பண்டித மணி கதிரேசன் செட்டியாரின் 'உரைநடைக் கோவை' நன்கு உணர்த்தும்.

> "நூலாசிரியரின் அரிய கருத்துக்களை யெல்லாம் உரை யாசிரியர் உதவியாலேயே உலகம் உணர்ந்து இன்புறுகிறது பேருபகாரிகளாகிய உரையாசிரியர்களின் உதவியில்லை யாயின் பண்டை உயர்நூல்களாம் கருவூலங்களில் தொகுத்து வைத்த விலைவரம்பில்லாப் பொருள்மணிக் குவியல்களை யாம் எங்ஙனம் பெறுதல் கூடும்?"[4]

என்று பண்டிதமணி வருந்திக் கூறுவர்.

## 1 2. தமிழ் மற்றும் திவ்வியப் பிரபந்த உரைகளுள் பன்னீராயிரப்படி பெறும் இடம்

### 1. 2. 1 தமிழ் உரைநூல்களுள் பன்னீராயிரப்படி பெறும் இடம்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இலக்கிய வளர்ச்சி பெற்று வளர்ந்து வருவது தமிழ்மொழியே யாகும். தொன்மை வாய்ந்த தொல்காப்பியத்தில் தமிழ் என்ற சொல் முதன் முதலில் 'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து' எனச் சிறப்புப் பாயிரத்தில் வழங்கப்பட்டுள்ளது நினைக்கத் தக்கது.[5] இத்தகைய சிறப்பு வாய்ந்த தமிழ்மொழி மனிதனின் வாழ்க்கையை நெறிப்படுத்தச் சமய நூல்களையும், நீதிநூல்களை யும், காப்பியங்களையும், வேறு பல இலக்கியங்களையும் படைத்துத் தந்துள்ளது இவற்றில் முதற்பெருங் காப்பியமான சிலப்பதிகாரம், மனிதனின் வாழ்க்கைக்குத் தக்க அடிப்படை யான அறம்பிறழாத் தன்மையை 'அரைசியல் பிழைத்தோர்க்கு

அறம்கூற்று ஆவதூஉம்' என்ற தொடரினாலும், கற்புடைமையை 'உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்' என்ற தொடரினாலும், ஊழ்வினையின் இயல்பை, 'ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்பதூஉம்' என்ற தொடரினாலும் புகட்டி யுள்ளது.[6]

நீதி நூல்களுள் தலையானதான திருக்குறள் இல் வாழ்க்கைக்குத் தேவையான அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று உறுதிப் பொருள்களைப் பற்றியும் உணர்த்துகிறது. இப்படிப்பட்ட இலக்கியப் பனுவல்களைப் படைத்த தமிழ்மொழி, வாழ்க்கையின் குறிக்கோளான இறையநுபவத்தையும் வளர்க் காமல் விடவில்லை. சமய மறுமலர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்தவையும் ஆழ்வார்களால் அருளிச்செய்யபட்டனவுமாகிய நாலாயிரப் பனுவல்கள் கற்றோரும் மற்றோரும் கற்றும் கேட்டும் வாழ்வாங்கு வாழ்வதற்குத் தோன்றியனவேயாகும். சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்து பக்திநெறி, வாழ்க்கை இயல் என்ற இரண்டு கொள்கைக்கும் வழிவகுக்க முற்பட்டனர் உரையாசிரியர்கள். தமிழ்நூல்களுக்குத் தமிழிலக்கண இலக்கியங்களில் வல்லவரான உரையாசிரியர்கள் தோன்றி உரை யிட்டனர். ஆழ்வார்களின் பாடல்களுக்குத் தமிழோடு வடமொழி நூற்கடலையும் நிலைகண்டுணர்ந்த ஆசாரியர்கள் தோன்றி உரைகள் வகுத்தனர்.

தமிழ்நூலான திருக்குறளுக்குத் திருவள்ளுவர் வகுத்த வாழ்க்கை நெறிகளைக் காட்டப் பதின்மர் எழுதிய உரைகளுள் பரிமேலழகர் என்னும் வைணப் பெரியாரின் உரைநூல் மிகவும் போற்றப்பட்டு வருகின்றது.[7] அக்காலத்துக்கும் இக்காலத்துக்கும் ஏற்பஉரை அமைந்தது தமிழ்மொழிக்கே சிறப்பைத்தருவதாகும். அவ்வுரை தோன்றிய காலத்தே திவ்வியப் பிரபந்தங்களுக்கும் மேன்மேலென வைணவ உரைகள் விளக்கமாகவும் விரிவாகவும் அமைந்து அழகிய மணவாளச் சீயர் உரையும் தமிழ்நூலுக்கே வுரிய அனைத்து உத்திகளையும் கொண்டு அமையப்பெற்றது.

அடுத்தடுத்து எழுந்த திருவாய்மொழியின் உரைகள் ஐந்தனுள் இறுதியான பன்னீராயிரப்படி, திருவாய்மொழிப் பாடலின் பதங்களைப் பொருள் தொடர்பில் இயைத்துப் பதவுரை யோடு கூடிய பொழிப்புரையாக அமைந்ததாகும். பின்னர், கற்போர் நலன் கருதிப் பதவுரையாகப் பிரித்து அச்சேற்றப் பட்டது. இருமொழிப் புலமை நிரம்பிய சீயர் தமிழ்மொழிக்கண் தாம்பெற்ற ஊற்றத்தைத் தமது உரையில் வெளிப்படுத்திச்

சென்ற இடங்கள் பலவாம். அவை மேல்வரும் இயல்களில் விளக்கி வரையப்படும். நீதி நூலான திருக்குறளுக்குப் பரிமேலழகர் உரை வாழ்க்கைக் கொள்கைகளை உணர்த்துமாறு அமைந்தாற் போலே, சீயரின் உரையும் அந்த வாழ்க்கைக் கொள்கைகளைத் தலைக்கட்டிக் கொடுக்கும் வகையில் ஆழ்வார் காட்டிய வைணவக் கோட்பாடுகளை விளக்குவதாக அமைந்ததாகும். தமிழ் இலக்கண நூல்களான தொல்காப்பியம், இறையனார் அகப் பொருள் முதலானவற்றின் அடிப்படைக் கோட்பாடுகளை வழுவாது போற்றித் தமிழர் வரம்பு கடவாது திருவாய் மொழியிலுள்ள அகப்பொருள் பதிகங்களுக்குச் சீயர் உரை வகுப்பது போற்றத்தக்கதாகும்.

அகப்பாடல்களில் தலைவன், தலைவி குறித்துவரும் நிகழ்ச்சி களைப் புனைந்து களவு, கற்பு என அகப்பொருள் இலக்கணம் வகுத்தனர் ஆன்றோர்கள். சீயரும் திருவாய்மொழியில் தமிழ் இலக்கண மரபுகள் தோய்ந்திருப்பதை விளக்கும் வகையில், ஆழ்வார் தாமான தன்மையை விட்டுத் தலைவியான தன்மையை ஏறிட்டு, இறைவனைப் பிரிந்து ஆற்றாமைப்பட்டுப் பேசும் பதிகங்களுக்குக் கைக்கிளை (1 4), தன்னுட்கையாறெய்திடு கிளவி (2. 1), வெறிவிலக்கு (4. 6), மடல் அறுதிப்பாடு (5. 3), கழற்றெதிர்மறைத் துறை (5 5), துணிவு வெளியிடல் (7 3). அறத்தொடு நின்றுரைத்தல் (8. 9) முதலான தமிழ் அகப்பொருள் இலக்கணக் குறியீட்டுச் சொற்களைக் காட்டி உரைவகுப்பர், இஃது பண்டைத் தமிழ் இலக்கிய நூல்களின் உரைகளுக்கு நிகராகச் சீயரின் பன்னீராயிரப்படியும் இலங்குவதை உணர்த்துகிறது. இதனை உணர்ந்தபடியால் சீயரைப் பண்டைத் தமிழ்ச் சான்றோர்களில் ஒருவராகவே மதித்துத் தமிழ்ப்புலவர் அகரவரிசை அகராதியிலும் அழகிய மணவாளச் சீயரையும், அவரது உரையையும் இடம் பெற வைத்தனர்.* நன்னூல் காட்டிய உரையின் பொது இலக்கணத்திற்கேற்ப (ந. நூ. 21) சீயரின் உரையும் ஒருங்கே அமைந்துள்ளது. சீயரின் பரந்து பட்ட தமிழறிவுத் திறனை அவரது உரைப் போக்கில் காணலாம். பாசுரங்களுக்குப் பதவுரையோடு கூடிய பொழிப்புரையும், சிற்சில பாசுரங்களின் பொழிப்புரைக்குக் கீழ் கருத்துப் பொருளும், அருஞ்சொற்களுக்கு விளக்கமும், இலக்கணக் குறிப்புக்களும்— என்றிவ்வாறு எல்லாவகையானும் சிறப்பாக உரை அமைந் துள்ளது. திருவாய்மொழியின் ஒவ்வொரு பதிகத்திற்கும் யாப்பு இலக்கணம் காட்டித் திருவாய்மொழியைப் பாவினங்களுள் அடக்கித் தந்த பெருமை சீயரைச் சாரும்.

### 1. 2. 2. திவ்வியப் பிரபந்த உரைகளுள் பன்னீராயிரப்படி பெறும் இடம்

சமய மறுமலர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்த ஆழ்வார்களின் ஈரச் சொற்களான நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களின் பொருள் விளக்க மரபு ஓராண் வழிக்கால் வழியாக நாதமுனிகள் காலம் தொடங்கி இராமாநுசர் காலம் வரை நிலவி வந்தது. அம்மரபு இராமாநுசர் காலத்தில் தான் எழுத்து வடிவம் பெற்றது. இப்படி எழுத்து வடிவம் பெற்ற உரைகளுள் காலத்தால் முற்பட்டவை திருவாய்மொழி உரைகளேயாகும். திருவாய்மொழிக்குப் பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப் பிள்ளை, அழகிய மணவாளச் சீயர் ஆகிய ஐவரின் உரைகள் சிறந்து விளங்குகின்றன.[9]

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் முழுமைக்கும் உரையிட்ட பெருமை வியாக்கியான சக்கரவர்த்தி என்னும் சிறப்புப் பெயர் பெற்ற பெரியவாச்சான் பிள்ளையைச் சாரும்.[10] இவர் உரைகள் தான் இன்றும் நிலவி வருகின்றன. நஞ்சீயர் திருப்பாவைக்கும், கண்ணிநுண் சிறுத்தாம்புக்கும் உரை வழங்கினார் என்றும், பிள்ளை லோகாசார்யரின் திருத்தம்பியான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருப்பாவைக்கு ஆறாயிரப்படி என்னும் உரை வழங்கினார் என்றும், பன்னீராயிரப்படி இயற்றிய சீயர் திருவிருத்தத்திற்கு உரை வழங்கினார் என்றும் கூறுவர்.[11]

இத்திவ்வியப் பிரபந்த உரைகளுள், பன்னீராயிரப்படியின் ஏற்றத்தினை, 'அன்போடு அழகிய மணவாளச் சீயர்.... ஏதமில் பன்னீராயிரம்' (உ. தே. ர. பா. 45) என்னும் மாமுனிகளின் பாடல் மூலம் அறியலாம். இதில் 'பின்போரும் கற்றறிந்து பேசுகைக்கா' என்ற தொடருக்குப் பொருள் வழங்கிய பிள்ளை லோகம் சீயர், "மற்ற நான்கு வியாக்கியானங்கள் திருவாய்மொழிக்கு இருப்பினும் இந்த உரையைக் கொண்டே பதவுரை நிச்சயித்து அறிய வேண்டும்" என்றும், "இவ்வுரை ஆழ்வாரின் திருவுள்ளத்தைப் பின் சென்று அமைந்தது" என்றும், "ஆழ்வாருடைய திருப்பவளத்திலே உண்டானதாகையால் ஏற்பட்ட பெருமையையுடைத்தாய், தமிழ் மறையான திருவாய்மொழியின் பொருளைப பிரதிபிம்ப வியாக்கியானமாக அருளியது" என்றும் போற்றுவது குறிப்பிடத் தக்கதாகும்.[12]

ஈட்டைக் கற்றவர்கள் அது விரிந்து பரந்து அமைந்திருப்பதால் பாடற் சொற்களின் கொண்டு கூட்டை அறிய முடியாது

என்றும், பொருள் தொடர்பை அறியவும், இன்ன சொல்லுக்கு இது பொருள் என்று அவ்வப்போது கண்டு கொள்ளப் பதவுரை தேவைப்பட்டது என்றும், அதனால் பாடல்களிலுள்ள சொற்களைப் பொருள் தொடர்பில் வைத்தும் தேவையான சொற்களை வருவிக்க வேண்டிய வழி வகுத்தும் ஒரு சுருக்கிய உரை சீயர் செய்தார் என்று இரா. அரங்கராசன் கூறிய கருத்து இதனை அரண் செய்கிறது.[13] இத்துணைச் சிறப்பெய்திய பன்னீராயிரப் படியை மணவாள மாமுனிகள் காலட்சேப முறையில் மற்ற வியாக்கியானங்களோடு உலகுக்கு உணர்த்தி 'ஈட்டுப் பெருக்கர்' என்னும் சிறப்புப் பெயர் பெற்றார் என்று பெரியோர் பணிப்பர். மேலும் மாமுனிகள் ஆசாரிய இருதயம் என்னும் நூலுக்கு அருளிய உரையில் சீயர் காட்டிய பன்னீராயிரப்படியிலுள்ள பொருளாட்சிகளைத் தழுவிச் சிறப்பித்துள்ளார்.[14]

மற்ற நான்கு திருவாய்மொழி உரைகளுக்கும், திவ்வியப் பிரபந்த உரைகளுக்கும் இல்லாத தனிச் சிறப்பு பன்னீராயிரப் படிக்கு உள்ளது எவ்வாறென்னில், உரை அவதாரிகைக்கு முன்பு தனியனாக அமைந்த ஒரு வடமொழி மங்கள சுலோகம்[15] சீயர் தொடங்கிய உரைவழக்கே யாகும். இது மற்ற உரைகளில் காணாததாகும்.

இத்தனியனில் ஸ்ரீசடகோபரென்னும் ஆசாரியரை வணங்கித் துதித்து, பூர்வாசாரியர்களால் ஆதரிக்கப்பட்டுப் பரம்பரையாக வந்த தமிழ் மறைமுடியாம் திருவாய்மொழியின் பேருரையைத் தாம் கேட்டபடியே காட்டக் கடவதாகச் சீயர் உறுதிமொழி கூறியுள்ளார். இதனால் பரம்பரையாக வாய்வழியாக வழங்கி வந்த திருவாய் மொழியின் பேருரையைச் சீயர் சுருக்கிய முறையில் நூல் வடிவில் எழுதி வழங்கிச் சிறப்பெய்தியது காண முடிகிறது.

## 1. 3. வாழையடி வாழையென வளர்ந்த உரைகள்: ஒன்பதாம் நூற்றாண்டு முதல் பதினான்காம் நூற்றாண்டு வரை

வைணவ சமய மறுமலர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்தவர்கள் ஆழ்வார்கள் பன்னிருவர். இவர்களில் முதலாழ்வார்கள் மூவர் தவிர, மற்றவர்கள் 7, 8, 9 ஆம் நூற்றாண்டுகளில் விளங்கியவர்கள்.[16] இவர்கள் தங்கள் இயல்புக்கும் இறை அனுபவத்துக்கும் சூழ்நிலைக்கும் ஏற்பப் பாடிய பாடல்களே திவ்வியப் பிரபந்தமாகக் கருதப்படுகின்றன. இப்பாடல்களைத் தொகுத்து நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமாகத் தந்த பெருமை ஸ்ரீமந் நாதமுனிகள் என்னும் ஆசாரியரைச் சாரும். இவர்,

ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர். ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் நாதமுனிகள் ஆழ்வார்களின் உணர்ச்சியில் எழுந்த இறை அநுபவமான பாடல்களைத் திரட்டித் தொகுத்து அடைவுபடுத்தி உலகுக்கு அளித்தார். பக்தி இலக்கியமான ஆழ்வார் பாடல்கள் மனிதனின் அன்றாட வாழ்க்கைக்கு ஊன்று கோலாக இருந்து பிறர்க்குத் தொண்டு செய்வதை உணர்த்தும்.[17]

இப்படிப்பட்ட உணர்ச்சிகளையும் அநுபவங்களையும் கொண்டு எழுந்த திவ்வியப் பிரபந்தப் பாடல்கள் நாதமுனிகள் காலத்திலும், அதற்குப் பின்னும் தோன்றிய ஆசாரியர்கள் வாயிலாக வாய்மொழி இலக்கியங்களாக ஆழ்வார்களின் அநுபவங்களைப் போற்றிப் பேசி வருவதற்கு உதவின. நாத முனிகளின் வழிக் குரவர்களான ஆசாரியர்கள் ஆழ்வார்களின் தத்துவங்களை விளக்கி விரிவாகப் பேசவும் முற்பட்டனர் 'ஆசாரியர்கள் ஆழ்வார்களின் இறையநுபவத்தில் பன்மடங்கு குறைந்தவர்களாயிருப்பினும் ஆழ்வார்களின் அருளிச் செயலின் தத்துவத்தைப் படித்தவர்களாகவும் விரிவுரையாளர்களாகவும் இருந்து வந்தனர் என்பர்.[18]

ஒன்பதாம் நூற்றாண்டில் அறிஞர்கள் அழகையும் அறிவையும் அநுபவித்தபோது, அவற்றைத் தாங்கள் நினைத்துப் பார்ப்பதற்கும் பிறர்க்கு உணர்த்துவதற்கும் இடமாகக் கொண்டார்கள்[19] என்று கூறுவர். "ஆழ்வார்கள் காலத்துப் பாடல்கள், நாதமுனிகள், ஆளவந்தார் காலங்களில் அரும்பாகவும் போதாகவும் இருந்து, இராமாநுசர் தோன்றிய பின்பே மலராக விரிந்தது" என்பர்.[20]

பதினோராம் நூற்றாண்டு கல்வியறிவில் நாட்டம் மிகுதியான காலமாகும். பக்திக்குப் பரவசப்பட்டுப் பாமர மக்களும் இறையநுபவத்தில் நாட்டம் கொள்ளும் வகையில் இராமாநுசர் என்னும் ஆசாரியர் தோன்றி வழி வகுத்தார். "உலகோர்களெல்லாம் அண்ணலிராமாநுசன் வந்து தோன்றிய அப்போதே நன்னறு ஞாலம் தலைப்பட்டது" (இ நூ.அந்.41) என்று அமுதனாரும் மொழிந்தது நினைக்கத்தக்கது.

வடமொழி வளர்ச்சி பெற்றுவந்த 11, 12 ஆம் நூற்றாண்டுகளில் இராமாநுசர் வைணவத்தை வளர்க்க அரும்பாடுபட்டார்; ஆழ்வார்களில் முதன்மை பெற்ற நம்மாழ்வார் பாடல்களுக்கு, இதற்குமுன் வாய் வழியாக வழங்கியவற்றை உரைகளாக ஏடுபடுத்தத் திருக்குருகைப் பிரான் பிள்ளான் என்னும்

தம் சீடரைத் திருவாய்மொழிக்கு ஒரு வியாக்கியானம் எழுதச் செய்தார். அது தமிழும் வடமொழியும் விரவின மணிப்பிரவாள நடையில் அமைந்ததாகும். இதனை ஆறாயிரப்படி என்பர்.

### 1. 3. 1. ஓராண்வழி உபதேசம்

ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து நாதமுனிகள் முதலான பூர்வாசாரியர்கள் திவ்யப் பிரபந்தத்திற்கு வியாக்கியானங்களை இட்டருள வல்லவர்களாயிருந்தும் ஒருவரும் இட்டருளவில்லை. சீடர்களுக்கு உபதேசித்து மட்டும் வந்தார்கள். திவ்வியப் பிரபந்தங்களை மும்மறையின் (ரஹஸ்யத்ரயம்) பொருள் விளக்கமாக அவர்கள் உபதேசித்தனர். அதனாலேயே, அம்மறை மொழிகளைப் போன்றே திவ்வியப் பிரபந்தங்களையும் கருதி ஓராண் வழியாக உபதேசித்தனர்.

திருவாய்மொழிக்கு வியாக்கியானங்கள் தோன்றிய வரலாற்றைக் கூறப்புகு முன்பாக, இராமாநுசர் வரம்பறுத்த செயலை மாமுனிகள் சுட்டிக்காட்டியிருக்கிறார்[21] இதனால், திருவாய்மொழிப் பேருரைகள் தோன்ற இராமாநுசரே காரணமாயிருந்தார் என்பது தெளிவாகிறது. காஞ்சிபுரம் பி. ப. அண்ணங்கராசாரியார் சுவாமிகளின் கருத்தும் இதனை அரண் செய்கிறது.[22]

### 1. 4. படி — உரைநூல்கள்

பதின்மூன்றாம் நூற்றாண்டில்தான் நஞ்சீயர் என்னும் ஆசாரியர் அருளிய ஒன்பதினாயிரப்படி, பெரியவாச்சான் பிள்ளை அருளிய இருபத்துநாலாயிரப்படி, நம்பிள்ளை செப்பு நெறியான முப்பத்து ஆறாயிரப்படி ஆகிய பேருரைகள் எழுந்தன. இவையனைத்தும் திருவாய்மொழிக்கு வியாக்கியானங்களாவன என்பது அறியத்தக்கது. 13 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தான் வாதிகேசரி அழகிய மணவாளச் சீயரும் திருவாய் மொழிக்குப் பன்னீராயிரப்படி என்னும் உரையை இயற்றினார்.

இந்த நான்கு உரைகளும் ஆறாயிரப்படியைப் பின்பற்றி எழுந்தனவே. இவையெல்லாம், பெரியவாச்சான் பிள்ளை ஆழ்வார்களின் பாடல்கள் முழுவதற்கும் உரையெழுதியது இன்று வரை குலாவப்பட்டு வருகிறது. இவ்வுரைகளைக் கண்ணுற்றவரும், டாக்டர் உ. வே. சாமிநாதையரின் பெருமதிப்பைப் பெற்றவருமான தியாகராச செட்டியார் அவர்கள்,

"வியாக்கியானத்தில் எவ்வளவு உயர்ந்த இரகசியங்கள் வெளிப்படுகின்றன! திவ்வியப் பிரபந்தத்தால் வியாக்கியானத்திற்குப் பெருமையா, வியாக்கியானங்களால் திவ்வியப் பிரபந்தங்களுக்குப் பெருமையா"[23]

என்று எண்ணும்படி இருப்பதாகக் கூறுவர்.

',இவ்வுரைகளில் வைணவப் பெரியார்கள் தாம் கற்ற கலைகள் அனைத்தையும் வழங்கிச் சென்றதாகவும், அப்பெரியார்களின் இதய ஒலிகள் பலப்பல வகையாய் உரைகளின் வாயிலாக வெளிப்படுகின்றன'[24]

என்றும் மு. அரவிந்தன் கூறுவர்.

## 1. 5. உரைகள் எழுந்த வகையும் திருவாய்மொழியை உரையால் காத்த குணவாளரும்

### 1. 5. 1. உரைகள் எழுந்த வகை

சங்க காலத்துக்குப் பின்னர்த் தமிழிலக்கிய வரலாறு சீரும் சிறப்பும் பெற்றுத் திகழலாயிற்று. பக்தி இயக்கத்தின் அடித்தளத்தில் சமய வழிபாட்டிலும், தத்துவ நோக்கிலும் வரலாறு பரவலாயிற்று. அவ்வகையில் வைணவ சமயம் தழைத்து ஓங்க இறைவன் அருளிலே ஆழங்கால்பட்டவர்களான ஆழ்வார்கள் அருளிய நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், நாதமுனிகள் வாயிலாகக் கிடைத்தது. வாய்வழியாக வழங்கிய நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களும் அதன் ஆழ்பொருள்களும் வியாக்கியானங்கள் மூலமாக உலகிற்கு இன்று கிடைக்கச் செய்த பெருமை வைணவ ஆசாரியர்களைச் சாரும். இதனை எம்பார் என்னும் ஆசாரியர் உருவகப்படுத்திக் காட்டுவதை இங்கு நினைப்பது சாலப் பொருத்தமாகும். "திருமகள் கேள்வனாகிற பெருங்கடலில் நம்மாழ்வாராகிற மேகம் கருணை நீரை முகந்தெழுந்து, நாதமுனிகளாகிற மலையில் பொழிந்திட, அது அங்கிருந்து உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி ஆகிய இரு அருவிகளால் ஆளவந்தார் என்னும் ஆசாரியரான பேராற்றையடைந்து, பின்னர் பெரிய நம்பிகள் முதலான ஐந்து ஆசாரியர்களாகிற கால்வாய்கள் வாயிலாக, இராமாநுசராகிய பெரிய ஏரியையடைந்து, அவரிடமிருந்து 74 ஆசாரியர்களாகிற மதகுகளால் உயிர்களாகிய பயிர்களின் பொருட்டுப் பாய்கிறது"[25] என்று அவர் காட்டுவர்.

### 1. 5. 2. திருவாய்மொழியைக் காத்த குணவாளர்கள்

திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்னும் ஆசாரியர், ஆளவந்தாரின் பாரிப்பைப் பரப்ப நினைத்த இராமாநுசரின்

வேண்டுகோளுக்கு இணங்கித் திருவாய்மொழிக்கு ஆறாயிரப்படி என்னும் வியாக்கியானத்தை அருளினார்[26] இந்த வியாக்கினம் விஷ்ணுபுராண எண்ணிக்கையில் அமைந்ததாகும்.[27]

வேதாந்தி என்று சிறப்புற்றவரான நஞ்சீயர், பட்டரின் அருளால் திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படி என்னும் வியாக்கியானத்தை அருளினார்[28] இந்த வியாக்கியானம் ஸ்ரீபாஷ்ய எண்ணிக்கையில் அமையப் பெற்றுள்ளது[29]

நம்பிள்ளை நல்லருளால் ஏவி இடப்பட்ட இருபத்துநாலாயிரப் படி என்னும் வியாக்கியானம் நம்பிள்ளையின் அன்புக்கு அணி கலனான பெரியவாச்சான் பிள்ளை என்னும் ஆசாரியரால் இயற்றப்பட்டது.[30] மேன்மேலெனப் பெருக்காறு போலேபெருகும் அன்பு காரணமாக நம்பிள்ளை ஆணையின்படி இவ் வியாக்கியானம் அமைத்ததாகும். இஃது இதிகாசங்களுள் உயர்ந்ததான இராமாயணச் சுலோக எண்ணிக்கைக்கு ஈடானது.[31]

நம்பிள்ளை செப்புநெறியைப் பின்புள்ளாரும் அறியவேண்டி ஒருகால் ஒரு கொம்பு ஒரு சுழி விடாமல் ஈடுபடுத்தி ஈடு முப்பத் தாறாயிரம் என்னும் வியாக்கியானத்தை நாடறியச் செய்த பெருமை வடக்குத் திருவீதிப் பிள்ளை என்னும் ஆசாரியரைச் சாரும்.[32] இவ்வியாக்கியானம் ஆனை கோலம் செய்தாற்போலே தெளிவாகவும், மாறன் மறைப்பொருளை ஈடுபடும்படியன்றோ அருளிச் செய்தது என்பர் பிள்ளைலோகம் சீயர்.[33] இது சுருதப் பிரகாசிகை என்னும் நூலின் அளவான முபபத்தாறாயிரம் கிரந் தங்களுக்கு ஒப்பானது என்பர்[34]

உலக மக்களிடம் ஆசைகொண்டு சீயர் பிற்காலத்தில் உள்ள வர்களும் கற்றுத் தெரிந்து கொண்டுபிறர்க்கு உபதேசிப்பதற் காகத் தம்முடைய பெரிய அறிவாற்றலால் திருவாய்மொழியின் பொருளைப் பன்னீராயிரப்படி என்னும் உரையாகச் செய்தார்.[35] இவ்வியாக்கியானம் ஆழ்வார் திருவுள்ளக் கருத்தைப் பின்பற்றிப் பிள்ளானுடைய வியாக்கியானத்தில் இருமடங்காய் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில் பாதியுமாய் இப்படி ஏற்றி இறக்கி அமைந்தது குறிப்பிடத்தக்கது.[36]

இவ்வாறு ஆறாயிரப்படி தொடங்கிப் பன்னீராயிரப்படி இறுதியாகப் பிரமாணத்துக்குள் உயர்ந்ததான திருவாய்மொழிக்கு வியாக்கியானங்கள் அமைந்துள்ளன. இவை குறைந்த அறிவுடைய

ரால் அசைக்க முடியாதபடி ஆழ்வார் திருவுள்ளத்தைக் கொண்டு அந்தந்த வியாக்கியானங்கள் மூலமாக இவரால் காப்பாற்றப் பட்டு வந்துள்ளன. அவ்வைவரையும் 'திருவாய்மொழியைக் காத்த குணவாளர்கள்' (உ.ர மா பா 39) என்று போற்றுவது குறிப்பிடத்தக்கது.

முடிபுகள்

இலக்கியங்கள் வாழ வழிவகுத்தவர்கள் இலக்கணநூல் ஆசிரியர்கள் ஆவர்

1. தமிழ் இலக்கியத்திற்கும் இலக்கணத்திற்கும் பெருமை தேடித் தந்தவர்கள் உரையாசிரியர்கள் ஆவர்.

2. தமிழ் உரை நூல்களுள் பன்னீராயிரப்படி பெற்ற சிறப் பினைக் காணும்போது, சீயர் தமிழ்நூலுக்குரிய உத்தி களைப் பயன்படுத்தி உரைத்தமை காண முடிகிறது. தமிழர் வரம்பு கடவாது திருவாய்மொழிக்கு அகப் பொருள் பகுதிகளில் சீயர் உரைவகுத்தது காண முடிகிறது தமிழ் உரை நூல்களுள், குறிப்பாக வைணவ உரைகளுள், பன்னீராயிரப்படி பதவுரையோடு கூடிய பொழிப்புரையாக அமைந்த முதல் உரை என்றால் குறையில்லை. பண்டைத் தமிழ் நூல்களின் உரைக்கு நிகராக சீயர் உரை விளங்கவே, பண்டைத் தமிழ்ச் சான்றோர்களில் ஒருவராகவே மதித்துத் தமிழ்ப் புலவர் அகரவரிசை அகராதியில் சீயர் இடம் பெற்றது குறிப்பிடத்தக்கது. திருவாய்மொழி ஒவ்வொரு பதிகத் திற்கும், யாப்பு இலக்கணம் காட்டித் திருவாய் மொழியைப் பாவினங்களுள் அடக்கித் தந்த பெருமை சீயரைச் சாரும்.

3. திவ்வியப் பிரபந்த உரைகளுள் பன்னிராயிரப்படி ஓராண் வழிக் கால்வழியாக வழங்கிய பொருள்களைச் சீயரும் தமது ஆசாரியர் வாயிலாகக் கேட்ட படியே வகுத்துரைத்துள்ளது பெருமைக்குரியது.

4. இவரது இந்த உரையினால் திருவாய்மொழிக் கமைந்த மற்ற நான்கு உரைகளின் பொருள் விளக்கம் பெறக் காணலாம்,

5. இவ்வுரைக்குரிய ஒரு தனிச்சிறப்பு யாதெனில் உரைப் பாயிரத்தில் ஒரு வடமொழி மங்கள சுலோக மூலமாகத்

திருவாய்மொழிக்கும், அதனை இயற்றிய ஆழ்வாருக்கும், இவற்றை ஆசாரியர் வாயிலாகத் தாம் அறிந்ததற்கும் நன்றி செலுத்துவதாகும்.

6. ஒன்பதாவது நூற்றாண்டு முதல் சீயர் காலம் வரை. அதாவது 14ஆவது நூற்றாண்டு வரை வைணவ உரைகளின் வளர்ச்சியைக் குறிப்பிடலாம். அவற்றுள் கடைசி உரையாகக் கருதப்பெறுவது பன்னிராயிரப்படி. இதில் தாம் கேட்ட, கற்ற கலைகள் அனைத்தும் சீயர் வழங்கிச் சென்றுள்ளார். திருவாய்மொழி உரைகளுள் இதுவே முற்றுப்புள்ளி வைத்தாற் போல அமைந்து விட்டதும் இங்குக் குறிப்பிடத்தக்கது

7. பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப் பிள்ளை, அழகிய மணவாளச் சீயர் ஆகிய ஐவர் தத்தம் உரைகளால் திருவாய்மொழியைக் காத்துக் 'குணவாளர்கள்' என்று போற்றப் பெறும் சிறப்பெய்தினர்.

இயல்-1

## குறிப்புகள்

1. தொல்காப்பியம், மரபியல், நூற்பா 98, பேராசிரியர் உரை.
2. மு. வரதராசன், 'தமிழ் இலக்கிய வரலாறு', 1972, ப. 183.
3. பதின்மர் உரையாசிரியர்களைப் பற்றிய பழைய வெண்பா.
4. மு. வரதராசன், 'தமிழ் இலக்கிய வரலாறு', 1972, ப. 25.
5. தொல்காப்பியம், சிறப்புப் பாயிரம், 1-13.
6. சிலப்பதிகாரம், பதிகம் 55-57.
7. திருக்குறள், பரிமேலழகர் உரை. சிறப்புப் பாயிரம்.
8. தமிழ்ப்புலவர் அகரவரிசை அகராதி, கழகம், 1962, ப.49.
9. உபதேச ரத்தின மாலை, பாடல் 39.
10. உபதேச ரத்தின மாலை பாடல் 46.
11. மேலது, பாடல் 47.
12. பிள்ளைலோகம்சீயர், உபதேச ரத்தின மாலை வியாக்கியானமும் பதவுரையும், புனைபெட் அச்சகம், காஞ்சி, 1916, பக். 129-30.

13. இரா. அரங்கராசன், 'நம்பிள்ளை61, உரைத்திறன், 986, ப. 42.

14. ஆசாரிய இருதயம், ப ஆ காஞ்சி சுவாமி, கிருந்தமாலா ஆபீஸ், 1950, ப. 195.

15. திருவாய்மொழி முதற்பத்து, ஆறாயிரப்படி, பன்னீராயிரப் படி, ஈடு அவதாரிகை, ப.ஆ. புதுப்பட்டு திருவேங்கடாசாரி, ஸ்ரீநிகேதன் பிரஸ், 1925-26, ப 7

16. மு. வரதராசன், 'தமிழ் இலக்கிய வரலாறு', 1972. ப 108.

17. பொன் சௌரிராசன், 'தாயுமானவர்', பக். 108—109.

18. தி. அ. கோபிநாத ராவ், ஸ்ரீசுப்பிரமணிய அய்யரின் வைணவ வரலாற்றுச் சொற்பொழிவுகள், 1917, ப 29.

19. மு. அருணாசலம். 'தமிழ் இலக்கிய வரலாறு', 10 ஆம் நூற்றாண்டு, திருச்சிற்றம்பலம் ப 566.

20 மேலது, 11 ஆம் நூற்றாண்டு, ப. 8.

21. உபதேச ரத்தின மாலை, பாடல் 37.

22. காஞ்சி பிர. ப. அண்ணங்கராசார்ய சுவாமிகள், நித்தியாநு சந்தானம், பகுதி இரண்டு, 1953 ப. 218.

23. வித்துவான் தியாகராசச் செட்டியார், ப 145.

24, மு. அரவிந்தன், 'உரையாசிரியர்கள், ப. 376.

25. எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார், ப ஆ, பா. பூ. ஸ்ரீவைஷ்ணவ சபா பொன்விழா மலர், 1978, பக் 106-107.

26. உபதேச ரத்தின மாலை, பாடல் 41.

27. பிள்ளைலோகம் சீயர், உபதேச ரத்தின மாலை', ப. 122.

28. உபதேச ரத்தின மாலை, பாடல் 42.

29. மேலது, வியாக்கியானம், ப. 124.

30 உபதேச ரத்தின மாலை, பாடல் 43.

31. மேலது, வியாக்கியானம், ப. 126.

32. உபதேச ரத்தின மாலை, பாடல் 44,

33. மேலது, வியாக்கியானம், ப, 128

34. மேலது, ப. 128.

35. உபதேச ரத்தின மாலை, பாடல் 45.

36. மேலது, வியாக்கியானம், ப. 130.

# இயல்-2

## அழகிய மணவாளச் சீயரின் வாழ்வும் பணியும்

'அழகிய மணவாளச் சீயரின் வாழ்வும், பணியும் என்னும் இவ்வியல் அவர்தம் வாழ்வு, கல்வி, பண்பு, தெய்வத் தமிழ்ப் பணி, அதன் சிறப்பு ஆகியன பற்றி அமைகிறது. இந்த அமைப்பு, குருபரம்பரையில் அழகிய மணவாளச் சீயரின் இடம், காலம், வாழ்க்கை வரலாற்றில் சிறப்பான செய்திகள், கல்வி விருதுகள், திவ்வியப் பிரபந்தம் மற்றும் பல நூல்கள் பயின்ற முறை, சீயரின் பண்பு நலன்கள், சீயர் இயற்றிய நூல்கள், சீயர் உரை தோன்றிய சூழ்நிலைகள், உரை எழுந்த காலம், சீயர் நூல்களைப் பின்னோர்கள் மேற்கோள் காட்டிய இடங்கள் என்னும் ஒன்பது நோக்கில் விரிவாக இங்கு விளக்கம் பெறக் காணலாம்.

அழகியமணவாளச் சீயரின் வாழ்வும் பணியும்

### 2.0. குருபரம்பரையில் அழகிய மணவாளச் சீயரின் இடம்

உலகோர்களெல்லாம் உய்வெய்திப் பேரின்பப் பெருவாழ்வு பெறுவதற்காக இவ்வுலகில் அருளாளர்களான ஆழ்வார்கள் தோன்றிப் பக்திப் பாடல்களான நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை உலகிற்கு அருளினர். இந்தத் திவ்வியப் பிரபந்தத்தையும் அவற்றின் பெருமையையும், ஆழ்வார்களின் பெருமையையும் ஒரு குறைவில்லாதபடி வளர்த்து வந்த ஆசாரியர்களான நாத முனிகள் தொடக்கமான வைணவ சமயக் குரவர் பலராவர். இவ்வாசாரியர்களின் ஓராண் வழிக் கால்வழி இரண்டு அடிப் படையில் அமைந்துள்ளது. அவற்றுள் வைணவ தீட்சை யளிக்கும் ஆசிரயண குருபரம்பரை ஒன்று. இஃது இரண்டு பிரிவாக அமைந்துள்ளது. முதலது பெரிய பெருமாள் தொடங்கி மணவாள மாமுனிகள் ஈறாகப் பதினெண்மரைத்தொடக்கமாகக் கொண்டுள்ளது. இந்தக் குருபரம்பரை இன்றும் ஓராண் வழிக் கால்வழியாகச் செல்கிறது. அடுத்தது, இராமாநுசர் நியமித்த 74 சிங்காசனாபதிகள் என்றழைக்கப்படும் ஆசாரியர்களின் பரம்பரையாகும். இதுவும் ஆசிரயண குருபரம்பரையாக வளர்ந்து செல்லும். இவ்வாறு ஆசிரயண குருபரம்பரை இருவகைப் பட்டிருக்கிறது.

மேற்குறித்த பிரிவோடு உபதேச கிரந்த பரம்பரை என்ற பிரிவும் ஒன்று உண்டு. இதன்கண் மூவகையர் இடம்பெறு கின்றனர்.

அவர்,

1. இரகசிய கிரந்த குருபரம்பரையினர்
2. திவ்வியப் பிரபந்த வியாக்கியான குருபரம்பரையினர்
3. ஸ்ரீபாஷ்ய சுருதப்ரகாசிகா குருபரம்பரையினர்

ஆவர்.

நூல்களை உபதேசித்து வரும் உரிமைபெற்ற ஆசாரியர் களின் பரம்பரையைச் சார்ந்தவர் இவர்கள். இவர்களுள் திவ்வியப் பிரபந்த வியாக்கியான குருபரம்பரையில் ஒரு உட்பிரிவிலுள்ள ஆசார்யர்களுள் அழகிய மணவாளச் சீயர் இடம்பெறுகிறார். (பின்னிணைப்பு 1)

## 2. 1. காலம்

இவர் தென்பாண்டிய நாட்டில் பிரம்மதேசம் மன்னார் கோவிலில் ஆனி மாதம் சுவாதி நட்சத்திரத்தில் பிறந்தார் என்றும், இவருக்கு வரதராசர், சுந்தரஜாமாத்ருமுனி (அழகிய மணவாளச் சீயர்) என்ற பெயர்களும் உண்டு என்றும் அறிய முடிகிறது[2] ஆனால் இவர் பிறந்த நட்சத்திரம் மகம் என்று யதீந்திர பிரவணப் பிரபாவம் கூறும்:[3] மேலும் பன்னீராயிரப் படி குருபரம்பராப் பிரபாவத்தில் சீயர் மாசி மகத்தில் பிறந்த தாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.[4] சீயர் இயற்றிய பகவத் கீதை வெண்பாவின் மூலம் இவர் குலம் சொட்டை என்றும், இயற் பெயர் மணவாளர் என்றும், இதன்பின் இவருக்குச் சொட்டை அழகிய மணவாளமுனி என்ற பெயர் வந்தது என்றும் காண முடிகிறது.[5]

சீயர் கி. பி. 1242இல் பிறந்து 108 ஆண்டுகள் வாழ்ந்து கி. பி. 1350இல் திருநாட்டை யெய்தினராக ஸ்ரீவைஷ்ணவ சுதர்சனம் ஆசிரியர் கருதுவர்.[6]

பி. ப. அண்ணங்கராசாரிய சுவாமியும், சீயருடைய நூல் களான தத்துவ தீபம் முதலானவற்றில் வேதாந்த தேசிகர் என்னும் ஆசாரியரின் நூல்களிலிருந்து பலபல மேற்கோள்கள் எடுக்கப்பட்டுள்ளதால் மணவாள மாமுனிகளுக்கு முற்பட்டும் வேதாந்த தேசிகருக்குப் பதினாறு ஆண்களுக்கு பிற்பட்டும் வாழ்ந்தவர் வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் என்று தம்முடைய இதழில் குறிப்பிட்டுள்ளார்.[7] வேதாந்த தேசிகர்

காலம் கி. பி. 1269-1369 என்று அறியப்படுவதால் சீயர் வேதாந்த தேசிகருக்குச் சம காலத்தவர் என்றும், மாமுனி களுக்கும் முற்பட்டவர் என்றும் தெளிவாகிறது.[8]

இலக்கிய வரலாற்று ஆராய்ச்சியாளர், வைணவ ஆசாரியர் களின் காலப் பகுதிகளை முழுமையாக இன்னும் ஆராயவில்லை. குருபரம்பரா பிரபாவம், யதீந்திரப் பிரவணப் பிரபாவம், பெரிய திருமுடியடைவு ஆகிய நூல்களைக் கொண்டு ஓரளவு ஆசாரியர் களின் காலத்தை அறுதியிட முடிகிறது. யதீந்திரப் பிரவணப் பிரபாவத்தில், சீயரை உகந்து முப்பத்திரண்டு திருநட்சத்திரத் தில் பெரியவாச்சான் பிள்ளை இவருக்குக் கல்வி கற்பித்ததாகக் கூறப்பட்டுள்ளது.[9] இதனைக் கொண்டு ஆசிரியர் காட்டிய கால ஆராய்ச்சியை நோக்குங்கால் பெரியவாச்சான் பிள்ளை 1262இல் பரமபதித்தபோது சீயருக்கு இருபது வயது ஆகியுள்ளது. இதனைப் பின்பற்றிப் பெரிய திருமுடியடைவுப்படி, சீயர் பெரியவாச்சான் பிள்ளையிடம் திருவிலச்சினை செய்துகொண்டு நித்தியாநு சந்தானத்தைக் கற்றார் என்றும், பெரியவாச்சான் பிள்ளையின் குமாரரான நாயனாராச்சான் பிள்ளையிடமே திருவாய் மொழி முதலான பிரபந்தங்களும், ஈடு முதலான வியாக்கியானங் களும், ஸ்ரீபாஷ்யம், மற்றும் ரஹஸ்ய நூல்களும் கற்றனர் என்றும் தெரிகிறது. ஆகவே, யதீந்திரப் பிரவணப் பிரபாவத்தில் முப்பத்திரண்டு திருநட்சத்திரம் என்பதில் பாடப் பிறழ்வு ஏற்பட்டிருக்கலாம். மேலும் யதீந்திரப் பிரவணப் பிரபாவம் அருளிய பிள்ளைலோகம் சீயர், உபதேச ரத்தினமாலை வியாக்கியானத்தில், "பிள்ளான் நஞ்சீயர் ... கூறு" என்ற பாடலில் வரும் மணவாள யோகி என்ற சொல்லுக்குக் கருத்தாகச் சீயரைப் பற்றிக் கூறும் போது, "பெரியவாச்சான் பிள்ளையின் குமாரரான நாயனாராச்சான் பிள்ளை திருவடி களையே பழுக்கச் சேவித்து, எல்லாத் திவ்வியப் பிரபந்தங்களின் பொருள்களையும், இரகசிய நூல்களையும் நாயனாராச்சான் பிள்ளை உபதேசிக்கச் சீயர் கற்றுக்கொண்டு மற்றும் எல்லாச் சாத்திர நூல்களையும் கற்று, மற்ற மதங்களைக் கண்டித்து 'வாதிகேசரி' என்னும்படி வாக்கின் பெருமையைப் பெற்றார்" என்றும் கூறுகிறார்.[10]

ஆக, இவற்றால் அழகிய மணவாளச் சீயர் பெரியவாச்சான் பிள்ளையின் இறுதிக் காலத்தில் பிறந்து, அவரை இருபது வயதிற்குள் ஆசிரயித்து, அவர் மறைவுக்குப் பிறகு, அவர் குமாரரான நாயனாராச்சான் பிள்ளையிடம் சமய சாத்திர நூல்கள் அனைத்தையும் கற்றுப் பன்னீராயிரப்படி முதலான

நூல்களைச் செய்தார் என்று கொள்ள முடிகிறது. மேலும், சீயர் தாம் பெரியவாச்சான் பிள்ளையின் சீடர் என்பதைத் தெரிவிக்கும் வகையில், தாம் இயற்றிய தத்துவ நிருபணம் என்னும் நூலில் ஒரு தனியனில் பெரியவாச்சான் பிள்ளைக்கு வணக்கம் செலுத்தியுள்ளதும் நோக்கத்தக்கது.[11]

இறுதியாக, ஸ்ரீவைஷ்ணவ சுதர்சனம் ஆசிரியர் நிறுவிய காலம் சற்று ஏறக்குறைய அமைந்ததாலும்,[12] உபதேச ரத்தின மாலைக்கு உரை வழங்கிய பிள்ளைலோகம் சீயர் யதீந்திரப் பிரவணப் பிரபாவத்தில் ஆச்சான் பிள்ளை என்றும், அபயப்ரத ராஜர் என்றும் பெரியவாச்சான் பிள்ளையைக் காட்டி, அவரிடம் அழகிய மணவாளச் சீயர் கற்றதையும், பின்னர் உபதேச ரத்தின மாலையின் உரையில் பெரியவாச்சான் பிள்ளையின் குமாரரான நாயனாராச்சான் பிள்ளையிடம் அழகியமணவாளச் சீயர் எல்லாப் பொருள்களையும் கேட்டதாகச் சொன்னவற்றை யும் கொண்டு, அழகிய மணவாளச் சீயர் கி. பி. 1242இல் பிறந்து, கி.பி. 1350இல் திருநாட்டை எய்தினார் என்பதே பொருந்துவதாக உள்ளது.

## 2. 2. வாழ்க்கை வரலாற்றில் சிறப்பான செய்திகள்

சீயரின் வரலாறு வியப்பானதாகும். வரலாற்று மூலங்களைக் கால அடிப்படையில் தமிழ் வடமொழி நூல்கள் வாயிலாகவும் செவிவழிச் செய்திகள், மற்றும் நிகழ்ச்சிகள் மூலமாகவும் அறியலாம். பெரியோர்கள் செவிவழி கேட்ட வரலாற்றை இங்குக் குறிப்பிடுவது பொருந்தும்.

கி. பி. 13, 14ஆம் நூற்றாண்டுகளை வைணவத்திற் கும், வைணவத் திருக்கோயில்களுக்கும், வைணவருக்கும் ஆபத்தான காலம் எனலாம். அந்தக் காலத்தில் வைணவத் தலங்களில் முதன்மையானதாகக் கருதப்படும் நான்கு திவ்விய தேசங்களிலுள்ள இறைவன் நான்கு ஆசாரியர் களாக அவதரித்தனன் என்றும், முறையே திருவரங்கம் பெரிய கோயில் அழகிய மணவாளன் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் என்னும் ஆசாரியராகவும், திருமலையிலுள்ள திருவேங்கடத்துறை செல்வன் வேதாந்த தேசிகர் என்னும் ஆசாரியராகவும், பெருமாள் கோவில் என வழங்கும் காஞ்சி வரதராஜப் பெருமான் பிள்ளை லோகாசாரியர் என்னும் ஆசாரியராகவும், திருநாராயணபுரத்துத் திருமாலான செல்வநாரணன் வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் என்னும் ஆசாரியராகவும் பிறந்ததாகக் கூறுவர். இவ்வகையில் இந்த

ஆசாரியர்கள் நால்வரும் வைணவ வரலாற்றுக்குச் செய்த தொண்டு அளவிடற்கரியது.

மேலும் கிடைத்த செவிவழிச் செய்திகளில் சீயரின் தாய் தந்தையர் மன்னார்கோயிலிருந்து மேல்நாடான திருநாராயண புரத்துக்குச் சென்று, அத்தலத்து இறைவனான திருநாராயணப் பெருமாளிடம் பிள்ளை வரம் வேண்டித் துதித்துப் பிறந்தவர், வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் ஆவர் என்று அறிகிறோம். இத்தலத்தில் எதுகிரி நாச்சியார் திருநாராயணப் பெருமாளின் திருவடிகளில் அமர்ந்துள்ளதால் அந்நாச்சியார் புருஷகாரமாக (சிபாரிசாக) தாம் பிறந்தார் என ஒரு நம்பிக்கையுள்ளதால், அவர் அந்நாச்சியாரோடு கூடிய திருநாராயணப் பெருமாளுக்குத் தம் பிறவிக்கு நன்றி செலுத்தும் வகையில், துவய மந்திரத்தின் முதல் வாக்கியமான 'ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே' என்பதற்குப் 'பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈச்வரன் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது' என்று பிள்ளைலோகாசாரியர் அருளிய போதிலும், சீயர் தாம் இயற்றிய தத்துவ தீபிகை என்னும் நூலில் 'ஸ்ரீமத்' பதத்தைச் 'சரணௌ' என்ற பதத்தோடு சேர்த்துத் 'திருவோடு கூடிய நாராயணன் திருவடிகளை' என்று பொருள் வழங்கியுள்ளமை அறியத்தக்கது. இது சீயர் நன்றி செலுத்தியதற்கு எடுத்துக்காட்டாக அமைந் துள்ளது. மேலும் இச்சம்பிரதாயத்தைப் பிரமாணத்தோடே வெளியிட்டருளினர் என்றும், இந்தச் சரிதம் உத்தர சூரி சரிதம் என்னும் வடமொழிக் காவியத்திலுள்ளது என்றும் அந்நாட்டார் மொழிகுவர்.[13]

## 2. 3. கல்வி, விருதுகள்

சீயர் கல்வி பயின்ற முறை படிப்பதற்கு இன்சுவையா யிருக்கும். இவர் பெரியவாச்சான் பிள்ளை அகத்தில் சிறுவயதில் சமையல் செய்பவராய் இருந்தார். பிள்ளையின் சீடர்கள் ஒரு சமயம் பிள்ளை இல்லாத சமயத்தில் அவர் அகத்துக்கு வந்து பாடம் படித்துக் கொண்டிருந்தபோது சீயர் அவர்களைப் பார்த்துப், 'படிக்கிறதென்?' என்று எள்ளலாகச் சொல்ல, அவர்களும் 'இவருக்கு எழுத்துப் பயிற்சி இல்லை' என்று அறிந்து 'முசலகிசலயம்' படிக்கிறோம் என்று ஏளனமாகச் சொல்ல, சீயரும் அத்தை அறியாதே, 'இப்படி ஒன்று உண்டோ?' என்று திகைத்து, அத்தைத் தம் ஆசாரியரான ஆச்சான் பிள்ளையிடம் சொல்ல, அவரும் புன்முறுவல் செய்து, 'அவர்கள் உமக்குக் கல்வியறிவு இல்லாமையால் [illegible]?

உமக்கு இத்தைக் கொண்டு காரியம் என்? என்று'கேலி செய்தார் கள்' என்று கூற, சீயர் மிகவும் வெட்கப்பட்டு ஆசாரியர் காலிலே விழுந்து, 'ஞான வித்துவானாம்படி அருளவேணும்' என்று வேண்ட, பெரிய வாச்சான் பிள்ளையும் உகந்து, சீயரின் 32ஆவது வயதிலே அட்சராப்யாசம் தொடங்கிக் காவிய நாடக அலங்கார தர்க்க பூர்வ உத்தர மீமாம்சை முதலான எல்லாச் சாத்திரங்களையும் கசடறக் கற்பிக்க, இவருடைய நோக்காலே சிறந்த வித்துவானாய் 'முசலகிசலயம்' என்ற ஒரு காவியத்தை எழுதித் தம்மைக் கேலி செய்தவர்கள் கையில் கொடுத்து வாய் மூடச்செய்து, தலையிறக்கிட்டு வெட்கப்படும்படி செய்தார். பின்னர்த் துறவியாகிப் புறச்சமயவாதிகளை வென்று மிக்க சாத்திர நிபுணராகத் திகழ்ந்ததால்'வாதிகேசரி' என்னும் விருது பெற்றார்.[14] இப்பகுதி சீயருடைய கல்வி முயற்சியின் சிறப்பினை நன்கு புலப்படுத்துகின்றது. என்றாலும் முன்பு குறிப்பிட்டது போல ஆசிரயத்தது பெரியவாச்சான் பிள்ளைபால்; சாத்திரங் களை அதிகரித்தது பெரியவாச்சான் பிள்ளையின் திருக்குமாரர்பால்.

சீயர் தமது சொற்பொழிவுகளால் வேறு மதத்தினரை வென்று அவர்களாகிய யானைகளுக்குத் தாம் சிங்கம் போல் வாழ்ந்ததால் 'வாதிகேசரி' என்னும் விருது பெற்றதாக வை. மு. சடகோபராமாநுஜாசாரியர் கூறுவர்.[15]

### 2. 4. சீயரின் பண்பு நலன்கள்

திருவாய்மொழிக்குப் பன்னீராயிரம் கிரந்தத்தில் பொழிப் புரையான உரை வழங்கி அதைக் காத்ததால் சீயர் பெருங்குணம் படைத்தவர்களில் ஒருவராய்த் திகழ்கிறார்.[16] உலக மக்கள்பால் அன்புகொண்டு தம்முடைய பெரிய அறிவாற்றலால் உரை வழங்கவே இவர் தம் 'தமக்கென முயலா நோன்றாள் பிறர்க்கென முயலும்' பெரும்பண்பு தெளிவாகும்.

### 2. 5 .சீயர் இயற்றிய நூல்கள்

சீயர் தம் வாழ்நாளில் பதினேழு நூல்கள் எழுதியுள்ளதைப் பல்வேறு புத்தகங்கள் மூலம் அறியலாம்[17]. அவற்றையெல்லாம் தொகுத்துக் காணும்போது சீயர் இயற்றியவை பின்வருவன எனலாம்:

1. தத்துவ தீபம்
2. தத்துவ நிரூபணம்
3. தத்துவ சங்கிரகம்

4. தத்துவ பூஷணம்
5. ஞானார்ணவம்
6. சாரீரக்கைக் கண்டியம்
7. அத்யாத்ம ’சிந்தை
8. சதுச்லோகி
9. கீதாசாரம்
10. தீபப் பிரகாசிகை
11. திருவிருத்த வியாக்கியானம்
12. பன்னீராயிரப்படி
13. இருபத்துநாலாயிரப்படி பிரமாணத் திரட்டு
14. இரகசியத்திரய விவரணம்
15. இரகசிய மணிமாலை
16. தமிழ்க்கனி பிரபந்தம்
17. பகவத்கிதை வெண்பா

—இவற்றுள் முதல் ஒன்பதும் வடமொழி மணிப்பிரவாள நூல்களாகத் திகழ்கின்றன. மற்றவை தமிழ் நடையோடு வடமொழி விரவி வந்தன.

## 2. 6. உரைதோன்றிய சூழ்நிலைகள்

சீயரின் உரை எழுந்ததற்கு முக்கியமான சூழ்நிலை பின்வருமாறு:

மற்ற வியாக்கியானங்களில் ஆழ்வார் பாடல்களிலுள்ள பதத்திற்குப் பதம் பொருள் இயைபு எழுதப்படவில்லை; ஈட்டில் பதத்திற்குப் பதம் பொருள் சிறுபான்மை காணப்படுகிறது. சீயர் காலத்தில் பல்வேறு படையெடுப்புக்களால் கல்வியில் நாட்டம் குன்றியிருந்தது; அலகு அலகாக அமைந்த ஆசாரியர்களின் உரைகளைத் தெளிவாக எடுத்துரைக்க வல்லார்களும் அந்நாளில் இலராயினர். ஆதலால், மற்றை உரைகளின் பொருள்களை அறிவதற்குத் துணையாகவும், ஆழ்வாரின் பாடற் பதப்பொருள் அறிவதற்குச் சிறப்பாகவும் இந்த உரை அமைந்தது. பின்புள்ளாரும் இதனைக் கற்று, இதனை அறிந்து, இதனைப் பேசுவதற்காகச் சீயர் உரை வகுத்தார் என அறிய முடிகிறது. இந்த உரையைக் கொண்டே மற்ற வியாக்கியானங்களை அறிய வேண்டிய சூழ்நிலையும் இருந்தது குறிப்பிடத் தக்கதாகும்.[18]

## 2. 7. உரை எழுந்த காலம்

சீயர் தமது 32 ஆவது வயதில் கல்வி கற்கத் தொடங்கியதனால், கி.பி. 1274க்குப் பின்னரே வெகுவிரைவில்

திருவாய்மொழிக்கு இவ்வுரை எழுதியிருக்கக் கூடும் என நினைக்க இடமுண்டு. அதாவது பதின்மூன்றாவது நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் இவ்வுரை எழுதப் பெற்றது எனலாம்.

## 2. 8. சீயர் நூல்களைப் பின்னோர்கள் மேற்கோள் காட்டிய இடங்கள்

சீயர் காலத்திற்குப் பின்னர் வாழ்ந்தவர்களுள் மணவாள மாமுனிகள், சீயர் நூற்கருத்துக்களைத் தம் நூல்களில் மேற்கோளாக எடுத்தாண்டுள்ளார்.

சீயரது நூல்களைத் தாம் கற்றதன் வாயிலாக நன்றி செலுத்தும் வகையில் மணவாள மாமுனிகள் மூன்று பாடல்களில் (உ.ர.மா.பா. 39, 45, 47) சீயரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

முமுட்சுப்படி என்னும் நூலினுரையில் திருமந்திரப் பிரகரணத்தை விவரிக்கும்போதும், துவயப் பிரகரணத்தின் முன்னுரையிலும் முறையே தீபப்பிரகாசம், இரகசியத்ரய விவரணம் ஆகிய இரு நூல்களிலிருந்து மாமுனிகள் மேற்கோள் காட்டிப் பொருள் வழங்கியுள்ளார்.[19]

சீயரது உரைத் தொடரை முமுட்சுப்படி திருமந்திரப் பிரகரணத்தில் மாமுனிகள் கையாண்டுள்ளார்.[20]

தீபசங்கிரகம், தீபப் பிரகாசம் என்ற நூல்களிலிருந்து ஸ்ரீவசனபூஷண நூற்பாவிற்கு விளக்கம் தரப் பயன்படுத்தியுள்ளமையும் அறிய முடிகிறது.[21]

மணவாள மாமுனிகளின் சீடரான பிரதிவாதி பயங்கரம் அண்ணன் என்னும் ஆசாரியர், மாமுனிகளைக் குறித்து இயற்றிய வரவரமுனி சதகத்தில் சீயர் திறத்து மாமுனிகளுக்குள்ள பத்தியைக் குறிப்பிட்டுள்ளது அறியற்பாலதாகும்.[22]

மாமுனிகளின் சீடருக்குச் சீடரான பிள்ளைலோகம் சீயர், சீயரின் வெண்பாவை இரண்டு இடங்களில் பயன்படுத்தியுள்ளார்.[23]

**முடிவுகள்**

1. சீயர் கி.பி. 1242 ஆம் ஆண்டில் பிறந்தவர்.
2. 32 வயதிற்குப் பிறகு கல்வி கேள்விகளில் சிறந்து பல விருதுகளைப் பெற்றார். அவற்றுள் ஒன்று 'வாதிகேசரி' என்பது.

3. பன்னீராயிரப்படி உட்பட '17 நூல்களை இயற்றிப் பெருமை பெற்றார்.

4. திவ்வியப் பிரபந்த வியாக்கியான குரு பரம்பரையில் ஓர் உட்பிரிவிலுள்ள ஆசார்யர்களில் ஒருவராய்த் திகழ்ந்தார்.

5. பதின்மூன்றாம் நூற்றாண்டிலிருந்த சமுதாய—இலக்கியச் சூழ்நிலைகள் அவருடைய உரை எழுவதற்குக் காரணமாய் இருந்தன.

6. சீயரின் நூல்களை மிகுதியாகப் பயன்படுத்தியவர் மணவாள மாமுனிகள் ஆவார்.

இயல்—2

## குறிப்புகள்

1. அண்ணா அப்பங்கார் ஸ்வாமி, பழநடை விளக்கம், 1895, ப. 65. பின்னிணைப்பு எண் (1) காண்க.
2. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ப. ஆ.), பெரிய திருமுடியடைவு கந்தாடைநாயன், 1975, ப. 599.
3. பிள்ளைலோகம் சீயர், ஸ்ரீயதீந்திரப் பிரவணப் பிரபாவம் (தெலுங்குப் பதிப்பு), பக். 18—20.
4. பன்னீராயிரப்படி குருபரம்பரா பிரபாவம், ப. 586.
5. பகவத்கீதை வெண்பா, ஸ்ரீரங்கம் வாணி விலாச அச்சகம், 1906, சிறப்புப் பாயிரம்.
6. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ப.ஆ.), பாரதீயபூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ சபா பொன்விழா மலர், 1978, ப. 296.
7. ப்ர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி, ஸ்ரீராமாநுசன் 224, ப. 18, பத்தி 45.
8. மேலது (6), ப. 296.
9. மேலது (3), பக். 18—20.
10 பிள்ளைலோகஞ் சீயர், உபதேச ரத்தின மாலை வியாக்கியானமும் பதவுரையும், புனைபெட் அச்சகம், காஞ்சி, 1916, ப. 116.

11. அழகிய மணவாளச் சீயர், தத்துவ நிருபணம், தெலுங்குப் பதிப்பு, தனியன்:
அபய ப்ரதநாமா நமஸ்மத்குருமஹம் பஜே ।
யத்கடாக்ஷாதயம் ஜந்துரபுநர்ஜந்மதாம் கத: ॥
(ஒரு விலங்காயிருந்த அடியேன், யவருடைய கடாட்சத்தால் மறுபிறவியில்லாதவனானேனோ, அப்படிப்பட்ட அபயபிரதர் என்னும் பெயருடைய என்னுடைய ஆசாரியரை அடியேன் பத்தி செய்கிறேன்).

12. மேலது (6), ப. 296.

13. ஸ்ரீராமசர்மா, அரையர், திருநாராயணபுரம், நேர்முகப் பேட்டி, 6-5-1987.

14. மேலது (3), பக். 18—20.

15. வை. மு. சடகோபராமாநுஜாசாரியார், திருவிருத்த வியாக்கியானம், முன்னுரை.

16. உபதேச ரத்தின மாலை, பாடல் 39.

17. பெரிய திருமுடியடைவு, ப. 600.
அருணாசலம், மு., தமிழ் இலக்கிய வரலாறு, 14ஆம் நூற்றாண்டு, பக். 289—292.
தமிழ்ப்புலவர் அகர வரிசை (தொகுதி 2, பகுதி 1). கழகம், 1962, ப. 49.

18. பிள்ளைலோகஞ் சீயர், உபதேச ரத்தின மாலை வியாக்கியானமும் பதவுரையும், ப. 130.

19. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ப. ஆ.), முட்சுப்படி, சாதாரண வருடம், ப. 48. ப. 73.

20. மேலது, ப. 70.

21. ப்ர. ப. அண்ணங்கராசார்யஸ்வாமி (ப. ஆ.), ஸ்ரீமத் வரவரமுநி கிரந்த மாலை, ஸ்ரீவசனபூஷணம் நூற்பா 6' ப. 6, நூற்பா 381.

22. ப்ர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி, வரவரமுநி சதகம் உரை, ஸ்ரீவாதிபீகரார்ய ஸூக்தி மாலிகா, இரண்டாவது பாகம், 1986, ப. 46.

23. (அ) ராமகிருஷ்ண அய்யங்கார் (ப.ஆ., உ. ஆ.), இராமாநுச நூற்றந்தாதி மாமுனிகள் உரையும், அமுது விருந்து, தனியன், பிள்ளைலோகஞ்சீயர் உரை. ப.1.
(ஆ) சே. கிருஷ்ணமாசாரியார் (ப. ஆ.), பகவத் விஷயம், முதல் பத்து, தனியன் உரை, பிள்ளைலோகஞ்சீயர், ப. 6.

□□□

# இயல் - 3

# உரையமைப்பு

சீயரின் வாழ்வுப் பணியைப் பற்றி முன் இயலில் ஆய்வு செய்யப்பட்டது. இவ்வியலில் அவர்தம் உரை அமைந் துள்ள விதம் 'உரையமைப்பு' என்ற தலைப்பின்கீழ் ஆய்வு செய்யப்படுகிறது. இதன் பொருண்மை, சிறப்புப் பாயிரமும் உரைப்பாயிரமும் எனப் பொதுவாகவும், திருவாய்மொழி தோன்றக் காரணமும், அதன் சிறப்பு, ஆழ்வாரின் சிறப்பு, ஆழ்வார் அருளிய மற்றைப் பிரபந் தங்களின் சிறப்பு, திருவாய்மொழியும் வேதமும், திருவாய்மொழியில் அர்த்த பஞ்சக அமைப்பு, அதன் வகைப்பாடுகள் ஆகியன பொதுச் சிறப்பாகவும், உரை யமைப்பு என்பது சிறப்பாகவும் வைத்து ஆய்வுபெறு கின்றது.



# உரையமைப்பு

## 3. 0. சிறப்புப் பாயிரமும் உரைப்பாயிரமும்

சீயர் வகுத்த உரை அவதாரிகை என்னும் முன்னுரை, நன்னூல் கூறும் பாயிரக் கூறுகள் எட்டும் அமையப்பெற்று விளங்குவது குறிப்பிடத்தக்கது (நன்னூல் நூ-47). அவற்றைக் கீழ்க்கண்டவாறு ஒப்பிட்டுக் காணலாம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆக்கியோன் பெயர் | — | அழகிய மணவாளச் சீயர் |
| 2. | வழி | — | முன்னோர் உரைகளைத் தாம் கேட்ட வழி |
| 3. | எல்லை | — | திருவாய்மொழிக்கும் அதன் உரைக்கும் சேது முதல் இமயம் வரை இடையெல்லை |
| 4. | நூற்பெயர் | — | பன்னீராயிரப்படி |
| 5. | யாப்பு | — | விசிட்டாத்துவைத தத்தவமும், தமிழ்ப்பா இலக்கணமும் ஆசார்யர்கள் வழி கேட்டு, பின்னர் கற்கத்தக்கது என்னும் யாப்பு |
| 6. | நுதலிய பொருள் | — | இறைவனாகிற விஷயம் — இதனை அர்த்த பஞ்சகப் போக்கில் விளக்கல் |
| 7 | கேட்போர் | — | இறையநுபவத்தில் ஆசையுடையோர் |
| 8. | பயன் | — | பேரின்பப் பெருவாழ்வு — வீடுபேறு |

இப்பாயிரக் கூறுகளுள் ஆக்கியோன் பெயரைச் சீயர் அமைத்த உரையவதாரிகையில் காணப்பெறாவிடினும், சீயர்

அவ்வதாரிகையில் கூறிய ஓர் வடமொழி மங்கள சுலோகத்தில் தாம் கேட்டபடியே காட்டுவதாகக் கூறிய தன்மைப் பொருளின் அருத்தாபத்தி நியாயத்தால் ஆக்கியோன் பெயரையும் கூட்டிச் சிறப்புப் பாயிரத்துள் அடக்கலாம். [1]

மேலும்,

"தோன்றா தோன்றித் துறைபல முடிப்பினும்
தான்றற் புகழ்தல் தகுதி யன்றே" (நன்னூல் நூ.52)

என்கிறதை நிலைநாட்ட, தம் பெயரைச் சுட்டாமல் உரையின் முன்னுரையை வகுத்தார் என்று சொல்லக் குறையில்லை.

வடமொழியில் அமைந்த மங்கள சுலோகத்தில் ஆழ்வாரின் பெருமையையும், அவர் இயற்றிய திருவாய்மொழியின் பெருமையையும், வழித்தோன்றல்களான ஆசாரியர்களால் ஆதரித்துக் கொள்ளப்பட்டதையும் சுட்டிக்காட்டி, தாம் கேட்டபடியே காட்டுவதாகக் கூறுகிறார். இதனால் தமிழ் இலக்கணக் கூறுகளை மனத்திற் கொண்டு உரைக்குச் சிறப்புப் பாயிரம் அமைத்தார் என்றும், சீயர் தம் செய்ந்நன்றி மறவாமையையும் அறிவித்தார் என்றும் தெளிவாகிறது

நன்னூல் காட்டும் சிறப்புப் பாயிரம் செய்வதற்குரியோர் நால்வருள் தகும் உரைகாரர் என்ற வகையில், திருவாய் மொழிக்குத் தகும் உரையைச் செய்த ஐவருள் அழகிய மணவாளச் சீயரும் ஒருவர் என்று காண முடிகிறது. (நன்னூல் நூ.51)

3. 1. திருவாய்மொழி தோன்றக் காரணமும் அதன் சிறப்பும்

உரைப்பாயிரத்தில் சீயர், இருந்தமிழ்நூல் எனப் போற்றப் படும் திருவாய்மொழியை இயற்றியவர் நம்மாழ்வார் என்றும், இவ்வாழ்வார் மனத்தில் இறைவன் புகுந்து (இறைவனே) இயற்றினான் என்றும், அதற்குக் காரணம் இன்னது என்றும், அதன் சிறப்பையும் மிகச்சீரிய முறையில் விளக்கியுள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

எல்லா வுயிர்களையும் உய்வித்தலைப் பயனாக நினைத்து, இறைவன் தனது மிகச்சிறந்த இயற்கையான இன்னருளாலே ஆழ்வாருடைய நெஞ்சில் திருவாய்மொழியைத் தோற்றுவித்தான். இத்திருவாய்மொழியின் சிறப்பைச் சீயர் பின்வருமாறு அநுபவிக்கிறார்: (பன்னீராயிரப்படி உரை அவதாரிகை)

சிக்ஷை, வியாகரணம், சந்தஸ்ஸு, நிருக்தம், சோதிடம், கல்பம் ஆகிய அங்கங்களோடும் ஸ்மிருதி, இதிகாசம், புராணம் ஆகிய விளக்க நூல்களோடும் கூடிய, கர்ம காண்டம் பிரம்ம காண்டம் என்று கூறப்படும் வேத உபநிடதங்களின் சாரமான பொருள்களை விளக்குவது;

எல்லா நற்குணங்களையும் இயல்பாகவுடையவனும், பொங் கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகுமாகியவற்றைச் செல்வ மாகக் கொண்டவனுமாகிய இறைவனை மனத்தினால் சிந்தித்து அநுபவித்ததனால் வளர்ச்சியடைந்த (பரபக்தி) இறைவனைக் காண வேண்டும் என்ற விருப்பம் என்னும் கடலின் கலுங்கல் போன்றது;

பிறப்பிறப்புக்களின் தொடர்ச்சியாகிய சம்சாரத்திலுண்டான எல்லாத் தாபங்களுமாகிற காட்டுத் தீயை அணைக்கவல்ல பேரமுத வெள்ளமானது;

எப்போதும் புதியதாய்த் தோன்றுகிற— எல்லையற்ற பெருமை பெற்ற பரமானந்தத் திரட்சியை மேன்மேலும் வளரச் செய்யுமது;

பெண்ணும் பேதையு முட்பட எல்லா மக்களாலும் கற்கத் தக்க தமிழ்மொழித் தொடராகிய பாட்டுக்களாலே, கலி யுகத்தில் முதன் முதலாக அவதரித்த ஆசாரியரான நம்மாழ்வார் அருளிச் செய்த நூல்களுள் முதன்மை பெற்றதும் சிறப்பு வாய்ந்ததுமாக அமைந்தது இத்திருவாய்மொழி.

மேலும், இத்திருவாய்மொழியாகிற திவ்வியப் பிரபந்தம் (சிறந்த நூல்), திருவின் மணவாளனாகிய திருமால்—அறி வுடைய இந்த ஆத்மாவுக்குத், தஞ்சமாகப் பற்றப்பட்டவனாய்க் கொண்டு, வெறுப்புக்கு இலக்கான பாவங்களின் நீங்குதலையும், விருப்புக்கிலக்கான தன்னைப் பெறுதலையும் (தன்னைப் பெற்று அநுபவித்தலையும்), தானே (வேறெதையும் எதிர் பாராமலேயே) பண்ணிக் கொடுப்பான்—என முதலில் தொடங்கி இறுதி வரையில் தொடர்ந்து செல்லுகிற பெரியதோர் கருத்தைத் தெரிவிக்கின்றது.

இப்பிரபந்தம் எல்லாச் சாத்திரங்களின் பொருள்களையும் அறிவிக்குமதாகையாலே, எல்லா வேத சாத்திரங்களின் முழு நோக்கான அர்த்த பஞ்சகமும், முற்கூறிய தொடர்ந்த கருத்திலே உள்ளடங்கியுள்ளது. இவ்வர்த்த பஞ்சகத்தை விளக்கும் வகை யில் 'திருவின் மணவாளன்' என்றதனால் அடையத்தக்க

இறையியல்பும், 'அறிவுடைய ஜீவாத்மாவுக்கு' என்றதனால் உடலுக்குள்ளே யிருக்கும் ஆன்ம இயல்பும், 'தஞ்சமாக' என்றதனால் உபாயத்தின் இயல்பும், 'வெறுப்புக்கிலக்கான பாபங்களின் நீங்குதலையும்' என்றதனால்—இறைவனை அடைவதற்குத் தடையான பாபங்களின் நீக்கமும், 'விருப்புக்கிலக்கான தன்னைப் பெறுதலை' என்றதனால் இறைவனை அடைந்து பெறவேண்டிய பயனைப் பெறுதலுமாகிய ஐந்து பொருள்களும் குறிப்பிடப்பட்டன.

### 3. 2. ஆழ்வாரின் சிறப்பு

உலகினர் பிறப்பிறப்புத் தொடர்ச்சியில் உழல்வதைக் கண்டு இறைவன் மிகவும் வருத்தமுற்று இரங்கி, மிகச்சிறந்த இயற்கையான இன்னருளாலே நம்மாழ்வாருக்கு மயர்வற மதிநலமருளினன் என்பர்.[3] 'என் நா முதல் வந்து நல்லின் கவி' (7-9-3) என்கிறபடியே இவரைக் கருவியாகக் கொண்டு இறைவன் திருவாய்மொழி முதலான கவிகளைப் பாடுவித்துக் கொண்டான். ஆழ்வாரும், பெண்ணும் பேதையு முட்பட எல்லா மக்களாலும் கற்கத்தக்க தமிழ்ப் பாடல்களினாலே இறைவனாகிற விஷயத்தை அநுபவித்துத் தாம் வேண்டிய பயனாகிய வீடுபேற்றினை அடையப் பெற்றார் என உரைப் பாயிரத்தில் ஆழ்வார் சிறப்பைச் சீயர் குறிப்பாக உணர்த்தியது அறியற் பாலதாகும். அதனை உலகோர்க்கு உணர்த்துவது ஆழ்வாரின் சிறப்பை ஒரு வகையில் விளக்குவதாகும். மேலும், ஒவ்வொரு பதிகத்தின் இறுதிப் பாடலில் ஆழ்வாரின் இயல்பைச் சீயர் சுட்டிக் காட்டி மெருகிட்டு உரை எழுதுவர். இதில் இவர் தாம்பெற்ற பேற்றைச் சொல்லுவதும் குறிப்பிடத்தக்கது.

### 3. 3. ஆழ்வார் அருளிய மற்றைப் பிரபந்தங்களின் கருத்து

நம்மாழ்வார் அருளிய பிரபந்தங்கள் நான்கு. அவையாவன. திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி.

சீயர் தமது உரைப்பாயிரத்தில் ஆழ்வாருடைய நான்கு பிரபந்தங்களின் கருத்தைக் காட்டி, திருவாய்மொழியின் சிறப்பைக் கூறுவர். இந்நான்கு பிரபந்தங்கள் ஆழ்வாரின் மனநிலைமைகளை விளக்குவனவாகும்.

1. திருவிருத்தம்: இந்நூல் நூறு பாடல்கள் கொண்டு அந்தாதி முறையில் அமைந்துள்ளது; இதில் தமக்குப் பிறப்பிறப்புத் தொடர்ச்சியாகிற சம்சாரத்தின் சம்பந்தம் விலக வேண்டுமென்று வேண்டுகிறார் ஆழ்வார்.

2. திருவாசிரியம்: இந்நூல் ஏழு பாடல்கள் கொண்டது; இதில் சம்சார சம்பந்தம் விலகப் பெற்றவர்கள் அநுபவிக்கத்தக்க இறைவனது பேரழகு முதலானவற்றை அநுபவிக்கிறார் ஆழ்வார்.

3. பெரிய திருவந்தாதி: இந்நூல் அந்தாதி வகையில் 87 பாடல்கள் கொண்டது; இதில் அப்படி அநுபவித்ததனால் உண்டுபண்ணப்பட்ட தமது ஆர்வ மிகுதியைப் பேசுகிறார் ஆழ்வார்.

நான்காவது பிரபந்தமான திருவாய்மொழி இவ்வார்வத்தால் அடையும் பேறு பற்றியது என முன்னர் விளக்கப்பட்டது.

இதனால் நான்கு உறுதிப் பொருள்களுள் சிறந்ததான வீடு பேற்றைப் பெற, பிறப்பிறப்புத் தொடர்ச்சியில் வெறுப்பு, இறைவனது பேரழகில் ஆழங்கால்படல், அவ்வாறு ஆழங்கால் பட்டதால் உண்டான மிகுதியான ஆர்வம் முதலானவை வேண்டும் என்பதும், நான்காவதான வீடுபேறு திருவாய்மொழியினால் வாய்க்கும் என்பதும் காட்டப்பெற்றது குறிப்பிடத்தக்கது.

### 3. 4. வேதமும் திருவாய்மொழியும்

திருவாய்மொழியைப் பயில்வார்க்கு அதன் ஆழ்பொருளான வேதத்தின் முடிவான கருத்தை எளிமையாக அறியும் வகையில் சீயர் முன்னுரையில் பகுத்துக் காட்டியுள்ளார்.

> ''ஒரு மனிதனால் இயற்றப்படாததாய், குற்றமற்றதாய், என்றென்றும் உள்ளதாய்த் தானே பிரமாணமாகத் திகழும் வேதத்தை விளக்கக் கூடியனவான சுமிருதி, இதிகாச, புராணங்கள் ஆகியவற்றின் முடிவான கருத்தான இறை உண்மை, உயிர் உண்மை, தக்க நெறி, தடை, பேறு ஆகிய ஐந்தின் திரண்ட கருத்தினைத் திருவாய்மொழி தெளிவு செய்கிறது''

எனத் தம் உரைவழி சீயர் புலப்படுத்துகிறார்.

### 3. 5. திருவாய்மொழியில் அர்த்த பஞ்சக அமைப்பு

வேதமும் வேதாந்தங்களான உபநிடத நூல்களும் அறிய வேண்டிய அரும்பொருள் ஐந்தினையே சிறப்பாகத் தெரிவிக்கின்றன. அவையாவன:

1. பற்றப்படுமவனான இறைவனுடைய இயல்பு
2. பற்றுபவனான ஆன்ம இயல்பு

3. இறைவனை அடைவதற்குறுப்பான நெறி (உபாயம்) இயல்பு
4. அடைந்து பெறவேண்டிய பேற்றின் இயல்பு
5. அப்பேற்றைப் பெறவொட்டாமல் தடுக்கும் விரோதி இயல்பு

என்பனவாம். இவையே 'அர்த்த பஞ்சகம்' எனத் தொகைப் படுத்தி உணர்த்தப்படுகின்றன.

திருவாய்மொழிக்கு அமைந்த தனியன்களுள் பட்டர் இயற்றிய தனியன் அர்த்த பஞ்சகத்தை உணர்த்துவது அறியலாம்.[9] இத்தனியனை மனத்திற் கொண்டு சீயர் ஒரு மகாவாக்கியத்தையும், அதன் பொருளையும் காட்டித் திருவாய் மொழி அர்த்த பஞ்சகத்தைத் தெரிவிப்பதாகக் குறிப்பிடுகிறார்.[4] இதன் வாயிலாக ஆழ்வாருடைய மனத்தில் எழுந்த உய்வு நெறிகளான உயர்ந்த உண்மைகளை அறிய முடிகிறது.

ஆக, திருவாய்மொழியில் (அர்த்த பஞ்சகமான) "அறிய வேண்டும் அர்த்தமெல்லாம் இதுக்குள்ளே உண்டு" அதாவது அஞ்சர்த்தம்" என்ற முமுட்சுப்படி நூற்பாவிற்கேற்ப (எண் 22) (என்பதற்குப் பொருத்தமாகச்) சீயர் உரையும் அமைந்துள்ளது அவர்தம் உரைப்பாயிரம் மூலம் அறியற்பாலதாகும்.

### 3. 6. அதனை வகைப்படுத்தல்

மேற்கூறியபடி பேரின்பப் பேறு பெற அர்த்த பஞ்சகமெனும் ஐம்பெரும் பொருள்களைச் சீயர் உரைப்பாயிரத்தில் வகைப் படுத்திக் காட்டுகிறார்.

முதலில் அர்த்த பஞ்சக அடிப்படையில் பத்துக்களைத் தொகுத்துக் கொண்டும், அடுத்து அர்த்த பஞ்சகங்களில் அமைந்துள்ள ஒவ்வொரு நிலைமையும் ஒன்றுக்கொன்று தெளிவு பெறும் வகையில் இரண்டாக வகுத்துக்கொண்டும், பிறகு பத்துக் களும் பதிகங்களும் பாசுரங்களும் தருகின்ற அர்த்த பஞ்சகப் பொருளை விரித்தும் இவர் உரை வழங்குவதைக் காணலாம்.

திருவாய்மொழியில் முதலிட்டு நான்கு பத்துக்களாலே ஒருவருடைய முயற்சியால் உண்டு பண்ணப் படுவதன்றியே எப்போதும் நித்தியமாக உள்ளவைகளான கடவுளாகிய உயர்ந்த ஆன்மா, ஜீவனென்னும் தாழ்ந்த ஆன்மா, இவர் களுடைய உண்மை நிலை தெரிவிக்கப்படுகின்றன.

அடுத்த நாலு பத்துக்களாலே (இறைவனுடைய முயற்சியால் உண்டாக்கத் தக்கவைகளான) வெறுக்கத்தக்க பாபங்களின் நீக்கம், அதன் பின்பு உண்டாகுமதாய் விரும்பத்தக்க இறைவனை அநுபவித்தல் ஆகியன இரண்டும் தெரிவிக்கப்படு கின்றனா.

நடு இரண்டு பத்துக்களாலே எப்போதும் நித்தியமாக உள்ள இறைவனாகிய உபாயமும், இறைவனருளால் உண்டான சீவாத்மாவின் முயற்சியினால் உண்டாக்கத் தக்கதாய் இறைவனைத் தஞ்சமாகப் பற்றுதலும் தெரிவிக்கப் பெறுகின்றன. பின்னிணைப்பு 2)

3. 7. உரையமைப்பு

உரையமைப்பு என்னும் இப்பகுதி முன்பு குறிப்பிட்டவாறு அர்த்த பஞ்சக அடிப்படையில் உரை வழங்க முற்பட்ட சீயர் அதற்கேற்பத் திருவாய்மொழியை முழுமையாக, பகுதிகளாக, பதிகங்களாக, பாசுரங்களாக, எவ்வெவ்வாறு பகுத்தும் தொகுத்தும் வகை செய்து உரை வழங்குகிறார் என்பது தெளிவு செய்கிறது.

3. 7. 1. தொகுதி நோக்கு

உரைப்பாயிரத்தில் உரைத்த ஐந்து பெரும் பொருள்களை விளக்கும் வகையில் கருத்துக்களைப் பகுத்து அமைத்துள்ளார் சீயர், அவற்றில் என்றும் நிலையாயுள்ள பரமாத்ம சீவாத்மாக் களின் உண்மை நிலைகளை உணர்த்துகின்ற முதல் நான்கு பத்துக்களில், முதற்பத்தும் இரண்டாம் பத்தும் சீவாத்மாவினால் அடையத் தக்க இறையியல்பை உணர்த்துகின்றன; மூன்றாம் பத்தும் நான்காம் பத்தும் இறைவனை அடைகின்ற ஆன்மாவின் இயல்பை உணர்த்துகின்றன; அஞ்சாம் பத்தும் ஆறாம் பத்தும் தன்னை அநுபவிப்பதற்குத் தானே உபாயமான இறைவனைத் தஞ்சமாகப் பற்றுதலை உணர்த்துகின்றன; ஏழாம் பத்தும் எட்டாம் பத்தும் இறைவனைப் பெறுதற்குத் தடையான பாபங் களின் நீக்கத்தை உணர்த்துகின்றன; ஒன்பதாம் பத்தும் பத்தாம் பத்தும் இறைவனை அடைந்து பெறும் பேறு கைகூடுதலை உணர்த்துகின்றன.

3- 7-. 2-. பகுதிப் பார்வை

அவற்றுள்ளே, முதற்பத்து மிகவுயர்ந்த அடிமை கொள்ளும் தலைவனான இறைவனுடைய காத்தற் றன்மையையும், இரண்டாம் பத்து அவனுடைய அநுபவிக்கத்தக்க இனிமையையும்

தெரிவிக்கின்றன; மூன்றாம் பத்து திருமாலுக்கே உரிய தொண்டனான ஆன்மா அவனொருவனையே அநுபவிக்கும் அநுபவத்தையும், நாலாம் பத்து இறைவனொருவனையே ஆன்மா தனது அன்புக்கு இலக்காகக் கொண்டமையையும் விளக்குகின்றன; அஞ்சாம் பத்து இறைவனாகிய உபாயத்தின் அபாய மேதுமில்லாத இயல்மையும், ஆறாம் பத்து அவ்வுபாயத்தைப் பற்றும் முறையையும் குறிப்பிடுகின்றன; ஏழாம் பத்து வெறுக்கத்தக்க பாபங்களின் தன்மையையும், எட்டாம் பத்து அப்பாபங்கள் நீங்கும் வகையையும் தெரிவிக்கின்றன; ஒன்பதாம் பத்து பெறத்தக்க பேற்றின் தன்மையையும், பத்தாம் பத்து அப்பேற்றினை அநுபவிக்கும் விதத்தையும் கூறுகின்றன.

ஆக, இவ்வைந்து பொருள்களின் உட்பிரிவான பொருள்களின் வேறுபாட்டாலே இந்நூலில் பத்துப் பத்துக்களுக்கும் தனித்தனியே தொடர்ந்த கருத்துக்கள் கூறப்படுகின்றன. (பன்னீராயிரப்படி உரை அவதாரிகை).

### 3. 7. 3. பதிகக் கட்டமைப்பும் பாசுர உரைப்போக்கும்

சீயரின் உரைக்கட்டமைப்பு— அந்தந்தத் திருவாய்மொழியின் முடிந்த கருத்தைக் காட்டல்; பத்துப் பாடல்களின் கருத்தைச் சொல்லல்; ஆழ்வாரின் அகநிலையைச் சேர்த்து அவதாரிகையில் கூறல்; பாடல்களுக்குப் பொழிப்புரை தருதல்; அடைமொழி தந்து உரைத்தல்; கருத்துப் பொருள் கூறல்; அருஞ்சொற்களுக்கு விளக்கம் தருதல்; இலக்கணம் சுட்டி விளக்குதல்; முன்னோர் மொழிந்ததை முறைப்படி காட்டுதல்; யாப்புக் குறிப்புத் தருதல் முதலான உரைநெறி பலவற்றையும் உட்கொண்ட ஒரு சீரிய கட்டமைப்போடு (இவர்தம் உரை) அமைந்து விளங்குவதைக் காணலாம்.

### 3.7.3. திருவாய்மொழிகளின் முடிந்த கருத்தைக் கூறுதல் :

படிப்போர் மனத்தை ஈர்க்கும் வகையில், ஒவ்வொரு பத்துக்கும் உரை தொடங்கும் முன்னர் அந்தப் பத்தினுடைய உட்பிரிவான பத்துத் திருவாய்மொழிகளின் (110 பாடல்கள் கொண்டது) முடிந்த கருத்தை, உரைப்பாயிரத்தில் காட்டிய ஐம்பெரும்பொருளுக்குப் பொருந்த அமைத்துள்ளார். இது மற்ற வியாக்கியானங்களில் இல்லாது சீயர் உரையில் மட்டும் புலப்படும் தனிச்சிறப்பாகும். சீயர் கொண்ட இந்த நெறி சிறந்ததாகும். எடுத்துக்காட்டாக, அடிமைகொள்ளும் தலைவனான இறைவனுடைய காக்குந் தன்மையில் நோக்கான முதற்பத்தில் பத்துப் பதிகங்

களும் இறைவனுடைய காக்குந் தன்மையை விவரிப்பதாகச் சீயர் உரைத்துள்ளார். அதில் முதல் பதிகம் காக்கும் தன்மைக்கு இன்றியமையாத, எல்லாரையும்விட இறைவனுக்குள்ள உயர்த்தியையும், இரண்டாம் பதிகம் எல்லாராலும் அடையப்படும் தன்மையையும், மூன்றாம் பதிகம் அடைவதற்கு இன்றியமையாது வேண்டிய—அவதாரம் செய்து கண்ணுக்கிலக்காய் நிற்கும் எளிமையையும், நான்காம் பதிகம் தன்னை யடைந்தவர்களின் குற்றங்களைத் தாங்கும் பொறுமையையும், ஐந்தாம் பதிகம் தாழ்ந்தாரோடு தன் பெருமை பாராமல் புரையறக் கலக்கும் நீர்மையையும், ஆறாம் பதிகம் ஆராதனைக் கெளியனாம் தன்மையையும், ஏழாம் பதிகம் அவனைப் பற்றுவதிலுள்ள மிக்க இனிமையையும், எட்டாம் பதிகம் பற்றுமவர்களிடம் இறைவன் மனமொழிமெய்களால் ஒருபடிப்பட்டிருக்கையாகிற நேர்மையையும், ஒன்பதாம் பதிகம் பொறுக்கப் பொறுக்கத் தன்னை யநுபவிப்பிக்கும் தன்மையையும், பத்தாம் பதிகம் நம்மிடம் எதையும் எதிர்பாராமல் தன்னை நமக்குத் தந்துதவுந் தன்மையையும் சொல்லுகையாலே காக்கும் தன்மையின் நினைவை வெளிப்படுத்திக் காட்டுகிறார் சீயர். [5] இவ்வாறே மற்ற எல்லாப் பத்துக்களுக்கும் சீரிய முறையிலே உரை வகுத்துக் காட்டுவது அவர்தம் பெரிய அறிவாற்றலைப் புலப்படுத்துகிறது.

### 3. 7. 4. பத்துப் பாசுரக் கருத்தைக் காட்டிச் செல்லல்

மேற்கூறியபடியே ஒவ்வொரு பத்திலும் ஒவ்வொரு பதிகத்துக்கு முன்னுரையாக அந்தப் பதிகத்தின் பத்துப் பாசுரங்களின் உயிரான தொடர்களின் கருத்தைக் காட்டும் வகையில் உரை செய்கிறார்.

எடுத்துக்காட்டாக, மூன்றாம் பத்து திருமாலுக்கே உரிய தொண்டனான ஆன்மா அவனொருவனையே அநுபவிக்கும் அநுபவத்தைத் தெரிவிப்பதாகும். இதனை இப்பத்தின் பத்துத் திருவாய்மொழிகளிலும் காட்டிச் செல்கிறார். அதில் முதல் திருவாய்மொழியான 'முடிச்சோதியாய்' (3-1, 12 படி அவதாரிகை) என்பதன் முடிந்த கருத்தான இறைவனுடைய தலைவனாயிருக்கும் தன்மையின் மேன்மைக்கு உரியதான ஆன்மாவின் அடிமைத் தன்மையின் இயல்பை விளக்கும் வகையில் அத்திருவாய்மொழியின் முன்னுரையில் பத்துப் பாடல்களின் உயிர்த் தொடரைக் கொண்டு பொருளுரைப்பர். அதாவது,

1. அழகரின் உறுப்புக்கள் ஆபரணங்கள் ஆகியவற்றின் அழகோடு கூடிய நற்பொருத்தம்
(படிச்சோதி யாடையொடும் பல்கலனாய்க் கலந்தது).

2. ஒளியான அழகினுடைய தன்மை
(தாமரை நின்கண்பாதம்....)

3. எல்லா முறையாலும் ஒளிவிடும் முழு முதல்வனின் தன்மை.

(கோவிந்தா — பண்பு)

4. அந்த மேன்மையினுடைய அழகின் மிகுதி
(மலர்த்துழாய்)

5. இந்த அழகினுடைய சொல்லுக்கு எட்டாத பெருமை
(சீர்...எங்கு உலக்க ஓதுவன்).

6. எல்லா வேதங்களாலும் இறைவனை முழுமையாகச் சொல்ல முடியாமை

(ஓதுவார் ஓத்தெல்லாம்...பிறிதில்லை).

7. மிக்க அறிவுடையாரான பிரமன், சிவன், முதலான தேவர்திரள் சொல்ல நினைத்தாலும் அஃது அவ் வொளிக்குக் குற்றத்தை உண்டுபண்ணும் என்னும் விஷயம்
(கேழ்த்த சீர் அரன...மாசூணாதே).

8. மிக்க அறிவுடையராயிருப்பான் ஒரு பிரமன் தலைப் படிலும் குறையறக்காண முடியாமை
(மாசூணா...மழுங்காதே).

9. அடியார்களிடம் தாயன்பு மிகுதிக்குச் சங்கல்பம் வாயி லாக அடியாரைக் காக்கும் மேன்மையும் கெடும் என்னும் விஷயம்
(மழுங்காதே...மறையாதே).

10. இப்படிப்பட்ட மேன்மையை யறிந்து இறைவன் என்று அபிமானித்திருப்பவர்களும் பற்றுகை ஏற்றமல்ல என்னும் விஷயம்
(பிறையேறு சடையானும்....வியப்பே).

என்று பத்துத் தன்மைகளையும் காட்டி முடிப்பர்.

இப்படிப் பாடல்களின் தொடர்களை மனத்தில் கொண்டு பதிகத்தின் கருத்தை, பெரும்பாலும் இறைவன்குணங்களையோ, திருவிளையாடல்களையோ, விபூதியையோ, திருமேனியையோ தொகுத்து வழங்கும் நெறியைச் சீயர் கடைப்பிடித்துள்ளார்.

ஆக, சீயர் உரையமைப்பில், பொதுவாக அவதாரிகைகள் மூலம் அர்த்த பஞ்சகத்தின் பொருள் விளங்குமாறு இறைவனின்

பல்வேறு தன்மைகளைக் காட்டித் தருவது குறிப்பிடத்தக்கது. மேலும் ஆழ்வாரின் இயல்பில் பல வேறுபாடுகள் இருப்பினும், அவற்றை ஒவ்வொரு பதிகத்தின் முன்னுரையில் பாடல்களில் உள்ளபடி காட்டாமல் இறைவனின் தன்மைகளையே பாடல்களிலுள்ள தொடர்களைக் கொண்டு பெரும்பாலும் காட்டி— அர்த்த பஞ்சகத்திற்கு முதன்மையான இறைவனைப் பற்றியே— இறைவன் ஒருவனே உய்வதற்கு உயர்ந்த பொருள் என்பது பற்றியே வலியுறுத்துகிறார்.

### 3. 7. 5. ஆழ்வாரின் அகக் கிடக்கையை முன்மொழிதல்

நம்மாழ்வார் திருவாய்மொழியில் தாம் ஆசைப்பட்ட அனைத்தும் கிட்டப் பெறாமையால் வருந்திக் கூப்பிடுவர். இவ்வகைக் கூப்பீடு, அந்தந்த நிலைமைகளுக் கேற்பத் தலைவி, தோழி, தாய் என்ற முறையில் அமைந்து, ஆழ்வார் அகத்தே உள்ளதைப் புறம்பொசியப் புலம்புவதாகும். இவை இருபத்தேழு பதிகங்களில் அமைத்துள்ளன.

எடுத்துக்காட்டாக, முதற் பத்து நான்காம் பதிகத்தில் தாமான தன்மையோடு ஆழ்வார் அநுபவிக்க இழிந்தவர், இறைவன் முகம் காட்டாமையால் ஐந்தாம் பதிகமான 'அஞ்சிறைய' என்பதில் தலைவியாம் தன்மையை ஏறிட்டுக் கொண்டு தம்மை விட்டுப் பிரிந்த தலைவனை அடைய, நாரை முதலானவற்றைத் தூதாக விடுத்துத் தம் துக்கத்தை அறிவிப்பார். இந்தப் பதிகத்தின் முன்னுரையில் சீயர், பத்துப் பாடல்களின் உயிர்த் தொடர்க்கு இறைவனின் பத்துத் தன்மைகளைக் காட்டி, முடிவில் ஆழ்வாருடைய இயல்பைக் கூறுகிறார். ஆழ்வார்—இறைவன் ஒத்த இயல்புகளையும் காட்டுகிறார். இதனால் ஆன்மாவின் இயல்பை உணர்த்துவதாகச் சீயரின் கருத்து அறியமுடிகிறது. சீயர் காட்டும் ஆன்மாவின் இயல்பாவன: இறைவன் தவிர மற்றவர்கட்கு ஆட்படாதிருத்தல்; இறைவன் ஒருவனாலேயே காக்கப்படுதல், இறைவன் ஒருவனையே அநுபவித்தல், மேலும் இறைவனுக்கு எல்லா முறையாலும் மனைவி போன்ற அவன் இறைவனின் உடைமைத் தன்மை, ஆத்மாவாந் தன்மை, தலைமைத் தன்மை, புருடனாம் தன்மை ஆகியன தம் தன்மைகளாக நினைத்து ஆழ்வார் தலைவி பாசுரத்தாலே இப்பதிகம் உரைத்ததாகச் சீயர் ஆழ்வாரின் அகநிலைவைத் தெளிவாகக் காட்டுகிறார்.

### 3. 7. 6. பொழிப்புரை தருதல்

தமிழில் முதல் உரைநூலான இறையனார் களவியலும், நம்பி யகப் பொருளும், கருத்துரைத்தல், பொழிப்புத் திரட்டல், அகலங்கூறல், கண்ணழித்துரைத்தல் என்ற நான்குவகை உரை நெறிகளைக் குறிக்கின்றன. இதனை வடநூலார்,

பதச்சேத: பதார்த்தோக்தி: விக்ரஹ: வாக்யயோஜனா।
ஆக்ஷேபஸ்ய ஸமாதானம் வ்யாக்யானம் பஞ்சலக்ஷணம் ॥

என்று ஐந்தாகக் கொண்டு இலக்கணம் வகுத்துள்ளனர். இதில் பொழிப்புரையாவது பதங்களை யெடுக்காமல் பாடலின் பொருளை மட்டும் முறைப்படுத்தித் தொகுத்துரைத்தலாகும். இதனைப் பரிமலேழகர் உரையிலும் காணலாம். சீயரும் திருவாய் மொழியின் பதப்பொருள்களை அறியும் வகையில் பொருள் களைத் திரட்டித் தொகுத்துப் பொழிப்புரையாகப் பன்னீராயிரப படி செய்தார்[7] என்று அவர்தம் வியாக்கியானத்தால் அறியலாம்.

மேலும் உரையில் உட்புகுந்து நோக்குங்கால், பிற்காலத்தில், இவ்வுரையைப் பதிப்புச் செய்யும்போது பாடலின் பொருளுக்குச் சேரப் பதங்களையும் சேர்த்து அச்சிட்டனர் என்று அறிய முடி கிறது. இது பெரியோர்கள் செவிவழி கேட்டதாகும். மேலும் சிற்சில இடங்களில் பகவத் விஷய புத்தகப் பதிப்புக்களில் பதத்திற்கு நேரே பொருள் காட்டாமல் மேல்பதத்திற்குத் தொடர்ச்சியாக அச்சிட்டுள்ளமையும் நோக்கி, சீயர் உரை பொழிப்புரையாக அமைந்ததே எனத் தெளிவாகிறது. எடுத்துக் காட்டாக, 'நிச்சலும் தோழிமீர்காள்' (5-9-4,12 படி) என்ற பாடலில் 'பச்சிலை நீள் கமுகும் பலவும் தெங்கும்' என்பதற்கு 'பசுத்த இலையை யுடைத்தாய் நீண்ட கமுகும் அப்படிப்பட்ட பலவும் தெங்கும்' என்று பொருள் கூறுகிறார் சீயர். இதில் 'அப்படிப்பட்ட' என்றது 'பசுத்த இலையை யுடைத்தாய்' என்பதற்குப் பொருந்த மறுபடியும் 'பச்சிலைநீள்' என்று சேர்த்துப் பதவுரையில் பதிப்பாசிரியர்கள் வழங்கியுள்ளனர். இது 'பச்சிலைநீள்' என்பதற்கு நேரான பொருளல்ல. இருப்பினும் பதிப்பாசிரியர்கள் பதவுரையைக் காட்டும் வகையில் பதவுரைக்கு மேல் சொன்னவற்றைக் குறியீடுகளில் ( ) காட்டிப் பதித்துள்ளனர், அவ்வாறு இதுவும் அமைந்து இருக்க வேண்டும். மேலும் சொல் வருவித்துப் பதவுரை யோடு சேர்த்துச் சொன்னவற்றையும் நோக்குங்கால் பொழிப் புரையாக அமைந்தது காணலாம்.[8] பகவத் விஷயம் பழைய தெலுங்குப் பதிப்பில் பாடல்களின் சொற்களைத் தனித்தனியாக

(1) உயர்வற (2) உயர்நலம் (3) உடையவன் என்று காட்டி, மறுபடியும் (1), (2), (3) என்று குறியீட்டு அந்தந்தப் பதங்களின் பொருளைச் சுட்டிச் சென்றுள்ளதும் குறிப்பிடத்தக்கது.

### 3. 7. 7. அடைமொழி வழங்குதல்

பாடலின் சொற்களுக்கு அடைமொழி சிறப்பாகக் கொடுத்துப் பொருள் கூறுதலும், அடைச் சொற்களாக வந்த இடங்களுக்குச் சிறப்பு விளக்கம் தருதலும் எனும் இரு வகையினைச் சீயர் உரையில் காணலாம்.[9]

எடுத்துக்காட்டாக, 'குண்டலம்' (5.5.2) என்பதற்கு 'இரு பாடும் இலங்குகிற திருமகர குண்டலங்கள்' என்று சிறப்பாக அடைமொழி கொடுத்துப் பொருள் வழங்குவதும், அடைச் சொல்லாக வந்த 'தூமுறுவல்' (5.3.8) என்பதற்கு 'விரோதி களினுடைய பிடிப்பற்றுப் போகையாலே அலட்சியத்தோடே கூட சிரிக்கையாலே வெளுத்த முறுவல் ஒளி' என்று சிறப்பு விளக்கம் தருவதும் குறிப்பிடத்தக்கது.

### 3. 7. 8. பாடல்களின் இறுதிக்கண் கருத்துப் பொருள் கூறல்

ஆழ்வாரின் மனநிலையையும் இறைவனின் இறைமாட்சியை யும் தெரிவிக்கும் வகையில் சீயர் பாடல்களுக்குத் திரண்ட கருத்துப் பொருள் கூறுவதைச் சிறந்த நெறியாகக் கையாண்டார் என அறிய முடிகிறது.[10]

எடுத்துக்காட்டாக, ஆழ்வாருக்கு அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்ததற்குக் கைம்மாறு இல்லாமையை நினைத்துச் சொல்லும்போது, (2.3.4.) பாடலுக்குப் பொழிப்புரை கூறிய பின்னர், "உனக்கே யடிமை என்றிட்டு எனக்கு சமர்ப் பணத்தில் செய்யப்படு பொருளின் தன்மையுமில்லை, செய்பவன் தன்மையும் இல்லை" என்று ஆழ்வார் இறைஞ்சுவதைக் காட்டுவர்.

### 3. 7. 9. அருஞ்சொல் விளக்கம் தருதல்

சீயர் தாம் பயன்படுத்திய அருஞ்சொற்கள் சிலவற்றிற்கு முடிவில் தருவது, அவர்தம் உரையில் வழங்கியுள்ள அருஞ் சொற்களின் பொருள் அறிவது என இருவகையில் விளக்கம் பெறக் காண முடிகிறது.[11]

எடுத்துக் காட்டாக, 'விடுத்தல்' (3.8.3) என்பதற்கு 'விரித்தல்' என்ற பொருள் சீயரே காட்டுவது குறிப்பிடத்தக்கது.

அவ்வகையில் அவர் உரையில் 'பரிக்கும்படி' (5 9.7) என்று வழங்கியதன் பொருள் 'சுமக்கும்படி' என்று அறிய வேண்டியுள்ளது.

### 3. 7. 10. இலக்கணம் சுட்டி விளக்குதல்

பொருளைத் தெளிவுபடுத்துவதற்கும் சிறப்பாகப் பொருளினைக் கூறவும் இலக்கணக் குறிப்புக் காட்டிச் சீயர் உரை செய்தமையும், அவர்தம் உரைத்திறன் மூலம் உரைப்படும் இலக்கணக் குறிப்புக்களும் ஆக இருவகை நெறியை இவர்தம் உரையில் காண முடிகிறது.[12]

### 3. 7. 11. செவி வழியாகக் கேட்டதும் முன்னோர் கருத்தும் கொண்டு உரை வழங்குதல்

சீயர் உரைக்கு முன்னர் வாய்வழி வழங்கி வந்த உரைகளின் கருத்துக்களைத் தாம் கேட்டபடியே மனத்துக் கொண்டு அவற்றின் வன்மை மென்மைகளைத் தம் உரையில் காட்டி, பிறர் உரைக் கருத்துக்களையும் காட்டிச் செல்வது சீயரின் இயல்பாகும். பெரும்பாலும் இவை பிறர் உரைகளின் கருத்தை ஏற்கும் எண்ணத்தை வெளிப்படையாகச் சுட்ட ஏற்றபடியாகும். இதனை உரையில் 'என்பாரும் உளர்', என்றும் 'சொல்லுவாரும் உளர்' என்றும் சுட்டிக்காட்டுவதன் மூலம் விளங்கும்.[13]

### 3. 7. 12. யாப்பு விளக்கம் தருதல்

செய்யுளுக்குரிய யாப்பு இலக்கணம் தந்து பாவினத்திற்குள் திருவாய்மொழியை அடக்கிக் காட்டியுள்ளது குறிப்பிடத் தக்கது.[14]

முடிபுகள்

1. நன்னூல் கூறும் பாயிரக் கூறுகள் எட்டும் அமையப் பெற்ற உரையாகச் சீயரின் உரை திகழ்கிறது.

2. உரைப்பாயிரத்தில் திருவாய்மொழி தோன்றக் காரணமும் அதன் சிறப்பும் கூறும்போது, குறிப்பாக அர்த்த பஞ்சகத்தை விளக்க எழுந்த உரையாகத் திகழ்வது காண முடிகிறது.

3. நான்கு உறுதிப் பொருள்களில் சிறந்ததான வீடு பேற்றைப்பெறப் பிறப்பிறப்புத் தொடர்ச்சியில் வெறுப்பு, இறைவனது பேரழகில் ஆழ்ங்கால்படல்,

அவ்வாறு ஆழங்கால் பட்டதாலுண்டான மிகுதியான ஆர்வம் முதலானவை வேண்டும் என்பதும், வீடுபேறு திருவாய்மொழியினால் கிட்டும் என்பதும் காட்டியமை அறியலாம்.

4. ஆழ்வார் சிறப்பைக் காணும்போது ஒவ்வொரு பாடலின் முடிவில் ஆழ்வாரின் இயல்பையும் தன்மைகளையும் சுட்டிக் காட்டுவது குறிப்பிடத்தக்கது.

5. திருவாய்மொழியைப் பயில்வார் ஆழ்பொருளான வேதத்தின் முடிந்த கருத்தை எளிமையாக அறியும் வகையில் முன்னுரையைப் பகுத்துக் காட்டியுள்ளமை காணத் தக்கது.

6. வேதமும் வேதாந்தங்களான உபநிடத நூல்களும் தெரிவிக்கும் ஐம்பொருளைச் சீயர் உரைப்பாயிரத்தில் விளக்கமாகக் காட்டுவது அறியலாம்.

7. அதனை இரண்டு இரண்டு பத்துக்களாக வகைப் படுத்தும் பாங்கு அறியற்பாலதாகும்.

8. உரையமைப்பை முழுமையாகக் காணும்போது, தொகுதி நோக்கு, பகுதிப் பார்வை, பதிகக் கட்டமைப்பு, பாடல் உரைப்போக்கு, பதிகக் கருத்தைக் காட்டிச் செல்லல், பொழிப்புரை தருதல், அடைமொழி வழங்குதல், கருத்துரைத்தல், அருஞ்சொல் விளக்கம் தருதல், இலக்கணம் சுட்டி விளக்குதல், யாப்பு விளக்கம் தருதல் ஆகிய வகைப்பாடுகள் இதன்கண் அமைந்து விளங்கக் காணலாம்.

## இயல்—3

### குறிப்புகள்

1. வடமொழி மங்கள சுலோகத்தின் பொருள்: (ஸ்ரீசடகோபரென்னும் ஆசாரியரை வணங்கித் துதித்து, பூர்வாசாரியர்களால் ஆதரிக்கப்பட்டுப் பரம்பரையாக வந்த தமிழ்மறை முடியாம் திருவாய்மொழியின் பேருரையை (அடியேன்) கேட்டபடியே காட்டக் கடவேன்) (சுலோகம் இடம் தெரியவில்லை).
2. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர், (ப. ஆ.) சடகோபரந்தாதி, நூற்பா 9.

3. "மிக்க விறைநிலையும் மெய்யா முயிர்நிலையும் தக்க நெறியுந் தடையாகித்—தொக்கியலும் ஊழ்வினையும் வாழ்வினையு மோதுங் குருகையர்கோன் யாழினிசை வேதத் தியல்" (பட்டர் அருளிய தனியன்)
4 .குறிப்பு 1
5. ப. உ. அவதாரிகை பக். 9-10.
6. 1-4-12படி அவதாரிகை, ப. 99
7. உபதேச ரத்தின மாலை, பாடல் 45.
8. இயல் 4 'சொல்வருவித்துக் கூறல்' பகுதியில் காண்க.
9. இயல் 6இல் விளக்கப்பட்டது காண்க.
10. இயல் 4இல் 'கருத்துரைத்தல்' பகுதியில் காண்க.
11. இயல் 6இல் 'அருஞ்சொல் விளக்கம்' பகுதியில் காண்க.
12. இயல் 7இல் 'இலக்கணப் புலமை' என்றதன் கீழ்க் காண்க.
13. இயல் 8இல் விளக்கப்பட்டது காண்க.
14. இயல் 7இல் விளக்கப்பட்டது காண்க.

# இயல்—4

## உரை உத்திகள்

உரையமைப்பு என்ற தலைப்பின் கீழ்சீயர் உரையில் அமைந்த சிறப்புப் பாயிரமும், அவ்வுரைக்குரிய பாடல்களான திருவாய்மொழி தோன்றக் காரணமும், அத்திருவாய்மொழிக்கு அர்த்த பஞ்சகமாக உரை வகுத்துக்கொண்ட தன்மையும், அதன் வகைப்பாடுகளும் அறியப் பெற்றன. அதற்கு உறுதுணை செய்யும் வகையில் சீயர் பயன்படுத்திய உரை உத்திகள் பற்றி இவ்வியல் ஆய்கிறது.

நூலாசிரியன் கருத்தினைப் புலப்படுத்தும் உரையாசிரியன், தெளிவும் திண்மையும், முழுமையும் பகுப்பும் நோக்கிப் பல உத்திகளைப் பயன்படுத்துகிறான். அவ்வாறு சீயரும் தம் உரையில் பின்வரும் உத்திகளைப் பயன்படுத்தியுள்ளார். அவை, தொகுத்து நோக்கல், வேத ஒப்புமை காட்டல், வேதத்திற்கு விளக்கம் ஆமாறு உரைத்தல், ஆழ்வார் பாடல் தொடர்களையே உரைக்குக் கொள்ளல், ஒரே வேற்றுமையில் கூறுதல் (சாமாநாதிகரண்ய நியாயம்), அவதாரிகைக்கேற்ப அகச்சான்று காட்டி நிறுவல், அவதாரிகைக்குத் தக்கபடி கொண்டு கூட்டுதல், பாடலின் உட்கருத்தை அடிப்படைச் சொல்லுடன் இணைத்துக் காட்டல், ஆழ்வார் திருவுள்ளமறிந்து உரை வழங்கல், ஆழ்வார்

நெருக்கிய மனத்தைத் தன்மேல் ஏற்றிச் சொல்லல், கருத் துரைத்தல், ஐயம் திரிபறச் சொல்லல், சொல்லை வரையறை செய்தல், பல்பொருள் தருதல், வருவித்துப் பொருள் கோடல்' உவமைகளைக் காட்டல், விளி ஏற்றுச் சொல்லல், ஆழ்வார் சொற்களுக்கு அடைமொழி தந்து பொருள் கூறுதல், ஆழ்வார் அமைத்த அடைச் சொற்களுக்கு விரித்துப் பொருள் கூறுதல் என்னும் பத்தொன்பது உத்திகளாகும்.

# உரை உத்திகள்

## 4. 0. தொகுத்து நோக்கல்

சீயர் உரையில் அமைந்த உரை அவதாரிகை மூலமாகவும், பதிகங்களுக்கு முன் மொழியப்படும் அவதாரிகைகள் மூலமாக வும், பதிகங்களை இயைபு படுத்துவதிலும், தாம் அமைத்துக் கொண்ட கோட்பாட்டைத் தொகுத்து நோக்கும் முறை காணப் படுகிறது.

## 4. 1. உரை அவதாரிகை

முதல் நூலாக எழுந்த திருவாய்மொழிக்கு முன்னுரை என்னும் உரையவதாரிகை இன்றியமையாததாகும்.

இத்தகைய உரைப்பாயிரம் திருவாய்மொழியில் மறைந் திருக்கும் பெரும் புதையல்களான ஐம்பெரும் பொருளை ஐயமறக் காட்டுகிறது.

இவ்வுரை அவதாரிகையுள், ஒரு மங்கள வடமொழி சுலோகத்தை அமைத்தது குறிப்பிடத்தக்கது. மற்ற உரைகளில் இது காணப்படாதது என்று முன்னரே உரைக்கப் பெற்றது. இந்தச் சுலோகத்தை ஊன்றி நோக்கினால் ஓர் உண்மை புலப் படும். இவ்வுரையை இயற்றிய சீயர் தம்முடைய முப்பத்திரண்டாம் வயது வரை அறிவின்மையை வளர்த்து, வாழ்க்கையில் ஏற்பட்ட ஒரு முக்கியமான திருப்பத்தால் ஞானம் பெற ஆசைப்பட்டு, ஆசாரியர் வாயிலாக ஆர்வத்துடன் கேட்டுக் கற்று எழுதிய நூல் கள் பல. அவற்றுள் திருவாய்மொழிக்கு எழுதிய பன்னீராயிரப் படியும் ஒன்றாகும். இந்த உரை எழுதும் தகுதி தமக்கு வாய்த் தமைக்கு நன்றியைப் புலப்படுத்துவது அந்த வடமொழி சுலோகமாகும்.

## 4. 2. பதிகங்களுக்கு முன் மொழியப்படும் அவதாரிகைகள்

பதிகம் என்ற சொல் திவ்வியப் பிரபந்த வியாக்கியானங் களில் எங்கும் ஆளப்படவில்லை. ஆயினும், திருவாய்மொழிக்குப்

பெருமை கூறும் சடகோபரந்தாதியில் 'செஞ்சொற் பதிக நூற்றில்' (பாடல்11)என்ற தொடர் கொண்டும், 'பதிகம் பதிகமாக விசைத்தனனே' (பாடல் 101) என்ற தொடர் கொண்டும் பதிகம் என்ற சொல் ஆட்சி பயன்பட்டது அறிய முடிகிறது. மேலும் பதிகம் என்பது பத்து அல்லது பதினொரு செய்யுள் கொண்டது என விளக்கம் தருகிறார் வை. மு. கோ. அவர்கள். மேலும் சீயர் காலத்துப் பின்னர் எழுந்த முத்துவீரியத்தில் 'கோதில் ஓர் பொருளைக் குறித்து ஐயிரண்டு பா எடுத்து உரைப்பது பதிக மாகும்?' என்று சூத்திரத்திற்கேற்பத் திருவாய்மொழியில் ஒவ்வொரு திருவாய்மொழியிலும் பதினொரு பாசுரங்கள் இருப் பினும், ஒரு பொருளைக் குறித்து முதல் பத்துப் பாடல்கள் வந்துள்ளதால், பதிகம் என்ற சொல் இங்கு ஆராய்ச்சியில் பயன் படுத்தப்பட்டுள்ளது. அவ்வகையில், பதிகங்களான ஒவ்வொரு திருவாய்மொழிக்கும் முன்னர் அப்பதிகத்தின் திரண்ட கருத்தைச் சீயர் அருளுவது குறிப்பிடத்தக்கது. 1102 பாடல்கள் அடங்கிய 100 பதிகங்களுக்கும் அதாவது அவை அடங்கப் பெற்ற 10 பத்துக் களுக்கும் உரிய திரண்ட கருத்தை எளிதாகத் தெளிவாக அவர் அருளிச் செய்துள்ளார்.

## 4. 3. இயைபுகள்

ஆழ்வாரின் இயல்புகளையும், மனநிலைகளையும், வேறு பாட்டையும் நூறு பதிகங்களின் முன்னுரையில் காட்டிப் படிப் போரின் மனத்தை ஈர்க்கும் வகையில் சீயர் உரை வகுத்துள்ளார். இவற்றுள் பதிகங்களுக்குள்ள இயைபு இங்கு விளக்கப்படுகிறது. ஆழ்வார்பால் சீயர் கொண்ட அளவிடற்கரிய ஆராத அன்பு இதன்வழி புலப்படக் காணலாம்.

இயைபு என்பது ஒரு பதிகத்திற்கும் அடுத்த பதிகத்திற்கும் உள்ள கருத்துத் தொடர்பு பற்றியதேயாகும். அவ்வகை இயைபைத் தொடுப்பதற்குச் சீயர் சில அடிப்படைக் கோட்பாடுகளை அமைத்துக் கொள்கிறார். அவையாவன :

1 சாத்திர நெறி
2. அர்த்த பஞ்சகம்
3. நேர்த் தொடர்பு
4. உயர்ன்ன தொடர்பு / சொல் ஒன்றைப் பயன்படுத்தல்
5. இறைவன்—ஆழ்வார் உரையாட்டுப் பின்புலம்
6. ஆழ்வார் எண்ணங்கள்

### 4. 3. 1. சாத்திர நெறி

தமிழ் மறையான திருவாய்மொழி வேதத்தோடு ஒப்புமை கொண்டமையை நிறுவச் சாத்திரநெறி கொண்டு சீயர் பதிகங் களை இயைபுபடுத்தியுள்ளார்.

சான்று:

முதற் பத்து யாவரினும் மேம்பட்ட இறைவனுடைய காத்தற்றன்மையைத் தெரிவிப்பதாகும். இதனையே இப்பத்தி லுள்ள பத்துப் பதிகங்களும் விவரித்துக் கூறுவன என்பது சீயர் கருத்தாகும். அவற்றுள் 'பத்துடை யடியவர்க்கு' (1-4) என்னும் பதிகம் அவதாரத்தில் எளிவந்த இயல்பை உட்பொருளாகக் கொண்டதாகும். 'எல்லாரையும் காப்பவன்' (ஸர்வரக்ஷகன்) என்று முன்மொழிந்ததான (முதற்பத்தின் கருதுகோள்) கருத் தோடு மூன்றாம் பதிகக் கருத்தை இயைபு படுத்தும்போது தைத்திரியோபநிடதம், பாரதம் ஆதி பருவம் முதலான சாத்திர நூல்களைக் காட்டி மேன்மையான இறைவனுக்கு அவதாரத் தாலுண்டான எளிவந்த இயல்பை விளக்குகிறார்.

இவ்வாறு சாத்திர நெறி கொண்டு விளக்கம் தருவது குறிப் பிடத்தக்கது.

### 4, 3, 2. அர்த்த பஞ்சகம்

சீயர் ஒவ்வொரு பத்துக்கும் முன்னுரை வழங்கும்போது வேத சாரமான அர்த்த பஞ்சக நோக்கில் இயைபுபடுத்திச் செல்கிறார். இதனை முந்துற முன்னம் தொடங்கி இறுதிவரையில் மறவாமல் சுட்டிக் காட்டுவது சீயரின் நிலையான நினைவை உணர்த்துவ தாகும்.

சான்றுகள் :

(அ) முதலிரண்டு பத்துக்கள் முறையே (1) இறைவனுடைய காத்தற்றன்மையையும் (2) எல்லையற்ற இனிமையையும் குறிப் பன. இதனைப் பின்பற்றும் வகையில், முதல் பத்துள் இறை வனின் காத்தற்றன்மையை விளக்கி, இரண்டாம் பத்தின் தொடக் கத்தில் முதல் பத்தின் கருத்தைச் சேர்த்து உரைப்பது குறிப் பிடத்தக்கது.[1]

(ஆ) ஐந்தாம் பத்தின் தொடக்கத்தில் முதல் நான்கு பத்துக் களின் கருத்தான இறையியல்பு, ஆன்ம வியல்பு ஆகியவற்றைச் சுட்டி ஐந்தாம் பத்தின் கருத்தான உபாய வியல்பைக் குறிப்பிடு வது அறியற்பாலதாகும்.[2]

இவ்வண்ணமே முடிவு வரையில் காட்டிச் செல்கிறார்.[3]

மேலும் உரைமுடிவில், அர்த்த பஞ்சக நோக்கில் திருமந்திரம், துவயம், சரம சுலோகம் ஆகிய மும்மறை விளக்கமாகவும் தொகுத்துக் காட்டியமை குறிப்பிடத்தக்கது.[4]

### 4. 3. 3. நேர்த் தொடர்பு

ஆழ்வாரின் மனநிகழ்ச்சிகளைத் தொடர்ந்து பதிகம்தோறும் இயைபு படுத்துகிறார். இதனை நேர்த் தொடர்பு எனலாம். அதாவது ஒரு பதிகத்தில் நடந்த நிகழ்ச்சியின் கருத்தைப் பற்றாசாகக் கொண்டு அடுத்த பதிகத்தின் முன்னுரையை அமைத்தலாகும். பல்வேறு பதிகங்கள்தோறும் (1.1, 1.2; 1.2, 1.3; 1.3, 1.4;...) இத்தகைய தொடர்பு விரிந்துள்ளது.

*சான்றுகள்:*

(1) 'புகழு நல்லொருவனில்' (3.4) இறைவனின் இட்ட வழக்கான அடிமைத் தன்மையில் தமக்குண்டான மிக்க இனிமையாலே பெரிதும் மகிழ்வுற்றார் ஆழ்வார். இதனைச் சொல்லும் வகையில் 'மொய்ம்மாம் பூம்பொழிலில் (3.5) இந்த அடிமைத் தன்மையின் மிக்க இனிமையைக் கூறுவதாகத் தொடர்பு காட்டுகிறார் சீயர்.

(2) 'கற்பாரில்' (7.5) அவதரித்து அடியார் சொற்படி கேட்பவனாய் விரோதியைப் போக்குமவனான இறைவனுடைய குணப் பெருமையை நினைக்கிறார். இதனைச் சேர்த்து முன்னுரை வழங்கி, அடுத்த பதிகமான 'பாமரு மூவுலகில்' (7.6) அவனையொழிய வேறு ஒருவர் தடையைப் போக்குவாரில்லாமையாலே, அவனுடைய ஆண்டான்—அடியான் (சேஷி—சேஷ பாவம்) தன்மையாலும், ஆர்வத்தாலும், அவனைக் கொண்டு தடையைக் கழித்துக்கொண்டு அவனை அடைவதற்காக மிக்க துக்கப்பட்டவராய் ஆழ்வார் கதறுவதாகச் சீயர் தொடர்புபடுத்தி உரைப்பது காணத்தக்கது.

### 4. 3. 4. உயிரன்ன தொடர்/சொல்

ஒரு பதிகத்தின் நடுவிலுள்ள ஒரு பாடலின் உயிர்த்தொடர் அல்லது சொற்கொண்டு, அதனால் விளைந்த வேறுபாடு காரணமாக ஆழ்வாரின் மனநிலையை அடுத்துவரும் பதிகத்தோடு தொடர்பு படுத்துகிறார் சீயர். இத்தகைய உயிர்த்தொடர்கள் ஆழ்வாரின் தாமான தன்மையை விட்டுப் பெண் தன்மை மேலிட்டுப் பாடிய பதிகங்களில் சிறப்பாக உள்ளன.

சான்றுகள் :

(1) 'கேசவன் தமரில்' (2.7) அடியார்களைக் காக்கும் பொருட்டு ஏற்பட்டுள்ள இறைவன் குணம், திருவிளையாடல் களைத் தெரிவிக்கும் பன்னிரு திருநாமச் சிறப்பு ஆகியன கூறப் பட்டுள்ளன. இதற்கு முன்பதிகமான 'வைகுந்தா'வில் (2-6) ஏழாவது பாடலில் 'செடியார் நோய்களெல்லாம் துரந்து எமர்கீழ் மேலெழு பிறப்பும் விடியா வெந்நரகத்து என்றும் சேர்தல் மாறினரே' என்ற தொடரின் பொருள்கொண்டு, 'கேசவன் தமரில்' தம் குலப் பரம்பரைகளுக்குத் தான் செய்த ஒரத்தாலே ஆழ்வாருக்குத் தன்னிடம் ஏற்பட்ட பெருங்காதலைக் கண்டு இறைவன் உகந்ததாக ஆழ்வாரின் இயல்பைத் தொடர்புபடுத்திக் காட்டுகிறார்.

(2) 'அணைவ தரவணையில்' (2.8) 'மேவுந் தன்மையமாக்கி னான்' என்று தம் குலப்பரம்பரை மக்களுக்கு அடையத்தக்க பயனான வீடு பேற்றைக் கொடுக்கும் நிலையையும், அதற்குக் காரணமான மேன்மைத் தன்மையையும் நினைக்கிறார்' என்று முன்பதிகத்தின் (கேசவன் தமர்) நான்காவது பாடலின் தொடரை நினைத்து, இதனை உலகத்தார் இழக்கக்கூடாது என்று உப தேசித்துத், தாமும் அநுபவிக்கப் பெற்றமையை இப்பதிகத்தில் கூறுகிறார்.

4. 3. 5. இறைவன்-ஆழ்வார் உரையாட்டுப் பின்புலம்

ஒரு பதிகத்தில் நிகழ்ந்த அநுபவத்திற்கும் அடுத்த பதிகத்தில் வரும் அநுபவத்திற்கும் இடையில் இறைவனின் எண்ணத்தையும் அதனைத் தழுவி எழும் ஆழ்வாரின் எண்ணத்தையும் கொண்டு அப்பதிகத்திற்குக் காரணமாக இயைபுபடுத்துகிறார் சீயர்.

சான்றுகள் :

(1) 'அந்தாமத்தன்பில்' (2.5) ஆழ்வாரோடு கலந்த அன்பு மிகுதியால் மிகவும் மகிழ்ச்சியுற்றான் இறைவன். 'வைகுந்தா' வில் (2.6) ஆழ்வார் தம் தாழ்ச்சியை நினைத்து அகன்றுபோய், அதனால் இறைவன் தன் மகிழ்ச்சி குலைந்துவிடுவதாக ஐயுற் றான். இதனை ஆழ்வாரது திருவுள்ளத்தில் தோற்றுவிக்கவே, ஆழ்வாரும் இறைவனது பெருங்காதல் இருந்தபடி கண்டு மிக்க மகிழ்ச்சியடைந்தவராய் இறைவனது ஐயத்தைப் போக்குவதாக 'வைகுந்தா'வில் இயைபுபடுத்துகிறார்.

(2) 'முந்நீர் ஞாலத்தில்' (3.2) அடிமைத்தன்மைத் தடை யான பிறவித் தொடர்ச்சியைப் போக்க வேண்டும் என்று வேண்டு

கிறார் ஆழ்வார். அடுத்த பதிகமான 'ஒழிவில் காலமெல்லா'யில் (3.3) திருமலையில் இறைவன்பால் கைங்கர்யமே அடிமைத் தன்மைக்குத் தக்க பயன் என்று தெரிவிக்கிறார். இவ்விரு பதிகங்களுக்கும் இடையில் ஆழ்வாரின் மனக் கிளர்ச்சியை மாற்ற வகை செய்தவன் திருவேங்கடத்துறைபவன் என்று நயம்பட உரைப்பது காணலாம். அதாவது பிறவித் தொடர்ச்சியை விரும்பாத ஆழ்வார் அதனைப் போக்க வேண்டியபோது, இறைவனால் போக்கப்பட்டு, தான் குற்றேவல் கொள்ளுகைக்குக் கிட்டியிருப்பதாகப் பெரிய திருமலையில் நிற்கிற நிலையைக் காட்டினான். அதனைக் கண்ட ஆழ்வார், இறைவனுக்கு எல்லா முறையிலும் குற்றேவல் செய்கை உரியது என்று நிச்சயித்து அதனைச் சொல்லி அநுபவிப்பதாக 'ஒழிவில் காலத்தில்' சொல்லித் தலைக்கட்டுகிறார்.

### 4. 3. 6. ஆழ்வாரின் எண்ணங்கள்

ஒவ்வொரு பதிகத்திலும் ஆழ்வாரின் மனத்தே நிகழும் எண்ணங்கள், இறைவன் அவருக்குக் கொடுத்த அநுபவத்தை அடிப்படையாகக் கொண்டதாகும். அதற்குப் பொருந்த அடுத்த பதிகத்தோடு இயைபுபடுத்தும் திறன் குறிப்பிடத்தக்கது.

சான்றுகள்:

1. 'மானேய் நோக்கில்' (5.9) ஆழ்வார் திருவல்லவாழ் எம்பெருமானை அநுபவிக்க ஆசைப்பட்டு அது கிடையாமையாலே துக்கமடைந்தார். இதற்கு அடுத்த பதிகமான'பிறந்தவாறில்' (5-10) இறைவனுடைய எல்லா அவதாரங்களிலும் உண்டான குணம், திருவிளையாடல்களை நினைக்கிறார் இப்படி அவதாரத்தையும் அங்குண்டான குணம், தன்மைகளையும் அநுபவிப்பித்த அநுபவம் முன் பதிகத்தில் கிடையாமையால் அங்குத் துக்க முண்டாயிற்று. இத்துக்கத்தைப் போக்கும் வகையில் ஆழ்வார் மனம், பெரியாழ்வார் 'நினைந்திருந்தே சிரமம் தீர்ந்தேன்' (பெ. திரு 5. 4. 8) என்று அருளியபடியே இறைவனின் நன்றியை நினைத்துச் சிரமம் தீர்ந்ததை ''மானேய் நோக்கோடு'' ''பிறந்தவாற்றை'' இயைபுபடுத்தி அநுபவிக்கிறார். இஃது இவர் உரையில் சிறப்பாகக் குறிக்கப்பெற்றது அறியத்தக்கது. இதனால் ஆழ்வார்களின் துக்கமெல்லாம் ஒருபடிப்பட்டிருப்பதை உணர்த்த சீயர், இங்குப் பெரியாழ்வாரின் துக்காநுபவத்தைக் காட்டியதாகக் கொள்ளத்தகும்.

2. 'மையார்' (9.4) பதிகத்தில், தம்மோடு கரணங்களோடு வாசியற ஈடுபட்ட ஆழ்வாருடைய துக்கம் தீரும்படி இறைவன் முகம் காட்ட, ஆழ்வார் அநுபவித்து மகிழ்வுற்று, அடியார்கள்

அநுபவிக்கத்தக்க திருவாய்மொழியை அவன் திருவடிகளிலே பாடி உய்யப் பெற்றதற்கு மகிழ்ச்சியடைகிறார். இதற்குமுன் பதிகமான 'ஒராயிரத்தில்' (9.3) இறைவனுடைய நீர்மைக் குணத்தில் ஆசைப்பட்டு மனம் ஊன்றியவராய் அநுபவத்திலும் சக்தியற்றவராய்த் தளர்ந்தார் ஆழ்வார். இவர் ஆசையை நிறை வேற்ற முகம் காட்டினான் இறைவன். இவ்வாறு இப்பதிகத் துக்குப் (9.4) பொருத்தமாக ஆழ்வாரின் எண்ணத்தை இயைபு படுத்துவது காணமுடிகிறது.

மேற்கூறிய அறுவகை இயைபுகளைப் பதிகங்களின் வழி ஆழ்வாரின் அகத்தே எழுந்த உண்மைகள் புலப்படுமாறு சீயர் எழுதிச் செல்லும் சீர்மையைக் கீழே காணலாம்:

1. 'பொருமாநீள் படையில்' (1.10) இறைவன் எல்லா முறை யாலும் பரிமாறுவதற்குக் காரணம் அவனுடைய இயற்கையான பெரிய உதவி செய்யும் தன்மை என்று அறுதியிடல்;

2- 'ஆடியாடி'யில் (2.4) ஆழ்வாருக்குப் பிறந்த துக்கத்தின் மிகுதியைப் பொறுப்பிக்க, வல்லவர் எல்லாரையும் காப்பாற்றுமவனாய் அழகனுமானவனா யொழிய யாரு மில்லை என்று நிச்சயித்தல்;

3. 'எம்மா வீட்டில்' (2.9) 'வீடுபேற்றின் வகை எல்லா வற்றுக்கும் எல்லைநிலம் இறைவனிட்ட வழக்கா யிருத்தல்' என்று நிச்சயித்தல்;

4. 'கிளரொளி'யில் (2.10) அடையப்படுமவனான (பிராப்ய பூதன்) தானும் விரும்பும்படியான திருமலையே உயர்ந்த இடம்' என்று நிச்சயித்தல்;

5. 'ஒழிவில் காலமெல்லாமில்' (3.3) 'எல்லா வகையாலும் குற்றேவல் பண்ணுகையே அடியவனுக் குரியது' என்று அறுதியிடல்;

6. 'நோற்றநோன்பில்' (5.7) 'நம்மிடம் வேறொரு உபாயமு மில்லாமையை முன்னிட்டுக்கொண்டு வேண்ட இறைவன் முகம் காட்டுவன்' என்று நிச்சயித்தல்;

7. இறைவனை அடைவதற்குக் காரணமான வேறு உபாயங்கள் ஒன்றுமில்லாமையைக் கொண்டு துக்கப் பட்ட ஆழ்வாருக்கு இறைவன் தன் திருவடிகளை

உபாயமாக உதவியதற்குக் கைம்மாறு இல்லாமையைக் காட்டுதல்;

8. 'இறைவனைப் பற்றுகை இறைவனோடு சேர்ப்பிக்குமவர் களான ஆசாரியர் மூலமாக உண்டாக வேணும்' என்று நிச்சயித்தல் (வைகல்), (6.1)

9. 'உலகமுண்ட பெருவாயா'வில் (6.10) கைங்கர்யம் கை கூடுவதற்குச் சரணமடையத் தகுந்த இறைவன் திருவடி களையொழிய வேறு உபாயமில்லாமையை அறுதி யிடல்;

10. 'ஆழியெழு'வில் (7.4) கொடிய தடைகளைப் போக்கு கைக்கு எல்லா ஆற்றலு முடைய இறைவனையொழியத் திறலுடையா ரில்லை' என்று நிச்சயித்தல்;

11. 'கற்பாரில்' (7.5) 'தடையைப் போக்குவதற்கும் விருப்பத்தை நிறைவேற்றுவதற்கும் இறைவனை யொழிய வேறு புகலில்லை' என்று அறுதியிடல்;

12. 'இன்பம் பயக்கவில்' (7,10) தலைவனான இறைவனுக்கு மகிழ்ச்சியை உண்டாக்கக் கூடியது கைங்கர்யமொழிய வேறு இல்லை' என்று நிச்சயித்தல்;

13. 'கண்கள் சிவந்தில்' (8.8) 'அழகு, நீர்மை முதலியவற் றோடு கூடின இறைவனுக்கு விட்டுப் பிரியாத அடிமை யாயிருத்தல் தூய ஆன்மாவின் இயல்பு' எனத் தெளிவித்தல்;

14. 'கொண்ட பெண்டிரில்' (9 1) 'எக்காரணமுமின்றி இறைவனே இயற்கையான உறவுடையவன், அல்லார் ஏதேனும் ஒரு காரணத்தாலே உறவுடையவர்கள். ஆதலால் அவர்களை விட்டு இயற்கையிலே உறவான இறைவனைப் பற்றி உய்ய வேணுமென அறுதியிடல்;

15. 'மாலைநண்ணியில்' (9 10) 'பக்தி, பிரபத்தி, திருநாமச் சொல் — இவற்றில் ஊற்றமுடையராய் இறைவனை அடைந்தும், அநுபவித்தும், அவன் திருவடிகளிலே கைங்கர்யம் பண்ணியும் பிறவி முதலான எல்லாத் துக் கங்களும் தொலைந்தவராய்க் கொண்டிருத்தல்— குற்றேவல்களை ஏற்றுக் கொள்ளும் இறைவனுடைய தன்மையால் வந்த பயன்' என்று அறுதியிடல்;

16. 'தாளதாமரையில்' (10.1) 'நம்முடைய விரோதியைக் கழித்து உகப்போடே வழிநடத்திச் செல்ல ஒரு துணையாளன் வேணும்' என்று அறுதியிடல்;

17. 'சார்வே தவநெறியில்' (10.4) 'இறைவன் தன்பக்கல் பக்தியோடு கூடியிருப்பார்க்கு எளியனாயிருப்பான்' என்று அறுதியிடல்;

18. 'திருமாலிருஞ்சோலையில்' (10 8) 'நம்பக்கல் இறைவன் மையல் செய்கைக்கும் நாம் விரும்பிய கார்யம் செய்யும் படி, அவன் நாம் இட்ட வழக்காம்படி யிருக்கைக்கும் நம்மிடம் ஒரு நன்மையு மில்லை; நமக்கு இறைவன் தானே அருள் செய்வானித்தனை' என்று நிச்சயித்தல்.

இத்தகைய இயைபுமுறை சீயர் தம் கேள்வி ஞானத்தையும், கல்விச் சிறப்பையும், சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் திறனையும் ஒருசேரக் காட்டுவனவாகும்.

## 4. 4. வேத ஒப்புமை காட்டல் (சுருதிச் சாயை)

வடமொழி மறைப் பொருளையே தமிழாக்கினார் ஆழ்வார் என்பர். (ஆசார்ய இருதயம் நூற்பா 45). அதனை யடியொற்றியே முன்னோர்கள் வடமொழி மறைத் தொடர்களின் சாயைத் திருவாய்மொழியில் தெளிவுபடுத்தியுள்ளார். சீயரும் ஆழ்வார் பாடல்கள் சிலவற்றுக்கு வடமொழி மறைத்தொடர்களைப் பயன் கொள்ளும் உத்திவகைப்பாட்டில் பொருள் வழங்கியது குறிப்பிடத்தக்கது.

சான்றுகள்:

1. 'பொலிக பொலிக பொலிக' (5-2.1) என்ற பாடலின் முதலடியிலுள்ளதற்கு ஆழ்வார் பாகவதர் திரளின் செழுமைக்கு வாழ்த்துத் தெரிவிக்கும் வகையில் 'பொலிக பொலிக பொலிக' என்று மூன்று தடவை சுருதிச் சாயையில் பொருள் கூறுவர். அதாவது 'சாந்தி: சாந்தி: சாந்தி:' என்று தைத்திரீயோபநிடதத் தொடர் கொண்டு பல்லாண்டு பாடுவதாகச் சீயர் சொல்லும் முறையில் சுருதிச் சாயை கொண்டு ஒற்றுமையைக் காட்டுவர்.

2. 'கண்டோம் கண்டோம்' (5. 2. 2) என்ற பாடலிலும் இறைவனிடத்தும் இறையடியாரிடத்தும் அன்புடையார்களைக் கூட்டிக் கொண்டு வாழ்த்த வாருங்கோள் என்று அழைக்கிறார். இப்பாடலின் முதலடியிலுள்ள 'கண்டோம் கண்டோம் கண்டோம்' என்பதற்கு 'ஒருகால் கண்டு விடுகையன்றிக்கே

'அஹமந்நாத: அஹமந்நாத: அஹமந்நாத:' என்கிற தைத்திரீயோபநிடதம் பிருகுவல்லியை அடியொற்றி இறைவனாகிற அன்னத்தை அநுபவிக்கிறேன் என்று மும்முறை கூறி எப்போதுமான அநுபவத்தைப் பண்ணப் பெற்றதாகக் காட்டுகிறார் சீயர்.

3. 'ஓராயிரமாயில்', 'அவனே அகல்ஞாலம்' (9. 3. 2) என்ற பாடலின் மூன்றாமடிக்குப் பொருள் கூறும்போது 'ஸ:ப்ரஹ்மா ஸ: சிவ: ஸ: இந்த்ர: ஸ: அக்ஷர:' என்ற உபநிடதத் தொடர் கொண்டு நாராயணன் என்ற சொற்பொருளை விளக்குகிறார்.

## 4. 5. வேதத்திற்கு விளக்கம் ஆமாறு உரைத்தல்

இத்தகைய உத்தியினை இருவகையாகச் சீயர் உரையில் காண முடிகிறது. ஒன்று, வேத, உபநிடதத் தொடர்களை எடுத்துக்காட்டித் திருவாய்மொழிப் பொருளை விளக்குவதாக அமைப்பது. மற்றொன்று, இதிகாசங்கள், புராணங்கள் மற்றும் பல வடமொழி நூல்கள் கொண்டு திருவாய்மொழிக்கு விளக்கம் தரும் நெறி இவர் தம் உரையில் காணப்படுகிறது. பெரும்பாலான வேத, உபநிடதத் தொடர்கள் சான்றாகக் கொண்டு பொருள் வழங்குவது குறிப்பிடத்தக்கது.

சான்றுகள்:

1. 'கற்கும் கல்விக்கு எல்லையிலனே என்னும்' (5. 6. 2) என்ற பாடலில் 'கல்விக்கு எல்லையிலனே' என்பதற்கு வேதச் சான்று காட்டிப் பொருள் தருவது காணலாம்.

2. 'கொம்புபோல் சீதை பொருட்டு' (4. 2. 8) என்ற பாடலில் 'சீதை' என்ற சொல்லின் பொருளை விளக்கும் வகையில் இராமாயண சுந்தர காண்டத் தொடர் காட்டிப் பொருள் தருவது குறிப்பிடத்தக்கது.

## 4. 6. ஆழ்வார் தொடர்களைக் கொண்டு சொற்களுக்கு விளக்கம் தருதல்/திருவாய்மொழி உரையில் திருவாய்மொழி மேற்கோள் காட்டல்

சீயர் தம் உரையில் திருவாய்மொழியின் சொல்லை, தொடரை வேறு சிற்சில பாடல்களின் சொற்பொருளை விளக்கு வதற்காக எடுத்தாள்வது தனிச் சிறப்பாகும்.

இறைவனுடைய தன்மைகளை அறிவதற்காகவும் ஆழ்வார் தம் அந்தந்த நிலைமைகளில் உண்டான வேறுபாட்டை

அறியவும், பெரி ஆழ்வார் பாடல்களில் அமைந்து விளங்கும் சொல்லை, தொடரைக் கையாண்டு உரை செய்துள்ளார் என அறிய முடிகிறது. இவ்வாறு ஆழ்வாருடைய ஒரு பதிகத்தி லுண்டான உணர்வின் தொடர்ச்சியாக உருவாகிய பதிகம், அடுத்துவரும் பதிகத்தைத் தெளிவு செய்ய இந்த உத்தியைச் சீயர் மேற்கோளாகச் சிற்சிலபோது பல பதிகங்களுக்கு அப்பால் வரும் பாசுரப் பொருளை விளக்கவும் இந்த உத்தியைக் கையாளுகிறார்.

சான்றுகள்:

1. 'சிரீதரன் செய்ய தாமரைக் கண்ணன்' (2. 7 9) என்ற பாடலில்

''சிரீதரன் செய்ய தாமரைக் கண்ணன் என்றென்
றென்றிராப் பகல்வாய்
வெரீஇ அலமந்து கண்கள் நீர்மல்கி வெவ்வுயிர்த் துயிர்த்து''

என்ற தொடருக்குப் பொருள் கூறும்போது, இதற்கு முன் மூன்றாம் பதிகமான 'ஆடியாடி'யில் பட்ட துக்கத்தைக் காட்டும் வகையில், 'இவளிராப்பகல் வாய்வெரீஇ,' 'எங்கும் நாடி நாடி,' 'குவளை யொண் கண்ணநீர் கொண்டாள்,' 'உள்ளம் மலங்க வெவ்வுயிர்க்கும்' என்று உள்ள சொற்றொடர்களைப் பெய்து பொருள் வழங்குவர். இதனால் ஆழ்வாரின் அலமரப்பின் மிகுதியை ஆழ்ந்து அநுபவித்துச் சொன்னதைக் காண முடிகிறது.

2. 'அல்லியந் தண்ணந்துழாய் முடி அப்பனூர்' (8. 6. 1) என்ற தொடருக்குப் பொருள் கூறும்போது 'மொய்பூந் தாமத் தண் துழாய்க் கடிசேர் கண்ணிப் பெருமான்' என்று இவர் ஆசைப்பட்டாற் போலவே பூந்தாரையுடைத்தாய் அழகிய தாய்க் குளிர்ந்த திருத்துழாய் மாலையாலே அலங்கரிக்கப்பட்ட திருமுடியையுடைய தலைவனாயுள்ள உதவியாளன்' என்று கூறுவது. ஆழ்வார் முன் பதிகத்தில் ஆசைப்பட்ட திருத்துழாய் முடியை இங்கு இறைவன் காட்டக் கண்டதைத் தெரிவிக்க முன் பதிகத்தில் உள்ள சொற்றொடரைச் சொல்லி இறைவனின் பெருமையைக் கூறுவர்.

### 4. 7. சாமாநாதிகரண்ய நியாயம் (ஒரே வேற்றுமையில் கூறுதல்)

வெவ்வேறு பொருள்களைக் குறிக்கும் சில அல்லது பல சொற்களை, அப்பொருள்களுக்குள்ள சம்பந்தம் (இயைபு) காரணமாக, ஒரே வேற்றுமைப் பொருளுடையனவாகக் கூறி,

அப்பொருள்களின் ஒற்றுமையை நயம்பட விளக்கும் முறை, சாமாநாதிகரண்ய நியாயமாகும். இதனை வடநூலார், "பிந்நப்ரவ்ருத்தி நிமித்தாநாம் சப்தாநாம் ஏகஸ்மிந் அர்த்தே வ்ருத்தி:-ஸாமாநாதிகரண்யம்" என்பர்.

திருவாய்மொழியில் ஒற்றுமை நயம் கொண்ட சொற்களும் தொடர்களும் மலிந்துள்ளன. இவற்றுக்கு உரையிட்ட முன்னோர்கள் சாமாநாதிகரண்ய நியாயத்தில் பொருள் வழங்கியுள்ளனர். திருவாய்மொழிக்கு உண்டான இவ் அருமைப்பாடு பெரிய வாச்சான் பிள்ளையால் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது என்பர்.[8]

பிள்ளையைப் பின்பற்றியே அழகிய மணவாளச் சீயரும் தமது உரையில்,

1. சரீர ஆத்ம பாவம்
2. நிர்வாஹ நிர்வாஹ்ய பாவம்
3. ஜந்ய ஜனக பாவம்
4. குண குணி பாவம்
5. உபமாந உபமேய பாவம்
6. விசேஷண—விசேஷ்ய பாவம்
7. கார்ய காரண பாவம்
8. நிரூப்ய நிரூபக பாவம்

ஆகிய ஸம்பந்தங்களின் (இயைபுகளின்) அடிப்படையில் சாமாநாதி கரண்ய நியாயத்துல் பல இடங்களில் பொருள் கூறியுள்ளார்.

சான்றுகள்:

1. சரீர ஆத்ம பாவம் (உடல் உயிர் உறவு)

ஒரு பாடலில் 'முற்றுமாய்' (3 6.5) என்பதற்கு 'எப்போதும் வீசுகின்ற வாயு, அதனோடே கூடப் பரந்த ஆகாயம், திண்ணி தான பூமி, கரை கடவாது கிடந்த கடல், மேல் நோக்கிப் பளபளக்கும் தீயோடே கூடப் பிரித்தும் சேர்த்தும் படைக்கப் பட்ட சூரிய சந்திரர்கள், தேவ சமூகம், மற்றும மனிதர்கள், விலங்குகள், தாவரங்கள் ஆகியவற்றுக்கு அந்தராத்மாவா யிருக்கும் என்று விசுவரூபாத்யாய முறையிலே அவற்றைத் தான் தரிக்கும்படியாகச் சரீர ஆத்ம பாவத்தால் உண்டானது' என்று சாமாநாதிகரண்ய நியாயம் காட்டியுள்ளார் சீயர்.

### 2. நிர்வாஹ—நிர்வாஹ்ய பாவம் (நிறைவேற்றப்படுவது—நிறைவேற்றுமவன் தன்மை)

ஒரு பாடலில் 'துயரமே தரு துன்பவின்ப வினைகளாய்' (3.6.8) என்று சக்கரவர்த்தித் திருமகனைக் கூறுவர். இவ்விடத்தில் 'வினைகளாய்' என்பதற்குப் 'பாப ரூபமாயும் புண்ய ரூபமாயுமுள்ள கருமங்களுக்கு நிர்வாஹகனாய்' என்று பொருள் கூறுவர் சீயர். புண்ணியங்களையும் பாபங்களையும் ஆளுமவன் இறைவனே என்று நிர்வாஹ்ய நிர்வாஹக பாவ சம்பந்தம் என்னும் அடிப்படையில் இறைவனையே வினைகளாகச் சொல்லியிருப்பது காணத்தக்கது.

### 3. ஜந்ய ஜனக பாவம் (பிறப்பு—பிறப்புக்குக் காரணமாம் தன்மை)

'சேர்ந்தார் தீவினைகட்கு அருநஞ்சைத் திண்மதியை' (2.3.6) என்ற பாடலில் 'திண்மதியை' என்பதற்குத் 'திண்ணிதான மதியாகிற வியவஸாயம் தானாய் நிற்கிறான் என்னலாம்படியதுக்கு உண்டாக்குகிறவனாய்' என்று இறைவனைக் காட்டுகிறார். இந்த இடத்தில் திண்ணிதான மதியையும், அதனைக் கொடுக்கும் இறைவனையும் ஒன்றாக்கி, ஜந்ய—ஜனக பாவ ஸம்பந்த அடிப்படையில் பொருள் கூறுகிறார்.

### 4. குண—குணி பாவம் (பண்பு—பண்பி உறவு)

'செய்ய தாமரைக் கண்ணனாய்' (3.6.1) என்ற பாடலில் 'ஞானமாய்' என்பதற்கு 'ஸங்கல்பரூப ஞான ஸ்வரூபனாய்' என்று பொருள் கூறுவர். அதாவது தன் நினைவான அறிவு என்னும் வடிவுடையனாய் என்றபடி. 'ஞானமாய்' என்கிற இடம் குண—குணி பாவத்தாலே என்பர் சீயர்.

### 5. உபமான—உபமேய பாவம் (உவமை—உவமிக்கப்படும் பொருள் தன்மை)

"விட்டி லங்குசெஞ் சோதித் தாமரைபாதம் கைகள் கண்கள்
விட்டி லங்கு கருஞ்சு டர்மலை யேதி ருவுடம்பு
விட்டி லங்கு மதியம சீர்சங்கு சக்க ரம்பரிதி
விட்டி லங்கு முடியம் மான்மது சூத னன்றனக்கே"

(2.7.5)

என்ற பாடலில் இறைவனது பாதம், கைகள், கண்கள் ஆகியவற்றுக்கு, தாமரை உபமானமாகவும், திருவுடம்புக்கு மலையை உபமானமாகவும், சங்குக்குச் சந்திரனையும், சக்கரத்திற்குச்

சூரியனையும் உபமானங்களாகவும் காட்டிப் பொருள் வழங்குகிறார். இதனை உபமான— உபமேய பாவ ஸம்பந்தத்தால் வந்த சாமாநாதிகரண்யம்' என்பர் சீயர்.

6. விசேஷண—விசேஷ்ய பாவம் (அடைகொளி—அடையுமாகிற தன்மை)

'மாகுணாச் சுடருடம்பாய்' (3.1.8) என்ற பாடலில் 'முழுதுமாய்' என்பதற்கு எல்லாக் குணங்களும் செல்வங்களும் ஆகிய இவற்றை அடையாகக் கொண்டு தான் இட்ட வழக்காக அடைகொளியான இறைவன் இருப்பதை விசேஷண-விசேஷ்ய பாவ ஸம்பந்த அடிப்படையில் வழங்குகிறார் சீயர்.

7. காரிய—காரண பாவம்

'சக்கரத் தண்ணலே யென்று' (4.7.10) என்ற பாடலில் 'வேத விளக்கினை' என்பதற்கு, 'வேதமாகிய தீபத்தாலே காணப்படுமவனை' என்று காரண—காரிய பாவ ஸம்பந்தத்தாலே பொருள் வழங்குவர்.

8. நிருப்ய—நிருபக பாவம் (அறிவிக்குமது—அறிவிக்கப்படுமவன் தன்மை)

'தளர்வின்றியே யென்று' (3.10.10.) என்ற பாடலில் 'ஞான மொன்றாய்' என்பதற்கு 'ஞானைகநிருபணீயனாய்' என்று அறிவிக்குமதான அறிவையும் அறிவிக்கப்படுமவனான இறைவனையும் நிருப்ய—நிருபக பாவ ஸம்பந்தத்தாலே ஒற்றுமைப்படுத்திப் பொருள் வழங்குகிறார்.

இவ்வகையில் ஒரு பொருளைக் காட்டும் பல சொற்களை யுடைய சாமாநாதிகரண்யத்தைச் சீயர் மேற்கொண்ட எண் வகை அடிப்படைக் கீழ் அவர்தம் உரையில் அறியற்பாலதாகும்.

4. 8. அவதாரிகை கூறி, அகச்சான்று காட்டி அதனை நிறுவுதல்

ஓராண்வழிக் கால்வழியே நாதமுனிகள் தொடக்கமான ஆசார்யர்களின் கேள்விச் செல்வம், சீயர் காலத்தில், கேள்வி பறிவின் எல்லையை யெய்தும் வகையில், தோற்றுவாய்கள் ஒவ்வொரு பாடலுக்கும் வழங்க வகை ஏற்பட்டது. ஆனால் இத்தகைய தோற்றுவாய்கள், ஆறாயிரப்படியில் காணப் பெறா விடினும், அதற்குப் பின் தோன்றிய உரைகள் நான்கிலும் அந்தந்த வைணவ ஆசாரியர்களின் ஆழ்ந்த அறிவுத் திறனை உணர்த்தும் வகையில் அமைந்துள்ளன.

சீயர் தம் உரையில் தாம் எடுத்துக் கொண்ட கோட்பாடு களுக்கு ஏற்ப, ஆழ்வார் பாடலின் அகநோக்கை முழுமையாகத் தெரிவிக்கத் தோற்றுவாய்கள் சீரிய முறையில் அமைந்துள்ளது காணலாம்.

சீயர் ஒவ்வொரு பாடலுக்கும் அமைத்த தோற்றுவாய்களை அச்சான்று காட்டி நிறுவுவதில் தெளிவாகும் சில அடிப்படை நெறிகளைக் காண முடிகிறது. அவை:

1. பாடலின் முழுமைத் தன்மையை புணர்ந்து அதனைச் சுருங்கிய பொருண்மையில் காட்டல்;
2. இறைவனுக்கே முதன்மை தந்து அதற்கு ஏற்பப் பாடலிலுள்ள சொற்களை விளக்கும் வகையில் இறை இயல்பு, வடிவு, குணம் முதலானவற்றைச் சிறப்பித்துக் கூறல்;

(3) பாடலின் எல்லா அடிகளையும் கொண்டு தோற்றுவாய் அமைத்தல்;

(4) உரையாடல் நிகழ்ச்சி முறையில் தோற்றுவாய் அமைத்தல்

என்னும் நான்கு நெறிகள் ஆகும்.

### 4. 8. 1. பாடலின் முழுமைத் தன்மையை உணர்ந்து அதனைச் சுருக்கிய பொருண்மையில் காட்டல்

சீயர் பாடலின் முழுமையான பொருளைச் சுருக்கிய பொருண்மையில் தோற்றுவாயில் அமைத்த இடங்கள் பல.

*சான்றுகள்:*

(1) “நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர்
நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலர்
என்றுமோ ரியல்வின ரெனநினை வரியவர்
என்றுமோ ரியல்வொடு நின்றவெந் திடரே” (1.1.4)

என்று பாடலுக்கு எல்லாவற்றில் முளுகையும், எல்லாவற்றில் மீளுகையும் தானிட்ட வழக்கு என்று ஒரே வேற்றுமையில் அருளியதைத் தோற்றுவாயில் குறிப்பிடுகிறார். இதில் நான்கு அடிகளையும் நினைவில் கொண்டு, ‘எல்லாவற்றில் முளுகையும் எல்லாவற்றில் மீளுகையும்’ என்றும், ‘நிலை’ என்ற சொல்லாக் ‘தானிட்ட வழக்கு’ என்றும் காட்டியதாகும். இது பாட்டின் முழுப் பார்வையின் பொருண்மை கொண்டு தோற்றுவாய் அமைத்தபடி.

(2) "கண்ணா வானென்னும் மண்ணோர் விண்ணோர்க்குத்
தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே" (1 83)

என்ற பாடலுக்கு விண்ணாட்டுக்கும் மண்ணாட்டுக்கு முரிய மேன்மை (உபயவிபூதி ஸாதாரணமான) திருமலையில் இருப்பதைத்தோற்றுவாயில் கூறுவர். இது பாடலின் முழுப்பார்வையில்அமைந்த கருத்தாகும். 'மண்ணோர் விண்ணோர்க்கு' என்றதனால் 'விண்ணாட்டுக்கும் மண்ணாட்டுக்கு முரிய' தம்மையும்'வேங்கட' என்பதனால் திருமலையில் இருப்பையும் சொல்லப்பட்டது காணலாம்.

4. 8. 2. இறைவனுக்கே முதன்மை தந்து அதற்கு ஏற்பப் பாடலிலுள்ள சொற்களை விளங்கும் வகையில இறையியலபு, வடிவு, நற்பண்புகள் முதலானவற்றைச் சிறப்பித்துக கூறல்

திருவாய்மொழியின் நூறு பதிகங்களிலும் ஆழ்வாரின் நிலைமை இறையநுபவத்திற்கு ஏற்பவும், இறைவனைக் காணாததால் உண்டான வருத்தத்திற்கு ஏற்பவும், மனத்தகத்தே உரு வெளிப்பாடானபோது உண்டான மகிழ்ச்சிக்கு ஏற்பவும் பலவாறு அமையும். இவற்றை உலகுக்கு உபதேசிக்கும்போது நிலைமைகள் வேறு வேறாகவே இருக்கும். அப்படி வேறுபடினும் அந்தந்த நிலைமையிலும் வழுவாமல் இறையநுபவத்தையே பற்றாசாகக் கொண்டவர் ஆழ்வார் என்புதைத் தெரிவிக்கும் வகையில் பாடலிலுள்ள சொற்களுக்குச் சீபர் அகச் சான்ற கத் தோற்றுவாயின்கண் கூறுவர். இஃது இறையியல்பு, வடிவு, நற்பண்புகள் என்பனவற்றுக்கு ஏற்ப அமைந்து இருக்கும்

**சான்றுகள்:**

**இறை இயல்பு:**

(1) 'ஓவாத்துயர்ப் பிறவி' (2.8.5) என்ற பாடலின் தோற்றுவாயில் எல்லாப் பொருள்கட்கும் காரணமானவன் காரியமான உலகைக் காப்பாற்றுவதற்காகச் செய்த அவதாரங்களின் சிறப்பைக் கூறுவதாக அருளுவர் பாடலின் இரண்டாவது அடியில்வரும் 'தனி முதலாய்' என்ற தொடரை அகத்தே கொண்டு இறையியல்பைக் குறித்தது அறியமுடிகிறது. இவ்வாறு தோற்றுவாயில் கூறியதை மெய்ப்பித்துக் காட்டும் வகையில் பாடலின் பொழிப்புரையிலும் அத்தொடருக்குப் பொருத்தமாக இப்பொருளைக் காட்டியுள்ளார்.

(2) 'அமரர் தொழப்படுவானை அனைத்துலகுக்கும் பிரானை' (3.5.9) என்ற தொடருக்குப் பொருத்தமாக 'விண்ணாட்

டுக்கும் மண்ணாட்டுக்கும் தலைவன்' (உபயவிபூதிநாதன்) என்று தோற்றுவாயில் பொருள் வழங்குவர். இதனை அரண்செய்யும் வகையில் பாடலின் பொழிப்புரையில் 'பிரான்' என்பதற்குப் பொருளாகவும் காட்டியது குறிப்பிடத்தக்கது.

## இறைவடிவு

(1) 'நோந்தாராக் காதல்'(2.1.9)என்ற பாடலுக்கு "அழகிய வடிவழகையுடையவனுடைய (கமநீயவிக்ரஹனானவனுடைய) அழகு விஷயமான ஆசையாலே வெதும்புகிறாயோ?' என்று ஒரு விளக்கை புரைக்கிறாள்" என்று தோற்றுவாய் அமைத்துள்ளார் சீயர். இப்பாடலில் 'செந்தாமரைத் தடங்கண் செங்கனிவாய் எம்பெருமான்' என்ற தொடருக்குச் சேர, 'அழகிய வடிவுடையவன் என்று இறைவடிவைக் காட்டுகிறார்.

(2) 'தூநீர் முகில்போல்' (8.5.4) என்ற பாடலுக்கு 'அடியார்கட்காகப் பாற்கடலிற் கண் வளர்ந்தருளுகிற உன் வடிவழகு என் நெஞ்சிலே நிறைந்தபடி சொல்ல மாட்டுகிறிலேன்" என்று தோற்றுவாய் அமைத்துள்ளார். இதில் 'தூநீர் முகில்போல் தோன்றும் நின் சுடர்கொள் வடிவு' என்று இறைவடிவழகைப் பற்றி உரைத்தது காணலாம்.

## இறைவனின் நற்பண்புகள்

ஆழ்வார் அந்தந்தப் பதிகங்களிலுள்ள பாடல்களில் இடம் பெறச் செய்த இறைவனின் நற்பண்புகளைச் சீயர், ஆழ்வாரின் நிலைமைகளுக்கேற்பத் தோற்றுவாயில் காட்டியுள்ளார்.

(1) 'மாயோனிகளாய்' (1.5.3) என்ற பாடலில் 'திசைகளெல்லாம் திருவடியால் தாயோன் எல்லாவுயிர்க்கும் தாயோன் தானோருருவனே' என்ற தொடரின் கருத்தைப் புலப்படுத்தும் நோக்கில், தோற்றுவாயில் எல்லையற்ற மேன்மையைப் போலவே உயர்வு தாழ்வு இல்லாது எல்லாரோடும் கலக்கும் நீர்மைப் பண்பைக் காட்டுகிறார். இதனால் தாயன்பு (வாத்ஸல்யம்) காட்டப்பட்டது. இதனைத் 'தாயோன்' என்பதற்குத் 'தாயன்புடையனானவன்' என்று உரை வழங்கியதாலும் உணரமுடிகிறது.

(2) 'அகலகில்லேன் இறையும்' (6.10.10) என்ற பாடலின் தோற்றுவாயில் இறைவனைப் பற்றுகைக்குத் தகுதியான பிராட்டியின் பரிந்துரையும் குணயோகத்தையும் உடைய இறைவனின் திருவடிகளைப் பற்றுவதாகக் கூறுகிறார். இப் பாடலில் 'திருவேங்கடத்தானே' என்ற தொடருக்குத் 'திருமலை

யில் கிட்டியிருப்பவனான எளிவந்த தன்மையின் நிறைவை யுடையவனே' (ஸௌலப்யபூர்த்தி) என்று தோற்றுவாயில் காட்டிய குணங்களில் ஒன்றான கண்டுபற்றுகைக்கு இன்றியமையாத எளிவந்த தன்மையைக் காட்டுகிறார்

## இறைவனின் திருவிளையாடல்கள்

இறைவன் இவ்வுலகைத் திருத்த எண்ணிப் பலஅவதாரங்கள் செய்து, அவ்வவற்றில் தனக்கு விருப்பமான திருவிளையாடல் களைச் செய்து, அடியார்களின் பகைவர்களைக் கொன்று, விருப்பத்தை நிறைவேற்றுவான். இவ்வகைத் திருவிளையாடல் களை ஆழ்வார் பாடலிலுள்ள நயம் கண்டு தோற்றுவாயில் சீயர் காட்டித் தெளிவு பெறச் செய்கிறார்.

1. 'ஊர்ந்த சகடம் உதைத்த பாதத்தன்' (5-3.3) என்ற பாடலுக்கு அமைந்த தோற்றுவாயில் இறைவனுடைய விரோதி யைப் போக்கின மிக்க இளமையில் செய்த திருவிளையாடல்களில் ஆழ்வார் அகப்பட்டதாகக் கூறுகிறார். இதனைப் பாடலில் 'ஊர்ந்த சகடமுதைத்த பாதத்தன், பேய்முலை சார்ந்து சுவைத்த செவ்வாயன்' என்ற இருதொடர்களின் அகச்சான் றாகத் தோற்றுவாயில் 'திருவிளையாடல்கள்' என்று காட்டு கிறார்.

2. 'கொண்டல் வண்ணா' (8.5-6) என்ற பாடலிலுள்ள 'குடக்கூத்தா' என்ற தொடருக்குத் தோற்றுவாயில் மனத்தை ஈர்க்கும் அழகு, திருவிளையாடல்களைக் காட்டியுள்ளது குறிப் பிடத்தக்கது

## 4.8.3 பாடலின் எல்லா அடிகளையும் கொண்டு தோற்றுவாய் அமைத்தல்

ஆழ்வாருக்கு இறைவன்மேல் ஆராக் காதல் தோன்றும் இடங்களில் தம் அநுபவத்தை வெளியிட்டுப் பாடிய பாடல்கள் பல. அவற்றைச் சீயர் தெரிவிக்கும் வகையில் பாட்டின் நான்கு அடிகளிலுள்ள கருத்தைத் தொகுத்துத் தோற்றுவாயில் குறிப் பிடுகிறார்.

1. 'கோவை வாயாள்' என்ற (4.3) பதிகத்தின் தோற்று வாயில் ஆழ்வாருடைய ஆன்மா, அதனோடு சம்பந்தமுடைய பொருள்கள் எல்லாம் மாலை, உடை, ஆபரணங்கள், சந்தனம் போல இறைவன் தனக்கு மிக்க அழகாம்படி விரும்பின பெருங் காதலை அருளிச் செய்து ஆழ்வார் மகிழ்ச்சியடைகிறார். இப்

பதிகத்திலுள்ள பத்துப் பாடல்களின் தோற்றுவாயில் பாட்டின் நான்கு அடிகளின் தொகுப்பைக் காட்டியுரைப்பர் சீயர்.

2. 'புகலு சாந்தேன் னெஞ்சமே' (4.3.1) என்ற பாடலில் 'ஈசன்' என்பதைக் கொண்டு 'எல்லாவற்றையும் இயக்குமவனாய் (ஸர்வநியந்தா), என்றும், 'ஞாலமுண்டுமிழ்ந்த எந்தை ஏக மூர்த்தி' என்பதைக் கொண்டு, 'எல்லாரையும் காக்கும் தலைவன் (ஸர்வ ரக்ஷகனான ஸ்வாமி) என்றும், 'என்நெஞ்சம்' 'எனதுடைய வாசகம் 'என் கை கூப்புச் செய்கை' (4.3 2) என்ற பதங்களைக் கொண்டு 'மூன்று கருவிகளும் (கரணத்திரயம்) அநுபவியா நின்றது' என்றும் தோற்றுவாய் அமைத்துள்ளது காணலாம்.

4.8.4. உரையாடல் நிகழ்ச்சி முறையில் தோற்றுவாய் அமைத்தல்

ஆழ்வார் தாமான தன்மையை விட்டு, தலைவி, தோழி, தாய் ஆகிய தன்மைகளில் இறைவனைப் பற்றிப் பேசும்போது உரையாடல் நிகழ்ச்சி முறையில் நாயகனான இறைவனைப் பிரிந்த நாயகியான ஆழ்வார் தோழியோடு பேசுவது, அல்லது மனத்தில் கண்டபோது நாயகனோடு பேசுவதாக அமைந்த பதிகங்களில் இவ்வகை உரையாடலைத் தோற்றுவாயிலும் பாடலுக்கேற்ப அமைத்துள்ளமை காண முடிகிறது.

1. தலைவி—தோழி உரையாடல் :

'மாசறு சோதியில்' (5.3) ஆழ்வார் தலைவியான தன்மை கொண்டு மடலூர்ந்தாகிலும் இறைவனைப் பெற நிச்சயத்துத் தோழியிடம் உரைக்கிறார். இதில் முதற்பாட்டில், "இவளுடைய அறுதிப்பாடு அறிந்த தோழி விலக்க முயன்று, 'ஊரார் பழி சொல்வார்காண்' என்று சொல்ல, 'அவனுடைய அழகு முதலானவற்றிலே அகப்பட்டுக் கலங்கின என்னை ஊர்ப்பழி என்ன செய்யும்?'' என்று விடை சொல்லுவதைத் தோற்றுவாயில் காட்டுகிறார்.

2. தலைவன்—தலைவி உரையாடல் :

'மின்னிடை மடவாரில்' (6.2) தலைவியான ஆழ்வார் தம் விளையாட்டுக் கருவிகளையும் மறைத்து வைத்துத் தோழிமாரையும் பாராமுகமாம்படி பண்ணி இருக்கிறவளவில், அறிவற்ற பொருளாகையாலே தானே போக முடியாத தன் பந்தையும் கழலையும் எடுத்துக்கொண்டு அவற்றிலே மிக்க ஆசைகொண்ட தலைவனைக் கண்டு தன் பாக்கியத்தால் தலைவி வியந்தாள்.

தலைவன், 'நான் முன்பு பெண் பிறந்தார்க்கு உதவி
விரோதியை யழித்த தன்மையை நினைத்து
முகம்பார்க்கக் கடவோம்'

என்று அங்கு நின்றான்;

தலைவி, 'அவை (பந்து, கழல்) எங்களது, நீ
நினைத்தவர்களது அன்று காண், தந்துபோ'

என்று அவனோடு உறவு அற வார்த்தை சொல்லுகிறாள் இவ்வாறு தோற்றுவாயில் அமைந்தது காணமுடிகிறது. இத்தகைய உரையாடல் நிகழ்ச்சிகள் பெரும்பாலான அகப் பொருள் பாடல்களின் தோற்றுவாயில் அமைந்துள்ளன.

4.9. அவதாரிகைக்குத் தக்கபடி கொண்டு கூட்டுதல்

வடமொழி சுலோகங்களை எளிமையாகப் புரிந்து கொள்ளக் கொண்டு கூட்டுதல் (அந்வயப்படுத்தல்) என்னும் உத்தியைப் பண்டைக் காலத்தில் கையாண்டு வந்தனர். இதனால் சுலோகத் தின் திரண்ட பொருளை அறிய வாய்ப்பு இருந்தது.

சீயரும் ஆழ்வார் பாடல்களை அதன் அவதாரிகை களுக்கேற்ப மிகவும் சிறப்பான முறையில் பாடலின் சொற்கள் முன்பின்னாக உள்ளதை நெறிப்படுத்திக் கொண்டுகூட்டித் திரண்ட பொருளை அறியும் வகையில் உரை வகுத்துள்ளார். பெரும்பாலும் பாட்டின் தொடரிலேயே அவதாரிகை அமைந்த போதிலும், அவதாரிகைக்கேற்பப் பல பாடல்களின் சொற்களைக் கொண்டுகூட்டி உரை வழங்கியுள்ளார்.

சான்றுகள்:

1. 'யாருமோர் நிலைமையென' (1. 3. 4) என்ற பாடலின் அவதாரிகையைக் காணும்போது, பாடலிலுள்ளபடியே அவதாரிகை அமையாது, சொற்களை முன்பின்னாக மாற்றி அவதாரிகை அமைத்தது காணமுடிகிறது.

2. 'வந்து தோன்றா யன்றேல்' (8. 5. 7) என்ற பாடலில் பின் இரண்டு அடிகளை நினைவிற்கொண்டு தோற்றுவாயில் இறைவனது தன்மைகளைக் கூறிப் பின்னர் முதலிரண்டு அடிகளிலுள்ள ஆழ்வார் பாரிப்பைக் காட்டுகிறார். இறைவனுடைய தன்மையைக் காட்டுவதில் முதன்மை கொண்டு பாடலைக் கொண்டு கூட்டியது காணலாம்.

4. 9. 1. முன்பின் தொடர்கொண்டு கொண்டு கூட்டுதல்

சீயர் உரையில் பாடலின் சொற்களுக்கேற்பக் கொண்டு கூட்டி உரைவழங்கியதோடு அல்லாமல், முன்பாடலின் தொடர்

கொண்டு பின் பாடலின் தொடருக்குச் சேரக் கொண்டுகூட்டியும் உரைவழங்குவர்.

**சான்று:**

'உயர்வற வுயர்நல முடையவன்' (1. 1. 1) என்ற பாடலில் இறைவனின் தன்மைகளைக் காட்டி, அவன் 'துயரறு சுடரடி தொழுதெழன் மனனே' என்று முடிப்பர். இத்தகைய இறைவன் தன்மைகளை அப்பதிகத்தின் பத்துப் பாடல்களிலும் காட்டுவதற்காக, 'அவன் துயரறு சுடரடி தொழுதெழன் மனனே' (1.1 1) என்ற முதல் பாடலின் நான்காவது அடியைக் கொண்டு பின்வரும் ஒவ்வொரு பாட்டிலும், கூட்டிக் கொள்ளுமாறு 'மனனகமலமற' (1.1.2) என்ற அடுத்த பாடலின் பொழிப்புரை முடிவில் கூறியுள்ளது அறியற்பாலதாகும்.

**4. 10. பாடலின் உட்கருத்துக்கள் பலவாக இருப்பின் அவற்றை யெல்லாம் ஒன்று திரட்டி ஓர் அடிப்படைச்சொல்லுடன் இணைத்துக் கூறல்**

ஆழ்வார் பாடலின் உட்கருத்துக்கள் பல இருக்கும்போது அவற்றையெல்லாம் ஒன்று திரட்டி அப்பாடலின் ஓர் அடிப்படைச் சொல்லுடன் இணைந்து, அச்சொல்லுக்கு மேலே பொருள் தருவது இவர் உரையின் தனித் தன்மையாகும். இந்நெறி ஆழ்வார் பாடலுக்குச் சிறப்புத் தந்து உரைக்குப் பெருமையை விளைவிக்கின்றது. ஆழ்வார் பாடலின் ஒவ்வொரு சொல்லுக்கும் எழுந்த உரையாதலால் இத்தகைய உரை உத்தியைக் காண முடிகிறது.

இதில், இறைவனின் இயல்பு, வடிவு, நற்பண்புகள், திருவிளையாடல்கள், மற்றும் இறைவனுக்கு வசப்பட்ட பொருள் களான அறிவில் பொருள், அறிவுள் பொருள் ஆகியவற்றின் இயல்பு— இவற்றோடு கூடிய இறைவனின் மேலாந் தன்மையைத் தெரிவிக்கும் ஒரு பாடலின் முழுமையான கருத்தையோ, ஓர் அடி, இரண்டடி, மூன்று அடிகளின் கருத்தையோ, ஒரு குறிப்பிட்ட சொல்லுடன் சேர்த்துப் பொருள் வழங்குவது காணலாம்.

**சான்றுகள்:**

1. 'திருவடியை' (4. 9 11) என்ற பாடலில் 'பரஞ்சுடரை என்பதற்குச் 'சம்பந்தத்தாலும் அன்பாலும் விரோதியை அழித்தலாலும் நிலையான எல்லையற்ற ஒளியையுடைய

கண்ணனை' என்று பொருள் கூறுவர். இதனை ஆராயும்போது, பாடலின் முதலடியிலுள்ள 'திருவடியை' என்பதனால், 'சம்பந்தத்தையும், 'நாரணனை என்பதனால் 'அன்பையும்,' 'கேசவனை' என்பதனால் 'விரோதி அழித்தலையும்' சேர்த்துப் 'பரஞ்சுடரை' என்பதற்குப் பொருள் வழங்கியமை காண முடிகிறது.

2. 'அடியடையாதாள்' (7.2.10) என்ற இடத்தில் 'இப்படி நீர்மையையும், மென்மையையும், வள்ளலையும் நினைத்து ஈடுபட்டு' என்று பொருள் வழங்குவர். இவற்றைப் பாடலின் சொற்களைக் கொண்டு காணும்போது, 'மூவுலகாளியே, சடையனே, கடவுளே' என்பதனால் நீர்மையையும், 'வானோர் தலைவன்' என்பதனால் மேன்மையையும், 'வண்திருவரங்கனே' என்பதனால் வள்ளலையும் சியர் காட்டியமை புலனாகிறது.

மேலும் 'உன்னை' என்ற சொல் திருவாய்மொழியில் பல பாடல்களில் வந்த போதிலும், இறையியல்பு, நற்பண்புகள், திருவிளையாடல்கள் இவற்றை அந்தந்த இடத்திற்கேற்ப ஆழ்வாரின் அநுபவத்தைத் தெரிவிக்கும் வகையில் சொன்ன கருத்துக்களைச் சேர்த்துச் சியர் வழங்கியது அறியற்பாலதாகும்.

சான்றுகள் :

1. 'செலக் காண்கிற்பார்' (5.8 4) என்ற பாடலில், 'உன்னைக் காண்பான்' என்ற இடத்திலுள்ள 'உன்னை' என்பதற்கு 'எல்லாரைக் காட்டிலும் உயர்ந்தவனாய் (ஸர்வாதிகனாய்) எல்லாருக்கும் எளியனான உன்னை' என்று பொருள் வழங்குவர். இது பாடலிலுள்ள 'எல்லாவுலகுமுடைய ஒரு மூர்த்தி', 'குடந்தைக் கிடந்தாய்' என்ற பதங்களின் கருத்தை மேலே முறையே சேர்த்து உரைத்தமை காணலாம். இதனால் இறைவனின் மேலாந்தன்மை குணம் வெளிப்படையாகச் சொல்லுவது காணலாம்.

2. 'கோலமலர்ப் பாவைக்கு' (10.10.7) என்ற பாடலில் 'உன்னைப் பெற்றினிப் போக்குவனோ' என்ற தொடரிலுள்ள 'உன்னை' என்பதற்கு 'இப்படி புருஷகாரம் முன்பாக (பூர்வகமாக) எனக்கு நல்லையாய் என்னைக் காக்குமவனை உன்னை' என்று முதலடியும் மூன்றாமடியின் பொருளையும் 'கடைந்தாய்' என்பதனை காக்கும் தன்மையும் சேர்த்து உரை வழங்கியது அறியலாம்.

### 4.11. ஆழ்வார் திருவுள்ளக் கிடக்கையை இன்னின்ன எனத் தேர்ந்தறிந்து அதற்கேற்ப உரை வழங்குதல்

ஆழ்வார் திருவுள்ளக் கிடக்கையாவது ஆழ்வார் வாய்மொழி சொற்களுக்குப் பின்னணியில் அமைந்த அநுபவத்தைப் பற்றியதாகும்.

சீயர் தம் அறிவுத் திறனாலும், முன்னோர்களின் அருளுரையாலும், ஆழ்வார் உரைத்த சொற்களோடு பின்னிப் பிணைத்துத் தெள்ளத் தெளியக் காட்டுகிறார்.

இத்தகைய அநுபவம், ஆழ்வார் இறைவனை மனத்தே கண்டபோது உண்டான உகப்பும், அதனால் பிறர் இழக்காமற் குறை தீர உபதேசித்தமையும் என ஒரு பிரிவும், இறைவனைக் காணாதபோது உண்டான அலமாப்பும், அதனால் தாமான தன்மை யிழந்து பெண்மை கொண்டு வருந்தியமையும் என மற்றொரு பிரிவும் கொண்டதாகும்.

இத்தகு நிலைமையிலுள்ள ஆழ்வார் திருவுள்ளக் கிடக்கையை, ஆழ்வாரின் இயல்பு, ஆழ்வார் கண்ட இறைநிலை, ஆழ்வாரின் உகப்பு, ஆழ்வாரின் நினைவு/நெஞ்சு, ஆராத அவா, இன்னாப்பு, அர்ச்சாநுபவம், அகத்துறையில் ஆழ்வார் நினைவுகள், ஆழ்வாரின் நம்பிக்கை, உபதேசம் என்ற அடிப்படைகளில் சீயரின் உரை உணர்த்துகிறது.

#### 4.11.1. ஆழ்வாரின் இயல்பு

ஆழ்வாரின் தாழ்ச்சி, இருந்த விடத்திலிருந்து எழுந்து வர முடியாமை, ஆத்மா இறைவனுக்கே அநுபவிக்கத்தக்கது, இறைவனை ஒழியச் செல்ல மாட்டாமை, இறைவனுக்கே இட்ட வழக்கு, இறைவனைக் காணப் பெறாமையால் உண்டான ஆத்மா, உடைமைகள் இழப்பு, தஞ்சமாகப் பற்றல், இறை நினைவுகள் கொண்டு போகித்தல், இறைவனுக்கே அடிமை, அவனாலே காக்கப்படுமவன், அவனுக்கே அநுபவிக்கத்தக்கவன், அறிவற்ற பொருள் போலிருந்து இறைவனை உகப்பித்தல், இறைவன் ஒருவனே பயன், தஞ்சம் என்ற உண்மைத் தன்மைகளை ஆழ்வாரின் இயல்புகளாகச் சீயர் பதினேழு இடங்களில் காட்டியுள்ளார்.

எடுத்துக்காட்டாக, 'குடிக்கிடந்து' 9.2.2 என்ற பாடலில் பற்றுவதற்குத் தக்க உறவுடைய இறைவன் திருவடிகளை ஆழ்வார் தம் தலைமேலே வைக்க வேண்டுவதாகக் கூறுகிறார். இங்கு ஆழ்வாருடைய இயல்பான பாரதந்த்ரியத்தைக் காட்டி

யுரைப்பர் சீயர். இதனால் அறிவற்ற பொருள்போல் கிடந்து இறைவன் உகப்பை எண்ண வேண்டியிருப்பதைச் சொன்னபடி.

### 4.11.2. ஆழ்வார் கண்ட இறை நிலை

ஆழ்வார் கண்ட இறை நிலைக் காட்சியை ஆழ்வார் அருளிய பாடல்களில் அமைந்துள்ள சொற்களோடு சேர்த்துப் பொருள் கூறுவர் சீயர். ஆழ்வார் கண்ட இறைநிலையின் வெவ்வேறு காட்சிகள் குறிப்பாக 18 இடங்கள் உரையில் காணக் கிடக்கின்றன.

இறைவன் அளவிறந்தவன்; அவனுக்குச் சங்கு சக்கரங்கள் அடையாளங்கள்; எல்லாரையும் காக்கும் தன்மையன்; ஆற்றல் மிக்கவன்; படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில் புரியும் மூவுருவன்; பிராட்டியோடு என்றும் உள்ளவன்— என்னும் நிலைகள் பல கண்டு ஆழ்வார் பெருமிதம் அடைந்தது பலபடியாகப் பரவியுள்ளது. மேலும், தன் வடிவழகால், அவயவ அழகால், குழலூதும் அழகால் ஆழ்வாரை ஆழங்கால் படுத்திய அநுபவ நிலைகளைச் சீயர் காட்டும் திறன் சிறப்பாக வுள்ளது.

சான்றுகள் :

(1) 'எங்கள் செல்சார்வு' (8.4.2) என்ற பாடலில் 'என் அருவன்' என்பதற்கு 'மூவுலகத்தைப் படைத்துக் காத்து அழித்து மூவுருவனாய் உள்ள வடிவங்களைத் தனக்கு உள்ளுள வாய் தெரிவித்த இறைவனின் மூவுருவனாம் தன்மையைச்' சீயர் காட்டுகிறார். மேலும் ஆழ்வார் கணட இறைவனின் ஐந்து நிலைகளையும் ஒருசேரப் பிடித்து ஆழ்வார் திருவுள்ளக் கிடக்கையாகக் காட்டுவர்.

(2) 'கொண்டல் வண்ணா' (8.5.6) என்ற பாடலில் மனத்தைக் கவரும் அழகிலும் விருப்பமான திருவிளையாடல்களிலும் அகப்பட்டுக் கூப்பிட்டால் ஏதேனும் ஒருமுகத்தாலே வந்து தோன்ற வேணுமாறு இறைவனின் ஐந்து நிலைமைகளைச் சீயர் காட்டுகிறார். அதாவது, 'விண்தன் மேல்தான்' என்று பரமபதத்தையும், 'மண்மேல்தான்' என்று விபவ, அர்ச்சாவதாரங்களையும், 'விரிநீர்க்கடல்தான்' என்று வியூக நிலையையும், 'மற்றுத்தான்' என்று அந்தர்யாமி நிலையையும் காட்டுகிறார்.

### 4.11.3. ஆழ்வாரின் உகப்பு

இறைநிலை கண்ட ஆழ்வாரின் உகப்பை ஆறு இடங்களில் குறிப்பாகச் சீயர் உரையில் காண முடிகிறது. இவை, தன்னைப்

பற்றுமவனின் குற்றம், குணம் ஆகியவற்றைப் பாராமல் பூசிக்கத் தக்கவன் இறைவன் என்ற உகப்பும், இறை அநுபவங்களைக் காட்டக் கண்டதனால் வந்த உகப்பும், அமுதிலும் ஆற்ற இனியனான இறைவன் ஆழ்வார் மனத்தில் புகுந்ததால் வந்த உகப்பும், மிகப் பெரியவன் அறத் தாழ்ந்தவனோடு புரையறக் கலக்கும் தன்மையனான இறைவனின் சீல குணத்தைக் கண்ட உகப்பும், திருக்காட்கரையகத்து எம்பெருமானை அநுபவிப் பித்ததனால் உண்டான உகப்பும், இறைவனின் திருநாமங் களைச் சொல்லும்படி செய்த அருளின் உகப்பும், தம்மைத் திருவாய்மொழி பாடுவித்ததால் வந்த உகப்புமாக ஆழ்வார் திருவுள்ளக் கிடக்கையைக் குறிப்பிடுகிறார் சீயர்.

### 4.11.4. ஆழ்வார் நினைவுகள்

ஆழ்வார் தூய உள்ளத்தே ஊன்றிய நினைவுகளை ஆழ்வார் பாடலிலுள்ள சொற்களுக்குப் பின்னணியில் சேர்த்து, 'உண்ணும்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்' (6.8.1) என்றே இருக்கும் ஆழ்வாரின் திருவுள்ளக் கிடக்கையைச் சீயர் தம் உரையில் நுணுகி நோக்கும் வகையில் அமைத்துள்ளார்.

இவை இறைவனைத் தவிர மற்ற விஷயங்களில் பார்வை அழிவுக்குக் காரணம் என்ற நிலைத்த நினைவு, இறைவனின் அவயவ ஆபரண ஆயுத அழகுகள் நலிவதற்குக் காரணம், ஆசைப்பட்ட ஆழ்வார்க்குத் தாள்களைத் தலைத்தலைச் சிறப்புத் தந்தது, அதற்குக் கைம்மாறு இல்லாது உயிரை அற விலை செய்தது, ஆழ்வார் இறை இயல்புகள், தம் இச்சையாலே ஆழ்வார் மனம் விட்டு அகலாது நிலைத்து நிற்பது, பிராட்டி புருஷகாரம் கொண்டு குற்றேவல் செய்வது, இறைவனின் செயல் களின் நினைவு, பிராட்டியின் புருஷகாரத்தில் ஊற்றம், இழி பட்டோடும் பிறவி வேண்டாமை, இறைவனை அநுபவிப்பதற்குத் தடையான விரோதி அழித்தமை—ஆகிய செய்திகளை மனத்தில் ஊன்றின நினைவுகளாக முழுமையான முறையில் சீயர் உணர்த்துகிறார்.

எடுத்துக்காட்டாக, 'இனியிருந்து என்னுயிர் காக்கு மாறென்' (9.9.3) என்ற பாடலில் ஆழ்வார் மனம் நலிவதற்குக் காரணம், இறைவனுடைய அழகான தாமரைக்கண், செய்ய வாய், நீலப்பனியிருங் குழல்கள், நான்கு தோள்கள்—இவை எவ்வாறு இருந்து நலிவித்தன என்பதை ஆழ்வார் நினைவாகக் கொண்டு சீயர் காட்டுகிறார்.

### 4.11.5. ஆழ்வாரின் ஆராத அவா

இறைவனுடைய இயல்பு, வடிவு, குணங்கள், திருவிளையாடல்கள் முதலானவற்றைக் காட்டக் கண்ட ஆழ்வாரின் ஆசை உந்த உந்த, அவா மேலிட்டு அந்தாதியாய் ஆயிரம் பாடல்கள் மலர்ந்தன. அவாவில் அந்தாதியான திருவாய்மொழி முழுவதும் ஆழ்வார் இறைவனை அடைந்து அவனுக்கு எப்போதும் கைங்கர்யம் செய்ய எண்ணியதே யாகும்.

இவை வெளிப்படையாகத் திருவாய்மொழியின் வியாக்கியானங்களில் இருப்பினும், சீயர் உரையில் ஆழ்வார் திருவுள்ளக் கிடக்கைக்குப் பொருந்தும் வகையில் ஆராத அவா ஏழு இடங்களில்[6] அமைந்துள்ளமை காண முடிகிறது. இத்தகைய அவா, ஆழ்வார் பொறிகளுக்கு வசப்பட்டு இருத்தலைத் தவிர்த்துத் தம்மை வேறொருவர்க்கு ஆட்படாது தமக்காக்கிக் கொள்ள வேணும் என்ற ஆசையும், இறைவனிடத்திலுள்ள கருணையில் குறைவுண்டானால் தமக்குப் பேற்றில் குறை உண்டாவது என்ற அவாவின் உறுதியும், தனக்கே உரிய திருவடிகளையே தந்தருள வேண்டுவதில் ஆசையும், தம்முடைய அநுபவமானது இறைவனின் மேன்மைத் தன்மை ஒன்றிலேயே ஊன்றியமையும், தம்மால் திருவாய்மொழியைப் பாடுவித்துக் கொண்டமையும், நித்ய சூரிகள் அநுபவிக்கும் திருவடிகளை அடைவதில் ஆராத அவாவும், அவாவின் மிகுதியாலே வேறு கதியற்றிருக்கும் தாம் 'அழைக்கின்ற அடிநாயேன்' என்று தம் ஆராத அவாவைக் காட்டுவதையும் சீயர் உரை மூலம் அறியலாம்.

சான்று:

'அழைக்கின்ற அடிநாயேன்' (9-4.3) என்ற பாடலில் அடியார்களின் துக்கத்தையே பற்றாசாகக் கொண்டு காப்பவனான இறைவனுடைய கருணை, தம்மை நழுவ விடுகிறதாக அஞ்சுகிறார், ஆழ்வார். இங்கு நாயானது தன்னினைவைக் கூழையான வாலை யசைத்துத் தெரிவிக்குமாபோலே ஆழ்வாரின் அதிகமான ஆசையாலே மனம் குழையா நின்றதாக ஆழ்வாரின் ஆராத அவாவைக் காட்டுகிறார் சீயர்.

### 4. 11. 6. ஆழ்வாரின் இன்னாப்பு

திருவாய்மொழியை ஆராய்ந்த முன்னோர்கள் ஆழ்வாரின் இன்னாப்பு மூன்று வகையானது என்பர்.[7] இத்தகைய இன்னாப்பு இறைவனை மனத்தகத்தே கண்டபோதும், காணாத போதும் ஆழ்வாரின் நிலைமைக்கு ஏற்பத் திருவாய்மொழி முழுமையும் பரவியுள்ளது.

ஆழ்வாரின் இன்னாப்பைத் திரட்சியாகக் காணும்போது அதில், இறைவனைக் காணவேண்டும் என்ற ஆசை காரணமான வருத்தம், இறைவனுக்கே உரியனாம்படி பண்ணி அவனிடமே ஆசையுடையனாம்படி பண்ணியதால் உண்டான வருத்தம், இந்திரியங்கள் நலிவதால் வருந்தி, உதவியாளனான இறைவனை உதவி செய்யாதவனாக ஆழ்வார் நினைத்தல், இறைவனையே பயனாகக் கருதும் தாம் கிட்டுகைக்குக் கதற வேண்டுவதே என்ற வருத்தம், கண்ணனின் புருவங்கள் ஆழ்வாரின் இன்னாப்பை அதிகமாக்குதல், இறைவனின் அவயவழகுகள் தனித்தனியாகத் துன்பத்தை உண்டுபண்ணுதல், பிறர்க்கு உதவும் இறைவனுக்கு அடிமை செய்ய முடியாமையில் வருத்தம், இறைவனுக்கு வியப்பூட்டும் குற்றேவல்களைச் செய்வதில் நினைவு, இறைவனுடைய படைப்பு, திரிவது, அழகிய வடிவு, மென்மைத் தன்மை ஆகியவற்றைச் சொல்லித் தலைக்கட்ட முடியாமையால் உண்டான வருத்தம், ஆபத்தில் உதவும் இறைவன் திருவடிகள் வெளியே காணக்கிடையாமையால் மறப்பில் வருத்தம், இறைவன் நிலைவைக் காட்டி ஆழ்வார் துக்கத்தைக் காட்டுவது, அநுபவிக்கத் தக்க காதல் கிட்டப்பெறாத கொடுமை, விபவத்தில் சடாயு, அனுமான் செய்த நன்மைகளைத் தாம் செய்ய முடியாமையால் உண்டான இன்னாப்பு என்று பல்வேறான நிலைமைகள் உள்ளன.

சான்று :

"உண்ணிலாவிய" (7.1.1) என்ற பாடலில் விரோதியை அழிப்பதற்கு முக்கியமான உறவுகளையுடைய இறைவன், இந்திரியங்களைக் கொண்டு ஆழ்வாரை நலிவித்துத் தன் திருவடிகளைக் கிட்டாதபடி பண்ணினான். இப்பாடலில் 'இன்னம் நலிவான் எண்ணுகின்றாய்' என்ற தொடரில் ஆழ்வாரின் இன்னாப்பைக் காட்டிப் பொருள் கூறுவது காணலாம். இங்கு, 'உதவியாளனான இறைவனை உதவி செய்யாதவனாக ஆழ்வார் நினைப்பது உறவின் ஊற்றத்தாலே' என்றும் கூறுவது குறிப்பிடத்தக்கது.

## 4. 11. 7. ஆழ்வாரின் அர்ச்சாவநுபவம்

ஆழ்வார் திருவுள்ளத்தில் நடந்த அநுபவங்களில் அர்ச்சாநுபவமும் ஒன்று. இறைவனுடைய ஐந்து நிலைகளில் அர்ச்சை நிலை அவதாரங்களுக்குப் பிற்பாடரானவர்களுக்கு அநுபவிக்கத் தக்க குணங்கள் எல்லாம் நிறையப் பெற்றுள்ளது. (ஆ. இ. நூற்பா. 158). இவ்விடத்தில் மாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியில் (பா.36) ஆழ்வாரின் அர்ச்சாநுபவத்தின் உறைப்

பைக் குறிப்பிடுவதும் நினைதற்பாலதாகும். அர்ச்சாநுபவங்களை வெளிப்படையாகத் திருவாய்மொழிப் பதிகங்கள் உணர்த்திய போதும், சிற்சில விடங்களில் வெளிப்படையாக இல்லாவிட்டாலும் ஆழ்வாரின் அளவிலா அர்ச்சாநுபவத்தை அவர்தாம் அருளிய சொற்களுக்குப் பொருத்தமாக எடுத்துக் காட்டுகிறார். இவையனைத்தும் ஆழ்வாருக்கு இவ்வுலகில் உண்டான அர்ச்சாநுபவத்தில் ஊற்றத்தையும், திருக்குடந்தை இறைவனின் எளிவந்த தன்மை, அழகு ஆகியவற்றில் முனைந்து ஈடுபட்டு இன்னம் எத்தனையோ உகந்தருளின திவ்விய தேசங்களை ஆசைப்பட்டபடி அநுபவிக்க முடியாமையும், திருக்கோளூரிலும் திருப்புளிங்குடியிலும் இறைவன் படுக்கை படுத்தது அலைச்சலின் மிகுதியாலோ என்று சந்தேகப்படுவதும், அதனால் நொந்தவிடம் அறிகைக்காக அளந்த காலைப்பிடித்தல், எய்த்த தோளைப் பிடித்தல் செய்கையிலே ஆழ்வாரின் நோக்கையும், திருவண்பரிசாரத்து இறைவனின் அநுபவமும், திருக்கடித்தானத்து இறைவனைக் குறைதீரக் கண்டதையும், திருமோகூர் இறைவனின் அவயங்கள் ஆழ்வாரின் வழித்துணைக்கு உதவினமையும், இறைவன் நினைவு ஒழிய நாம் நினைத்தபடி அர்ச்சாவதாரநுபவம் பண்ணும் சுயேச்சையைத் தவிர வேண்டுவதும், இறைவனின் உபகார பரம்பரைகளை நினைத்து உருகுவதும், திருவாட்டாறு எம்பெருமானின் அநுபவமும், திருக்காட்கரை எம்பெருமானின் வியப்பான தன்மைகளில் பெருங்காதலாலே உருகுவதையும் சீயர் ஆழ்வார் சொற்களின் பின்னணியில் வைத்துக்காட்டிச் சென்றுள்ளார்.

சான்று :

'தாளதாமரை' (10. 1.1) என்ற பாடலில் ஆழ்வாருக்கு வழித்துணையாகத் திருமோகூர்க் காளமேகத்து எம்பெருமான் தவிர மற்றவரில்லை என்று நிச்சயித்து, அவ் வெம்பெருமான் வழித்துணையாம்போது அவன் அவயவங்கள் தமக்கு உதவும் வகைப் பாட்டில் பொதிந்துள்ள இடங்களைச் சீயர் காட்டுவது அநுபவித்தற்குரியது.

### 4. 11. 8. அகத்துறையில் ஆழ்வார் நினைவுகள்

ஆழ்வார் திருவுள்ளக் கிடக்கையில் அகத்துறைப் பதிகங்கள் ஆழ்வாரின் தன்மைகளை அறிய வகை செய்கின்றன. இது ஏழாவது இயலில் விளக்கப்பட்டுள்ளது.

### 4.11.9 ஆழ்வாரின் நம்பிக்கை

மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார் திருமகள் கேள்வனான இறைவனை அடைந்து அவன் உகப்புக்குத் தக்கபடி அடிமை செய்வதில் ஆசையுடையராயிருக்கும் இருப்பைப் பெற விழைந்தார். இது, திருவாய்மொழி மூலம் நன்கு அறியப்படு கிறது. இத்தகைய நம்பிக்கையை ஆழ்வார் திருவுள்ளம் அறிந்து சீயர் தமது உரையில் இரண்டு இடங்களில் காட்டியுள்ளார்.

*சான்று:*

(1) 'உய்ந்துபோந்து' (2 6.5) என்ற பாடலில் ஆழ்வார் தம் இயல்பையும் இறையியல்பையும் காட்டி, இறைவனை விடுவது இல்லை என்று திண்ணமாகக் கூறுவதாகச் சொல்லுவர் சீயர். அதாவது அடியார் திறத்தில் பொருத்தமும், காப்பாற்றுவதில் சிந்தையும், இறையநுபவத்தில் தமக்குச் சிந்தையும், தாம் பெற்ற பேற்றின் விளக்கமும், பிறவியோடு பற்றில்லாமையும், பாபம் கழிந்தமையும், அரிய கைங்கர்யத்தின் பெருமையும் உணர்ந்தார் ஆழ்வார் என்பதைக் காட்டுகிறார் சீயர்.

(2) 'வந்தாய் போலே வாராதாய் வாராதாய் போல் வருவானே' (6.10.9) என்ற பாடலில் அடியார் திறத்தில் உபாயம் ஒன்று மில்லாமையாலே இறைவன் வருகையில் ஆழ்வார் நம்பிக்கை கொண்டுள்ளதாகச் சீயர் காட்டுகிறார்.

### 4.11.10 ஆழ்வாரின் உபதேசம்

உலகத் துன்பங்களில் இழிந்து இறைவனை மறந்து வாழும் மக்களைப் பார்த்து உபதேசம் செய்வர் ஆழ்வார். தாம் கண்ட பேற்றை உலகத்தாரும் பெறவேண்டும் என்ற நோக்கத்தில் தம்மால் இயன்றதைச் சொல்லித் தலைக்கட்டுவர்.

*சான்று:*

'பேசுமின் கூசமின்றி' (10.2.4) என்ற பாடலில் ஆழ்வார் உலகத்தாரைப் பார்த்து உபதேசிக்குமிடத்தில் 'கூசமின்றிப் பேசுமின்' என்று மாற்றித் 'தங்களுடைய தகுதியில்லாமையைப் பாராதே நீர்மையுடையவனை ஆராதிக்கிறவர்கள் தமது மிகுதி யான தீமையைப் பார்த்துக் கூசாதே பேசவேணும்' என்பர். இத்தகைய உபதேசத்தை 1.2.4; 10 2 9 ஆகிய பாடல்களில் ஆழ்வார் சொற்களின் பின்னணியில் காட்டிப் பொருள் வழங்கு கிறார்.

### 4.12 ஆழ்வாரின் மிக்க ஈடுபாட்டைச் சீயர் தம்மேல் ஏற்றிச் சொல்லி உரை வழங்குதல்

திருவாய்மொழியில், 'என் கார்முகில்வண்ணா', 'என் பொல்லாமணியே', 'என் கனிவாய்ப் பெருமான்' என்று பலபடியாகச் சொற்போக்கில் வைத்து ஆழ்வார் தம் அநுபவங்களை வெளிக்காட்டுவர். இதற்கு உரையிட்ட சீயர், ஆழ்வாரின் மிக்க ஈடுபாட்டைத் தம்மேல் ஏற்றி, ஆழ்வார் பெற்ற உதவிகளைக் காட்டும் வகையில் உரை வகுத்துள்ளார். இறைவடிவு, குணம், திருவிளையாடல், அவயவ அழகு ஆகியவற்றைக் காட்டி ஆழ்வாரை அடிமை கொண்டதாகக் கூறுகிறார்.

சான்று:

'திரிவிக்கிரமன்'(2.7.7) என்ற பாடலில் ஆழ்வார் இறைவனை அநுபவிப்பதற்காக உயர்ந்த மனத்தைத் தந்தான் என்று கூறுகிறார். இங்கு ஆழ்வார் அநுபவித்த இறைவனின் அவயவம், நிறம் இவற்றைக் காட்டும் வகையில் 'என் செங்கனிவாய் உருவிற் பொலிந்த வெள்ளைப் பளிங்கு நிறத்தனன்' என்று சொற்போக்கு அமைத்துப் பாடியுள்ளார். ஆழ்வாரின் மிக்க ஈடுபாட்டைக் காட்டும் வகையில் 'செங்கனிவாய்...நிறத்தனன் என்' என்று சீயர் கொண்டு கூட்டிச் சிவந்த கனிபோலேயிருக்கிற திருப் பவளத்தின் வடிவிலே பரம்பி வளர்ந்து வருகிற வெளுத்த பளிங்கு போலே திருமுகத்தின் நிறத்தை ஆழ்வாருக்கு அநுபவிப்பித்த தாகக் கூறுகிறார்.

### 4.13. கருத்து உரைத்தல்

தமிழ் இலக்கிய நூல்களுக்கு உரைவழங்கிய உரையாசிரியர்கள், படிப்போர்க்கு நூல் குறிப்பிட்ட நோக்குப் புரியுமாறு ஆங்காங்கே பாடலின் திரண்ட ஆராய்ச்சிக் கருத்துக்களை ஒருசேரப் பிடித்துத் தெளிவாக அறியும் வகையில் பாடலின் முடிவில் கருதியுரைப்பர். இத்தகைய நெறி வைணவ உரைகளிலும் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நம்மாழ்வாரின் மனத்தில் பாடல்கள் புணர்ப்புண்டபோது இருந்த மனநிலைகளைச் சீயர் தமது உரையில் பல நிலைகளில் சுட்டிக் காட்டுவது அழகுடையதாகும். இந் நிலையில் ஆழ்வார் அருளிய அகத்துறைப் பாடல்களிலும், பிறர்க்கு அறிவுரை வழங்கும் பாடல்களிலும், மற்றும் ஆழ்வாருக்கு இறைவனிடமுள்ள ஆராக் காதலை அறிவுறுத்தும் பாடல்களிலும், அந்தந்தப் பாடல்களின் ஆராய்ச்சிக் கருத்துக்களை அவற்றின் முடிவில்

சுட்டிக் காட்டுவர். இதனை, (1) ஆழ்வார் நினைவுப் போக்கில் அமைந்த கருத்துரை என்றும், (2) அகத்துறைப் போக்கில் அமைந்த கருத்துரை என்றும் இருவகையில் காணலாம்.

4.13.1. ஆழ்வார் நினைவுப் போக்கில் அமைந்த கருத்துரை

சான்றுகள்:

(1) "கொண்டான் ஏழ்விடை, உண்டான் ஏழ்வையம்

தண்டாமஞ் செய்தென் எண்டா னானானே (1.8.7)

என்ற பாடலில், 'எண்டானானானே' என்பதற்குத் தம்முடைய பாரிப்பின்படியே அவன் பாரிப்பதாகப் பொருள் கூறுகிறார். முடிவில், 'அதாவது-நான் பரமபதத்திலே தன்னை அநுபவிக்க எண்ணுமாபோலே தான் இங்கே என்னை அநுபவிக்க எண்ணா நின்றான் என்றபடி' என்று திரண்ட கருத்தான ஆழ்வார் நினைவைக் காட்டுகிறார்.

(2) ஞாலம் போனகம் பற்றி (8.3.4) என்ற பாடலில் 'துணையற்றவனாய் ஆலிலைத் துயிலும் இறைவனுடைய அழகுக்கு என்ன ஆபத்து வருகிறதோ' என்று ஆழ்வார் அஞ்சிக் கலங்கின முறையைக் கூறுகிறார், பாட்டின் முடிவில், 'இவ்வாறு ஆழ்வார் பயப்படுகைக்கு உறுப்பு பொருந்தாதகைப் பொருந்த வைக்குமதாகிய இறைவனுடைய ஆற்றலும், எல்லாரையும் காக்கும் தன்மையின் நிறைவும்' என்று ஆழ்வார் நினைவைக் கருத்துப் பொருளாகக் காட்டுகிறார்.

4.13.2. அகத்துறைப் போக்கில் அமைந்த கருத்துரை

சான்றுகள்:

(1) 'கங்குலும் பகலும்' (7.2.1) என்ற பாடலில் அநுபவிக்கத்தக்க அவனுக்கே வுரிய அடையாளங்களைக் கூறி நாயகியான ஆழ்வாரின் துக்க மிகுதியை, நற்றாயானவள் பெரிய பெருமாளிடம் முறையிட்டுச் சொல்லுகிறாள். பொருள் முடிவில், 'இந்தத் துக்கத்தைத் தீர்க்க நினைக்கிறாயோ, மிகுதிப் படுத்த நினைக்கிறாயோ' என்று 'இவள் திறத்தென் செய்கின்றாய்' என்ற தொடருக்குச் சேர ஆராய்ச்சிக் கருத்தை உரைக்கிறார்.

(2) 'வாயும் திரையின்' அவதாரிகையில் (2.1) ஆழ்வார் இறைவனைப் பிரிந்து நோவுபட்டுத் தாமான தன்மையிழந்து தம்முடைய மிக்க ஆசையை வெளிக்காட்ட, தலைவி தன்மையிலே, உலகுள்ள எல்லாப் பொருள்களும் இறைவனைப்

பிரிந்து நோவுபடுவதாக எண்ணி இப்பதிகத்தின் பத்துப் பாடல் களிலும் நாரை தொடக்கமான உயிரினங்களின் தன்மைகளைக் கண்டு இரங்கி வருந்துகிறாள். அந்தந்த உயிரினங்கள் வருந்து வதற்கேற்ப உண்டான தன்மைகளைக் கருத்துரையாக ஒவ்வொரு பாடலின் பொருள் முடிவில் காட்டுவர். இவை இறைவனைப் பிரிந்து வருந்துவதால் உண்டான வேறுபாடுகள் இன்னவர்க்கு இன்னவையென்று தெரியும்படி உரைத்ததாகும்.

## 4.14. ஐயம் திரிபற உரைசொல்லும் திறன்

சீயர் தமது உரைமூலம் ஐயங்களைக் களைவதிலும் வல்லவர். ஆழ்வார் பாடலின் சொற்களுக்கோ, தொடர்களுக்கோ ஐயம் தீரும் வகையில் பாடலின் முடிவில் தெளிவாக உரை வழங்குவர். ஆழ்வார் பாடலின் ஆழங் கண்டு, சொற்களுக்குத் திருத்தமான முறையில் பொருளைத் தெளிவிப்பர், உரையைப் படிப்போர்க்குப் படிக்கும்போது எழும் சந்தேகத்தைத் தீர்க்கும் வகையில் பாடலின் முடிவிலேயே அதனைக் களைந்து படிப்போரைப் பரவசப்படுத்தும்படி செய்வர்.

சான்றுகள் :

(1) 'ஏறிய பித்தினோடு' (44.7) என்ற பாடலில் 'இத்திரு மாயோன் திறத்தனள்' என்பதற்கு 'இறைவனைப் பிரிந்த நிலைமையில் போலிப் பொருள்களையும், அவனோடு இயைபான பொருள்களையும் கண்டு கலங்கும் இத்திருவானவள் வியப்பான மேன்மை அடையாளங்களை யுடையவன் திறத்தனளாக நற்றா யின் ஆற்றாமையைக் காட்டுவர் சீயர். இங்கு 'இத்திரு' என்று ஆழ்வாரை அத்திருவான சீதைப் பிராட்டியோடு ஒப்பிட்டு அவள் இராமனைப் பிரிந்து கலங்கியதை மேற்கோள் காட்டிப் பேசுவர். அப்போது இத்திரு அத்திருவோடு ஒப்புமையில் ஐயம் எழாமலி ருக்க, பாடலின் முடிவில் 'என்றும் விட்டுப் பிரியாத செல்வமா யிருக்கை இருவருக்கும் ஒக்குமன்றோ' என்கிறார்.

(2) 'புகலிடம் அறிகிலம்' (9 9.2) என்ற பாடலில் 'புலம்புறு மணி தென்றல் ஆம்பலாலோ...பஞ்சமம் முல்லை தண்வாடை யாலோ' என்ற தொடர்கள் மூலம் தென்றலும் வாடைக்காற்றும் இறைவனைப் பிரிந்து வருந்தும் ஆழ்வாரை நலிவதாகக் கூறுவர். இங்குச் சித்திரை வைகாசி மாதங்களில் வீசும் தென்றலும், ஆவணி புரட்டாசி மாதங்களில் வீசும் வாடைக்காற்றும் ஒரு சேர ஆழ்வாரை நலிவிப்பதாகப் பாடலில் அமைந்துள்ள தொடரை நோக்கும்போது சந்தேகம் எழுவது இயற்கை. அதனைப் போக்கும் வகையில் சீயர், 'தென்றலையும் வாடையையும்

சொல்லிற்று, ஒரு நொடியிலே ஆழ்வார் மனத்தில் ஏற்பட்ட துன்பத்தின் மிகுதியால் பல யுகங்கள் கழிகிறதான கருத்தாலே என்று தெளிவாகக் காட்டுவர்.

## 4. 15. சொல்லை வரையறை செய்தல்

ஆழ்வார் பாடலிலுள்ள சொற்களுக்கு உரிய விளக்கங்களை நம்பிள்ளையும், பெரிய வாச்சான் பிள்ளையும் தமது உரைகளில் வரையறை செய்து உரைப்பர். அவ்வாறே ஈயுண்ணி யும் நயம்படச் சொற்களை வரையறை செய்துள்ளமை காணமுடிகிறது. இதனால் சொற்களுக்கு உரிய பொருளை விளக்கும் நெறி தெளிவாகிறது.

சான்றுகள் :

(1) துஞ்சுதலாவது—'தாழ்ச்சியின் நினைவாலே (நிகர்ஷா நுஸந்தானத்தாலே) வந்த பிரிவு (விச்லேஷம்)' என்று கருதுவர். (1.10.5)

(2) குமிறுதலாவது—'நெஞ்சில் நினைவை வாய்விட்டுச் சொல்லமாட்டாத வார்த்தையாலே உள்ளே குமிறுதல் என்று உரைப்பர். (6 5.1)

### 4.15.1. பாடலின் போக்கு நோக்கிச் சொற்றொடர்களுக்குப் பல்பொருள் தருதல்

ஆழ்வார் பாடலிலுள்ள சொற்களுக்கும் தொடர்களுக்கும் அந்தந்த இடத்திற்கேற்பப் பொருள் தந்து உரையின் முடிவில் வேறு பல பொருள்களையும் சுட்டிக்காட்டி உரைவழங்குவர் ஈயர். இவை படிக்கப் படிக்க இன்ப வெள்ளமாக இருப்பதோடு பல புதிய பொருள்கோளுக்கு இடம் தந்தும் நிற்கின்றன. ஈயரின் சீரிய நெஞ்சம், ஆழ்வாரின் பாடல் மூலமாக, அவர் தம் திருவுள்ளத்தை யறிந்து பல புதுப் பொருள்களைத் தோண்டி யெடுத்து நமக்கு அளித்தமை புலப்படுகிறது.

சான்றுகள் :

(1) 'ஏதுதல்' (2.7.6) என்பதற்குக் 'கொள்ளுகையாதல்' என்று பொருள் தந்து, முடிவில் 'தகுதி' என்று பொருள் தருகிறார்.

(2) 'திருநேமி வலவா' (6.10.2) என்பதற்கு 'வீரஸ்ரீயையுடை திருவாழியை அடக்கியாளவல்ல எல்லா 'ஆற்றல் படைத்தவன்'

என்று கூறி முடிவில் ‘வலத்திலே யுடையவன்’ என்றும் பொருள் வழங்குவர்.

## 4.16, சொல் வருவித்துப் பொருள் கோடல்

சீயர் தம் உரையில் பொருளை விளக்குவதற்கேற்பப் பல இடங்களில் சில சொற்றொடர்களையும், சொற்களையும் தேவைக்குத் தக்கபடி வருவித்துக்கொண்டு உரைவழங்கியுள்ளார். பாடலின் சொற்களையும் தொடர்களையும் இயைபுபடுத்திக் காட்ட, சொற்களையும் தொடர்களையும் வருவித்துப் பொருள் கூறுவர். ‘ஆதலால்’, ‘ஆன பின்பு’, ‘அவ்வளவன்றியே’ முதலான சொற்களை மிகுதியாக வருவித்துப் பொழிப்புரை வழங்கப் பட்டுள்ளது இங்ஙனம் பல்வேறு சொற்களையும் தொடர்களையும் இடத்திற்கேற்பப் பெய்து உரையெழுதிப் பொருள் தெளிவு ஊட்டு கின்றார் சீயர். பொருள் விளக்கத்திற்காகவும், பொருள் தொடர்ச்சிக்காகவும், காரண காரியம் காட்டவும், தாம் கொண்ட கருத்தை நிலைநாட்டவும் சொல் வருவித்துச் சீயர் வழங்கி யுள்ளமை அறிய முடிகிறது. இவ்வாறு வருவித்துப் பொருள் கூறும் நெறியை இன்று இருந்து வரும் பதிப்புக்களில் ( ) என்ற குறியீடுக்குள் அமைத்துள்ளது காணலாம்.

## 4.17. பழம்பெரும் உவமைகளைக் கொண்டு பொருள் தருதல்

தமிழ் இலக்கிய நூல்களில் புலவர்கள் உணர்ந்ததை உணர்ந்தபடியே உணர்த்துவதற்கு உறுதுணையாக உவமை களைக் கையாண்டுள்ளனர். அவ்வகையில் வைணவ உரையாசிரி யர்களும் ஆழ்வார் பாடல்களுக்கு உரை வழங்கும்போது ஆழ்வார் அநுபவத்தை அனைவரும் உணரச் செய்யவும், தங்கள் உரை நடை சிறந்தோங்கவும் உவமைகளைக் கையாண்டுள்ளனர். ஈட்டிலும், இருபத்துநாலாயிரப்படியிலும் உவமை வளம் மிக்குள்ளது. அதற்கு அடுத்தபடியாக, சீயர் ஆழ்வார் படைத்த உவமைகளுக்கு மேலும் விளக்கம் தந்தும், சில சொற்களை விளங்கச் செய்யப் பழம்பெரும் உவமைகளைப் புகுத்தியும் உரையிட்டுள்ளார்.

சீயர் காட்டும் உவமைகளெல்லாம் தொல்காப்பிய உவமவியல் (தொல். உவ. நூ; 4) கூறும் நூற்பாவிற்கேற்ப வினை, பயன், மெய், உரு என்ற நான்கு வகையிலும் அமைந்துள. அவை இறைவனின் சிறப்பினை எடுத்து உணர்த்த வல்லன; தாமான தன்மையை விட்டுத் தலைவி, தோழி, தாய் முதலான மாற்ற நிலையிலுண்டான ஆழ்வாரின் ஆராத

காதலைக் காட்டும் வகையில் அமைந்தன; தத்துவப் பொருளை விளக்கும் போக்கில் அமைந்தன சில; மற்றும் அன்றாட வாழ்க்கை, இராமாயண பாரத நிகழ்ச்சிகள், இயற்கை, வெள்ளம், உயிரினம், மருத்துவம் முதலான அடிப்படை நிலைக் களன்களைத்தன்னகத்தே கொண்டு எழுந்தன சில; ஆழ்வாரின் சொற்களை விளக்கும் வகையில் வந்த உவமைகள் 76 உள. (பின் இணைப்பு 3)

1. **இதிகாச புராணங்கள்**

ஈயர் உரையில் இராமாயண பாரதக் கதை நிகழ்ச்சிகள் இரண்டு மூன்று இடங்களிலே வந்த போதிலும் ஆழ்வாரின் சொற்போக்கைத் தெளிவுபடுத்தும் வகையில் உவமைகள் வந்துள்ளன.

*சான்று :*

'ஆடியாடி'யின் அவதாரிகையில் (2.4) தலைவியான ஆழ்வார் தம் ஆற்றாமையைப் பெரியோர் வாயிலாக இறைவனுக்கு அறிவித்தபடியைக் கண்டு நற்றாய் இரங்குகிறாள். அப்படி இரங்கும்போது 'ஏழை பேதை' (2.4.10) என்ற பாடலில் இராவணனின் செல்வமான இலங்கையைத் தீக்கிரையாம்படி அழியச் செற்றுச் சக்ரவர்த்தித் திருமகன் சீதைக்கு உதவினார். அதேபோன்று இளமையான மான் போன்ற நோக்கையுடைய பராங்குச நாயகியின் ஆற்றாமையை அழித்து நோக்கை ஒன்றையாகிலும் நசிக்காமலிருக்கும்படி வேண்டு கிறாள் நற்றாய். இங்கு இலங்கையை அழித்துச் சீதையை மீட்டபடியை 'இவள் மழைநோக்கொன்றும் வாட்டேன்மின்' என்ற தொடருக்குப் பொருந்த அவளுக்கு உதவினாற்போலே என்று இராமாயணச் செய்தியை உவமையாக்கி உரைப்பர். இது தொல்காப்பிய வினை உவமைக்குச் சான்றாகக் கொள்ளத் தகும்.

2. **பாகவத நிகழ்ச்சி**

*சான்று :*

'கோவைவாயாளில் (4.3.1) ஆழ்வார் இறைவன் தம்மோடு கலந்த பெருங்காதலால் வாய்வெருவிப் பேசும்போது, 'பூசும் சாந்து என் நெஞ்சு' என்றும், 'புனையும் கண்ணி எனதுடைய வாசகம் செய் மாலையே' என்றும் மகிழ்ச்சி மிகுதியால் கூறுவர். இங்கு கிருஷ்ணாவதாரத்தில் கண்ணன் கஞ்சனைக் கொல்லச் சென்றபோது வழியில் கூனி என்பவள் இட்ட நற்சாந்தைப் பூசிக்கொண்டு அவளை அகமகிழ்வித்தான். அவ்வாறே

இறைவனின் பரிமாற்றமும் ஆழ்வார் நெஞ்சுக்குக் கூனியிட்ட சாந்து போல இருந்ததாக உவமைப்படுத்தி உரைப்பர். மேலும் அதே கட்டத்தில் கண்ணன் வருகை புணர்ந்து கஞ்சனுக்கு மாலை கட்டுபவனான மாலாகாரன் தான் தொடுத்த மாலையைக் கண்ணனுக்கு இட்டு உகந்தான். இச் செய்தியை 'ஸ்ரீமாலாகாரார் மாலை போலே' என்று உவமை யாக்கி 'ஆழ்வார் தொடுத்த மாலையான திருவாய்மொழி புனைந்த மாலையாக இறைவனுக்கு ஆயிற்று' என்பர். இதனைப் பயனுவமையாகவுங் கொள்ளலாம்.

3. இறைவனைப் பற்றிய செய்திகள்

*சான்று :*

'மண்ணும் விண்ணும்' (6.9.2) என்ற பாடலில் 'நண்ணி உனைநான் கண்டுகந்து கூத்தாட நண்ணி ஒருநாள் ஞாலத் தூடே நடவாயே' என்று வேண்டுகிறார். இவ்வேண்டுதலுக்குப் பொருந்த ஆழ்வார் வாமனாவதாரத்தில் இறைவன் மகாபலியின் யாகபூமிக்கு வாமனனாய் வந்து இரந்து அவர்கட்குக் காட்சி தந்ததை மனத்தின்முன் நினைவுபடுத்திக் கொண்டு அந்நிகழ்ச்சியை 'யக்ஞவாடத்திலே வந்தாற் போலே நீ கிட்டி யருளவேணும்' என்று இங்கு உவமையாக்கிச் சீயர் காட்டுகிறார். இதனால் வாமனாவதாரம் உவமையாக்கப்பட்டது. இதனை மெய் உவமைக்குச் சான்றாகக் கொள்ளத்தகும்.

மக்கள் வாழ்க்கை

மக்களின் வாழ்க்கையையும் உரையில் ஆங்காங்கே சுட்டிக் காட்டிச் சீயர் பொருளை சிறப்பித்துக் கூறுகிறார்.

*சான்று :*

சோறு கிடைக்காமல் பட்டினியிருந்தவன் பசி மேன் மேலெழ உண்ணும் சோறு வேண்டித் தேடுவான். அவன் ஆற்றாமை சொல்லில் அடங்காது. இந்த நிலைமையை ஆழ்வார் இறைவனிடம் சேராமையாலுண்டான இன்னாப்பின் மேலீட்டாலே 'அடியேன் நாளும் நாளும் நாடுவன்' (8.3.3) என்ற தொடருக்குப் பொருத்தமாக, அடிமைத்தன்மையுடைய ஆழ்வார் இறைவனுக்கு வியப்பை உண்டுபண்ணும் குற்றேவல் களைச் செய்வதே உய்வாகையால் பசியர் சோறு தேடுமாபோலே நாள்தோறும் தேடாநின்றதாகக் கூறுவர்.

**மருத்துவம்**

பால் இன்றியமையாத உணவுப் பொருள். சுவைமிக்கது. இச்சுவை காரணமாகப் பால்குடித்தவனுக்குப் பித்தம் தானாகவே போய்விடும்.

*சான்று :*

'ஆயர் கொழுந்தாய்' (1. 7. 3.) என்ற பாடலில், ஆழ்வாரின் அறிவின்மை அழிந்ததற்கு 'சுவையை யநுபவித்தற் பொருட்டுப் பால் குடித்தவனுக்குப் பித்தம் தன்னடையே அழியுமாறு போலே' என்ற உவமையைக் காட்டி உரைப்பர்.

**தத்துவம்**

இறைவன் எங்கும் நிறைந்தவன்; எல்லாப் பொருள்களிலும் பரந்துள்ளவன். இதனை விளக்குவதற்காக 'எம்பிரான் விட்டுவே' (2.7.4.) என்ற இடத்தில் 'ஊரை வளைத்து ஒருவனைப் பிடிக்குமா போலே எல்லாப் பொருள்களிலும் பரந்து ஆழ்வாரை ஏற்றுக்கொண்ட தலைவன்' என்று கூறுகிறார். இங்குக் காட்டிய உவமை, ஒருவனைப் பிடிக்க ஊர் சுற்றிலும் வளைத்துக் கொண்டு இருத்தல் நடுவில் ஒருவனைப் பிடிப்பதற்குச் சுலப மாவது போல ஆழ்வாரைப் பற்ற இறைவன் எல்லாப் பொருள் களிலும் பரந்துள்ளான் என்ற தத்துவப் பொருள் தோன்ற உரைப்பர்.

**4. 18. விளியையெல்லாம் அடைமொழியாகச் சேர்த்துப் பாடலின் முடிவிலுள்ள ஒரு பெயர் விளியை மட்டும் விளியாகக் காட்டல்**

ஆழ்வார் பாடல்களில் பல பெயர் விளிகள் வழங்கப் பட்டுள்ளன, இறையநுபவத்திற்கு ஏற்ப இறைவனுடைய திருவிளையாடல், குணம், வடிவு ஆகியவற்றைக் காட்டும் வகை யில் வந்த பெயர்விளிகள் ஒரு பாடலில் நான்கு இடங்களில் வந்துள்ளன. சீயர் அப்பாடலுக்கு உரை வழங்கும் போது முதல் மூன்று பெயர் விளிகளை விளியாகக் காட்டாமல் கடைசி விளியையே விளித்து வழங்குவர். இவற்றை ஆராயுங்கால், ஆழ்வாரின் அர்ச்சாநுபவத்திற்கு ஏற்ப அருளிய பாடல்களில் இறைவனின் வெவ்வேறு நிலைமைக்குத் தக்கவாறு அமைந்த பெயர் விளிகளைக் காட்டியபோதும் முடிவில் காட்டிய அர்ச்சாவ தாரமான விளியையே விளித்து உரை வழங்குவர்.

*சான்று :*

'உலகமுண்ட பெருவாயா' (6–10) என்ற பதிகத்தில் ஆழ்வார் திருவேங்கடத்து எம்பெருமானிடம் சரணம் புகுகிறார்.

இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் இரண்டுக்கும் மேற்பட்ட விளிகள் வந்துள்ளன. இவை பெரும்பாலும் இறைவனின் ஐந்து நிலைகளுக்குரிய பெயர் விளிகளாகும். மற்றும் சில விபவ அவதாரங்களில் செய்த திருவிளையாடல்களைப் பற்றிய பெயர் விளிகளாகவுமுள்ளன. இப்பதிகம் அர்ச்சாவதாரம் பற்றியதாதலால் சீயர் பெயர் விளிகள் எத்தனையிருப்பினும் அவற்றைத் திருவேங்கடத்து எம்பெருமானுக்கே உரியனவாக்கிப் பாடலின் கடைசியிலுள்ள பெயர் விளியோடு அடைமொழியாகச் சேர்த்துள்ளது குறிப்பிடத்தக்கது. உலகமுண்ட பெருவாயா, 'உலப்பில் கீர்த்தியம்மானே', 'ஒளிமூர்த்தி', 'நெடியாய்', 'ஆருயிரே' என்று வந்த விளிப்பெயர்களை விளியாகக் காட்டாமல் அடையாகக் காட்டி, அடுத்து வந்த 'திருவேங்கடத் தெம்பெருமானே' என்பதையே விளியாகக் காட்டியிருப்பது அறியற்பாலதாகும்.

### 4. 19. 1. ஆழ்வார் சொற்களுக்கு அடைமொழி தந்து பொருள் கூறல்

சீயர் உரையில் ஆழ்வார் சொற்களுக்குப் பொருள் வழங்கும் போது அந்தந்த இடத்திற்கேற்பவும் உரையின் செறிவு கருதியும் அடைமொழி தருவது அறியற்பாலதாகும்.

சான்றுகள்:

(1) 'இமையோர்கள்' (7. 1. 1)என்பதற்குப் 'பிறவி வாசனையால் தொடப்படாதவராய், நழுவுதலில்லாத அறிவையுடையவர்கள்' என்று நித்தியசூரிகளின் தன்மையைக் காட்டும் வகையில் அடைமொழி தந்து பொருள் கூறுவது காணலாம்.

(2) 'கோது' (8.10.9) என்பதற்கு 'வேறு பயனில் சேர்க்கையாகிற குற்றம்' என்பர்.

### 4.19.2 ஆழ்வார் அமைத்த அடைச்சொற்களுக்கு விரித்து விளக்குதல்

இத்தகைய உத்தியால் சீயரின் புலமையும் உரைத் திறனும் சிறந்து விளங்குகிறது. ஆழ்வாரே அமைத்த அடைச்சொற்களுக்கும் அடைதந்து பொருள் வழங்குவது குறிப்பிடத்தக்கது.

சான்றுகள் :

(1) 'வெண்சங்கு' (4.3.6) என்பதற்குப் 'பரபாகம் என்கிற அழகை உண்டுபண்ணுகிற வெளுப்பையுடைய ஸ்ரீபாஞ்சசன்யம்' என்று சங்கின் வெண்மைச் சிறப்பைக் காட்டி உரைப்பர்.

(2) 'புகர்கொள் வானவர்கள் (8.4.8) என்பதற்குப் 'பிறரால் அடையப்படுகையால் வந்த ஒளியையுடைய தேவர்கள்' என்பர்.

முடிபுகள்

உரை உத்திகள் என்ற தலைப்பின்கீழ், சீயர் கையாண்ட உரை உத்திகளைக் காணும்போது, அவற்றால் அறியப்படும் முடிந்த கருத்துகள் சிலவற்றை நிறுவ முடிகிறது.

1. திருவாய்மொழியில் மறைந்திருக்கும் பெரும் புதையல்களான ஐம்பொருளை ஐயமறக் காட்டும் வகையில் உரைப்பாயிரம் சீயர் அமைத்தது குறிப்பிடத்தக்கது.

2. பதிகங்களான ஒவ்வொரு திருவாய்மொழிக்கும் முன்னர் அப்பதிகத்தின் திரண்ட கருத்தை அறியும் வகையில் அவதாரிகைகள் அமைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

3. ஒரு பதிகத்திற்கும் அடுத்த பதிகத்திற்கும் உள்ள கருத்துத் தொடர்பை அறிய, சாத்திர நெறி, அர்த்த பஞ்சகம், நேர்த்தொடர்பு, உயிரன்ன தொடர்/சொல் ஒன்றைப் பயன்படுத்தல், இறைவன்—ஆழ்வார் உரையாட்டுப் பின்புலம், ஆழ்வார் எண்ணங்கள் ஆகிய அறு வகை இயைபுகள் அமைத்து உரை வகுத்தது காண முடிகிறது. இத்தகைய இயைபு முறை சீயர்தம் கல்வி, கேள்வி, சுருங்கச் சொல்லி விளங்க வைக்குந் திறன் ஆகியவற்றை ஒருசேரக் காட்டுவனவாகும்.

4. ஆழ்வார் பாடல்கள் சிலவற்றுக்கு வடமொழி மறைத் தொடர்களைப் பயன்கொள்ளும் உத்தி சிறந்து விளங்குகிறது.

5. வேதத்திற்கு விளக்கம் ஆமாறு உரைக்கும் வகையில் வேத, உபநிடத, இதிகாச, புராணங்கள் மற்றும் பல வடமொழி நூல் தொடர்கள் கொண்டு விளக்கம் தருவது குறிப்பிடத்தக்கது.

6. ஆழ்வாருடைய ஒரு பதிகத்திலுண்டான உணர்வின் தொடர்ச்சியாக உருவாகிய பதிகம், அடுத்துவரும் பதிகத்தைத் தெளிவு செய்யும் வகையில் ஆழ்வார் வழங்கிய சொற்றொடர்கள் கொண்டு உரைவிளக்கம் தருவது புலப்படுகின்றது.

7. வெவ்வேறு பொருள்களைக் குறிக்கும் சில அல்லது பல சொற்களை, அப்பொருளுக்குள்ள இயைபு காரணமாக, ஒரே வேற்றுமைப் பொருளுடைனவாக அமைத்து, அப்பொருளின் ஒற்றுமையை விளக்கும் உத்தி சிறந்து விளங்கு

கிறது. இவை எட்டு வகையில் அமைந்துள்ளமை ஆய்வில் விளக்கப்பட்டுள்ளது.

8. சீயர் தம் உரையில் தாம் எடுத்துக்கொண்ட கோட்பாடுகளுக் கேற்ப, ஆழ்வார் பாடலின் அகநோக்கை முழுமையாகத் தெரிவிக்க அமைத்த தோற்றுவாய்களை நுணுகி நோக்குங் கால் அவை நான்கு நெறிகளில் அமைந்துள்ளமையைக் காணலாம்.

9. பாடல்களின் திரண்ட பொருள் அறிய அவதாரிகைக்குத் தக்கபடி கொண்டு கூட்டியுள்ளமை தெளிவாக்கப்பட் டுள்ளது.

10. பாடலின் சொற்களுக்கேற்பக் கொண்டுகூட்டி உரை வழங்கியதோடு அல்லாமல், முன் பாடலின் தொடர் கொண்டு பின்பாடலின் தொடருக்குச் சேரக் கொண்டு கூட்டி உரை வழங்கியுள்ளமை தெளிவுசெய்யப் பெற் றுள்ளது.

11. ஆழ்வார் பாடலின் உட்கருத்துக்கள் பல இருக்கும்போது அவற்றையெல்லாம் ஒன்றுதிரட்டி, இறைவனின் இயல்பு, வடிவு, நற்குணங்கள், திருவிளையாடல்கள் முதலான வற்றை அறியும் வகையில் அவற்றை ஓர் அடிப்படைச் சொல்லுடன் இணைத்து சீயர் உரை வழங்குவது எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

12. ஆழ்வார் இறைவனை மனத்தே கண்டபோது உண்டான உகப்பும், அதனால் பிறர் இழக்காமற் குறைதீர உபதேசித்த மையும் ஒரு பிரிவாகவும், இறைவனைக் காணாத போது உண்டான அலமாப்பும், அதனால் தாமான தன்மை யிழந்து பெண்மை கொண்டு வருந்தியமையும் மற்றொரு பிரிவாகவும் 11 அடிப்படைகளில் உரையில் இடம் பெற் றுள்ளமை புலப்படுத்தப்பட்டுள்ளது.

13 ஆழ்வாரின் மிக்க ஈடுபாட்டைச் சீயர் தம்மேல் ஏற்றிச் சொல்லி உரைவழங்கியதைக் காணும்போது ஆழ்வார் பெற்ற உதவிகளைக் காட்டும் வகையில் அமைந்தது காண லாம்.

14. பாடலின் திரண்ட ஆராய்ச்சிக் கருத்துக்களை ஆங்காங்கே ஒருசேரப் பிடித்துத் தெளிவாக அறியும் வகையில் கருத்துப் பொருளாகக் காட்டுவதனால், ஆழ்வார் நினைவுப் போக்கில் அமைந்த கருத்துரையையும், அகத்துறைப்

போக்கில் அமைந்த கருத்துரையையும் அறிய இவ்வுரை வழி வகுத்துள்ளது.

15. ஆழ்வார் பாடலின் சொற்களுக்கோ, தொடர்களுக்கோ சந்தேகம் தீரும் வகையில் பாடலின் முடிவில் தெளிவாக உரை வழங்கும் உத்தி சிறந்து விளங்குகிறது.

16. ஆழ்வார் பாடலிலுள்ள சில சொற்களுக்குரிய விளக்கங்கள் வரையறை செய்யப் பெறுவதால் அவற்றின் பொருளை அறிய வாய்ப்பேற்படுகிறது.

17. சொற்களுக்கும் அந்தந்த இடத்திற்குகேற்பப் பொருள்தந்து உரைமுடிவில் வேறுபல பொருள்களையும் சுட்டும் உத்தியால் ஆழ்வார் திருவுள்ளமறிந்து பல புதுப்பொருள்களைத் தோண்டி யெடுத்து நமக்கு அளிப்பதாக வுள்ளது.

18. பாடலின் சொற்களையும் தொடர்களையும் இயைபு படுத்திக் காட்டச் சொல் வருவித்துப் பொருள்கூறும் நெறி எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

19 பாடலின் சொற்கருத்தை நன்கு உணரப் பழம்பெரும் உவமைகளைக் கையாண்டது அறிகிறோம்.

20. விளிகளையெல்லாம் அடைமொழியாகச் சேர்த்துப் பாடலின் முடிவிலுள்ள ஒரு பெயர் விளியை மட்டும் விளியாகக் காட்டும் இவர் உரை உத்தி சுட்டப்பெற்றுள்ளது.

## இயல்-4

### குறிப்புகள்:

1. சே. கிருஷ்ணமாசாரியார், (ப. ஆ.), பகவத் விஷயம், 12 படி இரண்டாம் பத்து அவதாரிகை.
2. மேலது, ஐந்தாம் பத்து அவதாரிகை.
3. மேலது, ஏழாம் பத்து அவதாரிகை.
4. மேலது, பத்தாம் பத்து, ப. 366.
5. இரா. அரங்கராசன், நம்பிள்ளை உரைத்திறன், ப. 107.
6. 3, 8, 2; 4, 5, 7; 5, 8, 7; 6, 10, 6; 7, 9, 11; 8, 1,9; 9, 4, 3.
7. கு. தாமோதரன், திருவாய்மொழித் திறன், 1981, ப. 31

## இயல்-5

# சமய நோக்கு

சீயர் உரையில் பயன்படுத்திய உரை உத்திகள் முன் இயலில் ஆய்வு செய்யப்பெற்றன. அதன் அடிப் படையில் வரைந்த உரையில் அடங்கியுள்ள சமயப் பொருண்மைகள்; சமயம்-வைணவம், வைணவசமயக் கருத்துக்கள்—மும்மறைகள், துவயமும் திருவாய் மொழியும், சீயர் காட்டும் நெறி, அவர் காட்டும் இறை நிலை, மற்றும் மும்மறைகளின் ஆழ்பொருளைக் காட்டல் என்னும் தலைப்புக்களின் கீழ் இவ்வியலில் ஆய்வு செய்யப்பெறுகின்றன.

# இயல்-5

# சமய நோக்கு

## 5. 0. சமயம்-வைணவம்

சமயம் என்பது பொதுவாக மனித சக்தியைத் தெய்வ பக்தியை நோக்கிச் செலுத்துவது எனலாம். சிறப்பாக இது ஒருவராலோ, ஒரு குழுவினராலோ மக்களின் நலங்கருதி ஏற்படுத்தப்பட்டதெனலாம். "சமயம் என்பதற்கு நெறி, கொள்கை என்னும் சில பொருள்கள் உள்ளன....இந்த நன்னெறி களின் கூட்டமே சமயம் எனச் செப்பப்படுகிறது" எனக் கிருஷ்ணவேணி அம்மையார் கூறுகிறார்[1] "சமைக்கப்பட்டது தான் சமயம். மனிதன் தன் வாழ்வு வளம்பெறவும், மாக்கள் தன்மையிலிருந்து விடுதலை பெற்று மக்கள் தன்மை பெறவும் வழியாகச் செய்யப்பட்டது அல்லது சமைக்கப்பட்டதுதான் சமயமாகும்" என்பர் சமயங் குறித்து வரையறை செய்துள்ள அறிஞர்களுள் ஒருவர்.[2] மனிதனைப் பண்பாடு உடையவனாக ஆக்குவது சமயமாகும்.

இந்தியச் சமயங்களில் பொதுவாகச் சமயம், தத்துவம் இரண்டும் இணைந்தே காணப்பெறுகின்றன. ஆனால் மேலை நாடுகளில் சமயம் வேறாகவும் தத்துவம் வேறாகவும் உள்ளன.

வேதம், உபநிடதம், கீதை ஆகியவை இந்தியச் சமயங் களுக்கு அடிப்படையாக அமைந்துள்ளன. வேத உபநிடதங் களை ஏற்றுக் கொள்வன வைதிகச் சமயங்கள்; அவற்றை எதிர்த்துத் தோன்றியவை அவைதிகச் சமயங்கள்.

வேதத்தையும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தையும் இரு கண்களாகப் போற்றுவோர் வைணவ மதத்தினர் ஆவர். சீர் பெற்று விளங்கும் சமயங்களுள் வைணவமும் ஒன்று இது பல கொள்கைகளைத் தன்னுள் கொண்ட சமயமாகும். "விஷ்ணுவைத் தலைமைக் கடவுளாகக் கொண்டு வழங்குவது

வைணவமாகும்.''[3] ''விஷ்ணு என்பதற்கு 'எங்கும் நிறைந்தது' என்பது பொருள்; இதனால் ஒவ்வொரு பொருளின் உள்ளும் புறமும் நிறைந்து அதைக் காத்துக் கொண்டிருக்கும் பொருளுக்கே விஷ்ணு என்னும் பெயர் அமைந்துள்ளது.''[4]

இவ் வைணவ சமயத்தில் தத்துவங்கள் எனக் கூறப்பெறுவன 26 ஆகும். அவை பூதங்கள் ஐந்து, பொறிகள் ஐந்து, புலன்கள் ஐந்து, தொழிற் கருவிகள் ஐந்து ஆகிய இருபதுடன், அகங்காரம், மனம், மான், அவ்வியக்கம் ஆகிய அகக் கூறுகள் நான்கும் சேர்ந்து 24 ஆகும். இவற்றுக்கும் மேலாக இறைவனின் பகுதியாக விளங்கும் உயிர், இறை என்ற இரண்டும் சேர்ந்து வைணவத் தத்துவம் இருபத்தாறு ஆகும்.

பந்தங்களால் கட்டுண்ட உயிர் அகப்புற இருபத்து நான்கு தத்துவங்களிலிருந்து விடுபட்டு இருபத்தாறாவது தத்துவமாக விளங்கும் இறைவனையே உபாயமாகப் பற்றி அவனுக்கே தொண்டு செய்வது வைணவத்தின் இலட்சியமாகும். மேற்கூறிய இருபத்தாறு தத்துவங்களையும் வைணவ அதிகாரிகள் மூன்றாகப் பகுப்பர்.[5] அவை:

(1) அறிவுள் பொருள் (சித்து)
(2) அறிவில் பொருள் (அசித்து)
(3) இறை (ஈச்வரன்)

என்பனவாகும்.

'அறிவில் பொருளும் அறிவுள் பொருளும் இறைவனும் அடை அடைகொளியின் ஒற்றுமையாலே ஒரே பொருள் என்னலாய், தனித்தனியான வேறுபாட்டால் பல பொருளாயிருக்கும்' என்பர் நம்பிள்ளை. இவ்விடத்தில்,

> ''ஒற்றுமை நயத்தின் ஒன்றெனத் தோன்றினும்
> வேற்றுமை நயத்தின் வேறே உடல்—உயிர்''
>
> (நன்னூல் நூற்பா 450)

என்னும் நூற்பா நினைத்தற்பாலது.

இந்த அடிப்படை வைணவ சமயக் கருத்து வைணவ ஆசாரியர்களால் உலகெங்கும் பரவின; வடமொழி வேதங்களிலும் தென்மொழி வேதமாகிற ஆழ்வார் அருளிச்செயல்களிலும் இம்முப்பொருள் உண்மை பொதிந்துள்ளதை உலகிற்கு வெளிப் படுத்தியவர் இராமாநுச முனியாவர். இவரது சமயக் கருத்துக் களே விசிட்டாத்துவைதம் என்ற பெயரில் நிலவி வருகிறது. இதுவே எம்பெருமானார் தரிசனம்' (உ.ர.மா. பாடல் 38)

இம்முப்பொருள்களுள் அறிவுள் பொருளாவது பத்தர், முத்தர், நித்தியர் என மூன்று பிரிவுகளாய், கணக்கற்றவையா யிருக்கும். அறிவில் பொருளானது காலம், பிரகிருதி, நித்யவிபூதி என மூன்று பிரிவுகளாய் எண்ணற்கரியவையாயிருக்கும். "ஒரே உருவத்தால் ஒருபடிப்பட்ட நிலைமையையுடைத்தா கையாலே அறிவுள் பொருள்" என்றும், 'உருவத்தின் மாறுதலாலே ஒரு படிப்பட்ட நிலைமையில்லாமையாலே அறிவில் பொருள்" (1.2.4) என்றும் கூறுவர் சீயர். இவை இரண்டையும் விட்டுப் பிரியாத சரீரமாகக் கொண்டிருக்கும் ஈச்வரன் எனப்படும் திருமகள் கேள்வனே பரம்பொருளாவான்.

எனவே, மேற்கூறிய ஈச்வரன், அறிவுள் பொருள், அறிவில் பொருள் என முக்கூறுகளைக் கொண்ட வைணவ சமயம் சீரும் சிறப்பும் பெற்று இந்தியச் சமயங்களில் ஓர் அங்கமாகத் திகழ்கின்றது.

## 5.1. வைணவ சமயக் கருத்துக்கள்—மும்மறை

முப்பொருள்களுள் அறிவுள் பொருளாகிய ஆத்மாக்கள் உய்யும் பொருட்டுப் பரம்பொருளான இறைவனை உள்ளபடி அறிந்து, அவனையே நெறியாகப் பற்றி, அவனுக்கப்புக்கே ஆட் பட்டு, அடிமை செய்யவேண்டும். இதற்காக அறிய வேண்டிய பொருள்கள் அர்த்தபஞ்சகமான ஐம்பெரும் பொருள்கள். அதாவது, இறைநிலை, உயிர்நிலை, தக்கநெறி, தடை, பேறு என்பன. வேதசாரமான இவ்வைம்பொருள்கள் மும்மறை (இரகசியத்திரயம்) என்னும் மூன்று இரகசிய மந்திரங்களில் உறைவதைக் காணலாம். அவை:

பெரிய திருமந்திரம் (ஓம் நமோ நாராயணாய)
துவயம் (ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம:)
சரமசுலோகம் (ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம்
வ்ரஜ I அஹம் த்வா ஸர்வபாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மா சுச : II)

என்பனவாகும்.

திருமந்திரத்தை ஸ்ரீபதரிகாச்சிரமத்திலே நாராயணன்தானே சீடனாயும் ஆசாரியனாயும் இருந்து வெளியிட்டான் என்றும், துவய மந்திரத்தை ஸ்ரீவிஷ்ணுலோகத்தில் தான் பிராட்டிக்கு உபதேசித்தான் என்றும், சரம சுலோகத்தைப் பாரதப் போரில் திருத்தேர்த்தட்டில் தன்னைப் பற்றிய அருச்சுனனுக்கு உபதேசித் தான் என்றும் மணவாள மாமுனிகள் கூறுவர்.[7]

இதில், திருமந்திரம்: "இறைவனுக்கே உரியனான நான் எனக்குரியனன்றிக்கேயொழிய வேணும்; எல்லாருக்கும் தலைவனான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேனாக வேணும்" என்பதை உணர்த்துகிறது.[8]

துவய மந்திரம் பெரிய பிராட்டியாரை முன்னிட்டு இறைவன் திருவடிகளை உபாயமாகப் பற்றுதலையும், பெரிய பிராட்டியாரும் அவனுமான சேர்த்தியிலே அடிமைசெய்ய இரத்தலையும் உணர்த்துகிறது.[9]

சரம சுலோகம்: "புறம்புண்டான பற்றுக்களனைத்தையும் வாசனையோடே விட்டு இறைவனையே தஞ்சமாகப் பற்றினால் இறைவன் நம்மை எல்லாப் பாபங்களினின்றும் விடுவித்து வீடு பேற்றை யளிப்பான்" என்பதை உணர்த்துகிறது.[10]

## 5. 2. திருவாய்மொழியும் துவயமும்

நம்மாழ்வார் அருளிச்செயலான திருவாய்மொழிக்குத் துவய விளக்கமாக உரைகள் வகுத்தனர் வைணவ ஆசாரியர்கள். துவய மந்திரத்தின் பத்துப்பொருள்கள் திருவாய் மொழியின் பத்துப் பத்துக்களில் விவரிக்கப்பட்டுள்ளதாக, ஸாரஸங்கிரகம் என்னும் நூலில் பிள்ளை லோகாசாரியர் அருளியுள்ளார். இஃது வார்த்தாமாலையிலும் அறியக் கிடக்கிறது.[11] அதாவது, துவயத்தின் முதல் வாக்கியத்திலுள்ள ஐந்து பதங்களின் ஐந்து பொருள்கள் திருவாய்மொழியின் முதல் ஐந்து பத்துக்களில் விவரிக்கப்பட்டுள்ளன என்றும், இரண்டாவது வாக்கியத்திலுள்ள ஐந்து பதங்களின் ஐந்து பொருள்களும் திருவாய்மொழியின் மேல் ஐந்து பத்துக்கள் விவரிக்கின்றன என்றும் பிள்ளை லோகாசாரியர் உரைப்பர்.[12] பட்டர் என்னும் ஆசாரியர் அஷ்டச்லோகியில் துவயத்தின் முதல் வாக்கியத்தால் ஆறு பொருள்களும், இரண்டாவது வாக்கியத்தால் நான்கு பொருள்களும் விவரிக்கப்படுகின்றன என்பர்.[13]

பிள்ளை லோகாசாரியர் முன்பு காட்டிய பத்துப் பொருள்களை, அவரது திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் என்னும் ஆசாரியர் 'துவயார்த்தம் தீர்க்க சரணாகதி என்றது ஸாரஸங்கிரஹத்திலே' என்று ஆசாரிய இருதய நூற்பா மூலம் விளக்குவது அறியற்பாலதாகும்.[14]

மேலும் திருவாய்மொழியின் பத்துத் தோறுமுள்ள பொருள்களைப் பிறர்க்கு உபதேசிப்பதற்கு உறுப்பாக ஒருங்கவிட்டுப்

பரந்து இறைவனின் எல்லாக் குணங்களும் எல்லாப் பத்துக்களி லும் பரந்திருப்பினும் ஒவ்வொரு பத்துக்கு ஓரோர் குணத்திலே நோக்கு என்று கொண்டு நாயனார் கீழ்க்காட்டப்படும் வகையில் பத்துக் குணங்களை ஆசாரிய இருதயத்தில் வெளியிட்டுள்ளார்.[1])

(1) மேன்மைத் தன்மை (பரத்வம்)
(2) காரணமாம் தன்மை (காரணத்தும்)
(3) பரந்திருக்கும் தன்மை (வ்யாபகத்வம்)
(4) இயக்குவிக்கும் தன்மை (நியந்த்ருத்வம்)
(5) கருணையாயிருக்கும் தன்மை (காருணிகத்வம்)
(6) அடைக்கலமாய தன்மை (சரண்யத்வம்)
(7) ஆற்றலுடைய தன்மை (சக்தத்வம்)
(8) உண்மை விரும்பும் தன்மை (ஸத்யகாமத்வம்)
(9) ஆபத்திலே தோழனாய் உதவும் தன்மை (ஆபத்ஸகத்வம்[2])
(10) துன்பத்தைப் போக்கும் தன்மை (ஆர்த்திஹரத்வம்)

## 5. 3. வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் நெறி

சீயர் தமது உரையின் உரைப்பாயிரத்தில் அர்த்தபஞ்சக நோக்கில் திருவாய்மொழியைப் பகுத்துக் காட்டியது முன் இயலில் குறிப்பிட்டுள்ளது.

அதாவது:

1. இறைவனுடைய காத்தற்றன்மை (ரக்ஷகத்வம்)
2. அவனுடைய அநுபவிக்கத்தக்க இனிமை (போக்யத்வம்)
3. திருமாலுக்கே உரிய தொண்டனான ஜீவாத்மா அவனொருவனையே அநுபவிக்கும் அநுபவம் (ஆத்மாவினுடைய ததேகாநுபவத்வம்)
4. இறைவனொருவனையே ஜீவாத்மா தனது அன்புக்கு இலக்காகக் கொண்டமை (ததேகப்ரியத்வம்)
5. இறைவனாகிற உபாயத்தின் அபாயமேதுமில்லாத இயல்பு (நிரபாயமான உபாயவேஷம்)
6. அவ்வுபாயத்தைப் பற்றும் முறை (உபாயவரண ப்ரகாரம்)
7. வெறுக்கத்தக்க பாபங்களின் தன்மை (அநிஷ்டமான விரோதி ப்ரகாரம்).
8. அப்பாபங்கள் நீங்கும் வகை (தந்நிவ்ருத்தி ப்ரகாரம்)

9. பெறத்தக்க பேற்றின் தன்மை (பலட்ரகாரம்)

10. அப்பேற்றை அநுபவிக்கும் விதம் (ததவாப்தி ப்ரகாரம்) என்று ஐம்பொருளை இரண்டிரண்டு பத்துக்களின் பொருளாக்கிக் காட்டியுள்ளார்.

இவர்தம் உரையில் மற்றொரு நிர்வாகத்தையும் காட்டியுள்ளார். அதாவது, முதலிட்டு நான்கு பத்துக்களாலே—ஒருவருடைய முயற்சியால் உண்டு பண்ணப் படுவதன்றியே எப்போதும் நித்தியமாக உள்ளவைகளான-கடவுளாகிய உயர்ந்த ஆத்மாவென்ன ஜீவனென்னும் தாழ்ந்த ஆத்மாவென்ன இவர்களுடைய உண்மை நிலை தெரிவிக்கப்படுகிறது. முடிவிட்டு நான்கு பத்துக்களாலே இறைவனுடைய முயற்சியால் நிகழ்வன இரண்டு: வெறுக்கத்தக்க பாவங்களின் நீக்கமென்ன, அதன் பின்பு உண்டாகுமதாய் விரும்பத்தக்க இறைவனை யநுபவித்தலென்ன இவ்விரண்டும் தெரிவிக்கப்படுகின்றன. நடுவிட்டு இரண்டு பத்துக்களாலே எப்போதும் நித்தியமாகவுள்ள இறைவனாகிய உபாயமும் இறைவனருளால் உண்டான ஜீவாத்மாவின் முயற்சியினால் உண்டாக்கத் தக்கதான இறைவனைத் தஞ்சமாகப் பற்றுதலும் தெரிவிக்கப்படுகின்றன.[16]

இவ்வாறு, சீயர் அர்த்த பஞ்சகத்தை அவைவே நிலைநாட்டும் வகையில் தமது உரையை அமைத்துள்ளார்.

மேலும், திருவாய்மொழி, திருமந்திரம், துவயம், சரம சுலோகம் இவற்றை விளக்குவதாகவும் உரைமுடிவில் அவர் பொருத்திக் காட்டுகிறார்.[17]

திருமந்திரத்தின் வாயிலாகச் சொல்லும்போது முதல் நான்கு பத்துககளில் 'ஓம்' என்ற பதத்திலுள்ள மூன்று அக்ஷரங்களான அ,உ,ம என்பதன் பொருள்களைக் காட்டுகிறார். அடுத்த நான்கு பத்துக்களால் நம: பதத்தின் பொருள்களைக் கூறுகிறார் 'நாராயணாய' என்ற பதத்தின் பொருளைக் கடைசி இரண்டு பத்துக்கள் தெரிவிப்பதாகக் குறிப்பிடுகிறார். (பின் இணைப்பு)

துவயத்தின் விளக்கமாகப் பொருத்திக் காட்டும்போது, பிராட்டியோடு கூடியிருக்கும் தன்மை, ஆதாரமாயிருக்கும் தன்மை-இவற்றைத் தெரிவித்து, நாராயணனுடைய நீர்மை, எளிமை, ஞானம், சக்தி முதலான குணங்களைப் பலவிடங்களில் காட்டி, உறுதிப் பொருளான இறைவனுக்குக் கைங்கர்யம் செய்வதால் உண்டான நிறைவும் சொல்லிச் சரணாகதியின் இயல்பை விவரித்துக் காட்டுவது அறியற்பாலதாகும்.

மேலும், இறைவனை உபாயமாக வரிக்கும்போது எல்லா விரோதிகளையும் போக்குபவனாய், குணத்தோடு கூடியவனாய், ஒப்பற்றவனாய் இருப்பான் என்று தெரிவித்து, உபாயத்தின் செயலான எல்லா விரோதிகளைப் போக்குகையும், விருப்பத்தைக் கொடுப்பதனால் உண்டான பேறு தனக்கேயாக இருக்கும் என்பதையும் இந்தத் திருவாய்மொழி தெரிவிக்கையாலே சரம சுலோகத்தின் பொருளையும் விவரிப்பதாக அமைந்துள்ளதெனக் கூறுவர் சீயர்.

இவற்றைக் காணும்போது நம்பிள்ளையும், வேதாந்த தேசிகரும் திருவாய்மொழிக்கு வழங்கிய உரைகளில் சிறிது வேறுபாடு காண முடிகிறது. அர்த்த பஞ்சகத்தை விளக்கு வதாகத் திருவாய்மொழி அமைந்துள்ளதை ஆங்காங்கே பதிகங் களின் பாடல்களைக் கொண்டு பொருத்திக் காட்டுவர் நம் பிள்ளை.[18] மேலும், துவயத்தில் விவரணமாகவே பத்துப் பத்துக் களையும் காட்டுகிறார்.[19] வேறொரு வகையாகக் காட்டும்போது, திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்களின் சுருக்கம் முதல் பதிகம் என்றும், முதல் பதிகத்தின் சுருக்கம் முதல் மூன்று பாசுரங்கள் என்றும், முதல் மூன்று பாசுரங்களின் சுருக்கம் முதல் பாசுரம் என்றும், அதன் சுருக்கம் முதலடி என்றும் கூறுவர்.[20] பத்துப் பத்துக்களின் ஆழ்பொருளைத் துவயத்தின் விளக்கமாகவே முதல் பத்தின் முடிவில் நம்பிள்ளை காட்டியுள்ளார்.[21]

வேதாந்த தேசிகர் திரமிடோபநிஷத் சாரம் என்றும் நூலில் துவயத்தின் விவரணமாகவே திருவாய்மொழியின் பத்துப் பத்துக் களும் அமைந்துள்ளதைக் காட்டுகிறார்.[22]

எனவே, சீயர் அர்த்த பஞ்சக விளக்கமாகப் பத்துப் பத்துக் களை அமைத்துக்கொண்டு உரை வழங்கி, முடிவில் துவயத்தின் விளக்கமாகவும், சரம சுலோகத்தின் விரிவாகவும் அது அமை வதைக் காட்டுவதும் குறிப்பிடத்தக்கது.

## 5.4. இறைநிலை

அர்த்த பஞ்சகத்தில் இறைநிலை முதலாவதாக அமைந் துள்ளது. இறைநிலை இரு பிரிவாக அமைந்துள்ளது. ஒன்று, மிகவுயர்ந்த—அடிமை கொள்ளும் தலைவனான இறைவனுடைய காத்தற்றன்மை. மற்றொன்று, அவனுடைய அநுபவிக்கத்தக்க இனிமை. இவ்விரண்டினைச் சீயர் முறையே முதலிரண்டு பத்துக் களின் கருத்தாகக் காட்டுகிறார்.[23]

இதில், இறைவனின் காத்தற்றன்மைக்கு வேண்டிய பத்துக் குணங்களைத் திருவாய்மொழி முதல் பத்தின் பத்துப் பதிகங்களின் திரண்ட கருத்தாகக் காட்டி, காத்தற்றன்மையாலுண்டான இறைவனின் உபாயமாம் தன்மையை வெளியிடுகிறார்.[24]

1. யாவரினும் மேம்பட்ட தன்மை (ஸர்வஸ்மாத்பரத்வம்)
2. யாவராலும் பற்றப்படும் தன்மை (ஸர்வஸமாச்ரயணீயத்வம்)
3. அதற்குத் தக்க அவதாரம் செய்து கண்ணுக்கிலக்காய் நிற்குந் தன்மை (ததநுகுணமான ஸௌலப்யம்)
4. தன்னை யடைந்தவர்களின் குற்றங்களைப் பொறுக்குந் தன்மை (ஆச்ரிதாபராதஸஹத்வம்)
5. தன் பெருமை பாராமல் புரையறக் கலக்கும் நீர்மை (ஸௌசீல்யாதிசயம்)
6. ஆராதனைக் கெளியனாம் தன்மை (ஸ்வாராததை)
7. அவனைப் பற்றுவதிலுள்ள மிக்க இனிமை (ஆச்ரயணத்தில் அத்யந்த ஸாரஸ்யம்)
8. பற்றுபவர்களிடம் இறைவன் மனமொழி மெய்களால் ஒருபடிப்பட்டிருக்கையாகிற நேர்மை (ஆச்ரிதவிஷயமான ஆர்ஜவ குணம்)
9. பொறுக்கப் பொறுக்கத் தன்னை அநுபவிக்குமாறு செய்யும் தன்மை (ஸாத்ம்யபோக ப்ரதத்வம்)
10. நம்மிடம் எதையும் எதிர்பாராமல் தன்னை நமக்குத் தந்துதவும் தன்மை (நிர்ஹேதுக மஹோபகாரித்வம்).

என்று பத்துக் குணங்களைப் பத்துப் பதிகத்தில் காட்டியுள்ளார்.

இவ்வாறு அமைந்த நூறு பதிகங்களின் திரண்ட ஐம்பொருளைப் பத்துப் பத்துக்களின் தோற்றுவாயில் சீயர் உணர்த்தியுள்ளார். (பின் இணைப்பு 5)

### 5. 4. 1. திருமாலின் அவதாரப் பண்புகள்

முகப்பொருளான அறிவுள்ள பொருள், அறிவில் பொருள், இறை ஆகியவற்றுள் தத்துவ நோக்கில் இறைநிலை ஐந்நிலையாக விளங்குகிறது. அதாவது,

விண்ணாட்டு நிலை (பரத்துவம்)
அணிவகுப்பு நிலை (வியூகம்)
பிறப்பு நிலை (விபவம்)

உள்ளுறை நிலை (அந்தர்யாமித்துவம்)
வழிபடு நிலை (அர்ச்சை)

என்பன.

இவற்றுள், பிறப்பு நிலை பற்றி வருகின்ற இவர் உரை பிற உரைகளினும் சிறந்து இருத்தலால் உரைத்திறன் பற்றிய இவ்வாய் வேட்டில் அப்பிறப்பு நிலை மட்டும் எடுத்துக்காட்டப் பெறுகிறது.

பிறப்பு நிலை என்பது அவதாரம் எனக் கூறப்பெறுகிறது மனிதப் பிறப்புக்கும் அவதாரத்துக்கும் வேறுபாடு உண்டு. அவதாரத்தை 'இறங்குகை' என்பர். "நல்வினை தீவினைகளுக் கேற்பப் பிறத்தலன்றியே, வினையின் நீங்கி விளங்கிய அறிவனாய், உலக உயிர்களை ஆட்கொள்ளும் பொருட்டும், அல்லது தேய்த்து நல்லது ஆக்கும் பொருட்டும், அருள் உளங்கொண்டு மண்ணுலகில் பிறப்பெடுக்கும் நிலையே அவதாரம்' என்பர்[25] அவதாரங்கள் அனைத்தும் இறைவனுக்குப் பெருமை தருவதாகையால் விபவங்கள் எனப்படுகின்றன.[26]

ஆழ்வாரின் உள்ளக் கிடக்கையை யறிந்த சியர் திருவாய் மொழியில் இடம்பெற்ற அவதாரச் சிறப்பைத் தமக்கு வாய்க்கும் இடங்களில் எல்லாம் பாடலுக்கேற்ப விளக்கிச் செல்கின்றார்.[27]

இவற்றுள் உலகைக் காப்பதற்காகவும் வேதத்தை விளங்கச் செய்யவும் குதிரை முகங்கொண்ட ஹயக்கிரீவனாரையும், புராணங்களைப் பரப்ப மீனோடு ஆமையுமாயும், கீதையை உபதேசம் செய்யக் கண்ணனாயும் மற்றும் பல அவதாரங்கள் செய்தான். (1.8.8.) இவற்றுள் பத்து அவதாரங்கள் தலைசிறந்தன.

திருவாய்மொழியில் இவ்விபவ அவதாரங்கள் பல காணப் பெறினும், ஆழ்வாருக்குத் திரிவிக்கிரம, கிருஷ்ணாவதாரங்களில் மிகுந்த ஈடுபாடு காண முடிகிறது. சியர் உரைகொண்டு ஆழ்வார் அநுபவித்த பிறப்பு நிலைகள் சிலவற்றையும் அப்பிறப்பு நிலையின் பண்புகளையும் அறிய முடிகிறது.

இத்தகைய பிறப்பு நிலைகளிலும் இறைவன் நற்பண்புகளால் ஒளி மிகுதியுடையவனாகிறான். இந்நற்பண்புகள் அடியார்கள் இறைவனைப் பற்றுவதற்கு உதவிசெய்யக் கூடியன என்றும் பற்றுவார்க்குக் காரியத்தைச் செய்யக் கூடியன என்றும் இருதரத்தன. அதாவது,

தாயன்பு (வாத்ஸல்யம்)
தலைவனாம் தன்மை (சுவாமித்வம்)
நீர்மை (ஸௌசீல்யம்)
எளிவந்த தன்மை (ஸௌலப்யம்)

என்ற நான்கும், பின்வாங்காமல் இறைவனைப் பற்றுவதற்கும் அவ்வாறு பற்றின நம்மை அவன் நீக்காமல் கைக்கொள்ளுவதற்கு முரிய இறைவனுடைய நற்பண்புகளாகும் ஞானம், சக்தி, பிராப்தி, பூர்த்தி (நிறைவு) என நான்கும், பற்றிய நமது காரியம் செய்தற்குரிய அவனது நற்பண்புகளாகும் என்று சொல்லப்படு கின்றன.[28]

தாயன்பாவது, அன்றீன்ற தன் கன்றினது உடம்பின் வழுவை விரும்பி அநுபவிக்கும் பசுவைப் போலே அடியாருடைய குற்றங்களை இனிமையாகக் கொள்வதொரு குணமாகும்.

தலைவனாம் தன்மையாவது, சேதனன் பாராமுகமான நிலையிலும் விடாதேநின்று உருக்குலையாமல் நோக்கிக்கொண்டு வருகைக்குக் காரணமான ஒருவிதமான சம்பந்தம்.

நீர்மையாவது, மிகப் பெரியவன் மிகத் தாழ்ந்தவனோடு புரையறக் கலக்கும் தன்மை. இதனை, ஏற்றுத்தாழ்வில்லாமல் எல்லாரோடும் கலக்கும் நீர்மை' என்பர் சீயர்.[29]

எளிவந்த தன்மையாவது, கண்ணால் காணமுடியாத திரு மேனியைக் கண்ணுக்கு இலக்காம்படி பண்ணுகை.

ஞானமாவது, தன்னைப் பற்றியவனுடைய விரோதியான பாபம் இன்னதென்றும், விருப்பம் இன்னதென்றும் தெரிந்து கொள்ளுவதாகும்.

சக்தியாவது, அறிந்தபடியே விரோதியைப் போக்கி விரும்பி யதை நிறைவேற்றி வைக்கும் ஆற்றலாகும்.

பிராப்தியாவது பற்றியவனை ஏற்றுக் கொண்டால் உண்டாகும் பயன் தன்னுடையதே என்கைக்கு உறுப்பான தோர் உறவு (இதுவே சேஷித்வம்).

பூர்த்தியாவது இவனுக்குக் காரியம் செய்யும்போது இவனிடம் கைம்மாறாக ஒன்றையும் எதிர்பாராமலிருக்கைக்கு உறுப்பான நிறைவாகும்.

'நேர்மையாவது (ஆர்ஜவகுணம்) குற்றமற்ற நித்யசூரிகளைப் போலே இன்று பற்றுகிற எல்லா அடியாருடைய மண்ணுலக உறவு காரணமான செவ்வைக் கேட்டைப் பார்த்துக் குற்றமாக நினையாமல், அவர்கள் செவ்வைக்கேடே செவ்வையாம்படி தன்னை ஒக்கவிட்டுச் சேரும்படி செய்வது' என்பர் சீயர்.[30] இது தன்னையே 'ஒருங்கினவிடத்திலே சென்று பாயும் நீரின் செவ்வைபோலே இருக்கிற தன்மை' என்பர்.[31]

இத்தகைய கல்யாண குணங்களால், 'நற்பண்புகளால் திருமால் அவதார நிலையிலும் ஒளி மிகுதியுடையவனாகிறான்' என்பர் சீயர்.[39]

5. 4. 1. 1. உலகளந்த உத்தமன்

இப்பிறப்பு நிலையில் திருமாலின் தலைவனாம் தன்மை (சேஷித்வம்) வெளிப்பட்டதைச் சீயர் பல இடங்களில் சுட்டிக் காட்டியுள்ளார் அதாவது, இயற்கையாக எல்லோருக்கும் தலைவனாய், அந்தத் தலைவனாம் தன்மையை நிறைவேற்றுவதற்காக எல்லா உலகோடும் உயர்வுதாழ்வு பாராமல் செறிந்த திருவடிகளை வைத்ததாகும். 1.8 10).

மேலும், பிறப்பு நிலைமையிலுண்டான மேன்மைத் தன்மை (பரத்துவம்) உலகளந்தபோது மிகவும் சிறப்பாக வெளியிட்டதாகவும், விரோதியைப் போக்கிப் பூமியைப் பிறர்க்கு உரிமையாக்காது தனக்காக்கிலைபடியைத் தெரிவித்ததும் இவ்வவதாரம் என்று கூறுவர் (2 8.6, 3.8 2).

பூமியைப் பிறர்க்காகாதபடி தனக்காக்கிக் கொண்ட வீர சரிதத்தின் சிறப்புத் தோற்ற வீரக்கழல்கள் உலகளந்த திருவடிக்கு இடப்பட்டதாக அவர் கூறுவர்; உலகைப் பிறர்க்கு உரிமையாகாதபடி தனக்காக்கிக் கொண்டதால் தலைமைத் தன்மை வெளிப்பட்டது என்பர். (4 37).

'கடியன் கொடியன்' என்ற 5.3.5 பாடலில், 'உலகமெல்லாம் தனக்கேயாம்படி எதிர்த்தலைக்கு ஒன்றும் ஒட்டாமல் காற்கடைக் கொண்ட வஞ்சகன்' என்பர். 'அடியார் திறத்துமையலைத் தெரிவிப்பதற்குக் காரணமாகப் பூமியை வேறொருவர் பற்று வையாதபடி அளந்து தனக்காக்கிக் கொண்டதால் ஆழ்வாருக்கு அநுபவிக்கத் தக்கவனானான்' என்பர். (6.6.9)

'அழகு அமைந்த வடிவுடையவனாய் அத்தாலே விருப்பத்தைத் தலைக்கட்டும் பொருட்டு மகாபலியை வஞ்சித்த வாமனன் என்பர். (6.6.9.) 'மண்ணும் விண்ணும் கொண்ட மாயவம்மானே' (6.9.2) என்ற இடத்தில் 'மகாபலிக்குத் தன் அழகைக் காட்டி எல்லா உலகையும் தனக்காக்கிக் கொண்ட வியப்பான ஆற்றலுடையவன்' என்பர்.

வாமனனின் தன்மையைக் கூறும்போது, 'தன் வடிவை அழிய மாறினவளவன்றியே அத்தோடே ஆத்ம குணத்தையும் அழிய மாறின இரப்பாளனாம் தன்மையன்' என்பர். (7. 5. 6)

'வாமனனின் வடிவு, நடை, சொல் ஆகியவை மகாபலியை நெஞ்சு மயங்கும்படி செய்தது' என்பர். திருமாலின் தலைமை யாம் தன்மையைத் திருவிக்கிரம அவதாரத்தில் காட்டும்போது 'நாம் மூன்று உலகுக்கும் தலைவன்' என்று மயங்கி இருந்த மகாபலியின் மயக்கத்தைத் தீர்த்துப் பூமியைப் பிறர்க்கு உரிய தல்லாது தனக்காக்கிக் கொண்ட தலைவனாம் இறைவன். (9.8.7). 'திரிவிக்கிரமன் எல்லா உயிர்களையும் உயிரற்றவை யையும் அணைந்த தன்மையன்' என்பர் (10 1.5). இவ்வாறு திரிவிக்கிரமன் பண்புகளைத் தொகுப்பாகச் சீயர் உரையிலிருந்து காண முடிகிறது.

ஆழ்வார் சில பதிகங்களின் முடிவுப் பாடலில் திரிவிக்கிர மனைப் பற்றியும் வாமனனைப் பற்றியும் ஈடுபட்டு அப் பதிகத்தின் பயனை உரைப்பர். இவை சிறுபான்மை வந்துள்ளன. அவற்றை உரைகொண்டு நோக்கும்போது இவ்வவ தாரத்தின் தன்மைகள் காணப்படுகின்றன.

'திண்ணன் வீட்டில்' (2.2.11) பயனுரைக்கும் பாடலில் 'ஏத்த ஏழுலகும் கொண்ட கோலக் கூத்தன்' என்று திரிவிக் கிரமனின் தன்மையைக் கூறுவர். அதாவது 'உலகோர் ஏத்து கிறதையே விளைநீராகக் கொண்டு எல்லா உலகையும் அளந்து வடிவழகையும், வல்லாராடினாற் போலே அளந்து அயர்வில்லா தவன்' என்பர் சீயர்.

இவ்விடத்தில் திருமாலை ஆழ்வார் 'கூத்தன்' என்று அழைத்து, அக்கூத்து வல்லாராடினாற் போலே இருந்தது என்று சீயர் உரையிடுவது குறிப்பிடத்தக்கது.

வாமனனாய் வந்ததைக் கூறும்போது 'வாட்டமில் புகழ் வாமனன்' (2.4.11) என்றார் ஆழ்வார். இதற்கு உரையிட்ட சீயர் நோக்கு வாடாதபடி தன் குறைவு தோன்ற இரப்பாளனாய் 'வந்து முகம் காட்டினபடியாலே வாட்டமில்லாத குணப் பெருமையை உடையவனான வாமனன்' என்பர்.

திரிவிக்கிரமன் பூமியை அளந்தபோது படிக்களவாக (பூமியின் அளவினதாக) அழகிய திருவடிகளைப் பரப்பி அளந் தான் என்று உரைப்பர் சீயர். (3.3.11)

திரிவிக்கிரமன் எல்லாரும் கொண்டாடும்படியான குணங் களையுடையவனாய் இருந்தான் என்பதைப் 'புலம்புசீர்ப் பூமி யளந்த பெருமான்' (3. 8. 11) என்ற சொல்லாட்சியால் உரைப்பர் சீயர்.

வாமனனாயிருந்த இருப்பைக் கூறும்போது அவன் திருப்புரி நூலானது (பூணூல்) ஒளியை உடைத்தாய் அவன் திருமேனிக்கும் பிராமணத் தன்மைக்கும் சேர்ந்ததாய் இருந்ததாம். அவன் உலகை அளந்தபோது 'கொடுக்கிறவனான மகாபலியோடு நாட்டாரோடு வாசியற இசையும்படி கொடிய வஞ்சனத்தையுடையவனாயிருந்தான்' என்றும் கூறுவர் சீயர். (6.1.11).

திரிவிக்கிரமன உலகை யளந்தபோது 'உலகத்தாரைக் காணுங்கோள்' என்று சொல்லி ஒன்றுக்கொன்று வேறுபட்டவர்கள் கண்ணெதிரே திருவடிகள் வளர்ந்ததைக் 'காண்மின் களுலகிரென்று கண்முகப்பே நிமிர்ந்த தாளிணையன்' (6.3.11) என்ற இடத்தில் கூறுகிறார்.

## 5.4.1.2. கண்ணபிரான்

'பிரான்' என்ற சொல் 'பெருமான்', 'உதவி செய்பவன்' என்ற இரு பொருளிலும் வந்து, அது இப்பிறப்பு நிலையிலும் பொருந்துவதால் கண்ணபிரான் என்று தலைப்பிட்டது நினைத்தற்பாலதாகும்.

ஆழ்வார்கள் எல்லோரும் கிருஷ்ணாவதாரம் என்றவாறே மிகவும் மண்டியிருப்பார்கள். 'பிறந்தவாறும்' பதிகத்தில் ஆழ்வார் கண்ணன் பிறந்திருந்தபோது தாம் பிறக்காத குறைதீர அவன் பிறப்பு, வளர்ப்பு, திருவிளையாடல்கள் ஆகியவற்றில் மிகவும் ஈடுபட்டு, அதன் விளைவாக மோகித்து ஆறு மாதம் இருந்ததாகக் கூறுவர் நம்பிள்ளை. (5.10 அவதாரிகை)

அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் ஆழ்வாரை 'க்ருஷ்ண த்ருஷ்ணா தத்வஜந்மம்' என்பர். (ஆ. இ. சூ. 77) அதாவது 'கண்ணன் திறத்து ஆசையே ஒரு வடிவு கொண்டாற் போலே இருக்கிறது ஆழ்வாருடைய அவதாரம்' என்பர். இத்தகைய சிறப்பான கிருஷ்ணாவதாரத்தில் கண்ணன் உரலினோடு ஏங்கி எளிவந்த தன்மையைக்கண்டு ஓர் ஆறு மாதம் மோகித்தும், மற்றும் அவன் பிறப்பு, வளர்ப்பு ஆகியவற்றை நினைந்து ஆழ்ந்து மற்றோர் ஆறு மாதம் மோகித்திருந்ததாக உரைகள் உணர்த்துவன. (5 10 36 படி அவதாரிகை) ஆக, திருமாலின் பிறப்பு நிலைகளில்கண்ணனாய் அவதரித்தநிலையில் ஆழ்ங்கால்பட்டு அநுபவித்த ஆழ்வாரின் அவா அளவிடற்கரியது. இதனை அறியும் வகையில் இப்பிறப்பு நிலையில் வெளிப்பட்ட பண்புகள் சீயர் உரைகொண்டு அறியமுடிகின்றன.

கண்ணனின் அவதாரச் சிறப்பு, உயிர்களுக்குத் தான் உபாய மாயும் உபேயமாயும் இருத்தலை உலகில் நிலைநிறுத்தவும் பூமியின் பாரத்தைப் போக்கவும் நாகணையை விட்டு வட மதுரையில் பிறந்ததேயாகும். (9. 1. 10).

எப்படி ஒருவருக்கும் தெரியாமல் உறியிலுள்ள வெண்ணை யைக் கண்ணன் திருடினானோ, அப்படியே அடியார்கட்குத் தெரியாமல் அவர்களிடம் பேரன்பு கொண்டு ஆத்மாவைக் கொண்டு போகவல்லவன். இத்தகைய பண்பினை 'உறியமர் வெண்ணெய் உண்டவன்' (2 10. 6) என்ற தொடருக்குச் சேரக் குறிப்பிடுகிறார் சீயர். பாண்டவர்கட்காகப் பாரதப் போரில் துரியோதனாதியரை அழித்த தன்மையை அடியாரின் விரோதியை அழிப்பதென்னும் பண்பாகக் காட்டுகிறார். (3.2 3.) கண்ணன் அடியார் திறத்தில் பட்சபாதம் (ஒருபுடைச் சார்தல் குணம்) நிறைந்தவன் என்பதை 'நீர்மையில் நூற்றுவர் விய ஐவர்க்கு அருள் செய்து' (3. 5. 7) என்ற தொடரின் கருத்தாக உரைப்பர். நீர்மையாவது இங்கு எல்லாவித உறவாயிருந்து ஐவருக்கு உதவியதைக் குறிப்பதாகும். 'அருச்சுனன் பொருட்டுப் பாரதப் போரில் சாரதியாயிருந்து சிரமம் மேற்கொண்டதை நினைத்துக் கண்ணன் அடியார் இட்ட வழக்கனான தன்மையன்' என்பார். (3.6.10) 'வேயகம்பால் வெண்ணெய் தொடுவுண்ட ஆனாயர் தாயவன்' (3.8.3.) என்றவிடத்தில் கண்ணனுக்கு ஆய்ச்சியரிடம் உள்ள பேரன்பாலே அவர்கள் பொருளை விரும்பு மவனாய் இருந்ததாகக் கூறுகிறார்.

கண்ணன் நப்பின்னைப் பிராட்டியைப் பெற ஏழு எருது களைக் கொன்றான்; இராமனாய் அவதரித்துச் சீதை பிராட்டி யைப் பெற இலங்கை சென்று இராவணனை அழித்தான்; மதுரையில் பெண்களுக்குத் தடையான கஞ்சனால் வளர்க்கப் பட்ட குவலயாபீடம் என்னும் யானையை அழித்தான். இவற்றால் தான் பெறுவதற்குத் தடையானவற்றை அழிக்கும் தன்மையன் கண்ணன் என்பதைக் 'கோவை வாயாள்' (4.3.1.) என்ற பாடலில் விளக்குகிறார்.

யசோதை கட்டின தாம்பின் தழும்பை வயிற்றிலே கொண்டு, 'ஓர் இடைச்சி அடிக்கவும் கட்டவுமாம்படி அவர்கள் இட்ட வழக்காய்ச் சொற்படி கேட்கும் தன்மையன் கண்ணன் என்பதைத் 'தாமோதரன்' (4.7.3) என்ற சொல்லுக்குச் சேர உரைப்பர்.

பெரிய உடலோடு அசுரத் தன்மையை ஏறிட்டுக் கண்ணனை நலியத் தம்மில் தம் செறிந்திருந்த மருதுகளின் நடுவே கண்ணன் போய் அவற்றை அழித்து அதனால் அவ்வருகுபட்ட அழகு ஒளிமிக்கதாகப் 'பொல்லா மணியே' (5.1.2) என்ற ஆழ்வார் சொல்லுக்கு விளக்கம் தருகிறார்.

'மாறுசேர் படை நூற்றவர் மங்க ஓர் ஐவர்க்காய்' (5. 7. 4.) என்ற விடத்தில் அடியரான பாண்டவர்களைக் காக்கும் தன்மையன் கண்ணன் என்பதை மொழிக்கிறார் சீயர். புள்ளின் வாய் பிளந்ததாலும், மருதுகள் இரண்டின் நடுவேபோய் அவற்றை அழித்ததாலும், நப்பின்னையின் பொருட்டு ஏழு எருதுகளை அடக்கியதாலும் கண்ணனின் மிக்க ஒளியுடைய தன்மையைக் கருதுவர். (5.7.9)

'காலி மேய்க்க வல்லாய்' (7. 2. 4) என்பதால் 'கண்ணன் பசுக் கூட்டங்களை வயிறு நிறைய மேய்க்கவல்ல ஆற்றலுடைய வன்' என்பது புலனாகிறது.

'இன்று இவ்வாயர் குலத்தை வீடுய்யத் தோன்றிய கரு மாணிக்கச் சுடர்' (6.2.10) என்ற தொடரால் கண்ணனின் காக்குந் தன்மையைக் கூறுவர். இடைக்குலமானது 'தங்கள் குடியோடே உய்யும்படி செய்ய நீல மணியின் ஒளியையுடைய் னாகக் கண்ணன் தோன்றினான்' என்று உரைப்பர்.

கண்ணன் வெண்ணெய் களவு செய்தான் என்ற வார்த்தை கேட்டாள் தாயான யசோதை. அதனால் கண்ணனைக் கோபிக் கிறாள். அதுகண்டு கண்ணன் அழுகிறான். இவ்வாறு அழுவதையே ஒரு கூத்தாகக் கொண்டு ஆழ்வார் 'அழுகூத்த வப்பன்' என்ற பெயரைச் சூட்டுகிறார்'. ஆழ்வாருடைய அக நுகர்ச்சியில் நிகழ்ந்த அவதாரச் செயல்கள் எல்லாம் கூத்துக் களாகவே உருவாயின என்பது நம்பிள்ளையின் கொள்கை. அவ்வாறு நினைத்துப் பார்க்கும்போது உலகளந்த உத்தமனை' 'ஏழுலகுங் கொண்ட கோலக் கூத்தன்' என்பதோடு மட்டு மல்லாமல் கண்ணனைக் குடக்கூத்தன் என்றும் அழைப்பர். இந்த இடத்தில் யசோதைக்கும் கண்ணனுக்கும் நடந்த கூத்து, யசோதையின் சீற்றத்தால் விளைந்த கூத்து. அது கண்ணனை அழச் செய்தது இதனை "அழுகையாகிற கூத்து" என்றே கூறுவர் நம்பிள்ளை. (6. 2. 11. 36 படி). அழுகிற நிலையில் கால்மாறியிட்ட போது வல்லாராடினாற்போல் இருந்ததாக அநுபவிப்பர் பெரியவாச்சான் பிள்ளை (6.2.11, 24 படி). ஆனால் சீயர் 'அழுகூத்த அப்பன்' என்பதற்கு உரையிடும்போது

'அழுது தோப்புக் கண்டமிட்ட கூத்தையுடையவன்' என்று கருதுவர். அதாவது அழுவதோடு நில்லாமல் கைகளால் கழுத்தைக் கட்டிக்கொண்டும் இருந்த இருப்பைப் போலும் கூத்தாக கூறுகிறார் சீயர். (6.2.11, 12 படி).

'மழைக்கு அன்று குன்றமெடுத்து ஆநிரை காத்தான்' (9.4.3) என்ற தொடருக்கு "இந்திரன் கல்மழை வாயிலாகத் துக்கத்தை புண்டாக்கின (அச்மவர்ஷ முகத்தாலே ஆர்த்தியை ஜநிப்பித்த) அன்று 'அந்த மழைக்கு நிவாரணமாம்படி மலையை எடுத்து நீ காக்கவேண்டும்' என்ற விருப்பத்தைப்பண்ணவும் (ரக்ஷாபேக்ஷை பண்ணவும்) அறியாத பசுக்களுடைய திரளைக் காத்தவனே" என்ற பொருள் தருகிறார். இவ்விடத்தில் "அடியார் துன்பமே பற்றாசாகக் கொண்டு அடியார்களைக் காப்பாற்றும் தன் மையன்" என்பதை வெளியிடுவதாக இப்பாடலின் அவதாரிகை யில் விளக்குகிறார்.

'இத்தனை வேண்டுவதன்றந்தோ!' (9.5.2) என்ற பாடலில் வரும் 'கோவிந்தன்' என்ற சொல்லுக்குப் 'பசுக்களையும் காக்கு மவன் (ரக்ஷிக்குமவன்) என்கிற நீர்மையை (ஸௌசீல்யத்தை) வெளிப்படுத்தி (ப்ரகாசிப்பித்து) உலகை வசீகரிக்கும் கண்ணன்' என்று பொருள் வழங்குகிறார்.

ஒவ்வொரு பதிகத்திலும் பயன் உரைக்கும் பதினோராவது பாடலில் ஆழ்வார் திருமாலின் அவதாரங்களையும் அவன் பண்பு களையும் சேர்த்துப் பயன் உரை வழங்குவர். கண்ணனாய்ப் பிறந்த நிலையில் ஈடுபட்ட ஆழ்வார், கண்ணனுக்கே ஆயிரம் பாடல்கள் இயற்றியதாகவும், முதல் பத்தின் நான்காவது திருவாய்மொழியில் கூறுவர். அதாவது 'அளவியன்ற ஏழு உல கத்தவர் பெருமான் கண்ணனை...வாய்ந்துரைத்த ஆயிரம்' (1.4.11) என்ற இடத்தில் கண்ணனின் எளிவந்த தன்மையும், இத்தன்மைக்கு மேலாக மேன்மைத் தன்மைக்குத் தகுதியான அளவற்ற ஏழு உலகத்தை ஆளும் தன்மையும் உடைய கண்ணனை, அவனாலே அவன் விஷயமான அறிவு, பக்தி ஆகிய வற்றைக் கொண்டு கிட்டி ஆயிரம் பாடல்களை அருளிச் செய்த தாக உரைவகுத்தார் சீயர்.

பயனுரைக்கும் பாடல் வரிசையில் முதல் முதல் கண்ண னான பிறப்பு நிலையில் ஆழ்வார் ஆழங்கால்பட்டுப் பயனுரைக் கும் பதிகம் முதல் பத்து நான்காம் திருவாய்மொழியான 'அஞ்சிறைய மடநாராய்' ஆகும். இவ்வாறு கண்ணனைப்

பத்தியதாகப் பயன் உரைத்த பதிகங்களில் கண்ணனுடைய வடிவு, பண்புகள், திருவிளையாடல்கள், மற்றும் அவனே உபாயமாய் அவன் திருவடியையே பற்றினமை ஆகிய கருத்துக் களை வெளிப்படுத்தியுள்ளார்.

### 5. 4. 1. 3. இராமபிரான்

இராமாவதாரத்தைப் பற்றி ஆழ்வார் அநுபவித்த பாடல் களில் சீயர் இராமனின் பண்பு நலன்களைச் சுட்டிய இடங்கள் பல. திருமாலுக்கே உரியதாய், விரோதியை யழிக்கும் தன்மை, அடியாரை நழுவவிடாத தன்மை, அடியாரிடமுள்ள அன்பினால் உதவும் தன்மை முதலான பண்புகள் இராமனுக்கும் பொருந்து வதைச் சீயர் உரை வாயிலாக அறிய முடிகிறது.

'நீள்கடல் சூழிலங்கைக் கோன் தோள்கள் தலைதுணி செய் தான்' (1.6 7) என்ற தொடரால் "இலங்கையை அழித்த தன் மையைக் கொண்டு விரோதியை அழிக்கும் சீலன்" என்றும்' 'தீமுற்றத் தென்னிலங்கை' (2.1.3) என்பதனால் 'விரோதியைப் போக்குமவன் இராமன்' என்றும் உரைப்பர். 'கிளர் வாழ்வு வேவ இலங்கை செற்றீர்' (2.4.10) என்றவிடத்தில் இலங்கையை அழித்ததைக் கூறும்போது, 'மிக்க உயர்த்தியை யுடைத்தாய் மற்றுவர்களை நலியும் வலிமையுடைய (பரபீடாபலமான) இராவணனின் 'செல்வம் தீக்கிரையாம்படி அழியச் செய்தான் இராமன்'. இதனை 'விரோதி மிக்கால் வெந்துவிழப் பண்ணும் வீரப்பாடு' என்று இராமனின் வீரச் சிறப்பைத் தெரிவிக்கிறார்.

இலங்கையைப் பொடிப்பொடி யாக்கினான் இராமன். அதனால் அவன் திருமேனியில் மிகுந்த ஒளியையுடையவனா வான். இதனால் 'இலங்கையை நீறே செய்த நெடுஞ்சுடர்ச் சோதி' (2.9.10) என்றே இராமனைக் கூறுகிறார்.

அடியார்களை நழுவ விடாதவன் இராமன் என்பதைக் காட்டும் வகையில் 'அச்சுதன் தன்னைத் தயரதற்கு மகன்' (3.6.8) என்ற இடத்தில் கூறுவர். இப்படிப்பட்டவனைத் தஞ்சமடைய வேணும் என்பர் ஆழ்வார்.

இராமனுடைய வீரப்பண்பைக் காட்டும்போது, 'மாறுநில் போரரக்கன் மதின் நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகன்' (6.1.10) என்ற பெயரைச் சூட்டுகிறார் அதாவது இராமன் "வேண்டியவர் வேண்டாதவர் என்கிற வேறுபாடு இல்லாமல் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட வலத்தையுடைய அடியாரிடம் பேரன்பு

பொருட்டு விரோதிகளை அழிக்கும் ஆற்றல்'' என்பர். இவ்விடத்தில் இலங்கையை அழித்து உகந்தான் என்கிறார். இங்கு உகப்பாவது விபீடணனுக்குச் செய்நன்றி செய்தமையை எண்ணி உகந்ததாக, 'க்ருதக்ருத்யர்' என்ற உரைப்பொருள் மூலம் அறியப்படுகிறது. இதற்குக் காரணம் இராமனுக்கு அடியார் திறத்து (விபீடணன்கண்) உள்ள பேரன்பு என்பதைப் புலப்படுத்தும் வகையில் சீயர் இப்பண்பினைக் கூறுகிறார்.

இராமனின் எளிவந்த தன்மையைக் கூறும்போது, 'காகுத்தா' (7.2 3) என்ற சொல்லில் ''ஆடவர்கள் கண்களையும் மனத்தையும் கவருமவனாயும், முனிவரும் காட்டில் காணும் படியாயும், இப்படி நாடோடு, காடோடு வாசியறத் தன்னைக் காண்பித்தவன்'' என்று கண்டு பற்றியமையைக் கூறுவது சாலப் பொருத்தமாகும்.

'பேரெயில்சூழ்...செற்ற பிரான்' (7.3 7.) என்ற தொடரால், 'பிராட்டியான சீதையைப் பெறுவதற்குக் கொடிய தடையான இலங்கையை அழியச் செய்தவன்' என்பர்.

இராமன் இயற்கையான வேறொரு காரணமில்லாத உறவுடையவன் என்பதை 'நாரணற்கு' (7.5.2) என்ற பொதுப் பெயரை இராமனுக்கு இட்டு இத்தன்மையை விளங்கச் செய்கிறார்.

'கற்பார் இராமபிரானை யல்லால் மற்றும் கற்பரோ' (7.5.1) என்று ஆழ்வார் இராமனிடம் ஆழங்கால்பட்டு அவனே வீடு பேற்றைக் கொடுக்கும் தன்மையன் என்பதை அந்தப் பாடலின் இறுதியடியான 'நற்பாலுக் குய்த்தனன்' என்றவிடத்தில் 'பால்' என்பதைப் பிறரெல்லாம் தன்மைப் பொருளில் குறிப்பிட, சீயர் இடப் பொருளில் கொண்டு 'பரமபதத்தை அளிக்கவல்லவன்' என்று வழங்கியது நோக்கத்தக்கது.

விரோதியைப் போக்குவதில் வல்லவன் இராமன் ஒருவனே யல்லாமல், அங்ஙனம் வல்லமை பெற்ற அவன் வில்லின் பெருமையையும் 'காயும் கடுஞ்சிலை' (5.4.3) என்று கூறுவர். அதாவது, அடியாரின் விரோதிகளைச் சுட்டுப் பொசுடுவதான விரைவான வில். இதனை ஏந்தியவன் இராமன். இவன் பிறந்த குடியும் பரோபகார சீலமான குடி என்றும் கூறுவர். இதனைக் 'காகுத்தன்' என்ற சொல்லாட்சி மூலம் உரைப்பர்.

இராம பட்டாபிஷேகத்தைக் காட்டும் ஒரே இடத்தில், 'உண்டும் உமிழ்ந்தும்...கொண்ட கோலத்தொடு வீற்றிருந்தும்' (4.6.10) என்ற தொடரால் இராவணவதம் செய்த பிறகு தேவர்

கட்குக் காட்சி கொடுத்து நின்றும், மீண்டுவந்து திருவபிஷேகம் பண்ணின திருக்கோலத்தோடே எழுந்தருளி இருந்தும், தின மும் திருவிழா ஆம்படி உலகத்தாரோடு கலந்து அரசாட்சி செய் தமையும் காட்டி அருளுகிறார்.

### 5.4.1.4. நரசிம்மன்

(1) திருமாலின் பண்புகளான புரையறக் கலத்தல், தாயன்பு முதலானவை வெளிப்பட்ட பிறப்பு நிலைகளுள் நரசிம்மாவ தாரமும் ஒன்றாகும். அவனுடைய 'ஆச்ரித ஸௌசீல்யாதிசயம் அபரிச்சேத்யம்' என்பர் அதாவது அடியாரிடம் புரையறக் கலக்கும் தன்மை அளவிடற்கரியதாகும். 'எங்கும் உளன் கண்ணன்' (2 8.9) என்ற பாடலில் பிரகலாதன் வாயால் திருமால் எல்லாவற்றிலும் உள்ளும் புறமும் பரந்து உள்ள தன்மையையும், அப்படிப்பட்டவன் கண்போன்று எல்லாவற்றுக்கும் நிர்வாகனாக எங்கும் உள்ளவன் என்ற தன்மையையும் வழங்குவர். மேலும் இப்பாடலில் 'அவன் வியத் தோன்றிய என் சிங்கப்பிரான் பெருமை' என்ற தொடருக்குச் சேர அடியார் திறத்து உள்ள அவனது ஓரத் தன்மையின் பெருமையை உரைப்பர். இதனை 'ஆச்ரிதபக்ஷபாத மஹாத்ம்யம்' என்று கூறுவர் சீயர்.

(2) இரணியன் திறத்துச் சீற்றத்தால் நரசிம்மமாய் வந்த திருமாலின் கண் சிவந்ததையும், தன்திறத்து அருளைப் பெற்ற பிரகலாதனைத் தன் திருவடிக்கீழ் ஒதுங்கும்படி அவனுக்கு எளியனாய் இருந்த இருப்பைக் கொண்டு எல்லையற்ற தாயன்பு வெளிப்பட்டதையும் 'சீற்றத்தோடு அருள்பெற்றவன் அடிக்கீழ்ப் புகநின்ற செங்கண்மால்' (3.6.6) என்ற தொடரோடு பொருத்திக் காட்டுவர்.

(3) நரசிம்மனின் வடிவானது உயர்ந்த நீலமணி ஒளிபோலே பளபளப்பாய்த் தனக்கே உரிய திருமேனி ஒளியோடு இருந்த தாம். இதனைப் பிரகலாதன் பொருட்டு அழியமாறி வளர்ந்த ஒளியால் நிறைந்த சிங்க வடிவாய் விரோதியான இரணியனை அழிக்க முயன்று தூணில் தோன்றினன் இரணியனின் பரந்த மார்பை எளிதில் கிழித்தான். இவ்வாறு அடியாரின் விரோதி யைப் போக்கினது குறித்து நரசிம்மன் உகந்தானாம். இதனைக் 'கிளரொளியால் குறைவில்லா அரியுருவாய்க் கிளர்ந்தெழுந்து கிளரொளிய இரணியனது அகல்மார்பம் கிழித்துகந்த' (4 8.7) என்ற தொடருக்குப் பொருளாகக் கூறுகிறார். இதனால், அடியார் பொருட்டுத் தன் வடிவை அழிய மாறி உதவும் தன்மை யும் அதனால் தான் அடைந்த உகப்பும் கூறப்பட்டன.

(4) அடியார்க்கு உதவுவதன் பொருட்டு ஒன்றின் தலையும் ஒன்றின் உடலுமாய்க் காட்டிய நரசிம்ம வடிவுடையவன் பெருமைக்குச் சான்றாக, 'செல்ல வுணர்ந்தவர் செல்வன்தன் சீரன்றிக் கற்பரோ' (7.5 8) என்ற பாடலின் பொருளாகக் கூறுவர்.

(5) இரணியன் மார்பை வளைந்த உகிராலே பிளந்தவனை 'ப்ரபலாநிஷ்டபஞ்ஜநன்' (9.3.7) என்று கூறுகிறார். அதாவது 'மிக்க வலியுடைய விரோதியைக் கொன்றவன்' என்பதாகும். 'செம்பொனாகத்து அவுணனுடல் கீண்டவன்' (9.10 6) என்ற இடத்தில் ''பிரகலாதனுடைய இறை அநுபவத்திற்கு விரோதியான இரணியன் உடலைப் பிளந்தவன் நரசிம்மன்'' என்று பொருள் தருகிறார்.

(6) இரணியன் இறைவனிடம் பக்தி இல்லாதிருந்தான். அது மாத்திரமன்றியே பகைமையும் நிறைந்தவனாம்படி வலிய நெஞ்சை உடையவனாய் இருந்தான். இப்படி இருந்தவன் நெஞ்சை, நோய் தின்றவிடம் குட்டமிட்டுப் பரிகாரம் செய்வது போல நரசிம்மன் பிளந்தான். இதனை 'வன்நெஞ்சத்திரணியனை மார்விடந்த' (10.6.4) என்ற இடத்தில் கூறியது காணலாம். இவ்வாறு செய்தது அடியனான பிரகலாதன் திறத்துள்ள ஓரத் தன்மை என்று கருதுவர்.

(7) 'உன்னைச் சிந்தையினால் இகழ்ந்த இரணியன கல்மார்வம் கீண்ட என் முன்னைக் கோளரியே' (2. 6. 6) என்று வகுத்த தலைவனும் உரியனுமான திருமால், தன் நெஞ்சாலே இகழ்ந்த இரணியனின் மார்பைக் கீண்டெடுக்க, அடியனான பிரகலாதன் நினைவுக்கு முன்பே யோசித்தானாக நரசிம்மனின் அவதார இயல்பைக் கூறுகிறார் சீயர். மேலும் இவ்வவதாரத்தில் வெளிப்பட்ட பண்புகளான, ஆபத்தில் உதவும் தன்மை, வகுத்த தலைவனாம் தன்மை, அநுபவிப்பிக்கும் தன்மை ஆகியன ஒருங்கே அமைந்த இருப்பை ஆழ்வார் அநுபவிப்பதாகவும் சீயர் 'உன்னை' என்ற இடத்தில் சொல் வருவித்துப் பொருள் தருகிறார்.

(8) அடியார் திறந்துள்ள மையல் தன்மைக்குச் சான்றாக 'கடுத்த போரவுணனுடல் இருபிளவாக் கையுகிராண்ட எம்கடலே, (8. 1. 3) என்ற இடத்தில், 'யுத்தம் செய்யவேண்டும் என்ற நினைவு விஞ்சியிருக்கிற இரணியனுடைய உடல் இருபிளவாக, கையில் உகிரைக் கருவியாகக் கொண்டு 'அழித்தான்' என்று

பொருள் தருவர். இது அவனுடைய அடியார் திறத்து மையலை உண்டு பண்ணியதாகும் என்பர் சீயர்.

(9) உகந்தே புனையுள்ளு மென்னுள்ளத்து அகம்பால்
அகந்தான் அமர்ந்தே யிடங்கொண்ட அமலா
மிகுந்தான வன்மார் வகலம் இருகூறா
நகந்தாய் நரசிங் கமதாய வுருவே (9.2.7)

என்ற பாடலில் 'அகவாயிலே பொருந்தி இடங்கொண்டு அது தானே பயனாக இருந்த ஒளியுடையனாயும், இரணியனுடலம் இரு கூறாம்படி நகத்தைத் தாவும்படி பண்ணியவனாயும் அமைந்தது நரசிம்ம வடிவு' என்பர். இதனால் விரோதியை யழிக்கும் நீர்மை வெளிப்பட்டது.

(10) பெரியவர்கள், எதிர்த்தலையில் சிறுமை பாராமல் தம் தரத்தின் தன்மை கொண்டு உதவுவதாக, 'அரியாகி இரணியனை ஆகங் கீண்டான்' (10.6.10) என்ற இடத்தில் பொருள் தருகிறார்.

இவ்வாறு உலகளந்த உத்தமன், கண்ணன், இராமன், நரசிம்மன் முதலானோரது அவதாரப் பண்புகள் சீயர் உரையில் சிறப்பாக வெளிப்படுகின்றன.

5.5. திருமாலுக்குப் பரநிலையில் அமைந்த நாராயணன் முதலான பெயர்களோடு அவதார நிலையில் அமைந்த சிறப்புப் பெயர்கள் பல; அவை ஒவ்வொன்றிற்கும் சீயர் காரணம் காட்டும் நெறியில் சிறப்பாக உரை வரைந்திருத்தல் காணத்தக்கது.

### 5.5.1. நாராயணன்

திருமாலின் திருநாமங்கள் பல. அவற்றுள் நாராயணன் என்பதும் முக்கியமானது. நாராயண நாமச் சிறப்பைக் கூறும் போது, "நாராயண சப்தத்தில் அடங்கியுள்ள பல பொருள்களுள் இரண்டொன்றைக் கொண்டிருக்கும் கோவிந்த நாமம் ஒன்றே துரோபதைக்கு ஆபத்தில் உதவியது என்றால் நாராயண பதத்தின் பெருமை சொல்லமுடியாது" என்ற மாமுனிகள் கூறுவது நினைதற்பாலதாகும்.[33]

திருமந்திரத்தில் சொல்லப்படும் திருநாமமான நாராயண என்னும் சொல் திருவாய்மொழியில் வந்த இடங்கள்தோறும் சீயர் நாராயண பதத்தில் அடங்கிய பொருள்களான இறை குணங்கள், தலைவனாம் தன்மை, உள்ளுறை நிலை, வீடு பேற்றுக்கு உபாயமாம் தன்மை ஆகியவை யெல்லாம் கிடைக்கப் பெறும்படி ஆங்காங்கே உரைவழங்கியதும் குறிப்பிடத்தக்கது.

5.5.1.1. உள்ளுறைநிலை

"ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள் நின்ற
நன்றெழில் நாரணன்" (1.3.7)

என்ற பாடலில் நாரணன் என்பதற்கு உபநிடதக் கூறான நாராயண—அநுவாகாதிகளுக்கு உரியனாய் எல்லா அறிவற்ற அறிவுள்ள பொருள்களுக்கும் உள்ளுளனாக நாராயணன் இருப்பதைத் தெரிவிக்கிறார். இவ்வுள்ளுறை நிலையில் அவன் நன்றெழிலாயிருக்கிறானாம். எழிலாவது—'பாபம், முதுமை, சாவு, சோகம், பசி, தாகம் முதலானவை இல்லாதவனாயும் உண்மையான கல்யாண குணங்களை உடையவனாயும் சத்தியசங்கல்பனாயும் விளங்கும் பெருமை' என்பர். அப்படிப்பட்டவன் ஓர் ஆத்மாவின் நிலைபேறு என்றும், பல ஆத்மாக்களின் நிலைபேறு என்றும், ஒருவன் முக்கியமானவன் என்றும், தனித்தனியே முக்கியர் என்றும் அறிய முடியாத வடிவுக்குள்ளே இருக்கும் இறைநிலையாகும்.

5.5.1.2. காத்தற்றன்மை

'நல்கித்தான் காத்தளிக்கும்' (1.4.5) என்ற பாடலில் 'நாரணனை' என்பதற்கு 'எல்லாரைக் காக்கும் தன்மைக்கு இன்றியமையாத உறவுடையவன் நாராயணன்' என்று பொருள் தருகிறார்.

5.5.1.3 வேறொரு காரணமின்றி இயற்கையான தலைவன்

'ஒரு நாயகமாய்' (4.1.1) என்ற பாடலில் 'திருநாரணன் தாள்' என்றவிடத்திலுள்ள 'திரு' என்பதற்கு 'நித்யஸ்ரீயாய்' என்றும், 'நாரணன்' என்பதற்கு 'இயற்கையான தலைவனான நாராயணன்' என்றும் உரை வழங்குகிறார்.

5.5.1.4. தாயன்பு (வாத்ஸல்யம்)

'தெய்வ நாயகன் நாரணன்' (5.7.11) என்ற பாடலில் 'நாரணன்' என்பதற்கு "வேறொரு காரணமின்றி இயற்கையான உறவோடு கூடிய தாயன்பு உடையவன்" என்று பொருள் தருகிறார்.

5.5.1.5. ஒரு பாடலில் 'செல்வ நாரணன்' என்ற சொல் கேட்டலும், (1. 10. 8) என்ற இடத்தில் ஸ்ரீமந் நாராயணன் என்று பிராட்டியோடு கூடிய நாராயணனைக் கூறுகிறார். "லக்ஷ்மி ஸம்பந்த மொழிய பிரமசாரி எம்பெருமானைப் பற்று

வார் இல்லாமையாலே செல்வ நாரணன் என்றதாகப் பெரிய வாச்சான் பிள்ளை அருளுவது நினைத்தற் பாலதாகும் (1.10.8, 24படி).

5.5 1 6. 'வாட்டாற்றானடி வணங்கி' (10.6.2) என்ற பாடலில் 'நாரணனை நண்ணினமே' என்பதற்கு "வேறொரு காரணமின்றி இயற்கையான உறவுடையனாய்க் கொண்டு இன்று வீடு பேற்றைக் கொடுப்பதற்குக் காரணமான நாராயணன்" என்று பொருள் வழங்குவர்.

5.5.1.7. 'நண்ணினம் நாராயணனை', (10 6.3) என்ற அடுத்த பாடலில் 'நாராயணனை' என்பதற்கு மேன்மை, நீர்மை, அழகு முதலானவற்றைத் தெரிவிக்கும் திருநாமங்களுக்குப் பிறப்பிடமான நாராயண நாமம் இயற்கையான உறவைத் தெரிவிப்பதாகக் கூறுகிறார்.

5.5.1.8 நாராயணனான தன்மையில் நிறைவு

'கோவாகிய மாவலியை' (9.8 7) என்ற பாடலில் 'நாரண நம்பீ' என்ற இடத்தில் எல்லாக் குணங்கள், விபூதி ஆகிய வற்றோடு கூடிய தன்மையால் வந்த நாரணனாம் தன்மையின் நிறைவைத் தெரிவிக்கிறார்.

5.5.1.9. நாரணன் என்றசொல் இராமாவதாரத்திலும் குறிக்கப் பெற்றுள்ளது. இதனை 'நாட்டில் பிறந்தவர்' (7 5.2) என்ற பாடலில் 'நாரணற்கு' என்ற சொல்லுக்குப் பிரமன் வாயினால் இராமனை 'நாரணனாகிற பெருமாள்' என்று இயற்கையான உறவைக் காட்டிச் சொன்னதைக் கொண்டு அவதாரத்திலும் நாராயண நாமச் சிறப்பு தோற்றுகிறது.

5.5.1.10. "நாரண னெம்மான், பாரணங் காளன்
'வாரணந் தொலைத்த' காரணன் தானே" (10.5.2)

என்ற பாடலில் நாராயண திருநாமத்துக்குப் பொருளாக 'மண்ணாட்டை நிர்வகிப்பானாய், பூமிப் பிராட்டிக்கு வல்லபனாகையாலே விண்ணாட்டை ஆள்பவனாய், விரோதியான குவலயாபீடம் என்னும் யானையை அழித்தவனாய் உலகுக்குக் காரணமான கண்ணன் என்பர்.

5.5.1.11 'ஒன்றிய திங்களைக் காட்டி' (4.4.4.) என்ற பாடலில் நாரணன் என்பதற்கு நார சப்தவாச்யமான அப்புக்களையுடைய நாராயணன்' என்று பொருள் தருகிறார்.

### 5.5.2. கோவிந்தன்

கண்ணனாய் அவதரித்து அடியார்களை ஆட்கொண்ட திருமால் கிருஷ்ணாவதாரத்தில் பல திருவிளையாடல்களைச் செய்து பல திருநாமங்களைப் பெற்றான். அவற்றுள் முக்கிய மானது கோவிந்தன் என்னும் திருநாமமாகும். ஈயர் உரை மூலம் அத்திருநாமச் சிறப்பையும் பெயர்க் காரணத்தையும் அறிய முடிகிறது. அவை பின்வருமாறு:

1. அறிவில்லாத பசுக்களையும் பெறாப் பேறாகக் காப்பாற்றியவன். (1.5.5)
2. கண்ணனாய் அவதரித்த தலைவன். (2.7.3)
3. இடைச்சாதிக்குத் தக்கபடி பசுக்களின் திரளை உடையவன். (2.7.4)
4. பசுக்களைக் காப்பாற்றும் சீல ஒளியையுடையவன். 3.1.3)
5. பசு மேய்க்கப் போய் 'நான் வருந்துகிறேன்' என்று காக்க வருவதில் காற்றில் கடியன். (4.4.3)
6. பசு மேய்க்க முடி சூடியவன் (4.4.5)
7. பசுத்திரள்களை உடையவனாகையாலே செருக்குமிக்குக் கூத்தாடுகையே தன்மையாக உடையவன். (4.4. 6)
8. எல்லாருக்கும் எளியனான ஒளியை யுடையவன். (8.6.7)
9. அந்தந்த நிலைமையில் த்யோதமான திருமேனியோடு கூடியவனாகையாலே கோவிந்தன் என்ற சொல்லுக்குப் பொருளானவன். (9.5.2)
10. அடியார் திறத்து அவதரித்த கண்ணன் அவனே. (10.2.7)

### 5.5.3. கேசவன்

திருமாலின் முக்கியமான பன்னிரண்டு திருநாமங்களுள் முதன்மையானது கேசவன் என்னும் திருநாமம். வைணவர்கள் பன்னிரண்டு புண்ட்ரங்களைத் தரிக்கும்போது நாவினால் நவிற்ற வேண்டிய திருநாமத்தோடு கூடிய மந்திரங்களுள் கேசவாய நம: என்பது நெற்றியில் இடும்போது சொல்லப்படுவ தாகும்.

சான்றாக, "வினையேன் வினைதீர் மருந்தானாய்
விண்ணோர் தலைவா கேசவா" (1.5.6)

என்ற இடத்தில் 'கேசவா' என்பதற்கு 'வேறு பயனைக் கருது வதில் ஊற்றமுடையரான பிரமன், சிவன் முதலானோர்க்கும் பிறப்பிருப்புக்களுக்குக் காரணமாகையாலே கேசவன்' என்று பெயர்க் காரணத்தை விளக்குகிறார்.

'சூழல் பலபல வல்லான்' (1.9.2) என்ற பாடலில் 'கேழல் ஒன்றாகி யிடந்த கேசவன் என்னுடையம்மான்' என்ற தொட ருக்குச் சேர 'ஒப்பற்ற வராகமாய்க் கொண்டு இடந்தெடுத்துப் பிரளய நீரிலே நனைந்த மயிர்முடியுடைய என் தலைவன்' என்று கேசவனின் மயிர்முடியைக் காட்டி உரைக்கிறார்.

'எல்லாரைக் காட்டிலும் உயர்ந்தவன்' என்பதைக் 'கேசவன் தமர்' (2.7.1) என்ற இடத்தில் அருளுகிறார்.

கிருஷ்ணாவதாரத்தில் கம்சனால் தூண்டப்பட்ட அசுரனான கேசியைக் கொன்றதை, 'நாயகன் முழுவேழுலகுக்குமாய் (6.4.11 என்ற பாடலில் 'கேசவன் அடியிணை' என்பதற்குச் சேரக் கூறுகிறார்.

வாமனனாய் மகாபலியிடம் சென்றபோது அலைந்த குழலோடே இருந்தவன் கேசவன் என்பதைக் 'கேட்டுமுணர்ந் தவர் கேசவற்கு ஆளன்றி யாவரோ' (7.5.6) என்ற இடத்தில் கேசவன் என்பதற்கு உரையிடுகிறார். மேலும் இவ்விடத்தில் 'கேசவன்' என்று 'ஒருவன் திருவடிகளை விளக்க, ஒருவன் தீர்த்தம் சுமக்கும்படி பிரமன், சிவன் ஆகியோர்க்குத் தலைவன்' என்றும் அருளுகிறார். அதாவது திருவுலகளந்தருளினபோது பிரமன் திருவடி விளக்க, சிவன் அத்தீர்த்தம் சுமக்கும்படி இருந்த தாம். 'தொடு கடல் கிடந்த எம் கேசவன்' (10.9,7) என்ற தொடரிலுள்ள 'கேசவன' என்பதற்கு 'என்போல்வாரோடு பிரமன் முதலானோரோடு நித்ய ஸூரிகளோடு வாசியற எல்லார் பிறப்புக்கும் காரணமானவன் கேசவன்' என்று காரணம் காட்டுகிறார்.

## 5. 5. 4. தாமோதரன்

கண்ணனாய்ப் பிறந்து யசோதைப் பிராட்டியால் கட்டவும் அடிக்கவும் தான் கண்ணுக்கு எளியனாயிருந்து, அவள் சொற் படிக் கேட்பவனாயிருந்தான். யசோதை கண்ணிநுண்சிறுத் தாம்பினால் கட்ட, கட்டுண்டு, தாம்பின் தழும்பு இன்றும் அர்ச் சாவதார நிலையிலும் காணும்படி தாமோதரன் என்ற பெயர்

பெற்றான். ஆழ்வாரும் மயங்கி ஆறு மாதம் மோகித்து இருந்ததும் இத்திருநாமத்தாலே. திருவாய்மொழியில் மூன்று இடங்களில் வந்த இத்திருநாமச் சிறப்பைச் சீயர் விவரித்துள்ளது குறிப்பிடத்தக்கது. அவையாவன:

'அடியார்கட்கு வசப்பட்டு இருப்பவன் தாமோதரன்' என்பதை 'தாமோதரனைத் தனிமுதல்வனை' (2.7.12) என்ற இடத்தில் குறிப்பிடுகிறார்.

"ஈவிலாத தீவினைகள் எத்தனை செய்தனன்கொல்
தாவிவையங் கொண்ட எந்தாய் தாமோதரா" (4.7 3)

என்ற இடத்தில் வந்த 'தாமோதரா' என்பதற்கு 'அநந்யரானார்க்கு சொற்படி கேட்பவன் என்று தோன்றும்படி யசோதை கட்டின தாம்பின் தழும்பை உதரத்திலே உடையவன்' என்று பொருள் தருகிறார்.

'சார்வே தவநெறிக்குத் தாமோதரன் தாள்கள்' (10.4.1) என்ற தொடரிலுள்ள தாமோதரன் என்பதற்கு 'மத்துறு கடை வெண்ணெய் களவினில் உரலிடையாப்புண்டு எத்திறம்' என்கிற படியே வெண்ணெய் திருடியதால் தாம்பாலே கட்டுண்டு அத்தாலே தாமோதரன் என்று பேராம்படி அடியார்க்குச் சொற்படி கேட்பவன்" என்று பொருள் வழங்குகிறார்.

### 5. 5. 5. மாயவன்

திருமாலுடைய தன்மைகள், குணங்கள், திருவிளையாடல்கள் எல்லாம் அவதாரத்துக்கு ஏற்ப அமைந்துள்ளன. இவை எல்லாவற்றையும் ஒருசேரப் பிடித்து ஒரு புதிய சொல்லில் பொருள் வழங்குவது வைணவ மரபு. இதற்கு அடிப்படை ஆழ்வார்களின் அருளிச்செயல்களாகும். திருமாலின் பண்புநலனையும் திருவிளையாடல்களையும் அந்தந்த இடத்திற்கு ஏற்ப மாயவன் என்று ஆழ்வார் வழங்கிய சொல்லிலே விளக்கி, மேலும் மாமாயன், மாயோன், மாயப்பிரான், மாயா, மாமாயா என்று 36 இடங்களில் வந்துள்ளது.

'மாயோன்' என்பதற்கு, வியப்பான விபூதியோடு கூடியவன்; (1.5 2) எல்லோருடனும் பரிமாறினும் குற்றம் தட்டாதவன்; (1.5.8) வியப்பான குணம், திருவிளையாடல்களை யுடையவன்; (4.4.5) வியப்பானவன்; (4.4.9) சிறிது கால அநுபவமும் மிக்க சிறப்பாம்படி வியப்பாகவுடையவன்; (6.9.10) பரிமாறுவதில் தாழ நின்று பரிமாறுபவன்; (9,9.1) காக்கும் தன்மைக்கு உரிய வியப்

பான திருவிளையாடல்களோடு கூடியவன் (9.9.2) என்று பொருள் தருகிறார்.

'மாமாயன்' என்பதற்கு வேண்டுதலை எதிர்பாராதவனாய்த் தன் வியப்பான குணம் திருவிளையாடல்களாலே எல்லையற்ற பண்பாளன், (1.5.4) எல்லையற்ற வெண்ணெய் களவு செய்தல் முதலான வியப்பான விளையாடல்களைச் செய்பவன்; (1.5 6) அளவிடற்கரிய விபூதி, திருமேனி, திருவிளையாடல்களை யுடையவன், (1.5 11) மையல் கொள்ளுகைக்குப் பண்ணின எல்லையற்ற வியப்பான விளையாடல்களை யுடையவன் (7.2.6) என்று ஆங்காங்கே பொருள் வழங்குகிறார்.

'மாயப்பிரான்' என்பதற்கு வெண்ணெய் களவு காரணமாக ஆய்ச்சியர்களாலே அடியுண்டு அதற்குத் தக்க அழுகை தொடக்கமான வியப்பான விளையாடல்களையுடையவன்; (1.7.3) எதிர்த் தலையை மதிமயக்கும் மிக்கவியப்பான குணங்களை யுடையவன் (10.7.1) என்றும் பொருள் உரைப்பர்.

'மாயன்' என்பதற்கு வியப்பானவன், (1.9.5; 4.910; 3.10.4) வியப்பான குணம் விபூதியோடு கூடியவன், (3.3.3.) வியப்பான திருவிளையாடலோடு கூடியவன், (3.4.6) வியப்பை உண்டு பண்ணும் குணம் திருவிளையாடல்களை நிருபிப்பவன் (3.4.9) வியப்பான கண்ணன், (4. 6 6) எதிர்த்தலை அகப்படும்படியான வியப்பான விளையாடல்களை யுடையவன், (6.1.9); கள்வன் (6. 4. 8) எல்லாச் சேதந அசேநப் பொருள்களின் குற்றங்கள் தட்டாதவனாம்படி வியப்பான ஆற்றலோடு கூடியவனாகையாலே கலந்திருக்கச் செய்வதே கழல நிற்கவல்லவன், (6. 8. 7) வியப்பை உண்டுபண்ணும்படி பிரகிருதியைத் தான் இட்டவழக்காக வுடையவன், (7. 1. 1), பிரளய ஆபத்துக்கு உதவி, பிறவிக் கடலுக்கு மேலான உபாயமானவனாய் வியப்பான தன்மை, வடிவு, குணம், விபூதியோடு கூடினவனான இறைவன், (8. 10 8) தன் பிரதிகூலமெல்லாம் நன்மையடையும்படியான வியப்பை யுடையவன், (9. 5 11) அடியார்க்கு அநுபவிக்கத்தக்க அழகு சீலம், எளிவந்த தன்மை முதலான குணத்தோடு கூடிய வியப்பானவன் (10.2.3) என்று பலபடியாகப்பொருள் கூறுகிறார்.

'மாயவன்' என்ற சொல்லுக்கு வியப்பானவன் (2. 10. 8); இடைப்பெண்களுடைய ஊடல் மாறும்படி தன் தாழ்ச்சியை வைத்து ஊதும் குழலோசையையுடையவன்; (4. 4. 6) வியப்பான குணம், திருவிளையாவல்களை உடையவன்; (5.4.6); பெண்

பிறந்தார்க்கு உதவுமவன் என்று இளநெஞ்சாய் அகப் படுகைக்குச்செய்த கபட விளையாடல்களையுடையவன் (6. 2. 1), பற்றப்படுமவனாய் விரோதியைப் போக்கும் வியப்பானவன் (7.5.10) என்று நயம்படப் பொருள் கூறுவர்.

'மாயா' (4.7.2) என்றவிடத்தில் 'கண்ணுக்குத் தோற்றாதே கள்வனைப்போல நெஞ்சுக்குள்ளே இருக்கிற வியப்பானவன்; இயற்கையான வியப்பான ஆற்றலையுடையவன் (7.8.1) என்றும் உரைப்பர்.

'மாமாயா' (5.8.8) என்ற விடத்தில் 'மிக்க வியப்பான அழகோடு கூடியவன்' என்று பொருள் தருகிறார்.

## 5.6. மும்முறைகளின் ஆழ்பொருள் காட்டல்

வைணவ சமயம் மும்முறைகளை அடிப்படையாகக் கொண்டது. அவை பற்றிச் சீயர் உரை எவ்வெவ்வாறு ஆழ்வார் பாடல்வழி விளக்கம் தருகிறது என்ற செய்தி இங்குக் குறிக்கப் பெறுகிறது.

திருமந்திரத்தின் பொருளை உரையில் ஐந்து இடங்களிலும், துவயத்தை இரண்டு இடங்களிலும், சரம சுலோகத்தை மேற் கோளாக ஏழு இடங்களிலும் இவர்தம் உரையில் காணமுடி கிறது.

### 5.6.1. திருமந்திரம்

திருமந்திரம் எல்லா வேதங்களின் சாரமாய் இருக்கும். வாசுதேவ, விஷ்ணு மந்திரங்களைக் காட்டிலும் இது பொருள் நிறைவில் பெருமையுடைத்தாயிருக்கும் என்பர்.[34]

இத்திருமந்திரத்தைச் சீயர், திருவாய்மொழியின் முதல் பத்தின் முதல் பாடலில் பொருத்திக் காட்டுகிறார்.

"உயர்வற வுயர்நல முடையவன் யவனவன்
மயர்வற மதிநல மருளினன் யவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழன் மனனே" (1.1.1)

என்ற பாடலில் 'உயர்நல முடையவன்' என்கிற ஸர்வாதிக சேஷித்வத்தாலே எல்லாரைக் காட்டிலும் உயர்ந்த தலைவனாம் தன்மையாலே பிரணவத்தின் பொருளான இறைவனுக்கே ஆட் செய்யும் அடியவனின் கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்ளும் தலைவனான தன்மையையும், 'மதிநல மருளினன்' என்று கருணையின் காரியமாக உதவிசெய்யும் தன்மையை நம :

பதத்தில் சொல்லப்பட்ட 'நான் எனக்கு உரியனல்லேன்; எம் பெருமானுக்கே உரியேனாகிறேன்' என்று கருதும் உபாயத்தின் தன்மையையும், 'அமரர்களபதி' என்று நித்யஸூரிகளால் வணங்கப்படுவதாலே நாராயண பதத்தின் பொருளையும் (நித்ய வஸ்துக்களின் திரளுக்கு ஆதாரமாயிருத்தல்), 'தொழுதெழு' என்று நாராயணாய என்ற பதத்தில் உள்ள 'ஆய' என்ற நான்காம் வேற்றுமைப் பொருளான கைங்கர்யத்தையும் சொல்லிற்று. இவ்வாறு எடுத்துக் காட்டியதோடு கீழ்வரும் பாடலில் உரைப்போக்கில் சீயர் குறிப்பாகச் சுட்டியும் சென்றுள்ளார்.

''கண்டுகொண் டென்கண் ணிணையாரக் களித்துப்
பண்டை வினை யாயின பற்றோ டறுத்துத்
தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலை கள்
சொன்னேன்
அண்டத் தமரர் பெருமா னடியேனே'' (9.4.9)

இப்பாட்டில், திருமந்திரத்தில் முதல் பதமான பிரணவத்தின் பொருளான ஸ்வரூப ஞானத்தையும், நடுவிலுள்ள நமஃ பதத்தின் பொருளான விரோதி கழிகையையும், இறுதிப் பதமான நாராயணாய என்பதில் 'நாராயண' என்பதால் கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்ளும் இறைவனின் தன்மையையும், 'ஆய' என்பதால் கைங்கர்ய வளர்ச்சியின் விசேஷத்தையும், திருமந்திரத்தின் கருத்தான பாகவதர்கட்கு அடிமையாம் தன்மையையும் சொல்லுவதாகச் சீயர் உரைப்பர். சீயர் உரைத்த பொருளை ஆராய்ந்து நோக்குங்கால், 'என் கண்ணிணையாரக் கண்டுகொண்டு களித்து' என்ற தொடரால் பிரணவத்தின் பொருளான ஸ்வரூப ஞானத்தையும், 'பண்டை வினையாயின பற்றோடு அறுத்து' என்ற தொடரால், நடுவில் நம: பதத்தின் பொருளான விரோதி கழிகையையும், 'அண்டத்தமரர்பெருமான்' என்பதனால் இறுதிப் பதமான நாராயண சப்தத்தின் பொருளான விரோதி கழிகையையும், 'அண்டத்தமரர் பெருமான்' என்பதனால் இறுதிப்பதமான நாராயண சப்தத்தின் பொருளான கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளும் தலைவனின் தன்மையையும், 'அடியேன்' என்பதால் 'ஆய' என்ற நான்காம் வேற்றுமைப் பொருளான கைங்கர்ய வளர்ச்சி விசேஷத்தையும் சொன்னபடி. மேலும் நம: பதத்தின் திரண்ட கருத்தான 'உற்றதும் உன் அடியார்க் கடிமை' என்கிறபடியே இதிலே (நம:) பாகவத சேஷத்வமும் அநுஸந்தேயம்,' (முமுக்ஷுப்படி-நூற்பா 89). இந்நூற்பாவின்படி பாகவதர்கட்கு அடிமையாம்தன்மையைத்

'தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்' என்ற தொடரால் அறியற்பாலதாகும்.

பேற்றியல்பைக் கூறும் பத்தாம் பத்தின் நான்காம் பதிகத்தில் 'கண்டேன் ... பணிவகையே' (10. 4. 5) என்ற பாடலில் அடிமைத் தன்மையின் உண்மை நிலையை இறைவன் காட்டக் கண்டு, ஆழ்வார் அநுபவிக்கப் பெற்றதாகச் சீயர் உரைப்பர். இதில் 'பண்டே பரமன் பணித்த பணிவகையே' என்ற தொடருக்குப் "பூர்வ காலத்திலே ஸர்வாதிகனான ஸர்வேச்வரன் அருளிசெய்த மந்த்ர ரஹஸ்ய ப்ரகாரத்திலே" என்று திருவடிகளை நேராகக் கண்டதாகக் கூறுவர். இங்கு இறைவன் உபதேசித்த பெரிய திருமந்திரத்தை 'மந்திர ரகஸ்யம்' என்று சீயர் காட்டிப் பொருள் வழங்குகிறார்.

'கண்ணன் கழலிணை' (10. 5. 1) என்ற பாடலில், தியானத்துக்குப் பற்றுக்கோடான திருமந்திரத்துக்கு முதன்மையான திருநாமத்தை நினைக்க, இறைவன் திருவடிகளை அடையலாம் என்கிறார். அதாவது பிரணவம், நமః, வேற்றுமை உருபான ஆய—இவை வேண்டியதில்லை; நாராயண நாமத்தை நினைத்தாற் போதும் என்று உபதேசிக்கிறார்.

வீடுபேற்றை அறுதியிட்டுப் பேசும் 'எம்மா வீட்டுத் திறமும் செப்பம்' என்ற பதிகத்தில் 'எனக்கே ஆட்செய்' (2. 9, 4) என்ற பாடலில் திருமந்திரத்திலுள்ள நம: பதத்தின் பொருளான பாரதந்த்ரியமாவது இறைவன் இட்ட வழக்காயிருத்தலாகும். இதனைத் 'தனக்கேயாக எனைக் கொள்ளு மீதே' என்ற தொடரில் 'பிறர்க்கு மன்றியே, எனக்கு மன்றியே, எனக்கும் தனக்கும் கூடவுமன்றியே, தனக்கே பரதந்த்ரனாம்படி என்னை அங்கீகரிக்கும்' என்று சீயர் உரையிடுகிறார். இதனால் 'ஈச்வரன் தனக்கேயா யிருக்கும்; அசித்துப் பிறர்க்கே யாயிருக்கும்; ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கும்; என்று முற்பட்ட நினைவு; அங்ஙனன்றிக்கே அசித்தைப் போல, தனக்கேயாக எனைக்கொள்ள வேணும் என்கிறது நமஸ்ஸால்' (முமுக்ஷுப் படி—நூற்பா 91) என்ற நூற்பாவின் பொருளைச் சீயர் உரைத்துள்ளார் என அறியமுடிகிறது.

5. 6. 2. துவயம்

பிராட்டி முன்னாக இறைவனைத் தஞ்சமாகப் பற்றுகையும், இருவருமான சேர்த்தியிலே அடிமையை வேண்டுவதும் துவயத்தின் பொருளாகும்.

'திருமந்திரத்திலே பிறந்து, த்வயத்திலே வளர்ந்து த்வயைக நிஷ்டராவீர்.' என்று அனந்தாழ்வான் என்னும் ஆசாரியர் நஞ்சீயரை வாழ்த்தும் வார்த்தையாலும்,[34] 'நம்மாசாரியர்கள் வியாபக மந்திரங்கள் மூன்றிலும் த்வயத்தையே ஆதரிக்குமா போலே' (6.1.10,36படி) என்றும், 'நம் முதலிகள் பரம்பரையாக (பிள்ளை பேரன்கள் எல்லார்க்கும்) சிறியார் பெரியார் என்னாதே த்வயத்தைக் கற்பித்து வைக்குமாபோலே' (6. 8. 6, 36படி) என்றும் ஈட்டில் நம்பிள்ளை அருளியதும் கொண்டு துவயத்தின் சீர்மை அறியற்பாலதாகும்.

துவயத்தின் விளக்கமாகத் திருவாய்மொழியைச் சீயரும் காட்டியுள்ளார் என்பது முன்பே காட்டப்பட்டது. இருப்பினும் பாடலிலும் பாடலடிகளிலும் இரண்டு இடத்தில் சீயர் துவய மந்திரத்தின் பொருளைக் காட்டுகிறார்.

'உலகமுண்ட பெருவாயா' என்னும் பதிகத்தில் ஆழ்வார் திருவேங்கடத்திறைவனிடம் சரணாகதி செய்கிறார். இதில் 'அகல கில்லேன்...புகுந்தேனே' (6.10.10) என்ற பாடலில் உள்ள பதப் பொருள்களோடு துவயத்தின் இரண்டு வாக்கியங்களின் பொருளைப் பொருத்திக் காட்டியுள்ளார்.

'அகலகில்லேன்' என் கையாலே ஸ்ரீ: என்ற சொல்லின் பொருளான ஸேவா கரணத்தாலே வந்த எப்போதும் விட்டுப் பிரியாமை யாயிருக்கும் தன்மையையும், 'அலர்மேல்' என் கையாலே சேவிப்பதற்கு முக்கியமான மனத்திலுள்ள மென்மை, தாயன்பு முதலான உறவையும், 'மங்கை' என்கையாலே சேவா கரணத்துக்கும் காரணமான செல்வாக்கையும், 'உறை மார்பன்' என்கையாலே 'மது'ப்பின் பொருளான விட்டுப் பிரியா மல் நித்யமாயிருக்கும் சம்பந்தத்தையும் சொல்வதனால் 'ஸ்ரீமத்' பதத்தின் விளக்கம் சொல்லப்பட்டது. 'நாராயண' பதத்தின் பொருளான தாயன்பு (வாத்ஸல்யம்), தலைமைத் தன்மை (ஸ்வாமித்வம்), நீர்மை (ஸௌசீல்யம்), எளிவந்த தன்மை (ஸௌலப்யம்) முதலான நான்கு குணங்கள் 'நிகரில் புகழாய்' என்று தொடங்கித் 'திருவேங்கடத்தானே' என்ற நான்கு சொற் களாலும், 'புகலொன்றில்லா' என்கையாலே துவயத்தைக் கடைப் பிடிப்பவனுக்குத் தேவையான உபாயம் வேறு ஒன்றுமில்லாமை யும், வேறு காப்பாரில்லாமையும் சொல்லி; 'அடியேன்' என்கை யாலே ப்ரபத்தியே' என்பதற்கு எழுவாயாக வந்து புகுந்த நான் என்பதின் பொருளான அதிகாரி சொரூபத்தையும், 'உன்'

என்ற விளியாலே இல்லாதவற்றைக் கூட்டிப் பொருள்சொல்லும் சொல்லான தவ சப்தத்தின் பொருளையும்; சரண சப்தத்தின் பொருள் 'அடிக்கீழ்' என்றும்; 'ப்ரபத்யே' என்ற வினை அடியான பகுதிப் பொருளாய் உபாய உபேய விஷயமான நம்பிக்கையை 'அமர்ந்து' என்றும்; அவ்வினையின் பொருளைப் 'புகுந்தேன்' என்றும் தெரிவிக்கிறார். இதில் 'புகுந்தேன்' என்று இறந்த காலத்தைக் குறிப்பிடுகையில் அடைவதற்குத் திரும்பத் திரும்ப வேண்டுதலில்லாமல் ஒரு தடவை செய்வதை வெளிப் படுத்தியதாகக் கூறுகிறார். மேலும் ஆழ்வார் இப்பதிகத்தில் செய்தது நிறைவான சரணாகதி யாகையாலே, துவயத்தின் இரண்டாவது வாக்கியமான 'ஸ்ரீமதே நாராயணாய நம:' என்பதின் பொருளையும் பொருந்திக் காட்டுகிறார். 'அகிலகில் லேன்...உறைமார்பா' என்றதனால் பிராட்டி சம்பந்தமும், நிகரில் புகழாய்...திருவேங்கடத்தானே' என்றதனால் [குண யோகமும், பிராப்பியமாகச் சேர்ந்திருக்கையாலும், 'அடியேன்' என்கிற அதிகாரி சொரூபத்தில் வேறொருவனுக்கு உரித்தல்லாத அடிமையாம் தன்மை, வேறொருவனையும் உபாயமாகக் கொள்ளாத தன்மை, வேறொருவனையும் இனிமையாகக் கொள்ளாத தன்மை ஆகியவற்றைக் குறிப்பிடுகையாலே நம: பதத்தில் சொல்லும் கைங்கரியத்தில் களையறுக்கிறது' என்பதைக் காட்டுகையாலும், 'புகுந்தேன்' என்கிற கதி தாது ப்ராப்திக்கும் உரித்தாகையாலே இரண்டாவது வாக்கியமும் உபாயவரண வாக்கியத்துக்குள்ளே உள்ளடக்கமாயிற்று' என்று சீயர் விவரித்தது குறிப்பிடத்தக்கது.

பத்தாம் பத்தில் 'கண்ணன் கழலிணை' என்ற பதிகத்தில் 'மாதவனென்றென்று' (10.5.7) என்பதற்கு, 'புருஷகார யோக மென்ன, கைங்கர்ய வர்த்தகத்வமென்ன, இவ்விரண்டு ஆகாரத்தை யுடைய இலக்குமியோடு கூடிய மாதவன் என்கிற திருநாமத்தைத் துவயத்தின் முதல் வாக்கியத்தாலே உபாயமாகப் பற்றப்படுபவன் என்றும், இரண்டாவது வாக்கியத்தால் 'உபேயமான (அடையப் படுகின்ற) புருஷார்த்தம்' என்றும் ஆழ்வார் நினைப்பதாகத் துவய மந்திரப் பொருளாகக் காட்டுகிறார் சீயர்.

### 5. 6. 3. சரம சுலோகம்

சரம சுலோகம் என்பது கடைசியில் கூறப்பட்ட சுலோகம் என்பது பற்றி வந்த பெயரன்று; கருமம், ஞானம், பக்தி, பிரபத்தி என்ற எல்லா உபாயங்கட்கும் சரமத்தில் கூறப்பட்ட பிரபத்தி உபாயத்தைத் தெரிவிப்பதால் வந்த பெயராகும். இதனை விதி இரகசியம் என்பர். இந்தச் சுலோகத்திலுள்ள

பதப்பொருள்களைத் திருவாய்மொழிப் பாடல்களில் ஏழு இடங்களில் இணைத்துச் சீயர் பொருள் வழங்கியது குறிக்கப் பெற்றுள்ளது.

சான்று :

'வந்தாய் போலே வாராதாய்' (6. 10. 9) என்ற பாடலில் 'செங்கனிவாய்' என்ற இடத்தில் திருவேங்கடத்துறைவானது திருப்பவளம் சரம சுலோகத்தைச் ;சொன்னதைக் காட்டும் வகையில், 'என்னை ஒருவனையே சரணமாகப் பற்று' (மாமேகம் சரணம் வ்ரஜ) என்று சொன்ன திருப்பவளமாகக் கூறுவர்.

முடிபுகள்

1. 'சமய நோக்கு' என்ற இவ்வியலில் வைணவம் வைதிக சமயங்களுள் ஒன்றாகத் திகழ்ந்து, பல கொள்கைகளைத் தன்னுள் கொண்ட சமயமாக உள்ளது; ஆழ்வார் பாடல்களைச் சிறப்பாகக் கொண்டு வளர்ந்துவரும் மதமாகத் திகழ்கிறது என்று சுட்டப் பெற்றுள்ளது.

2. வைணவ சமய முப்பொருள்களும் மும்மறைகளான திருமந்திரம், துவயம், சரம சுலோகம் ஆகியவற்றால் உரையில் விளக்கம் பெற்றுள்ளமை தெளிவு செய்யப் பெற்றுள்ளது.

3. சீயர் உரையில் அர்த்த பஞ்சகமான ஐம்பொருளை இரண்டிரண்டு பத்துக்களின் வரிசையில் அமைத்து, ஐம்பொருளின் தன்னிகரில்லாச் சிறப்பை வெளிக்கொணரும் நெறி புலப்படுகிறது.

4. நம்பிள்ளையும் வேதாந்த தேசிகரும் அர்த்த பஞ்சக விளக்கமாக வழங்கிய நெறியிலும் சிறிது வேறுபட்டுச் சீயர் உரை வரிசையில் அமைத்துக் கொண்டு வழங்கியது குறிப்பிடப்பட்டுள்ளது.

5. மேலும், மும்மறை வாயிலாகவும் திருவாய்மொழியின் பத்துக்கள் அமைந்துள்ளமை குறிப்பிடுவதனால் உரைச் சிறப்பின் பெருமை விளக்கப்பட்டுள்ளது.

6. சீயர் உரையில் எடுத்துக்கொண்ட கோட்பாட்டிற்கு ஏற்ப, முதல் பத்தின் திரண்ட கருத்தான இறைநிலையை ஆராயும்போது, இறைவனின் குணங்கள், வடிவு,

திருவிளையாடல்கள், காக்கும் தன்மை யாவும் சிறப்புற்று விளங்குவது அறியலாம். இவ்வாறு பத்துக்கள் தோறும், பதிகங்கள் தோறும் புணர்ப்புண்ட அரிய கருத்துக்கள் ஒரு சேரக்காணப் பின்னிணைப்பில் அட்டவணையும் அதன் தமிழாக்கமும் உறுதுணை செய்யும் வகையில் அமைக்கப் பட்டுள்ளன.

7. இறைநிலையின்கீழ் திருமாலின் அவதாரப் பண்புகள் பற்றி உரை உணர்த்தும் உண்மைகளைக் காணும்போது, அவதாரங்களிலும் குணங்கள் குறைவற்று விளங்குவதைச் சீயர் குறிப்பிடுவது தெளிவு செய்யப்பட்டுள்ளது.

8. அவதாரங்களில் அமைந்த ஆழ்பொருளைக் காணும்போது உலகளந்த உத்தமத் தன்மைகளான தலைவனாம் தன்மை, குணங்கள் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. கண்ணபிரானின் பேரன்பு, அடியார்களைக் காக்கும் தன்மை, பரிமாறும் தன்மை, தாயிடம் தாழ்ச்சி தோற்ற இருந்து அழும் கூத்து ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

9. பயனுரைக்கும் பதிகங்கள் சிலவற்றில் கண்ணபிரானுக்கே ஆயிரம் பாடல்கள் பாடியதாகச் சீயர் உரை அமைத்தது குறிப்பிடத்தக்கது. இதனால் ஆழ்வாருக்குக் கண்ணபிரானிடம் உள்ள அளவிடற்கரிய பக்தி, சீயர் உரைமூலம் புலப்படுவது எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

10. இராமபிரானின் குணநலன்களைக் காணும்போது திருமாலுக்கே உரியவை விரோதியை அழிக்கும் தன்மை, அடியாரை நழுவவிடாத தன்மை, அடியாரிடம் உள்ள அன்பினால் உதவும் தன்மை முதலான குணங்கள் நிறம் பெற்ற வகையில் சீயர் உரை உணர்த்துவது தெளிவு செய்யப் பட்டுள்ளது.

11. திருமாலின் பண்புகளான புரையறக் கலத்தல், தாயன்பு முதலானவை வெளிப்படும் பிறப்பு நிலைகளுள் நரசிம்மாவதாரம் உரைவழி சிறப் பெய்தியுள்ளமை விளக்கப்பட் டுள்ளது.

12. திருமாலுக்குப் பர நிலையில் அமைந்த பல பெயர்களுள் முதன்மையாக விளங்கும் நாராயண நாமம் ஆழ்வார் பாடலில் வந்தவழி சீயர், தமது உரையில் பொருள்கூறும் போது, நாராயண நாமத்துக்குரிய உள்ளுறை நிலை, காத்தற்றன்மை, தலைவனாந் தன்மை, தாயன்பு ஆகியவை அமைய விளக்கிய திறன் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளது.

13. கிருஷ்ணாவதாரத்தில் சூட்டப்பெற்ற பெயர்களுள் 'கோவிந்தன்' என்ற பெயர் பெற்ற பேறு, அப்பெயரில் அடங்கிய முழுமையான சிறப்பு, பெயர்க்காரணம் ஆகியன சீயர் உரையில் தெளிவாகும் சிறப்பு எடுத்துரைக்கப் பெற்றுள்ளது.

14. பன்னிரண்டு திருநாமங்களுள் 'கேசவன்' என்ற பெயரின் பெருமை உரை மூலம் விளங்குவது விளக்கப்பெற்றுள்ளது.

15. 'தாமோதரன்' என்ற கண்ணனுக்கேயுரிய பெயர்ச்சிறப்பு, உரையில் உயர்வான இடம் பெற்று விளங்குவது காட்டப் பெற்றுள்ளது.

16. மாயன், மாயோன், மாமாயன் முதலான ஆழ்வார் சொற்களுக்கு அந்தந்த இடத்திற்கேற்ப இறைவனது தன்மைகள், குணங்கள், திருவிளையாடல்கள் கொண்டு உரைவழங்குவது சீயர்தம் ஆழ்ந்த பக்தியைப் புலப்படுத்துகிறது என்பது எடுத்துக்காட்டப்பட்டுள்ளது

17. மும்மறைகளின் ஆழ்பொருள்கள் சீயர் உரையில் அமைந்துள்ளமையைக் காணும்போது, திருமந்திரம், துவயம் ஆகியவை வெளிப்படையாகவும், சரம சுலோகம் மேற்கோள் மூலமாகவும் இடம்பெற்றுள்ள பாங்கு தெளிவாக்கப் பட்டுள்ளது.

## இயல் 5

### குறிப்புகள்

1 எஸ். கிருஷ்ணவேணி அம்மையார், 'செம்பொருள்', திருமலை திருப்பதி தேவஸ்தான வெளியீடு, திருப்பதி, 1952, முன்னுரை.

2 அ. ச. ஞானசம்பந்தன், 'தமிழும் சமயமும்', உலகத் தமிழ் மாநாடு விழா மலர், சென்னை, 1968, ப.1.

3. பொன். சௌரிராசன், 'சித்திரச் சிலம்பு', பாரி நிலையம், சென்னை, 1981, ப. 100.

4. எஸ். கிருஷ்ணவேணி அம்மையார், மு. நூ., முன்னுரை.

5. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ப-ஆ.) பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த 'ஸ்தோத்திர ரத்தின வியாக்கியானம், திருச்சி, 1976, ப. 17.

6. பி. ஆர். புருடோத்தம நாயுடு, திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம், சென்னைப் பல்கலைக் கழகம், முதற் பகுதி, 1971, ப. 13.
7. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ப-ஆ.), முமுட்சுப்படி வியாக்கியானம். முன்னுரை, ப.2.
8. மேலது, திருமந்திரப் பிரகரணம், ப. 71.
9. மேலது, துவய பிரகாரணம், ப 71.
10. மேலது, சரம சுலோக பிரகரணம், பக். 113-114.
11. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ப-ஆ.), வார்த்தா மாலை, வார்த்தை 456, 1983, ப. 514.
12. கே. வரதாசாரிய ஸ்வாமி, திருவாய்மொழியும் துவயமும், கிதாசார்யன் பதிப்பு, 1978, ப. 31.
13. மேலது, ப. 31.
14. ப்ர. ப. அண்ணங்கராசாரிய ஸ்வாமி (ப-ஆ.), ஆசாரிய இருதயம், கிரந்தமாலா ஆபீஸ், 1950, நூற்பா 210, ப. 159.
15. மேலது, ப. 167.
16. புதுப்பட்டு திருவேங்கடாசாரியார், திருவாய்மொழி ஆறாயிரப்படி, பன்னீராயிரப்படி, ஈடு ப்ரவேசங்கள், 1925—26, உரை அவதாரிகை, ப. 8.
17. சே. கிருஷ்ணமாசாரியார் (ப-ஆ.) பகவத் விஷயம், பத்தாம் பத்து உரை, ப. 366.
பின்னிணைப்பு 16இல் காண்க.
18. பி. ஆர். புருடோத்தம நாயுடு, திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம், முதற் பகுதி, முதல் முன்னுரை, ப, 47.
19. மேலது, இரண்டாவது முன்னுரை, ப. 56.
20. மேலது, மூன்றாவது முன்னுரை, ப, 56.
21. சே. கிருஷ்ணமாசாரியார் (ப. ஆ.), பகவத் விஷயம், முதற் பத்து, ஈடு, ப. 398.
22. கே. வரதாசாரிய ஸ்வாமி, திருவாய்மொழியும் துவயமும், கீதாசாரியன் பதிப்பு, 1978, ப, 32.
23. திருவேங்கடாசாரியார், திருவாய்மொழி ஆறாயிரப்படி, பன்னீராயிரப்படி, ஈடு ப்ரவேசங்கள், உரை அவதாரிகை, ப. 8.
24. மேலது, ப. 8.
25. பொன். சௌரிராசன், 'சித்திரச் சிலம்பு', ப. 103.

26. தி. அ. சதாபிஷேக கோவிந்த நரசிம்மாசாரியார் ஸ்வாமி, மணவாள அய்யங்கார் மணிவிழா மலர், சென்னை, பகவத் அவதார ரகசியம், 1985:

27. சே. கிருஷ்ணமாசாரியார் (ப. ஆ.), பகவத் விஷயம். முதற்பத்து உரை, ப. 320; இரண்டாம் பத்து 2, 8, 4, ப. 16; 2. 8, ப. 30; 2 8 7, ப. 26; மூன்றாம் பத்து உரை, பக். 340—41.

28. தி. அ. கிருஷ்ணமாசாரிய ஸ்வாமி, ஸ்ரீவேங்கடேச பிரபத்தி உரை, ஸ்ரீவாதிபீகரார்ய ஸூக்திமாலிகா, பாகம் 3, 1986, ப. 120.

29. சே. கிருஷ்ணமாசாரியார் (ப. ஆ.), பகவத் விஷயம், முதற் பத்து, உரை, ப. 229.

30. மேலது, ப. 316.

31. மேலது, ப. 335,

32. மேலது, ப. 124.

33. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ப ஆ.), முமுட்சுப்படி, மாமுனிகள் உரையுடன், ப. 19.

34. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ப. ஆ.), முமுட்சுப்படி, மாமுனிகள் உரை, ப. 13.

35. தி. அ. கிருஷ்ணமாசாரியார் சுவாமி, திருமலை அனந்தாழ் வான் வைபவம், (தமிழாக்கம்) ப. 48.

# இயல்—6

# உரை நயம்

6.0. சீயர் உரையில் உள்ள சிறப்புக்கள் பலவற்றுள் சமய நோக்கு சென்ற இயலில் ஆயப்பெற்றது. இந்த இயல் அவரது உரைநயம் பற்றி ஆய்கிறது. சீயர் உரையில் பயன்படுத்தப் பெற்ற சொற்போக்கில், மேற்கோள் போக்கில், உவமைப் போக்கில், இடத்திற்கு ஏற்பப் புத்தம்புதுப் பொருள் புணர்த்தி யுள்ள பொருட்போக்கில், பண்டைய நாகரிகம் முதலியன ஆங்காங்கே குறிப்பிட்டுப்புலப் படுத்தியுள்ள சமுதாயப் போக்கில் உரைநயம் எடுத்துரைக்கப் பெறுகிறது. இறுதியில், சீயர் மேற் கொண்டுள்ள பாடபேதம் பற்றிய செய்தியும் குறிக்கப் பெற்றுள்ளது.

தம் உரையில் சீயர் பொருட்சிறப்பு நோக்கிச் சொற்களைப் பற்பல வகையில் பிரித்துள்ளார். அடைச்சொற்கள் இடைச் சொற்கள் இவற்றுக்குச் சிறப்பாகப் பொருள் தந்துள்ளார். அருந் தமிழ்ச்சொற்கள் சிலவற்றை ஆங்காங்கே பெய்துள்ளார். இவை யெல்லாம் முதற்கண் சொற்கள் என்ற தலைப்பில் ஆராயப்படு கின்றன. இவ்வாய்வு, தொடர்களைப் புதிய வகையில் பிரித்தல், சிறப்பான முறையில் அடைச் சொற்களுக்கு பொருள் தருதல், சிறப்பான முறையில் அடைமொழிக்கு விளக்கம் தருதல், சொற் களை முன்பின்னாக மாற்றிப் பொருள்கோடல், இடைச்சொற் களுக்குச் சிறப்புப் பொருள் தருதல், விளக்கவுரை தருதல், உரையில் காணும் அருந்தமிழ்ச் சொற்கள் என்னும் வகைப் பாடுகளில் அமைகின்றது.

சீயரின் உரைநயம் பற்றிய இவ்வாய்வு பதின்மூன்று உட் பிரிவுகளில் பகுத்து ஆராயப் பெறுகின்றது.

### 6.1. தொடர்களைப் புதிய வகையில் பிரித்துப் பொருள் கூறுதல்

சீயர் தமக்கு முன்தோன்றிய உரைகளின் கருத்துக்களைக் கேட்டதன் வாயிலாகத் திருவாய்மொழிப் பாடல்களுக்கு

ஆழ்வாரின் மனநிலை யறிந்து, சொற்களைப் புதிய வகையில் பிரித்துப் பயனுள்ள பொருள் கூறுவது சீயர்தம் நெறியாகும்.

வடமொழியாளர் உரைகளுக்கு இலக்கணம் கூறும்போது 'பதச்சேத: பதார்த்தோக்தி: விக்ரஹோ வாக்ய யோஜநா ஆக்ஷேபஸ்ய ஸமாதாநம் வ்யாக்யாநம் பஞ்சலக்ஷணம்' என்று கூறுவர். அதாவது பதத்தைப் பிரித்தல், பிரித்த பதங்களுக்குப் பொருள் கூறுதல், சேர்ந்து ஒருபதமாய் இருப்பதைப் பிரித்துக் காட்டல், பதங்களை வாக்கியத்தில் சேர்த்துக் காண்பித்தல், கேள்விகளை எழுப்பி விடையிறுத்தல் ஆகிய ஐந்து இலக்கணங்களாகும். அவற்றில் பதங்களைப் பிரித்தலும் ஒருவகை. இதனை யொட்டியே, இருமொழிப் புலமை நிரம்பிய சீயரும் தமது உரையில் பதங்களைப் பிரித்துப் பொருள் கூறியுள்ளார்.

சான்றுகள்:

1. வருந்தாத—அரும்—தவத்த (3.1.5) வருந்தாத வரும்தவத்த இதற்கு 'முயற்சியின்றியே பெறுதற்கரிய தவத்தினுடைய பேறு யென்னலாம்படி' என்று பொருள் கூறுவர். மற்ற உரைகளில் ''வருந்தாத வருந்தவத்த' என்று பிரித்துப் பொருள் கூறியது காணத்தக்கது.

2. 'கண்ணன் குறுங்குடி' (3.9.2) என்ற இடத்தில் கண்—நல்—குறுங்குடி என்று பிரித்து, 'இடமுடைத்தாய் நன்றான குறுங்குடி' என்று பொருள் கூறுவர். இங்குக் கண், நல் என்பனவற்றை ஊருக்கு அடையாக்கி உரை கூறப் பெற்றுள்ளது. மற்ற உரைகளில் 'கண்ணன் குறுங்குடி' என்றேகொண்டு பொருள் வழங்கியுள்ளனர்.

## 6.2. அடைச்சொற்கள்

### 6.2.1. சிறப்பான முறையில் அடைமொழி கொடுத்துப் பொருள் தருதல்

ஆழ்வார் பாடல்களில் ஒவ்வொரு சொல்லுக்கும் பதவுரைப் பொருள் வழங்கப் பெறினும், ஆழ்வார் உள்ளத்தை உணர்ந்த சீயர், ஆழ்வார் சொல்லைப் போற்றி உணர்த்தும் வகையில், அதற்குப் பொருத்தமாக அடைமொழியைச் சேர்த்து உரையை அழகுபடுத்தியுள்ளார். அவ்வகையில் ஒரு சொல்லும், அதற்கு வழங்கிய பொருளும், அப்பொருளுக்கு இட்ட அடைமொழியும் இடத்திற்கேற்ப அமைந்துள்ளன. மேலும் ஆழ்வாரின் இறை யநுபவச் சொற்கள் வந்த இடங்களில் அந்தந்தப் பதிகங்களுக்கு

ஏற்ப இறைவனின் இயல்பு, தன்மைகள், பண்பு நலன்கள், இறை யடையாளங்கள், திருவிளையாடல்கள் முதலானவற்றைச் சுட்டும் வகையில் அச்சொற்களுக்கு அடைமொழி கொடுத்துச் சீயர் பொருள் வழங்குவர். அதே போன்று ஆழ்வாரின் நிலைமைக ளுக்கு ஏற்பத் தாழ்ச்சியையும் எண்ணங்களையும் தன்னகத்தே கொண்ட வகையில் அடைமொழி கொடுத்தும் உரைப்பர். இத்தகைய உரை இறைவனைப் பற்றியும் ஆழ்வாரைப் பற்றியும் அறிய, உறுதுணையாய் உள்ளது.

சான்றுகள் :

1. 'விரும்பிப் பகவரைக் காணில் (4 4 9) என்ற பாடலில் 'பகவர்' என்பதற்கு "அறிவு முதலான குணநிறைவாலே அடியார்களைத் தன் அபிமானத்துக்கு உள்ளாக்கி, காப்பாளராயுள்ள இறைவடிவரான சந்நியாசிகள்" என்று சிறப்பாக அடைமொழி கொடுத்து உண்மை நிலையை உணர்த்தியுள்ளார்.

2. எங்ஙனேயோ' என்ற பாடலில் 'சங்கினோடும் நேமி யோடும்' (5.5.1) என்பதற்கு "ஆழ்வார் தாம் அடையும் பகவானது தன்மைக்குரிய அடையாளமான ஸ்ரீபாஞ்ச சந்யத்தோடும் சக்கரத்தோடும்' என்று அடைகொடுத்துப் பொருள் கூறுவர் இதனால் சங்கு சக்கரங்கள் இறையடை யாளங்கள் என அறியலாயின.

3. 'மின்னுநூல்'(5.5.2) என்பதற்கு, "இறைவடிவுக்கு எடுத்துக் காட்டாக பிராமண தேஜஸ் வெளிப்படுத்தும் திருயஜ் ஜோபவீதம்" என்று பொருள் உரைப்பர்.

### 6.2.2. சிறப்பான முறையில் அடைமொழிகளை விரித்துப் பொருள் கூறல்

பொருள், ஒண்பொருள் என முறையே சொல், தொடர் ஆழ்வார்பாடலில் அமையும்போது 'பொருள்' என்ற சொல்லின் பொருளுக்கு ஆழ்வார் கருத்துக்கு இசைய அடைச்சொல் பெய்து தெளிவுபடுத்தலும், 'ஒண்பொருள்' என அடையோடு கூடிய தொடரின் முதற்கண் உள்ள 'ஒண்' என்னும் அடைச்சொல் எந்த நோக்கத்தில் ஆழ்வாரால் இடப்பெற்றது என ஊகித்து அந்த அடையினை விளக்குதலும் சீயரின் இயல்பாகும். மேலும் ஒரு சொல்லுக்குத் தரும் அடைமொழி அந்தச் சொல்லை விரித்துக் காட்டுவதாகவே அமைந்துள்ளது.

**சான்றுகள்.**

1. 'குரைகழல்' (4 3.6)—" அடியார்களைக் காப்பாற்றும் சிறப்பு தோற்றும்படி ஒலிக்கிற வீரக் கழலையுடைய திருவடிகள்", இங்குக் கழலுக்கும் அக்கழல் ஒலிப்பதற்கும் அடைமொழியை விரித்துப் பொருள் வழங்குகிறார்.

(2) 'நீள்கழல்' (5.9.4) கழலுக்கு நீட்சியாவது "எல்லார் தலையிலும் சென்று பொருந்தும்படி வளர்த்தியையுடைய திருவடிகள்."

**6. 3. சொல்லை முன்பின்னாக மாற்றிப் பொருள் கோடல்**

ஒன்றுக்கொன்று தொடர்புடைய சொற்களைத் தொடுத்துப் புதுவகையில் முன்பின்னாக மாற்றிச் சீரிய பொருளை வழங்கு வதும் இவர்தம் உரைப்போக்கு ஆகும். இதனால் உரைப் பெருமை சிறக்கிறது.

**சான்றுகள்:**

(1) 'போதுவாழ் புனந்துழாய்' (3.1.6)—'போது புனம் வாழ் துழாய்' என்று மாற்றிப் "பூவை யுடைத்தான நன்னிலத்தில் செவ்வித் துழாயாலே அலங்கரிக்கப்பட்ட" என்று சிறப்பாகப் பொருள் வழங்குகிறார்.

(2) ' சுமந்து மாமலர் நீர்சுடர் தூபங்கொண்டு" (3.3.7)—'மா' என்பதை மலர், சுடர், நீர், தூபம் ஆகியவற்றோடு சேர்த்து, 'மாமலர், மாநீர், மாசுடர், மாதூபம் சுமந்துகொண்டு' என்று மாற்றி, "ச்லாக்யமான புஷ்பங்களையும், நன்றான ஜலத்தையும், விலக்ஷணமான தீபத்தையும், அகரு தூபத்தையும் ஸாதரமாக வஹித்துக் கொண்டு" என்று உரை வழங்குவர்.

(3) 'அவனென்றே கிடக்கும்' (3.3.5)— 'அவனே என்று கிடக்கும்' என்று மாற்றிப் பொருள் கூறுவர் சீயர்.

**6. 4. இடைச்சொற்களுக்குச் சிறப்புப் பொருள் தருதல்**

'யாவையும் யவரும் தானாய்' (3.4.10) என்ற பாடலில் 'அவனையும் கூடலாமே' என்ற இடத்தில் 'கூடலாமே' என்பதி லுள்ள ஏகார இடைச்சொல்லுக்கு உறுதிப்பொருள் கூறுவர். அதாவது, 'ஏ—நிச்சிதம்' என்று சுட்டிக்காட்டுவர்.

இங்ஙனம் ஏகாரம், ஓகாரம், வேற்றுமை உருபு, உம்மை ஆகிய இடைச்சொற்களுக்குச் சீயர் நயம்பெறப் பொருள் தருகி றார். வியப்பு, எதிர்மறை, சிறப்பு, எண்ணுப்பொருள், இசைவுப்

பொருள், தேற்றம், வினாப் பொருள் என்ற ஆறு பொருள்களில் ஏகாரம் வந்த இடங்களும், அதே போல் உம்மை, ஓகார இடைச் சொற்கள் வந்த இடங்களும் சீயர் உரையில் காணப்படுகின்றன. இவை விரிவாக 'இலக்கணப் புலமை' என்ற இயலில் இயம்பப்படுகிறது.

### 6. 5. விளக்கவுரை தருதல்

ஆழ்வாரின் ஈரச் சொற்களில் அவரது மனநிலைக்கு ஏற்பக் கருத்துக்கள் சுருக்கமாகச் செய்யுளின்பம் நோக்கி நிற்கின்றது. உரைவகுத்த உரையாசிரியர்கள் ஆழ்வாரின் மனநிலைக்குத் தகுந்தவாறு தொடர்களை விரித்துரைப்பர்.

சான்றுகள் :

(1) "மாசூணாச் சுடருடம்பாய் மலராது குவியாது
மாசூணா ஞானமாய் முழுதுமாய் முழுதியன்றாய்
மாசூணா வான்கோலத் தமரர்கோன் வழிப்பட்டால்
மாசூணா வுணபாத மலர்ச்சோதி மழுங்காதோ"
(3.1.8.)

என்ற பாடலில், மிக்க அறிவுடையனாகப் பிரமன் திருந்தி இறைவனைத் துதித்தலில் தலைப்பட்டாலும் இறைவனின் ஒளி மழுங் காதோ' என்று ஐயமுறுகிறார் ஆழ்வார். அதாவது, இறைவன் குற்றமற்ற ஒளி வடிவையுடையவன்; குறைவும் மலருதலும் இல் லாமல், ஐயம் தெளிவு என்ற குற்றமுமில்லாமல் அறிவைத் தன் வயமாகக் கொண்டு எல்லாக் கல்யாண குணங்களோடும் விண்ணாடு மண்ணாடு ஆகியவற்றைத் தனக்கு இட்ட வழக்காக வுடையவன்; இப்படிப்பட்ட இறைவனை ஒரு பிரமன் குற்றமற்ற சிறந்த அறிவால் துதிசெய்ய ஒருப்பட்டால், இறைவன் திருவடித் தாமரைகளுடைய ஒளியானது மழுங்குமாம். ஏனெனில், இயற் கையான ஒளியுடைய திருவடிகளுக்கு இறைவனால் படைக்கப் பட்ட பிரமன் கிட்டித் துதிக்கை இழுக்கு என்னும் கருத்தை இதன்வழி தெரிவிக்கிறார் சீயர். இவ்வாறு கூறியது 'உன பாத மலர்ச்சோதி மழுங்காதே' என்ற இறுதித் தொடரை விளக்கம் செய்ததாகும்.

(2) "திருவருள் செய்பவன் போலஎன் னுள்புகுந்து
உருவமும் ஆருயிரும் உடனே யுண்டான்
திருவளர் சோலைத்தென் காட்கரை யென்னப்பன்
கருவளர் மேனிஎன் கண்ணன் கள்வங்களே" (9.6.5)

என்ற பாடலில், "அடியார் சொற்படி கேட்பவனான கண்ணன், ஆழ்வாருக்கு உதவி செய்பவன் போல உடல் ஆன்மா பாகு பாடறத் தான் உள்ளே புகுந்து இனிமையாம்படி கவர்ந்துகொண் டான்" என்று உரையிடுகிறார். இவ்விடத்தில் அவனுடைய கள்வங் களை 'என் கண்ணன் கள்வங்களே' என்று வியப்படைவதாக உரை வழங்குகிறார். அதாவது, 'கள்வங்க ளிருக்கிறபடி!' என்ற வியப்பைத் தொடரும் வகையில் சீயர் அதனை விவரித்து, உதவி செய்பவரைப் போலே இனிமையாய் வருகையும், தான் அநுபவிப் பவனாய்க் கொண்டு தன்னாலே உபகரிக்கப் பட்டவனாகையும், உடல் ஆன்மா பிரிவை ஆழ்வாருக்குப் பிரிப்பிப்பாரைப் போலே வருகையும், இறைவனே உடல் ஆன்மா பிரிவு செய்யாமல் அநு பவிக்கையும், அதனால் வடிவில் ஒளி பிறக்கையும் சில செயல் களானவை என்று முடித்துக்காட்டுகிறார் சீயர்.

## 6. 6. வினாத் தொடர் அமைப்பு

பாசுரங்களின் குறிப்பை உட்கொண்டு நிற்கும் தொடர்களில் ஆழ்வாரின் அகத்தே உருவான வினாக்களை வெளிப்படுத்தும் வகையில் சீயர் உரை வழங்குவர். இந்த உத்தியை வைணவ உரையாசிரியர்களான நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை ஆகியோரின் அடிச்சுவட்டைப் பின்பற்றியே சீயர் தழு வினர் என்பது அவர் உரையின் வழிப் புலப்படுகிறது.

சான்று :

"உலக முண்ட பெருவாயா வுலப்பில் கீர்த்தி யம்மானே
நிலவுஞ் சுடர்சூ ழொளி மூர்த்தி நெடியாய் அடியே
னாருயிரே
திலத முலகுக் காய்நின்ற திருவேங் கடத்தெம் பெருமானே
குலதொல் லடியே னுனபாதங் கூடு மாறு கூறாயே" (6.10.1)

ஆழ்வார், "எல்லா வுலகங்களைக் காக்கும் 'தன்மைகளைக் கொண்டு திருமலையில் கிட்டி இருக்கிறவனை எப்போதும் அடி மைத் தன்மை யுடையவனான தான் கிட்டும் வகை அருளிச்செய்ய வேணும்" என்று இப்பாடலுக்குத் தோற்றுவாய் அமைத்துள்ளார் சீயர். இப்பாடலில் 'கூடுமாறு கூறாயே' என்ற ஆழ்வாரது ஏக்க வினாவை நெஞ்சில் கொண்டு, உலகத்தை, உண்ட பெருவாயை, உலப்பில் கீர்த்தியை...ஆழ்வார் எப்படியெப்படி எல்லாம் நினைந்து உள்ளம் உருகி ஏங்கிப் பாடியிருப்பார் என்று கற்

பித்துப் பின்வரும் 18 வினாத் தொடர்களின் வழி அதனைப் புலப் படுத்துகின்றார்.

1. 'உலகம்' என்ற சொல் அடிப்படையில், 'பிரளய ஆபத்திலேயோ காப்பாற்றுவது? பிரிவின் ஆபத்தில் காப்பாற்றலாகாதோ? என்றும்,
'உலகமெல்லாம் ஈடுபடிலோ காப்பாற்றுவது? அது என் ஒருவனுக்கு உண்டானால் காப்பாற்ற லாகாதோ? என்றும்,
'துக்கத்தை அறியாதாரையோ காப்பாற்றுவது? துக்கம் அறிந்து கூப்பிட்டாரைக் காப்பாற்றலாகாதோ? என்றும்,
'இரக்கும் தன்மை இல்லாதாரையோ காப்பாற்றுவது? ஆசைப்பட்டாரைக் காப்பாற்றலாகாதோ? என்றும்,

2. 'உண்ட' என்ற சொல் அடிப்படையில்,
'வயிற்றிலே வைத்தோ காப்பாற்றுவது? வடிவுகாட்டிக் காப்பாற்றலாகாதோ?' என்றும்,

3. 'பெரு' என்ற சொல் அடிப்படையில்;
'உனது அதிகமான ஆசைக்கு இலக்கானவரையோ காப்பாற்றுவது? உன் பக்கலில் அதிகமான ஆசையுடையாரைக் காப்பாற்றலாகாதோ?' என்றும்,

4 'வாய்' என்ற சொல் அடிப்படையில், வாயாலேயோ காப்பாற்றுவது? வார்த்தையாலே காப்பாற்றலாகாதோ? என்றும்,

5. 'உலப்பில் கீர்த்தி' என்ற சொல் அடிப்படையில், எல்லையற்ற குணங்களை அறிய மாறியா காப் பாற்றுவது? அந்தக் குணங்களை அநுபவிக்கும்படி செய்து காப்பாற்றலாகாதோ? என்றும்,

6. 'அம்மானே' என்ற சொல் அடிப்படையில், உறவு (ஸ்வாமித்வம்) அறியாத உலகையோ காப்பாற்றுவது? உறவறிந்த விஷயத்தை—என்னைக் காப்பாற்றலாகா தோ? என்றும்,

7. 'நிலவும் சுடர்சூழ் ஒளிமூர்த்தி' என்ற பதங்களின் அடிப்படையில்,
வடிவின் பெருமை யறியாதாரையோ காப்பாற்றுவது? வடிவின் பெருமை அறிந்தாரைக் காப்பாற்றலாகாதோ? என்றும்,

8. 'நெடியாய்' என்ற சொல் அடிப்படையில், பெருமை உணராதாரையோ காப்பாற்றுவது? பெருமை உணர்ந்த என்னைக் காப்பாற்றலாகாதோ? என்றும்,

9. 'அடியே னாருயிரே' என்ற சொல் அடிப்படையில், உன்னைப் பாராதபோது தரிப்பாரையோ காப் பாற்றுவது? உன்னைப் பாராதபோது தரியாத என்னைக் காப்பாற்றலாகாதோ? என்றும்,

10. 'திலத முலகுக்காய் நின்ற திருவேங்கடத்தானே' என்ற தொடர் அடிப்படையில்,
கண்டு பற்றுகைக்கு அறிவில்லாதாரையோ காப்பாற்றுவது? கண்டு பற்றுகைக்கு எளியன் என்று அறிந்தாரைக் காப்பாற்றலாகாதோ? என்றும்,

11. 'குலதொல் அடியேன்' என்ற சொற்களின் அடிப்படையில்,
மற்றவர்கட்கு ஆட்பட்டாரையோ காப்பாற்றுவது? மற்றவர்கட்கு ஆட்படாது உனக்கே ஆட்பட்ட அடியாரைக் காப்பாற்றலாகாதோ? என்றும்,

12 'உனபாதம்' என்ற சொல் அடிப்படையில்,
வேறொன்றை உபாயமாகப் பற்றினாரையோ காப்பாற்றுவது? வேறொன்றை உபாயமாகக் கொள்ளாமல் உன்னையே உபாயமாகக் கொள்பவரைக் காப்பாற்றலாகாதோ? என்றும்,

13. 'கூடும்' என்ற சொல் அடிப்படையில்,
வேறு பயனைக் கருதுபவர்களையோ காப்பாற்றுவது? வேறு எந்தப் பயனையும் விரும்பாது உன்னையே பயனாக விரும்புபவரைக் காப்பாற்றலாகாதே? என்றும்,

14. 'ஆறு' என்ற சொல் அடிப்படையில்,
பிரிய நினைப்பாரையோ காப்பாற்றுவது? கூட நினைப்பாரைக் காப்பாற்றலாகாதோ? என்றும்,

15. 'கூறாயே' என்ற சொல் அடிப்படையில்,
பெரிய தொழில்களைச் செய்தோ காப்பாற்றுவது? 'மாசுச:' என்று கூறிக் காப்பாற்றலாகாதோ? என்றும்,

பாட்டிலுள்ள சொற்களின் பின்னணியில் ஆழ்வார் மனத்தே எழுந்த அவலமாப்பைத் தொகுத்துக் காட்டுகிறார்.

6. 7. அருஞ்சொல் விளக்கம்

ஆழ்வார் சொற்களுக்கு அருமையாக விளக்கம் தரும் வகையில் பாடலின் பொழிப்புரை முடிந்தவுடன் சீயர் ஆங்காங்கே அரிய பொருள் தந்து தெளிவு பெறச் செய்கிறார். பெரும்பாலும் சீயர் காட்டியதிலிருந்தே சில சொற்களுக்குப் பொருள் அறிய வேண்டியுள்ளது என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது. படிப்போரின் எளிமை நோக்கிப் பாடலில் பரந்த சொல் விளக்கத்தைப் பதிகந்தோறும் உள்ள பாடல்களில் சிலவற்றுக்குக் சிறப்பாகத் தந்துள்ளது பின்னிணைப்பில் அகர வரிசையில் அமைக்கப்பட்டுள்ளது. (பின் இணைப்பு 6).

சீயர் தரும் அருஞ்சொற்கள் தவிரவும், உரையில் வரும் அருஞ்சொற்களை ஆராயின், சீயர் ஒரு சொற்களஞ்சியம் எனத் தோன்றும். சீயரால் ஆளப்பட்ட சொற்கள் யாவும் அவர் வாழ்ந்த காலம், இடம், நிலைமை குறித்து வழங்கி வந்தவற்றை விளக்கும் வகையில் உள.

'ஏறிட்ட கட்டி' — வீசப்பட்ட கல்;
'இறாயாதே' — பின்வாங்காமல்;
'பரகுபரகற்று' — பரபரப்பின்றி,

என்று பலவாறான சொற்கள் ஆளப்பட்டுள்ளன. (பின் இணைப்பு—7)

6.8. அடுத்து உரையில் எடுத்தாளப்பட்ட மேற்கோள்களின் வழிச் சீயரின் காவியக் கல்வி நயமும், வடமொழி நூற்புலமை நலமும் ஒருங்கே புலப்படக் காணலாம்.

6.8.1. காவியக் கல்வி

சீயரின் காவியக் கல்விநலன் அவர்தம் உரையில் சிறிய முறை யில் அமைந்துள்ளது. ஆழ்வார் சொல்லில் உட்பொதிந்த காவியக் கருத்துக்களைத் தெரிவிக்கும் வகையில் உரைவழங்கிய இடங்கள் சில.

சான்றுகள் :

1. 'பிரான் பெருநிலங் கீண்டவன்' (1.7.6) என்ற பாடலில், 'மராமரம் எய்த மாயவன்' என்ற தொடருக்கு இராமாயணத்தி லுள்ள மராமரம் எய்திய நிகழ்ச்சியைக் காட்டி உரை வழங்கு கிறார். அதாவது, சுக்ரீவன் வாலியின் ஆற்றலையும் இராமனின் மென்மையையும் கண்டு ஐயுற்றான். சுக்ரீவனின் ஆணைபேரில் அவனை நம்பச் செய்ய, இராமன் அம்பெய்ய அது ஏழு ஆச்சா மரங்களையும் பிளந்து, அந்த மலைச் சாரலையும் பிளந்து

கொண்டு, பூமியுள் புகுந்து, மீண்டும் வெளிப்பட்டு, இராமனது அம்பறாத் தூளியில் புகுந்தது. இக்கருத்தை 'மராமரம் என்றவளவில் நில்லாதே ஏழு மரமும், மலையும், பாதாளமும் உருவிச்செல்லும்படி எய்தவியப்பு' என்று நயம்பெறக் கூறுகிறார்.

2 'ஊர்ந்த சகடமுதைத்த' (5.3.3) என்ற பாடலின் தொடர்ப் போக்கில் கண்ணன் முதலில் சகடத்தை உதைத்ததையும், பின்னர் பேய்முலை சுவைத்ததையும் காட்டியுள்ளார். இதற்கு உரையிட்ட சீயர் பேய்முலை சுவைத்தது முன்னரே என்பது தோற்ற, 'பேய்முலை சார்ந்து சுவைத்த செவ்வாயன்' என்பதற்குச் 'சகடத்தை முறித்து அது வயதான போது என்று நினைக்கும்படி மிகவும் குழந்தையான நிலையிலே பேய் முலையைத் தாய்முலைபோலே நெஞ்சு பொருந்திச் செறிந்து உயிரோடே கூட முலைப்பால் உலர்ந்துபோம்படி உண்ட சிவந்த திருப்பவளத்தையுடையவன்' என்று பொருத்திக் காட்டுகிறார்.

### 6.8.2. வடமொழி நூல் புலமை நலம்

வடநூல்-துறையில் வல்லுநரான சீயர் வடமொழி நூல்களை மேற்கோளாகக் காட்டுவதோடு மட்டுமல்லாமல் வடமொழி நூல் கலந்த நடையை மேற்கொண்டும் உரை வழங்கியுள்ளார்.

சான்று :

'ஏறேலேழும் வென்று' (2.9.10) என்ற பாடலில் ஆழ்வார் 'இறைவனுடைய பளபளப்பான திருவடிகளிலே சடக்கென என்னைச் சேர்த்து வேறு விஷயங்களை நினைத்து வேறு போகும்படி எல்லாக் காலத்திலும் விடாதொழிய வேணும்' என்று வேண்டுகிறார். இதற்கு உரைவழங்கிய சீயர் முடிவில், "விதி நிர்மிதமான இந்த அந்வயத்தைப் பாலநம் பண்ணி விடாதொழிய வேணும் என்று கருத்து" என்பர். இத்தொடரைக் காணும்போது, ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ர ரத்னத்தின் 51ஆவது பாடலில், "விதிநிர் மிதமேத தந்வயம் பகவந் பாலய மாஸ்ம ஜீஹப:" என்ற தொடரை மனத்தில் கொண்டு சீயர் இங்கு இச்சொல் லாட்சி செய்து உரை வழங்குகிறார் என அறிய முடிகிறது. அதாவது ஆளவந்தார் சுலோகத்தில் "உன் அருளாலே ஏற்பட்ட இந்த ஸம்பந்தத்தைக் காப்பாற்றிக்கொள்; கைவிட வேண்டாம்" என்று வேண்டுவதாக உள்ளது.

### 6.9. உவமைகள்

சீயர் ஆங்காங்கே கருத்து விளக்கத்திற்காகச் சில உவமைகளைப் பயன்படுத்தியுள்ளார். அவை நயமானவை.

இறைவனின் சிறப்பினை எடுத்து உணர்த்தவல்ல உவமைகள், தாமான தன்மையை விட்டுத் தலைவி, தோழி, தாய் முதலான மற்ற நிலைகளிண்டான ஆழ்வாரின் ஆராத காதலைக் காட்டும் உவமைகள், மற்றும் மருத்துவம், அன்றாட வாழ்க்கை இவற்றைப் பற்றிய உவமைகள் என அவை பல. அவை நான்காவது இயலில் குறிப்பிடப்பட்டுள்ளன.

## 6.10. புதுப் பொருள் இடத்திற்கேற்பக் கூறுதல்

சீயர் தமது சிறந்த அறிவாற்றலால் ஆழ்வார் சொற்களுக்கு இடத்திற்கு ஏற்பப் புதுமையான பொருள்கள் வழங்கிச் செல்வர். இவை பெரும்பாலும் உரைக்குச் சிறப்புத் தருவனவாகவும், ஆழ்வாரின் ஆழ்ந்த எண்ணங்களை விளக்குவனவாகவும் இருப்பன.

சான்றுகள்:

1. 'வண்ண மாமணிச் சோதியை' (2.7.13,36படி) என்ற பாடலில் 'கண்ணனை' என்ற சொல்லுக்கு ஈட்டில் 'அவர்களே அநுபவித்துப் போகாமே, இங்குள்ளாரும் அநுபவிக்கும்படி கிருஷ்ணனாய் வந்து அவதரித்தவனை' என்றே உள்ளது. ஆனால் சீயர் உரையில் இச்சொல்லுக்கு, 'அடியார்களைத் தானே அநுபவிக்குமவன்'' என்று புதுமையாகப் பொருள் கூறுவர். இவ்வாறு வழங்குவதற்குக் காரணமாகப் பாடலில் அடுத்த சொல்லான 'நெடுமாலை' என்பதற்கு, 'அதுக்கு அடியான எல்லையற்ற மையல் குணத்தையுடையவனை' என்று பொருள் வழங்குவர். 'அதுக்கு அடியான' என்பது 'அடியார்களைத் தானே அநுபவிப்பதற்குக் காரணமான' என்பதாகும்.

2. 'உய்ம்மின் திறைகொணர்ந்து' (4.1.2) என்ற பாடலில் இறைவனின் திருமுடியின் தன்மையைக் கூறும் சொல்லான 'செம்மின் முடி' என்பதற்கு, 'தடங்கலற்ற ஒளியையுடைய (அப்ரதிஹததேஜஸ்) அபிஷேகத்தையுடைய' என்று புதுமையாகப் பொருள் கூறுவர். அதாவது 'செம்' என்று நேர்மையைச் சொல்லி, அதன் ஒருபடிப்பட்டிருத்தலுக்குத் தடங்கலற்று இருத்தலைச் சொன்னார். ஆனால் ஈட்டில் 'சிவந்து மின்னாநின்றுள்ள முடியையுடைய' (4 12, 36) என்றே உள்ளது

## 6.11. நுட்ப வுரை

சீயர் தரும் உரை நுண்மையாகக் கற்பனைச் செறிவோடு அமைந்துள்ளது. பொருள் தெளிவும், கருத்துச் சிறப்பும் இத்தகைய நுட்ப உரைகளால் விளங்குகின்றன.

**சான்றுகள்:**

1. 'என்னுடைக் கோவலனே என் பொல்லாக் கரு மாணிக்கமே' (7.6.5) என்ற தொடரிலுள்ள 'பொல்லாக் கரு மாணிக்கமே' என்பதற்கு, "தொளையாத நீல மணிபோலே எனக்குக் குறையாது இனிமையானவனே" என்று பொருள் தருகிறார். இவ்விடத்தில், மாணிக்கம் இயற்கையாகச் சிவப்பாயிருப் பினும் இறைவன் நிறமான கருமை கலந்து நீல மணியாக ஒளி பெற்றதாகக் கொள்ளத்தகும். மேலும் தொளைத்த மணி ஒளி குறையும். ஆதலால் தொளையாத இயற்கையான மாணிக்கத்தின் மிக்க ஒளி குன்றாதிருப்பது போலே இறைவன் ஒளியும் குன்றாமல் இருக்கிறபடியைத் தெரியப்படுத்தத் தொளையாத என்று சீயர் குறிப்பால் தெரிவிக்கிறார்.

2. மற்றொரு பாடலில் 'மயக்கா வாமனனே' (7.8.6) என்பதற்கு, "வடிவாலும் நடையாலும் வார்த்தையாலும் மகாபலியினுடைய நெஞ்சு கலங்கும்படி பண்ணின வாமனனே" என்கிறார். இவ்விடத்தில் 'மயக்கா' என்பதற்கு மயங்கும்படி பண்ணின என்றே பொருள் கூறியிருக்கலாம். அதுவே நிறை பொருள். ஆனால் வாமனனே என்று அடுத்துவரும் சொல் நோக்கி மாவலி மயக்கத்துக்கு ஆளானதையும் சுட்டுதல் உரை யியல்பே. ஆனால், மகாபலி நெஞ்சை எவ்வெவ்வாறு கலங்கப் பண்ணினான் என்று தம் நெஞ்சில் கற்பித்துக் குழந்தை வடிவை, நடையை, வார்த்தையைக் குறிப்பிட்டது இவர்தம் கற்பனைத் திறம் வாய்ந்த உரைக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும். அறிவுக்குப் பொருந்தும் சொற் பொருளோடு அமைந்துவிடாமல் சொல்லை உணர்வுக்கும் பொருளாக்கி நுட்ப மாக உரை வகுத்தது குறிப்பிடத் தக்கதாகும்.

3. 'ஒராயிரமாய்' (9.3.1) என்ற பாடலில் 'காராயின காள நன்மேனியினன்' என்பதற்குக் 'காளமேகம் போலே கருமை யாய் அப்ராக்ருதமான திவ்ய திருமேனியை உடையன்' என்று பொருள் தருகிறார். இவ்விடத்தில் 'நல்' என்பதற்கு 'அப்ராக்ருத மான' (செயற்கை கடந்த) என்று பொருள் தந்தார் அதாவது, இவ்வுலகத்திலுள்ள பஞ்ச பூதங்கள் கலவாத, ப்ராக்ருதமல்லாத, அப்ராக்ருதமான திருமேனி என்று பரமபதத்தில் உள்ளபடியைக் காட்ட 'நல்' என்பதற்கு இவ்வாறு பொருளுரைத்தார்.

### 6. 12. பண்டைய நாகரிகம்

தமிழ் இலக்கிய நூல்கள் யாவும் அந்தந்தக் கால நாகரிக, பழக்க வழக்கங்களைக் கொண்டு அமைந்துள. அவற்றை இனங்கண்டு எடுத்து உரைப்பதும் எளிது. ஆனால் ஆழ்வார்

அநுபவித்த இறைவனின் தன்மைகளைப் பற்றியே உரை அமைந்ததால், இவர்தம் உரையில் நாகரிக, பழக்க வழக்கங்களை நன்கறிய வழியில்லை. இருப்பினும், ஆழ்வாரின் போக்குக்கேற்ப ஆங்காங்கே பாடல்களின் தொடருக்குப் பொருத்தமாக வழங்கிய அக்காலப் பழக்க வழக்கங்கள் தொடர்பான உணவு, தொழில், விளையாட்டு முதலான சில செய்திகள் உள.

6. 12. 1. உணவு

இனிய உணவாக மட்டுமல்லாமல் நல்ல மருந்தாகவும் பால் உட்கொள்ளப் பெற்றது. (4.6.3.)

பசித்தவருக்கு ஒரு பிடி சோற்றை யிட்டுவரும் பழக்கம் இருந்தது. (4.7.9)

கண்ட போதே பழத்தைச் சாப்பிட்டு வந்தனர். கோதற்ற இனிய கருப்பஞ்சாறு குடித்து வந்தனர். எல்லாவற்றாலும் இனிமையுடைய கற்கண்டைக் கறித்து வந்தனர்; எல்லா இனிமையும் ஒருங்கே அமையப் பெற்ற தேனை உண்டு வந்தனர் (3 5.6)

6. 12. 2. பிச்சை

இரவில் பிச்சை எடுக்கும் தொழில் நிலவி வந்துள்ளது. (4. 1. 1)

6. 12. 3. தொழில்

காட்டில் பழம் பறிக்கத் துவருட்டின உடைத்தோலைக் கொண்டனர். (4.8.4.)

கடலில் முத்துக் குளிக்கும் பழக்கம் இருந்து வந்தது. (8.2.11)

6. 12. 4. பசுவளர்ப்பு

பால் கறக்கைக்குக் கருவியாக மூங்கில் குழாயைப் பயன் படுத்தி வந்தனர். பசுக்கள் பாயாமல் இருக்க வீசுகோலை உபயோகப்படுத்தினர். பசுக்கள் ஒலிகேட்டு வருகைக்குத் தங்கள் அரையில் மணி கட்டி வந்தனர். (4. 8. 4) இடையர்கள் குழல் ஊதலாலே பசுக்கள் அவர்களை வந்து அடையும் பழக்கம் இருந்து வந்தது. (6. 4. 2)

6. 12. 5. தாய்-பிள்ளை உறவு

தாய் தந்தையர்கள் ஒரு நிலைமையில் தாம் பெற்றெடுத்தவர்களைப் போகட்டுச் சென்றனர். (3. 6. 9)

6. 12. 6. பழக்க வழக்கங்கள்

சுரம் பிகுதியானவர்கள் பரவசப்பட்டுக் குலைந்து எழுந்து உலாவுவார்கள். (5. 4. 1)

விரும்பிய பொருளைக் கண்டால் கழுத்தைத் தழுவும் பழக்கம் இருந்து வந்தது. (7. 2. 9)

மாமிசம் நிறைந்ததாய்ப் பிடரியில் பிசல் பெருகும்படி அக்கால மக்கள் சிலர் உடம்பை வளர்த்து வந்தனர். (3. 5. 7)

6. 12. 7. விளையாட்டு

இலையாலே செய்யப்பட்ட குழலைப் பயன்படுத்தி வந்தனர். (9..9. 2)

விளையாட்டுப் பந்துகள் செந்நூல், வெண்நூல், கருநூல் ஆகிய மூன்று வித நூலால் செய்யப்பட்டு மூன்று நிறமும் பெற்று விளங்கின. (6. 2. 1)

6. 12. 8. பூசைக்குரிய மலர்கள்

பூசைக்கு உறுப்பாகத் தாமரைப் பூக்களில் மயிர், சோறு, புழு மூன்றும் படாதபடி ஆராய்ந்து இறைவனுக்கு வழங்கி வந்தனர்

6. 12. 9. பொழுதுபோக்கு

குயிற்பிள்ளைக்குப் பருவத்துக்கு ஈடாகக் காலை வேளையில் தயிரோடு கூடிய பழஞ் சோற்றை இட்டு வந்தனர்; மத்தியான வேளைக்குப் பாலும் சோறும் சேர்த்துத் தந்து வளர்த்தனர். (9. 5. 2)

6. 12. 10. நிமித்தம்

முன்னறிந்து கூறும் நிமித்தம் இருந்து வந்தது. (6. 2. 1)

6. 12. 11. கொள்ளையும் காவலும்

குறும்பர்கள் அரசன் இல்லாத நாட்டை அழித்து வந்தனர். (7. 1. 6)

குற்றவாளிகளைப் பிடிக்கும் முயற்சி 'ஊரை வளைத்து ஒருவனைப் பிடிக்குமா போலே' மேற்கொள்ளப்பட்டு வந்தது (3. 2. 4; 10. 7, 4)

## 6. 13. பாடபேதம் காட்டல்

ஏனைய உரையாசிரியர்கள் கூறும் பாடங்களிலிருந்து வேறுபட்டுச் சீயர் தம் உரையில் மேற்கொண்ட பாடங்கள் 77 இடங்களில் காணப்படுகின்றன. (பின் இணைப்பு 8). இவை யாவும் மூல பாடம் என்றதன் கீழ்ப் பழைய பதிப்பான சே. கி. பதிப்பின் அடிப்படையில் காணப்பெற்றனவாகும். சீயர் சில இடங்களில் தம் பாடம் குறித்தும், வேறு சில இடங்களில் பிறர் பாடம், அதற்குரிய பொருள் ஆகிய இரண்டையும் விளக்கும் வகையிலும் பாடபேதம் குறித்துச் செல்கிறார்.

தம்முடைய உரையில் எடுத்துக் காட்டிய பாட வேறுபாடு களில் பெரும்பாலும் உரைப்போக்கில் வேறுபடுத்திக் கொள்ள வேண்டியதாக உள்ளது. மேலும் இலக்கணப் பாடம் பற்றியும் பேதம் கொள்ள வகை செய்கிறது.

சான்றுகள் :

'நலங்கழல் வணங்கி' (1. 3 8) என்னும் பழைய பாடத்தை மாற்றி, 'நலங்கழல் வணங்கின்' என்று பாடபேதம் கொண்டு பொருள் கூறுகிறார் சீயர். இறுதியில் 'வணங்கி' என்ற பாட மாய் 'வணங்க' என்று திருத்திச் சொல்வாரும் உளர் என்று நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை ஆதரித்த பாடத்தைச் சுட்டிக் காட்டுகிறார்.

'நினைந்து நைந்து' (1.5.1) என்று பழைய பாடத்தைப் போற்றிப் பொருள் கூறிய பின்னர், 'இனைந்து நைந்தே' என்று பாடமாய் இனைதல்-வருந்துதல் என்றும் சொல்வாரும் உளர் என்பர். இது மற்ற உரைகளில் காணவில்லை. அவ்வாறே, 'தாளிணை மேலணி' (4.2.1) என்ற பழைய பாடத்தை ஏற்றுப் பொருள் கூறி, 'காலிணை மேலணி தண்ணந் துழாய்' என்று பாடம் சொல்லுவாருமுளர் என்பர்.

'மொய்யநீள் குழல்தாழ்ந்த தோள்களும்' (5. 5. 8) என்ற இடத்தில் பழைய பாடமாக உள்ள 'மொய்யநீள்' என்பதைச் சீயர் 'மொய்கொள் நீள்குழல்' என்று பாடம்கொண்டு, 'செறிவை உடைத்தாய் நீண்ட குழல்கள்' என்று பொருள் தருவர்.

அவ்வாறே, 'நாடுடை மன்னர்க்குத் தூது செல் நம்பிக்கு' (6.6.4) என்ற இடத்தில் 'தூது செல் நம்பி' என்றே எல்லாரும் ஆதரித்த பழைய பாடத்தைத் தம் பெரிய போதத்தால், 'தூது செய் நம்பிக்கு' என்று பாடமாய்க் கொண்டு 'தூது காரியத்தைச் செய்துகாட்டி அத்தாலே நிறைவாளனானவன்' என்று உரை நயம் பெற உரைப்பர்.

இலக்கண நோக்கில் பாடபேதம் பற்றிக் காணும்போது, 'தெண்திரை சூழ்ந்தவன்' (7.3.8) என்றே பழைய பாடமாய் 'தெளிந்த திரைகளாலே சூழப்பட்டு அவன்...' என்று பொருள் வழங்கியபோது, சீயர் தம் மதிநுட்பத்தால், 'தெளிந்த நீர்த்திரையை உடை த்தாகையாலே குளிர்ந்ததாய் (ச்ரமஹரமாய்) காதலைப் பெருக்க வளைத்தவன்...' என்று பொருள் கொள்வதை நோக்குங்கால், 'தென்திரைச் சூழ்ந்தவன்' என்று சகர ஒற்று சேர்த்து உருபும் பயனும் உடன்தொக்க தொகைப் பொருளில் வழங்குவது காணலாம்.

இவ்வாறு, சீயர் தாம் மேற்கொண்ட பாடம் காட்டியதோடு, முன்னோர்கள் உரைத்த பாடத்தையும் ஆங்காங்கே சுட்டிக் குறிப்பிட்டுள்ளமை அவருக்குள்ள சிறந்த புலமையையும், பரந்த மனப்பான்மையையும் புலப்படுத்தவல்லன.

## முடிபுகள்

இவ்வியலில் கீழ்க்கண்ட முடிபுகள் பெறப்படுகின்றன.

1. தொடர்களைப் புதிய பொருளில் சீயர் விரித்துள்ளார்.

2. ஆழ்வார் உள்ளத்துணர்வுக்கேற்பச் சொற்களுக்கு அடைமொழி இட்டும், ஆழ்வார் அமைத்த அடைமொழிக்கு அழகு தருமாறு விரித்துப் பொருள் தந்தும் சிறப்பித்துள்ளார்.

3. பாடல் சொற்களை முன்பின்னாக மாற்றிப் பொருள் கூறியுள்ளார்.

4. ஏ, ஏ முதலான இடைச் சொற்களுக்குச் சிறப்பாகப் பொருள் தந்துள்ளார்.

5. உணர்ச்சிக் கொந்தளிப்பில் சுருக்கமாக அமைந்த சொற்களுக்கு விளக்கம் வழங்கியுள்ளார்.

6. ஆழ்வாரின் அலமாப்பிற்கு ஏற்ப அலமாப்பின் ஆழத்தைப் புலப்படுத்தத் தக்கவாறு அலையலையான வினாக்கள் பல வகுத்துள்ளார்.

7. அருஞ்சொற்களுக்குரிய பொருள் வழங்கியுள்ளார்.

8. ஆழ்வார் சொல்லில் பொதிந்து கிடக்கும் இதிகாச, புராண, வடநூற் கருத்துக்களைப் புலப்படுத்த விளக்கமும் மேற்கோளும் பொருந்தும் வகையில் கொடுத்துள்ளார்.

9. உவமை பல கூறியும் நுண்பொருளும் புதுப்பொருளும் புலப் படுமாறு குறித்துள்ளார்.

10. கற்பனைச் செறிவோடு விரித்து, பண்டைய நாகரிக பழக்க வழக்கங்கள், பண்புநலன்கள் ஆங்காங்கே உரைப் போக்கில் பொதிய வைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

11. பாடபேதம் காட்டித் தம் உரையைப் பிறர் உரையினும் நயம் மிக்கதாகச் சீயர் காட்டுகிறார்.

## இயல்—7

# இலக்கணப் புலமை

வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் நல்ல இலக்கணப் புலமை நிறைந்தவர். அவருடைய உரை இலக்கண முறையை யொட்டி எழுதப்பட்டது; ஆங்காங்கே அவர் தந்துள்ள இலக்கணக் குறிப்புகள் அருமையும் நுட்பமும் வாய்ந்தவை. அவை சொல், தொடர், யாப்பு, பொருள் என்னும் வகைப்பாட்டில் அமைந்துள்ளன. ஐந்திலக் கணத்தில் அணி பற்றிய குறிப்புமட்டும் எங்கும் காணப் படவில்லை. இலக்கணப் புலமை என்னும் இவ்வியல், அவர் உரையில் காணும் குறிப்புகளைப் பற்றிய ஆய்வாக அமைகிறது.

## இயல்—7

# இலக்கணப் புலமை

### 7. 1. சீயர் உரையில் இடம்பெறும் அரிய குறிப்பு

திருவாய்மொழி உரைவிளக்கம் செய்தவருள் சொல்லிலக்கணக் குறிப்புகளோடு முதன்முதல் பாசுரங்களின் யாப்பினைப் பற்றிய அரிய குறிப்பும் தந்தவர் இவரே யாவர். இவர் தரும் யாப்புக் குறிப்புகள், யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, வீர சோழியம், தொல்காப்பிய உரையாசிரியர்கள் கருத்தோடு ஒப்ப வைத்து எண்ணப் பெறுகின்றன இவர்தம் அகப்பொருள் சிந்தனைகள் தொல்காப்பியம், அகப்பொருள் விளக்கம். நம்பி யகப்பொருள் விளக்கம் புறப்பொருள் வெண்பா மாலை, பன்னிரு பாட்டியல் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந் திருத்தல் தெளிவு செய்யப்பெறுகின்றன. இவ்வாறு இவர் 'தம் பெரியபோதம்' ஒருவாறு இவ்வியலிலும் நிலைநிறுத்தப் பெறக் காணலாம்.

### 7. 2. சொல், தொடர், யாப்பு, என்ற வகைப்பாட்டின் நோக்கம்

பக்தி யியக்கக் காலத்தில் இலக்கிய எழுச்சியாக ஆழ்வார் களின் பாடல்கள் அமைந்தன. அவற்றுள்,

> "நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழி பக்தி உணர்வுக்கு மட்டுமின்றித் தெளிந்த மெய்யுணர்வுக்கும் கொள்கலமாக அமைந்தது. இதில் உயர்ந்த தத்துவஞானப் பாடல்கள் காணப்படுவதுடன், அகஞ்சார் அருளியற் பாடலான நாயகன்—நாயகி பாவப்பாடலும் அமைகின்றன"[1]

என்பர். இவ்வாறு இலக்கியம் கண்டதற்கு ஏற்ப இலக்கணம் இயம்பப்படுதல் நெறியாதலால், ஆழ்வாரும் 'அளவியன்ற அந்தாதி ஆயிரம்' (1.4.11) என்றே அருளினர் இதனால் திருவாய்மொழி அந்தாதித் தொடையில் அமைந்தது என்பது தெளிவு. அவ்வந்தாதியாவது அளவியன்று இருக்கிறது; அதாவது, "எழுத்துச் சொற்பொருள் யாப்பலங்காரங்களைச் சொல்லுகிற

பிரமாணங்களிலே இருப்பதாய் அந்தாதியான ஆயிரம்'' (1.4.11) என்றே சீயர் உரை வழங்குவர். எனவே, ஆழ்வார் சொற்களின் பொருள் தெளிவு, செறிவு காணவும் சொற்களைப் பிரித்துப் பொருள் அறியவும் இலக்கணத்தைப் பயன்படுத்தி உரைசெய்தனர்.

சீயர் தரும் இலக்கணக் குறிப்புகள் பாடல்களின் விளக்கத்திற்குத் துணையாகும் பான்மை.

### 7. 2. 1. இடைச்சொற்கள்

இடைச்சொல்லானது, வேற்றுமை, வினை, சாரியை, உவம உருவுகள், பின்னர்த் தத்தமக்கு உரிய பொருளை உணர்த்திவருவனவும், வேறு பொருளின்றிச் செய்யுளிசை நிறைத்தலே பொருளாக வருவனவும், அசைத்தலே பொருளாக நிற்பனவும், குறிப்பின் வருவனவுமாக எட்டுத் தன்மையதாகும்.[4] அவற்றுள் சீயர் உரையில் வேற்றுமை உருபுகள், தத்தமக்கு உரிய பொருளை உணர்த்தும் இடைச்சொற்கள், ஆகியன இடம்பெற்றுள்ளன.

### 7. 2. 2. வேற்றுமை உருபுகள்

'தணியும் பொழுதில்லை' (4.6.6) என்ற பாடலில் 'மணியின்' என்பதற்கு 'நீலமணியைக் காட்டிலும்' என்று பொருள் கூறிவிட்டு, முடிவில் 'மணியின் என்கிற ஐந்தாம் வேற்றுமை உவமையாகவும் தகும்' என்று குறிப்பிடுவர்.

'புதுமண முகந்து கொண்டெறியு மாலோ' (9.9 8) என்ற பாடலில் 'சாந்தினில்' என்ற சொல்லுக்குச் 'சந்தனத்தைக் காட்டிலும்' என்று பொருள் கூறியபின்னர், 'சாந்தினில் என்று ஐந்தாம் வேற்றுமை ஒப்புச் சொல்லிற்றாக' உரைப்பர்.

'நினைப்பான் புகில்' (4.1.4) என்ற பாடலில் 'நுண்மணலிற் பலர்' என்பதற்கு 'நுண்மணலிற் காட்டில் அநேகர்' என்று பொருள்கூறி, முடிவில், 'நுண்மணலிற் பலர் என்று ஐந்தாம் வேற்றுமை உவமைப் பொருளாய் நுண்மணல்போலே எண்ணற்றவை' என்றும் கூறுவர்.

'நீள்கடல்' (1.1.7) என்ற பாடலில் 'தலையில்' என்பதற்குத் 'தலையாலே' என்று பொருள்கூறி அதனை ஐந்தாம் வேற்றுமையாகக் குறித்துள்ளார்.

'ஆனானானாயன்' (1.8.8) என்ற பாடலில் 'என்னில்' என்பதற்கு 'என்று சொல்லுமளவில்' என்று பொருள்கூறிப் பின்னர் என்னில் என்று ஐந்தாம் வேற்றுமையாய், என்னிமித்தமாகப் பிண்ணினவை கணக்கற்றவை' என்றும் உரைப்பர்.

'சூழல் பலபல வல்லான்' (1.9.2) என்ற பாடலில் 'அருகலில்' என்பதற்கு 'என் அருகான இடத்தில்' என்று ஏழாம் வேற்றுமைப் பொருள் உரைப்பர்.

'அணியனாகும்' (9.10.8) என்ற பாடலில் வரும் 'திருக்கண புரம்' என்ற சொல்லுக்கு, 'திருக்கண்ணபுரத்திலே' என்று கூறி, முடிவில் 'கணபுரம்' என்று ஏழாம் வேற்றுமை எஞ்சிக் கிடப்ப தாகக் கூறுவர்.

'என்னில்' (1 8.8) என்று "ஐந்தாம் வேற்றுமையாய் என் காரணமாக (நிமித்தமாகப்) பண்ணினவை கணக்கற்றவை (அஸங்க்யாதங்கள்)" என்பர்.

'அருகலில்' (1. 9. 2) என்ற இடத்தில் ஏழாம் வேற்றுமை என்று சுட்டுவர்.

'தாமரைக் கயம்' (8. 9. 9) என்ற இடத்தில் 'கயம்' என்ப தற்குப் 'பரப்பானது' என்று பொருள்கூறி, 'தடவும் கயவும் நளி யும் பெருமை' என்ற தொல்காப்பிய உரியியல் நூற்பாத்தொடர் சுட்டியுள்ளார்.

**7. 2. 3. தத்தமக்குரிய பொருளை உணர்த்தும் இடைச்சொற்கள்**

**7. 2. 3. 1. ஏகார இடைச்சொல்**

சீயர் உரையில் தேற்றம், வினா, எண், இசைவு, வியப்பு, விளி, உறுதிப் பொருள், சிறப்புப் பொருள் ஆகிய ஒன்பது பொருளில் வந்துள்ளமை காணலாம்.

**7. 2. 3. 2. ஏகாரத் தேற்றப் பொருள்**

1. சேர்ந்தேனே (2. 1. 10)
2. சோரேலே (2. 3. 5)

**7. 2. 3. 3.**

1. கோட்பட்டாயே (2. 1.1)

**7. 2. 3. 4. ஏகார எண்ணுப் பொருள்**

1. 'ஆயேயிவ்வுலகத்து (4. 9.7) என்ற பாடலில் 'நோயேமூப் பிறப்பிறப்புப் பிணியே' என்ற இடத்திலுள்ள ஏகாரத்துக்கு எண்ணுப் பொருள் தந்து நோய், மூப்பு, பிறப்பு, பிணி என்று தனித்தனியாகக் காட்டுவர்.

2. 'ஈடும் எடுப்பும்' (1. 6. 3) என்ற பாடலில் 'ஏகாரம் விடாது பாடும்—ஆடும் என்னும் வினைகளோடே கூடிக் கிடக் கிறது' என்று எண்ணுப் பொருளில் குறிப்பர்.

7. 2. 3. 5. ஏகார வெறுப்புப் பொருள்

'எல்லே' (2. 1 3) என்னே என்று வெறுப்பு.
'பரமே' (2. 2. 2) ஏ— வெறுப்பைக் காட்டுகிறது.
'அன்னே' (4. 4. 1) ஏ—வெறுப்பைக் காட்டுகிறது.

7. 2. 3. 6. ஏகார வியப்புப் பொருள்

'எல்லே' (5. 3. 5) என்னே என்றாய் வியப்புப் பொருளில் வந்தது.

7. 2. 3. 7. ஏகார எதிர்மறைப் பொருள்

1. 'யாரே' (1. 3. 3)
2. 'அதுவே' (1. 9. 6)
3. 'உளதே' (2. 2. 3)
4. ஏற்குமே' (3. 9. 10)
5. 'ஒன்றே' (4. 4. 3)

என்ற இடங்களிலுள்ள ஏகாரத்துக்கு எதிர்மறைப் பொருள் வழங்கியுள்ளார்.

7. 2. 3. 8. ஏகார விளி

'அரியேறே' (5. 8. 7) என்ற பாடலில் 'பொற்கடரே, கருமுகிலே, எரியே, பவளக் குன்றே, களைபாயே' என்ற சொற்களில் ஏகாரத்துக்கு விளியுருபு தந்து பொருள் வழங்கியுள்ளார்.

'எல்லே' (5. 3. 5) விளியாக வந்தது.

7. 2. 3. 9. ஏகார உறுதிப்பொருள்

1. கடலாமே (3. 4. 10)
2. கண்டேனே (4. 9. 9)
3. உளதே (2. 2. 3)

7. 2. 3. 10, ஏகாரச் சிறப்புப் பொருள்

'தீர்த்தனுலகளந்த' (2. 8. 6) என்ற பாடலில் 'கிடந்ததே' என்பதற்கு, 'தெளியாது கிடந்த அம்சமுண்டோ' என்று சிறப்புப் பொருள் வழங்குகிறார்.

7. 2. 3. 11. ஐகார இடைநிலைச் சொல்

'அணையானை, அம்மானை' (10. 4 6) என்பனவற்றில் வேற்றுமை போலி இரண்டும் ஐகாரம் அசையாய்க் கிடக்கின்றன.

7. 2. 4. ஓகார இடைச்சொல்

ஓகார இடைச் சொற்கள் வெறுப்பு, துக்கம். மகிழ்ச்சி ஆகிய பொருள்களில் உரையில் வந்து சிறப்பெய்தியுள்ளன.

### 7. 2. 4. 1. ஓகார விளாப் பொருள்

'காண்பாரார் எம்ஈசன்' (2. 8. 8) என்ற பாடலில் 'வீடோ' 'உயிரோ', 'அவனோ' என்பனவற்றிலுள்ள ஓகார அசைகள் வினாவைச் சுட்டுகின்றன.

'வினையோ' (4. 7. 1), 'வள்ளலேயோ' (4. 7. 2), 'வாமனாவோ' (4. 7. 2), 'உலகோ' (5. 4. 11), 'அருவேயோ' (6 9, 8), 'கூத்தாவோ' (7. 6. 3), 'பெருமானேயோ' (7. 1. 5) 'மூர்த்தியோ' (7. 1. 10), 'போக்குவேனோ' (10. 10. 8) என்ற இடங்களிலுள்ள ஓகார அசைகள் வெறுப்பின் மிகுதியைக் காட்டுகின்றன.

'ஆருயிரேயோ' (8. 1. 5) என்ற பாடலில் ஒவ்வொரு பதமும் 'ஓ' என்றது, 'அத்தலை இத்தலையாவதே' என்கிற வெறுப்பைக் காட்டுவதாகக் கூறுவர் சீயர்,

'பாமரு மூவுலகம்' (7. 6. 1) என்ற பாடலில் பதம் தோறும் 'ஓ' என்றது மிக்க துக்கத்தைக் காட்டுகிறது.

'வேய்மரு தோளிணை மெலியுமாலோ' (10. 3. 1) என்ற பாடலில் அடிதோறும் வரும் 'ஆலோ' என்னும் அசைகள் துக்கத்தைக் காட்டுகின்றன.

'உம்பரத்தண் பாழேயோ' (10 10.4) என்ற பாடலில் 'பாழேயோ, நீயேயோ' என்ற இடங்களிலுள்ள ஓகார அசைகளை 'நீ' என்னுமிடந்தோறும் கூட்டி, 'ஒரோன்றே காக்கக் காரணமாயிருக்க! அநாதரித்தாய்'என்று கூப்பிடுகிற துக்கத்தைக் குறிப்பதாகக் கூறுவர் சீயர்.

'சூழ்ந்ததனிற் பெரிய' (10. I0 10) என்ற பாடலில் அடி தோறும் வரும் 'ஓ' என்ற அசை 'ஓரதிசயமே' என்று ஆழ்வார் மகிழ்ச்சியடைவதாகக் கூறுவர்.

ஆழ்வாருடைய சொற்போக்கைக் கொண்டு சீயர் சொற்களின் தன்மைகளைக் காட்டிப் பொருள் வழங்குவர், இவற்றில் துக்கத்தின் மிகுதியைக் காட்டும் சொற்களாகக் குறிப்பிடுவது காணலாம்:

1. எல்லே (6. 7. 4)— எல்லே! இதென்னாகிறதோ என்று துக்கத்தைக் குறிக்கிறது.
2. அந்தோ (6 9 10)— ஒவ்வாதென்று சொல்ல வேண்டுவதே என்னும் துக்கத்தைக் காட்டுகிறது.

'என் செய்யுமோ' என்ற தொடரிலுள்ள ஓகார அசை கூடாதது கூடுமோ என்றபடி.

7. 2. 5. அசைநிலைகள்

சீயர் உரையில் அசைநிலைச் சொற்களாகக் குறிக்கப் பெற்றவை, அ, ஆ, ஆல், இன், இட்டு, ஐ, ஓ, உம், வியா, ஏ, ஏல் ஆகியன. இவையல்லாமல் சில அசைநிலைச் சொற்களுக்குச் சீயர் பொருள் வடிவு தந்துள்ளார். இது சீயரின் ஆழ்ந்த இலக்கணப் புலமையையும், தமிழ் மொழி மீதுள்ள பற்றினையும் புலப்படுத்து கின்றது.

அசைநிலைச் சொற்கள் பொருளற்று வந்த இடங்கள் :

1) அ: 'கண்ண நீர்' (2. 4. 5)
2) ஆ: 'உள்ளஆ' (8. 5. 5)
3) 'ஆல்' என்னும் அசை 13 இடங்களில் பொருளற்று வந்துள்ளது.
4) இன்: 'நறுந்துழாயின்' (4. 7 7) வண்துழாயின்'(4.7.8)
5) இட்டு: 'மோதுவித்திட்டு' (7. 1.2)
6) வியா: கோவைவியா' (4. 3. 1)
7) உம்: 'உளரும்' (8 8 9) 'இவையும்' (9.2 11), 'இவையும்' (8. 5. 11)
8) ஏல்: 'என்றேல்' (8, 3, 8)
9) ஏ: 'அருளே' (5. 8, 7)
10) ஓ: 'ஆயங்காளோ' (8. 2. 1)
11) ஐ: 'பிரானை' (7. 10. 8), 'ஐவரை' (8. 1. 2), 'ஆல்ஐ' (8. 8. 3)

'ஆல்' என்ற அசைக்குச் சீயர் நான்கு இடங்களில் பொருள் கூறுகின்றார். 'வெஞ்சுடரில் தானடுமால்' (5. 4. 9) என்ற பாட்டில் 'செல்வனும் வாரானால் நின்றுருகுகின்றேன்' என்ப தற்கு 'ஸ்ரீமானும் வருகின்றிலன்; ஆகையால் ஒருபடிப்பட நின்று உருகாநின்றேன்' என்று பொருள் வழங்குகிறார். இங்கு 'வாரானால்' என்பதிலுள்ள ஆல் என்னும் அசை நிலைச் சொல்லுக்கு 'ஆகையால்' என்று சீயர் பொருள் வழங்கியுள்ளது குறிப்பிடத்தக்கது.

'பெருகுமால்' (9. 4. 1) என்றவிடத்திலுள்ள 'ஆல்' வியப்பைக் குறிக்கிறது எனறும், 'ஆலும் ஓவும்' (9. 9. 1)—அடி தோறும் கூப்பிட்டது ஒவ்வொன்றால் வந்த மிகுதியான

துக்கத்தைக் குறிப்பிடுகிறது என்றும், 'ஆலோ' (10. 3. 1) என்று அடிதோறும் வந்த அசைகள் துக்கத்தைக் குறிப்பன என்றும் கூறுகிறார்.

7. 3. தொடர்

ஒருமைக்கு ஆழ்வார் பன்மையைச் சில இடங்களில் பயன் படுத்தியுள்ளார். அவற்றுக்குச் சீயர் காரணம் காட்டி உரைக்கி றார். அதாவது, 'என் நீர்மை கண்டிரங்கி' (1.4.4) என்ற பாடலில்'' 'அவர்' என்கிற பன்மைச் சொல் நாயகியான கௌர வத்தாலே அது தங்கள் வார்த்தையாகச் சொல்லுகிறாள்'' என்பர்.

'காதல் மென்பெடையோடு' (6.1.2) என்ற பாடலில் '''பணியீர்' என்ற பன்மை பேடையோடே கூட்டிக் கௌரவம் தோற்றச் சொல்லிற்று'' என்பர்.

'மின்னிடை மடவார்' (6.2.1) என்ற பதிகத்தில் 'நான தஞ்சுவன்' என்ற முதல் பாட்டிலே வந்த ஒருமைக்குப் பின்பு வந்த பன்மையெல்லாம் ''ஆத்மாக்கள் தொகையாதல், தோழி மார்களைக் கூட்டி அவர்களுக்காக சமைந்து சொன்னதாதல்'' என்பர்.

'யாமடலூர்ந்தும்' (5 3.10) என்ற பாடலில் 'சூடுவோம்' என்ற பன்மை ''ஆழ்வார் நாயகியாக மடலூரத் துணிந்த கர்வச் சொல்'' என்பர் சீயர்.

'என்னுகொல் தோழிமீர்காள்' (5.9.2) என்ற பாடலில் ''எம்மை என்று ஆத்மாக்கள் தொகையாகவும், அடியோமென்று தோழிமாரைக் கூட்டிக் கொண்டதாகவும்'' கூறுவர்.

'பலபலவே ஆபரணம்' (2 5.6) என்ற பாடலில் ''இறைவ னுக்கு ஆபரணம் நாமம், வடிவு, இந்திரிய சுகம், ஞானம் ஆகி யவை பலபலவாயிருக்கும்'' என்பர். இதில் 'கண்டு கேட்டுற்று மோந்தின்பம் பலபல' என்ற பன்மை ''இந்திரியங்கள் வழியாக வருகிற சுகஞானங்களில் இறைவனுக்கு யதாக்ரமத்தாலும் வ்யுத்க்ரமத்தாலும் வரும் நியமனத்தாலே பன்மை சொல்லவு மாம்'' என்று காரணம் காட்டுகிறார் சீயர்.

'ஆயின் சுவையவை' (4.1.7) என்ற பாடலில் '''எமக்கு' என்னும் பன்மையால் அந்தந்த நிலைமையாலும் நமக்கு என்னும் பன்மை தோற்றுகிறது'' என்பர்.

அஃறிணையைப் பொருளைச் சுட்டும் வகையில் சீயர் "உளதாகும்" (1.10.1) என்ற இடத்தில் "உளதாகும் என்ற அஃறிணை மாணிக்கம் என்கையாலே" என்றும் 'பாம்பணை மேல்' (2.5.7) என்ற பாடலில் 'ஏறு' என்ற சொற்கிடாக அமர்ந்ததுவும், செற்றதுவும், எய்ததுவும் என்று கூறி 'அஃறிணை என்றும் கூறுவர்.

இவ்வாறு உரிய இடங்களில் சொல், தொடர் இலக்கணக் குறிப்புகளைச் சிறப்பாக எழுதிச் செல்வது சீயர்பால் இயல்பாக அமைந்துள்ள பெரிய போதத்தைப் புலப்படுத்தவல்ல உரைநலமாகும்.

## 7. 4. சீயர் காட்டும் யாப்பமைதி

தமிழ்மொழியில் அமைந்த இலக்கண வகைகளுள் செய்யுளிலக்கணமாகிய யாப்பும் ஒன்று. "செய்யுளுக்கு அடிப்படையான எழுத்து, சீர், அடி முதலியவற்றால் ஏற்படும் பொருள் முடிவின் கோவையே யாப்பு" என்பர் தொல்காப்பியர்.[1]

"சொல், பொருள், உணர்வு, வண்ணங்கள் தொடர்ந்து குற்றமின்றி அவை தத்தமுள் தழுவும் கோளுடையனவாய், இன்பம் பெருக்கி, அம்மை முதலாகிய வனப்புகளோடு, பிற அணி நலன்களோடு செம்மையும் செறிவும் அமையப்பெற்று இம்மை மறுமைக்கு நன்மை பயந்து எல்லோருக்கும் புலனுற நடைபெறச் செய்வது யாப்பு"[2] என்பர் யாப்பருங்கல விருத்தி உரையாசிரியர்.

தொல்காப்பியத்தில் யாப்பு தனி இடமாக அமையாதிருப்பினும் செய்யுளியலில் பாக்களைப் பற்றிய இலக்கணம் கூறப்பட்டுள்ளது. தொல்காப்பியர் கருத்துப்படி செய்யுள் விரிந்த பொருளுடையது. ஆனால் அவர் காலத்துக்கு பிறகு செய்யுள் யாப்பு ஒன்றனையே குறிக்கும் சொல்லாக அமைந்துவிட்டது. அப்பொருளிலேயே யாப்பருங்கலம், காரிகை முதலான நூல்கள் எழுந்தன. அவ்வாறு நூல்கள் வரவே, செய்யுளுக்குப் பொருள் பெற விரிக்கும்போது பாவும் பாவினமும் என்று இரு திறத்தனவாகக் கொண்டனர்.[3]

> "பா என்பது சேட்புலத்திருந்த காலத்தும் ஒருவன் எழுத்தும் சொல்லும் தெரியாமல் பாடம் சொல்லுங்கால் அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுளென்று உணர்தற்கேதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை"[4].

என்பர் பேராசிரியர். ஒருபுடையில் பாவினோடு ஒத்த தன்மைத் தாய் நடத்தலால் பாவினம் என்னும் காரணக்குறி வந்தது[5]

பாவினம் என்ற வகை கி. பி. 11–12 ஆம் நூற்றாண்டில்தான் முழுவடிவம் பெற்று அமைந்தது. அதாவது சங்க காலத்துக்குப் பின் இளங்கோ காலத்தில் தோன்றி, மணிமேகலை இயற்றிய சாத்தனார் காலத்தில் வளர்ந்து, கம்பர் காலத்தில் சிறந்து, பக்தி இலக்கியமான இராமாயணத்தில் பாவினவிலக்கணம் கூற வகை செய்யப்பட்டது.

இடைக்காலமான கி.பி. 10 ஆம் நூற்றாண்டுக்கு முன் தோன்றிய பக்தி இலக்கியங்கட்கு முக்கியமாகத் தேவார, திவ்வியப் பிரபந்தப் பாடல்கள் எவ்வெப் பாவின வகையில் அடங்கும் என்று தெரியாத நிலை இருந்து வந்தது. யாப்பிலக்கண ஆசிரியரால்,

> "ஒரு பாவிற்கு இனமென வகுக்கப் பெற்றவை மற்றொரு பாவிற்கும் இனமாம் எனக் கொள்ளுமாறு அவற்றின் இலக்கணம் தெளிவின்றி அமைந்திருத்தலால் அவற்றை இன்ன பாவிற்கு இனமாம் என வரையறைப் படுத்துதல் பொருந்தாது"[6]

என்று கூறப்பட்டது.

திருவாய்மொழியில் சில தொடர்கள் யாப்புக் குறிப்புடையன வாக அமைந்துள. அவற்றுக்கு உரையிட்ட சீயர், இதனை உணர்ந்து, "சொல்லும் பொருளும், இயலும், இசையும், தாளமும், அபிநயமும் ஒன்றுக்கொன்று சேருகையாலே நிரந்து நிறைந்த ஆயிரம்" (1.1.11) என்றும், "எழுத்துச் சொற்பொருள் யாப்பலங்காரங்களைச் சொல்லுகிற பிரமாணங்களிலே இருப்பதாய் அந்தாதியான ஆயிரம்" (1.4 11) என்றும், "இசைபோடே கூட்டிச் சொன்ன இலக்கண நிறைவாலே அமைதியையுடைய ஒப்பற்ற பாட்டுக்கள்" (2.4.11) என்றும், "எழுத்தும் அசையும் சீரும் தளையும் அடியும் தொடையும் பாவும் பாவினமும் இசையும் தாளமும் மற்றுமுள்ள சப்தாலங்காரமும் உடைத்தானது" (5.3.11) என்றும் யாப்புக்குரிய உறுப்புக்களைக் காட்டி ஆங்காங்கே பொருள் வழங்கியது கருதத்தக்கது.

இவ்வாறு ஆழ்வார் சொற்களுக்கு யாப்பமைதி இருப்பதைக் காட்டும் வகையில் சீயர் பொருள் கூறியதோடு நில்லாமல், திருவாய்மொழிப் பதிகங்களுக்கும் பாவினங்களையும் அதற்குரிய இலக்கணத்தையும் சுட்டிக் காட்டியுள்ளார். இது திருவாய்மொழிப்

பதிகங்களுக்கு அவர் தரும் யாப்பிலக்கணக் குறிப்புகளிலிருந்து அறியலாம். அவ்வாறு காணும்போது துறை, விருத்தம், தாழிசை ஆகிய பாவினங்கள் ஆசிரியம், கலி, வஞ்சி ஆகிய பா அடிப்படையில் வந்துள்ளமை காணலாம். துறை இனத்தில் ஆசிரியத்துறை, கலித்துறை, வஞ்சித்துறை ஆகியவை வந்துள்ளன. விருத்த இனத்தில் ஆசிரிய விருத்தமும், அறுசீர். எழுசீர், எண்சீர் ஆசிரிய விருத்தங்களும், கலிவிருத்தமும், வஞ்சி விருத்தமும் வந்துள்ளன. தாழிசை யினத்தில் நாலடித் தாழிசை ஒன்றே கட்டியுள்ளார். திருவாய்மொழியில் அமைந்துள்ள பதிகங்களை யாப்பு அடிப்படையில் சீபர் கட்டியதைக் கீழ்க்கண்டவாறு தொகுக்கலாம்.

| எண் | பாவினங்கள் | பதிகங்கள் |
|---|---|---|
| 1. ஆசிரியம் | | |
| துறை | | |
| | (அ) ஆசிரியத்துறை | 3 |
| | (ஆ) முதலடியும் மூன்றாமடியும் அறுசீராய் இரண்டாமடியும் ஈற்றடியும் நாற்சீரான் வரும் ஆசிரியத்துறை | 1 |
| | (இ) முதலடியும் மூன்றாமடியும் எழுசீராய் இரண்டாமடியும் ஈற்றடியும் நாற்சீரான் வரும் ஆசிரியத்துறை | 1 |
| விருத்தம் | | |
| | (அ) அறுசீராசிரிய விருத்தம் | 20 |
| | (ஆ) எழுசீராசிரிய விருத்தம் | 6 |
| | (இ) எண்சீராசிரிய விருத்தம் | 5 |
| 2. கலி | | |
| துறை | | |
| | அ. கலித்துறை ... | 22 |
| விருத்தம் | | |
| | அ. கலிவிருத்தம் ... | 34 |
| 3. வஞ்சி | | |
| துறை | | |
| | அ. வஞ்சித்துறை ... | 3 |
| விருத்தம் | | |
| | வஞ்சி விருத்தம் ... | 2 |

4. இனம்

தாழிசை

அ. நாலடித் தாழிசை .... 3

100

சீயர் காட்டிய யாப்புக் குறிப்புக்களை யாப்பு இலக்கண நூல்களோடு ஒப்பிட்டுக் காணும்போது, கலிவிருத்தத்திற்குக் குறித்த யாப்பு, யாப்பருங்கல நூற்பாவைத் தழுவியும்,[7] கலித்துறைக்குரிய இலக்கணம் யாப்பருங்கலம், வீரசோழியம் ஆகிய நூல்களின் நூற்பாவுக்கு ஒப்பாகவும்,[8] வஞ்சித்துறை வீரசோழிய நூற்பாவிற்கு ஏற்பவும்,[9] வஞ்சிவிருத்தம் காக்கை பாடினிய நூற்பாவைத் தழுவியும்,[10] மற்றும் ஆசிரிய விருத்தம் யாப்பருங்கல நூற்பாவைத் தழுவியும்,[11] ஆசிரியத்துறை வீரசோழியம் கொண்டும்[12] அமைந்துள்ளமை காணலாம்.

7. 4. 1. ஆசிரியத்துறை

இதில் மூன்று வகைகள் உள்ளன. ஆசிரியத்துறை என்ற மூன்று பதிகங்களும், முதலடியும் மூன்றாமடியும் அறுசீராய் இரண்டாமடியும் ஈற்றடியும் நாற்சீராய் வந்த ஆசிரியத்துறை என்ற ஒரு பதிகமும், முதலடியும் மூன்றாமடியும் எழுசீராய் இரண்டாமடியும் ஈற்றடியும் நாற்சீரான ஆசிரியத்துறை என ஒரு பதிகமும் சீயர் அமைத்துள்ளமை காணலாம்.

ஆசிரியத்துறை சீர் வரையறை யில்லாமல் எத்தனைச் சீரானும் ஆகிய அடியான் வரப்பெறும்; ஆனால் நான்கடிகளில் ஈற்றயலடி குறைந்தும் இடையிடை குறைந்தும் வரும்.[13] அவற்றில் இரண்டாமடியும் நான்காமடியும் குறைதலும் அல்லது முதலடியும் மூன்றாமடியும் குறைதலுமுண்டு.[14] எடுத்துக் காட்டாக, ஆசிரியத்துறையாக அமைந்த 'பிறந்தவாறும்' (5. 10) என்னும் பதிகத்தில் முதலடியும் மூன்றாமடியும் ஒத்தும் இரண்டாமடியும் நான்காமடியும் ஒத்தும் வந்துள.

'உண்ணிலாவிய' (7.1) என்ற பதிகத்தில் பாடல்களைக் காணும்போது, முதலடியும் மூன்றாமடியும் எழுசீராயும் இரண்டாமடியும் நான்காமடியும் ஐந்து சீராயும் பெரும்பாலும் அமைந்து, 7,9,10 பாடல்களின் முதலடியும் மூன்றாமடியும் அறுசீராய், இரண்டாமடியும் நான்காமடியும் நான்காமடியும் நான்கு சீராய் அமைந்து வந்தது காணலாம்.

'வைகுந்தா' (2.6) என்ற பதிகத்தைச் சீயர், முதலடியும் மூன்றாமடியும் அறுசீராய், இரண்டாமடியும் ஈற்றடியும் நாற்சீராய் வந்த ஆசிரியத்துறையாகக் கருதுவர். இப்பதிகத்தின் பாடல்களைச் சீர் வரித்துக் காணும்போது, காய்ச்சீர் மிகுதியாக வந்து, கனிச்சீர் இருபத்தொன்றும் வந்துள்ளமை காணலாம். மேலும் சீயர் கூறுவதுபோல் சீர்கள் அமைந்துள்ளது நோக்கத்தக்கது.

'நோற்ற நோன்பிலேன்' (5.7) என்ற பதிகத்தை, "முதலடியும் மூன்றாமடியும் எழுசீராய், இரண்டாமடியும் ஈற்றடியும் நாற்சீரான ஆசிரியத்துறை" என்பர் சீயர். ஆனால் பாடல்களில் சீர்கள் பெரும்பாலும் முதலடியும் மூன்றாமடியும் எழுசீராய், இரண்டாமடியும் ஈற்றடியும் ஐஞ்சீராய அமைந்துள்ளமை காணலாம். எடுத்துக்காட்டாக, 'எய்தக் கூவுதல்' (5.7.5.) என்ற பாடலில் எழுசீராய் வந்து, இரண்டாமடியும் நான்காமடியும் முறையே கூவிளம், தேமா, கூவிளம், கூவிளம், தேமா என்றும் கூவிளம், புளிமா, புளிமா, தேமா, தேமா என்றும் ஐஞ்சீராய் வந்தமை காணலாம்.

### 7. 4. 2. ஆசிரிய விருத்தம்

இவற்றில் அறுசீராயும், எழுசீராயும், எண்சீராயும் மூவகை அமைத்துள்ளார்.

### 7. 4. 2. 1. அறுசீராசிரிய விருத்தம் (20)

*சான்றுகள் :*

1. 'வளவேழுலகின்' (1.5) என்ற பதிகத்தில், மா, மா, காய், மா, மா, காய் என்ற வாய்பாட்டில் மாச்சீர் மிகுந்தும் காய்ச்சீர் சிறுபான்மையும் வந்துள்ளமை அறியற்பாலதாகும்.

2. 'பொலிக பொலிக பொலிக' (5. 2) என்ற பதிகத்தில் மா அல்லது விளம், விளம், மா, விளம், விளம், மா என்ற வாய்பாட்டில் அறுசீர்கள் வந்துள்ளன. இவ்வாறே மற்றைப் பதிகங்கள் அமைந்துள.

### 7. 4. 2 2. எழுசீராசிரிய விருத்தம் (8)

1. 'பண்டை நாளில்' (9. 2) என்ற பதிகத்தில் விளம், மா விளம், மா, விளம், விளம், மா என்ற வாய்பாட்டால் எழுசீரில் அமைந்த எழுசீராசிரிய விருத்தங்கள் உள.

2. 'துவளில் மாமணி' (6. 5) என்ற பதிகம், மா, விளம், மா, விளம், விளம் என்று எழுசீர் அடிகள் கொண்டது. இப் பதிகத்தின் முதல் பாடலில் முதலடி ஆறாவது சீர் விளச்சீருக்குப் பதிலாக மாச்சீரும், எட்டாவது பாடலில் முதலடி ஆறாவது விளச்சீருக்குப் பதிலாக மாச்சீரும், மற்றும் மூன்றாமடியில் நாலாவது சீர் மாச்சீராகவும் வந்தது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறே மற்றைப் பதிகங்களும் அமைந்துள.

### 7. 4. 2. 3. எண்சீராசிரிய விருத்தம் (5)

1. 'கடல்ஞாலம்' (5. 6) என்ற பதிகத்தில், காய், காய், மா, காய், காய், மா, காய், காய் என்ற வாய்பாட்டால் அடிகளில் சீர்கள் வந்துள்ளமை காணலாம் சிற்சில இடங்களில் காய்ச்சீர் வருவதற்கு மாறாக விளஞ்சீர் வந்துள்ளது. கனிச்சீரும் நாலசைச் சீரும் வந்த இடங்களும் உள.

2. 'வெள்ளைச் சுரிசங்கு' (7.3) என்ற பதிகத்தில் பெரும்பாலும் காய்ச்சீர் வரவேண்டிய இடங்களில் விளச்சீர் வந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. வரையறையில்லாமல் விளஞ்சீர் வந்துள்ளது காணலாம்.

இவ்வாறே மற்ற பதிகங்களும் அமைந்துள.

### 7. 5. கலிப்பா-பாவினம்

திருவாய்மொழிப் பாடல்களோடு சேர்ந்த பதப்பொருளைக் கொண்ட பதிப்பு 1859இல் அச்சிடப்பட்டுள்ளது. அதனை அடுத்துப் பல பதிப்புகள் வந்திருக்கின்றன. திருவாய்மொழி மூல பாடல்கள் பதிப்பு மட்டும் இன்று காணக் கிடைப்பதில், காரப்பங்காடு கோபாலாசார்ய சுவாமியால் 1952இல் வெளிவந்த புத்தகமும், மாதவதாஸர் என்பவர் வெளியிட்ட திவ்வியப் பிரபந்தமும், மர்ரே கம்பெனி சார்பில் எஸ். ராஜம் வெளியிட்ட மலிவுப் பதிப்புத் திருவாய்மொழியும், மற்றும் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன ஆசிரியர் 1981இல் பதிப்பித்த திவ்வியப் பிரபந்தமும் குறிப்பிடத்தக்கன. மேலும் லிப்கோ கம்பெனியும் 1984இல் திவ்வியப் பிரபந்தத்தைப் பதிப்பித்துள்ளது. இவற்றில் எல்லாம் திருவாய்மொழிப் பதிகங்களுக்கு ஒரே போக்கில் பாவினங்களைக் காட்டியதோடல்லாமல் 'கொச்சகக் கலிப்பா' என்ற கலிப்பா வகையில் 10 பதிகங்களையும் (1.4; 2.1; 2.5; 2.5; 3.1 4.8; 4.9; 5.4; 9.7; 10.6 காட்டியுள்ளனர்.

1971இல் ஈட்டின் தமிழாக்கப் பதிப்பாக வெளியிட்ட புருஷோத்தம நாயுடு அவர்களும் மேற்கூறிய மூல பாடல்களின் வகையிலேயே யாப்பைக் குறிப்பிட்டுள்ளது காணலாம். 1981இல் 'திருவாய்மொழித் திறன்' என்ற தலைப்பில் கு. தாமோதரனால் வெளியிட்ட நூலில் திருவாய்மொழி யாப்பமைதியின் கீழ், மேற்கூறிய 10 பதிகங்களையும் கொச்சகக் கலிப்பாவாகவே கொண்டு ஆய்வு செய்துள்ளார்.[15] இவ்வாறு வழிவழியாகக் கொண்ட ஒரு போக்குக்குக் காரணத்தைக் காணும்போது தொல்காப்பியச் செய்யுளியலுக்குஉரைவகுத்த நச்சினார்க்கினியர் "திருவாய்மொழியில் உள்ள பாடல்களைக் கொச்சக ஒருபோகு என்று கூறுதல் வேண்டும்"[16] என்று கலிப்பா இலக்கண நூற்பாவுக்குச் சேரக் கூறியுள்ளார். இதனைப் பின்பற்றியே அன்றுதொட்டு இன்றுவரை திருவாய்மொழியில் 10 பதிகங்களைக் கொச்சகக் கலிப்பா வகையில் அடக்கியுள்ளமை காண முடிகிறது.

ஆனால் இவற்றுக்கெல்லாம் முன்னோடியான சீயர் உரையோடு கூடிய திருவாய்மொழிக்கு அமைந்த ஐந்து உரைகளையும் அரும்பத உரையையும் உள்ளடக்கிய பதிப்புகளுள், பழைமையான தெலுங்குப் பதிப்பு (1925-30), மற்றும் 1930இல் சே. கிருஷ்ணமாசாரியாரால் 'பகவத் விஷயம்' என்று வெளியிடப்பட்ட பதிப்பு, மற்றும் ஏழு பத்துக்கள் வரை ஆறாயிரப்படி, ஈடு அவதாரிகை, பன்னீராயிரப் படியோடு கூடி 1925–26 (குரோதன)இல் புதுப்பட்டு திருவேங்கடாசாரியாரால் பதிப்பிக்கப்பட்ட புத்தகம் ஆகியவற்றில் சீயர் வழங்கிய யாப்பமைதியே பதிகம்தோறும் சுட்டப்பெற்றுள்ளமை அறியலாம்.

சீயரும் நச்சினார்க்கினியரும் ஒரே காலத்திலோ, சற்று முன்னும் பின்னுமாகவோ வாழ்ந்ததாகக் கொண்டு சீயர் காட்டிய யாப்பமைதியை நோக்கும்போது பாவின இலக்கண வளர்ச்சியடைந்த நூல்களான யாப்பருங்கலம், காரிகை, வீரசோழியம் முதலானவற்றின் அடிப்படையில் யாப்பமைதி அமைத்துள்ளமை நிறுவ முடிகிறது. அதனை அரண் செய்யும் வகையில் வீரசோழியத்தில் 'கொச்சகக் கலிப்பா வகையைக் கலிவிருத்தமாகவும் கொள்ளத்தகும்'[17] என்பதைப் பின்பற்றி சீயர் கலிவிருத்தமாகக் கொண்டமை ஏற்புடையது.

மேலும் கொச்சகக் கலிப்பாவாக அமைத்த பதிகங்களைச் சீயர் கலிவிருத்தமாகக் கொண்டதிலும் மூன்று பதிகங்களை (3,1; 4,9; 9,7) நாலடித் தாழிசையாகக் காட்டுகிறார்.

கலிப்பாவில் தரவையடுத்து வரும் உறுப்பாகிய தாழிசை அளவடியாலே அமைந்திருக்கக் காணலாம். இரண்டடி முதல் நான்கடி வரை அதாவது இரண்டடித் தாழிசை, மூவடித் தாழிசை, நாலடித் தாழிசையாக அமைந்துவரக் காணலாம். இத்தாழிசைகள் கலித்தளையில் தான் அமையவேண்டும் என்ற கட்டுப்பாடு இல்லை. எனவே, அளவடி நான்காக அமைந்த கலிவிருத்தம், அளவடி நான்காக அமைந்த கலித்தாழிசையோடு அமைப்பாலும், அடியாலும், சீராலும் ஒத்திருத்தலின், கலிவிருத்தத்தை 'நாலடித் தாழிசையாகவுமாம்' என்று சீயர் குறிப்பிடுகின்றார். ஆனால் தாழிசை ஒரு பொருளில் மூன்றடுக்கி வரும். கலிவிருத்தம் அவ்வாறு வரல்வேண்டும் என்ற கட்டுப் பாடு இல்லை.

வெண்சீரும் கலித்தளையும் அமைந்ததைக் கலிவிருத்தம் என்றும், வெண்சீரும் வெண்டளையும் அமைந்ததை நான்கடித் தாழிசை என்றும் இவர் இனம் பிரித்திருப்பது அறியலாம். கொச்சகக் கலிப்பாவைத்தான் சீயர் கலிவிருத்தமாகக் கொள்ளு கிறார். பொதுவாகக் கலிவிருத்தத்திலும் நாலடித் தாழிசையிலும் வெண்சீர் பயின்று வருதலாலும், அளவடி நான்கு ஒத்து வருத லாலும், கலிவிருத்தத்தையும் நாலடித் தாழிசையையும் ஒன்றெனக் கருதி அமைத்தமையும் இதனால் கருதம்பெறும்,

சான்றுகள்:

1. 'அஞ்சிறைய மடநாராய்' (1.4) என்ற பதிகத்தை அளவடி நான்கும் ஒத்து இருத்தலால் கலிவிருத்தம் என்றும், நாலடித் தாழிசை என்றும் சீயர் குறித்துள்ளார். கலிவிருத்த மாகக் கொண்டு பாடல்களைக் காணும்போது அளவடி நான்கு வந்து நாற்சீர்களைக் கொண்டு அமைந்துள்ளமை காண முடி கிறது. நாற்சீர்களைப் பிரித்துக் காணும்போது மூவசைச்சீரும் ஈரசைச்சீரும் விரவி வந்தமை அறியலாம். இவற்றில் காய்ச்சீர் 161ம், கனிச்சீர் 2ம் ஈரசைச்சீர் 13ம் சீர் அடிப்படையிலேயே நான்கு அடிகளிலும் வந்து கலிவிருத்தமாகியது காணலாம். கலிவிருத்தத்திற்கும் கொச்சகக் கலிப்பாவுக்கும் உள்ள வேறு பாடு காணும்போது, கொச்சகம் கலித்தளையும் வெண்டளையும் மட்டும் பெற்றுவிடுகின்றது; கலிவிருத்தத்தில் தளை பார்க்கப் படுவதில்லை என்பர். அதற்கேற்பச் சீயர் கலிவிருத்தமாகக் கருதியதற்குக் காரணம், கொச்சகமாகக் கொண்டு பார்க்கும் போது தளை மாற்றம் ஏற்படவே, சீர் அடிப்படையில் நாற்சீராய் நான்கடி கொண்டு கலிவிருத்தம் எனக் கொண்டது அறியலாம்.

ஆ. 'முடிச்சோதி' (3.1) என்னும் பதிகத்தை நாலடித் தாழிசையாகக் கூறும்போது, வெண்சீரும் வெண்டளையும் பயின்று அளவடி நான்கும் ஒத்து வந்ததாலும், சீயர் நாலடித் தாழிசை எனக் குறிப்பிட்டது காணத்தக்கது. மேலும் இதனைக் 'கலிவிருத்தமுமாம் என்று குறிப்பிட்டதிலிருந்து, இப்பதிகத்தில் கலித்தளையும் வெண்டளையும் பிற தளைகள் சிறுபான்மையும் வந்து, கலித்தளை வழுவி வந்தமையால் கலிவிருத்தமாகவும் கொண்டதன் காரணம் அறியற்பாலதாகும்.

## 7.5.1. கலித்துறை (22)

'ஐஞ்சீராய் நெடிலடி நான்கும் ஒத்திருக்கை கலித்துறை' என்றும்,'' 'நேரசை பதினாறே நிரையசை பதினேழு' என்று அடியெடுத்து கட்டளைக் கலித்துறைக்கு அல்லாமையால் ஒவ்வாதிருந்தது'' (1,3) என்றும் சீயர் கலித்துறைக்கு இலக்கணம் வகுக்கிறார்,

சான்றுகள்:

1. 'பத்துடை யடியவர்க்கு' (1.3) என்ற பதிகத்தில் நான்கு விளச்சீருடன் மாச்சீர் முதலடிகள் தோறும் வந்து மூன்றா மடியில் 1, 5, 10 பாடல்களில் காய்ச்சீருடன் முடிவுபெற்றது காணலாம், ஈரசைச் சீர்கள் 199உம், மூவசைச்சீர்கள் 21உம் வந்துள்ளன. சீயர் தந்த இலக்கணக் குறிப்புக்கேற்ப நேரில் தொடங்கும் அடிகள் 18 எழுத்துக்கள் தொடங்கி 17 எழுத்துக் கள் முடிவிலும், 17 எழுத்துக்கள் தொடங்கி 16 எழுத்துக்கள் முடிந்தும் வந்துள்ளன. நிரையில் தொடங்கின் வரையறை யில்லாமல் 19 எழுத்துக்கள் தொடங்கி 16 எழுத்துக்கள் வரை முடிந்து, சில பாடல்கள் 20 எழுத்துக்கள் மூன்றாமடியிலும் வந்துள்ளன,

2. கலித்துறையாக அமைந்த 'பயிலும் சுடரொளி' (3.7) என்னும் பதிகப் பாடல்களைச் சீர்பிரித்துக் காணும்போது, ஐஞ்சீராய் நான்கு அடிகள் ஒத்து வந்து, மா, விளம், விளம், விளம், விளம் என்ற வாய்பாட்டில் சீர்கள் வந்தும், விரவியும்; 'மூவைந்து எழுத்தே நெடிலடிக்கு அளவே, 18 என்ற சூத்திரத் திற்கேற்ப 15 எழுத்துக்கள் கொண்ட பாடலாயும், 'ஈரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப, 19 என்பதற்கு ஏற்ப வந்த பாடல்களும் இப்பதிகத்தில் உள.

இவ்வாறே மற்றைப் பதிகங்கள் அமைந்துள்ளமை காணத் தக்கது.

## 7.6. கலிவிருத்தம் (34)

'நாற்சீராய் அளவடி நான்கும் ஒத்திருக்கை கலிவிருத்தம்' (1,1) என்று சீயர் கலிவிருத்தத்திற்கு இலக்கணக் குறிப்புத் தருகிறார்.

சான்றுகள்:

1. 'மாலுக்கு' (6,6) என்ற பதிகத்தில் விளச்சீர் அடிகளாக வெண்டளையுடன் வந்து முடிந்தது காண முடிகிறது. இதில் மூவகைச் சீர்கள் 43ம், ஈரசைச்சீர்கள் 133ம் வந்துள்ளன. ஒவ்வொரு பாடலின் கடைசிச் சீரும் மாவில் முடிவுபெறுவது காணலாம்.

2. 'உருகுமால்' (9.6) என்ற பதிகத்தில் 114 ஈரசைச் சீர்களும் 62 மூவசைச் சீர்களும் வந்துள்ளன. இப்பதிகம் மூன்று விளச்சீரும் ஒரு காய்ச்சீரும் வெண்டளையோடு கூடி முடிந்து வந்துள்ளது.

இவ்வாறு கலிவிருத்தப் பதிகங்களை ஆராயும்போது மிகுதி யாக மூவசைச் சீர்களிலும் ஈரசைச் சீர்களே வந்தமை காணலாம்.

## 7.7. வஞ்சித் துறை (3)

'இரு சீராய்க் குறளடி நான்கும் ஒத்திருக்கை வஞ்சித்துறை' (1,2) என்பது. சீயர், மூன்று பதிகங்களை வஞ்சித் துறையாகச் சீயர் அமைத்துள்ளார். இவை பெரும்பாலும் ஈரசைச் சீர் களையே கொண்டு வந்துள்ளன. உபதேசம் வழங்கும் பதிகமாக வுள்ளதால் இத்துறை யமையப் பெற்றது எனலாம்.

சான்றுகள்:

1. 'வீடுமின் முற்றிமும்' (1.2) என்ற பதிகத்தில் கூவிளச் சீர் கள் மிகுதியாகவும், மாச்சீருடன் முடிந்தும், இரண்டு காய்ச்சீர் களும் வந்துள்ளன,

2. 'ஒடும்புள்' (1.8) என்னும் பதிகத்தில் 15 காய்ச்சீர்களும், மாச்சீர்கள் மிகுதியாகவும் வந்துள்ளன. ஒரே வாய்பாட்டில் அமைந்ததாகக் காண முடியவில்லை.

3. 'கண்ணன் கழலினை' (10.5) யில் முதற்சீர்கள் மாச்சீர்களாய் வந்து, இரண்டாவது சீர் விளமாகவும் காயாகவும் வந்துள்ளன.

அறிவுரை கூறும் பகுதிக்கு ஏற்புடையதாகக் கொண்டு போற்றும் ஆழ்வார் இப்பதிகங்கள் பாடியதை வஞ்சித்துறையுள் அடக்கிக் காண முடிகிறது.

### 7.7.1. வஞ்சி விருத்தம்

1. 'பரிவதில்' (1.6) என்ற பதிகத்தில் முச்சீராய் சிந்தடி நான்கும் ஒத்து இருத்தலால் வஞ்சி விருத்தம் என்பர். இதில் அடிதோறும் மாச்சீரும் விரவி வந்துள்ளது.

2. 'ஆடியாடி' (2.4) என்ற பதிகத்தில் அடிதோறும் விளச்சீர், காய்ச்சீர் விரவி வந்துள்ளன. சில தனிச்சீர்களையும் இப்பதிகம் கொண்டுள்ளது. இதனைக் கலிவிருத்தமாகக் கா.கோ. பதிப்பு காட்டுகிறது.

## 7.8. அகப்பொருள் விளக்கம்

மக்கள் பிறப்பின் பயனான அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவற்றை யறியச் சான்றோர்கள் நூல் பல இயற்றியுள்ளனர். அவை யாவும் அகம், புறம் எனும் இருபிரிவினுள் பண்டைத் தமிழர் கொண்டனர். அகம் என்பது உள்ளத்தே நிகழ்வது; அது வெளிக்குத் தோன்றாதது; எடுத்துச் செல்ல இயலாதது,

> "ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்த தெனக் கூறப்படாததாய், எப்போதும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்பர். மேலும் அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்றது ஓர் ஆகு பெயராம்"[20],

என்பது நச்சினார்க்கினியம்.

இத்தகைய அகப்பொருள் பற்றிய இலக்கணக் கொள்கைகள் யாவும் தொல்காப்பியத்தில் சூத்திர வடிவிலும், அதற்கு வாழையடி வாழையென வழங்கிய உரைகளிலும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. இவ்வாறு வழங்கிய, விளங்கிய உரைகள் பின்னர்த் தோன்றிய இலக்கிய நூல்களில் அகப்பொருள் செல்வாக்குற்றது அறிய முடிகிறது.

சீயர் காலத்திலும் அதற்கு முன்பும் தொல்காப்பியம், அதன் உரைகள், இறையனார் களவியல் உரை, நம்பியகப்பொருள் ஆகியவற்றில் அகப்பொருள் நெறிகள் சிறப்புற்றன. அவற்றுக்கு

ஏற்பச் சியரும் ஆழ்வார் பாமய அகப்பொருள் பாடல்களுக்கு இலக்கணம் கண்டு அகப்பொருள் துறைகளையும் மற்றும் சில கூற்றுக்களையும் பின்பற்றி உரை வழங்கியுள்ளார். சீயர் காலத்திற்கு முன் எழுந்த உரைகளில் நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை ஆகியோர் அகப்பொருள் கோட்பாடுகளைக் கொண்டு உரை வழங்கியிருப்பினும், தொல்காப்பியம், களவியல் உரை, மற்றும் அகப்பொருள் இலக்கண நூற்கருத்துக்களைச் சீயர் சுட்டிச் சிற்சில பதிகங்களுக்குத் துறைகள் வழங்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

சீயர் உரை மூலம் ஆழ்வார் பாடலில் அகப்பொருள் பற்றி ஆராயுமுன், அவற்றில் அகப்பொருள் அமைவதற்குக் காரணம் நோக்கற்பாலதாகும். ஆழ்வாரின் உணர்வு யாவும் இறைவனைப் பற்றியது. அவ்வாறு இறையுணர்வில் இயல்பாகவே, இறைவனை மனத்தால் கண்டபோது ஒரு தன்மையாலும், கண்டவற்றை நினைத்த போது ஒரு தன்மையாலும், காணாது அலற்றும் போது ஒரு தன்மையாலும் பாடல்கள் வெளிவந்துள்ளன. அவ்வாறு வரவே, தாமான தன்மையிழந்து, தலைவி, தாய், தோழி ஆகிய முக்கூற்றுக்களில் தம் தன்மைகளை வெளிப்படுத்துகிறார்.

> "அகப்பொருள் நெறியில் மெய்யுணர்வும் பாடல் பாடும் ஆற்றல் மிக்க ஒரு பக்தர் ஆணாயினும், பெண்ணாயினும், தன்னை அவர் இறைவனின் காதலியாகவே கருதிக் கொள்ளுதலைக் காண்கிறோம் உண்மையாக இம்முறையின் தத்துவம் என்னவென்றால், இறைவன் ஒருவன் மட்டுமே ஆண்; மற்ற அனைவரும் ஆணாயினும் பெண்ணாயினும் எல்லா உயிர்களும் அவனது தேவியர்களே"[21]

என்பர். அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும், "...மணி வல்லிப் பேச்சு வந்தேறியன்று" என்பர்.[22] அதாவது, "பெண்மை ஆன்மாவுக்கு இயற்கையாகையாலே, அத்தை உள்ளபடி கண்ட ஆழ்வாருக்கு அதனால் உண்டான பேச்சு இயற்கை"[23] என்று சொல்லுவர். மேலும் ஆழ்வார் தாமான தன்மையில் பேசும் பேச்சு மெய்யுணர்வால் என்றும், 'பிரேமத்தில் பெண்பேச்சு'[24] என்றும் கூறுவர் நாயனார்.

ஆக, ஆழ்வார் உலகியற் காமம் இழிந்தது என்றும், தெய்வக் காமம் (இறையநுபவம்) சிறந்தது என்றும் பாடினார் எனக் கொள்ளவேண்டும். மேலும் ஆழ்வார் உலக வழக்கில் காமத்தைக் காட்டியதற்குக் காரணம்,

"ஆரோக்கியத்திற்குக் காரணமாகிய வேப்பிலை உருண்டையை உட்கொள்ள இறாய்க்குமவர்களுக்கு வெல்லத்தை வெளியிற் பூசிக் கொடுத்துத் தின்பிப்பது போலச் சிற்றின்பம் கூறும் வகையில் பேரின்பத்தைக் காட்டி நாட்டுகின்றனர்"[25]

என்பர் காஞ்சி சுவாமிகள். ஆகவே, ஆழ்வார் இறையநுபவத்தில், மீதூர்ந்து தம் நிலைமாறிப் பெண்ணிலைமை பேசுமிடத்தில், தாயாகவும், தோழியாகவும், தலைவியாகவும் பகுத்துக் கொள்கிறார். இவ்வாறு தாமான தன்மை விட்டு 27 பதிகங்கள் அகப் பொருளில் வந்துள்ளன. அவற்றில் தலைவியாம் தன்மையில் 17 பதிகங்களும், தாயாந் தன்மையில் 7 பதிகங்களும், தோழிப் பாசுரத்தில் 3 பதிகங்களும் அமைந்துள்ளன. இவை இங்கு ஆராயப்பெறுகின்றன.

சீயருக்கு முன் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் தமது நூலில் 27 பதிகங்களை அகப்பொருள் நோக்கிலும் தத்துவ நோக்கிலும் உள்ளுறைப் பொருளிலும் ஒரு போக்காக வெளி யிட்டுள்ளார். அகப்பொருள் பாசுரங்கள் பற்றி விரிவாக ஆய்வு நூல்களும் பல வந்துள்ளன.[26] எனினும் சீயரே அகப்பொருள் துறைகள் சுட்டி உரை வழங்கியுள்ளார். அவர் காட்டிய அகப் பொருள் துறை மற்ற அக இலக்கண நூல்களோடு இங்குக் குறிக்கப் பெறுகிறது. சீயர் காட்டிய இரு பதிகங்களில் (1.4; 6.1) பொருளும் இங்குக் குறிப்பிடப்படுகிறது.

இவற்றை அகப்பொருள் நூல்களோடு ஒப்பிட்டுக் காணும் போது, தலைவிப் பாசுரமான 17 பதிகங்களில், 8 பதிகங்களில்[27] அமைந்த கூற்றுக்கள் தொல்காப்பியம், இறையனார் அகப் பொருள் விளக்கம்' நம்பியகப்பொருள் ஆகிய மூன்று நூற் கூற்றுக்களோடு பொருந்த அமைந்துள்ளன. பிற பின்வருமாறு காணப்படுகின்றன.

உருவெளிப்பாடாக அமைந்த 'ஏழையராவி' (7.7) என்னும் பதிகம் தொல்காப்பியக் கூற்றுக்கு மட்டும் ஏற்ப அமைந்துள்ளது. ஊடலும் ஊடல் தீர்தலும் பற்றிய 'மின்னிடை மடவார்' (6.2 என்னும் பதிகம், தொல்காப்பியம், நம்பியகப்பொருள் காட்டும் நூற்பாக்களுக்கு ஏற்ப அமைந்துள்ளது. 'எங்ஙனேயோ' (5.5) என்னும் பதிகத்திற்குச் சீயர் காட்டும் 'கழற்றெதிர் மறைத்துறை' யைத் தொல்காப்பியமும் இறையனார் அகப்பொருள் விளக்கமும் கொண்டு தெளிய முடிகிறது. பெண் மடலேறுதல் பற்றிக் கூறும் 'மாசறு சோதி' (5.3) என்னும் பதிகம் பன்னிரு பாட்டியலுக்கு

ஏற்ப அமைந்தது காணமுடிகிறது. தலைவன் போக்கு விலக்குதல் பற்றி வரும் 'வேய்மறு தோளிணை' (10.3) என்னும் பதிகம் இறையனார் அகப்பொருள் காட்டும் நூற்பாவோடு ஒத்துள்ளமை காணமுடிகிறது. தூதுப் பதிகங்களாக அமைந்த நான்கனுள் கைக்கிளை (1.4) தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், நம்பியகப்பொருள், புறப்பொருள் வெண்பாமாலை ஆகிய நூல்களில் வந்துள்ளவாறு ஆராயப்படுகிறது. மற்ற மூன்று பதிகங்களும் (6 1; 6.8; 9 7) தொல்காப்பிய உரையாசிரியர்கள் உரைக்கேற்ப அமைந்துள்ளமை காணலாம். இவ்வாறு சீயர் வெளிப்படையாகச் சுட்டும் அகப்பொருள் துறைகளையும், குறிப்பாகக் கூறும் பதிகங்களையும் சேர்த்து, அகப்பொருள் நூல்களோடு ஒப்பிட்டுக் காணும்போது, தொல்காப்பிய உரையாசிரியர்கள் வழி 6 வகையான தலைவிக் கூற்றுக்களையும், பன்னிரு பாட்டியல் மடலையும், இறையனார் அகப்பொருள் வழித் தலைவன் போக்கு விலக்குதலையும் காணமுடிகிறது. ஆகவே, சீயர் தொல்காப்பியத்திற்கும் அதன் உரைக்கும் முதன்மை தந்து தமது உரையில் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் அகப்பொருள் துறைகளைக் காட்டியது காணலாம்.

## 7. 8. 1 கைக்கிளை

'அஞ்சிறைய மடநாராய்' (1.4) என்னும் பதிகத்தில் ஆழ்வார் பெண் நிலைமையெய்தித் தூது விடுகையாலே கைக்கிளையாகக் கருதுவர். இப்பதிகத்தில் தலைவியாந் தன்மைக்கு உரிய காரணங்கள் சீயர் காட்டுவது குறிப்பிடத்தக்கது. அதாவது ஆழ்வாரது தன்மை இறைவனைப் பற்றியதால் இறைவனுடைய தன்மைகள் விடமாட்டாமல் வருகையாலும், இறைவன் திறத்து ஆழ்வாரது பக்தி, தலைவன் பக்கல் தலைவி காமத்தோடு சமானமாகையாலே நாயகி பாசுரத்தில் அருளிச்செய்கிறார்.

இவ்வாறு தலைவியாந் தன்மை அடைந்ததற்குக் காரணம் காணும்போது, 'பத்துடையடியவர்' (1.3) பதிகத்தில் இறைவனின் (திரிவிக்ரமன்) எளிவந்த தன்மையிலும் அழகிலும் ஈடுபட்டு மூன்று உறுப்புக்களாலும் இனிது அநுபவிக்க முற்பட்டு இறைவன் முகம் காட்டாமையாலே துக்கப்பட்டவராய்த் தலைவி நிலைமை எய்தினார் என்றும், இறைவன் திருப்பாற்கடலில் இருக்கும் இருப்பு வெகுதூரமாகையாலே தூது விடுவதாக அமைந்துள்ளது இப்பதிகம் என்றும் அறியற்பாலதாகும்.

"காட்சி ஐயந்துணிவு குறிப்பறிவென
மாட்சி நான்கு வகைத்தே கைக்கிளை" 28

என்று நம்பியகப் பொருள், கைக்கிளையின் நான்கு வகையினைக் கூறும். இவற்றுள் காட்சிக்கு இலக்கணம் கூறும் போது,

"முற்பிறப்பினும் காமதுகர்ந்தார் இருவரையும் மறு பிறப்பினும் கூட்டுவதும் பிரிப்பதுமாகிய நல்வினை தீவினை என்னும் இரண்டனுள் நல்வினை வயத்தால் தனியிடத்து எதிர்ப்படுவர், குலத்தாலும் செல்வத்தாலும் அறிவாலும் பிறவாற்றாலும் தம்மோடு ஒத்தாரும் மிக்காருமின்றித் தம்மிற்றாமே ஒத்த தலைமகனும் தலைமகளும்" என்பர் 29

நம்பியகப்பொருள் உரையாசிரியர். இதில் தலைமகனுக்கும் தலைமகளுக்கும் ஒத்த தன்மைகளைக் குறிப்பில் கொண்டு நோக்கும்போது ஆழ்வாருக்கும் இறைவனுக்குமுள்ள தன்மைகளின் ஒப்புமையில் ஆழ்வார் தாமான தன்மையில் இறைவனை மனத்தில் கண்ட காட்சியே பெண்மைக்குக் காரணம் எனத் தோன்றுகிறது. அவ்வாறு தோன்றவே காட்சி அடிப்படையில் கைக்கிளையாயிற்று என்று கருதமுடிகிறது. காட்சி அடிப் படையில் கைக்கிளையாகவே, தலைமகள் பிரிவு ஏற்பட்டதன் காரணம் அறிய வேண்டும்.

இயற்கை இன்னருளால் இறைவன் மயர்வற பக்தியையும் அறிவையும் ஆழ்வாருக்கு அருளினான். இஃது இவரது முயற்சியும் உளப்பாடுமின்றி வந்து, ஆழ்வார் மனத்தே இறைவனும் தன்னைக் காட்டக் கண்டார். ஆழ்வார் இறைவனது எளிவந்த தன்மையைக் கண்டு தொடர்ச்சியாகக் காண மாட்டாமல் 'எத்திறம்' என்று மோகித்து இருந்தார். அதாவது தெய்வப் புணர்ச்சியின் தொடர்ச்சிக்கு அன்புதான் காரணம் எனத் தெரிகிறது. 'இறைவனைக் கண்டபோது தம்முள் பெற்ற செய்குணங்களாலாய அன்பு நிறைவிக்கும். இவ்வன்பே பிரிவுக்குக் காரணம். இத்தகைய பிரிவுக்குக் காரணம் நக்கீரனார் கூறுவது இங்கு நினைதற்பாலதாகும்.[30] எனவே, பிரிவு என்பது அன்பினாலே நிகழுமாயின், ஆழ்வாருக்கு ஏற்பட்ட பிரிவு, அவர் தாம் 'திருவுலகளந்தருளினவனுடைய திருவடிகளை அநுபவிப்பதாக ஒருப்பட்டு 'அயர்ப்பிலன் தழுவுவன் வணங்குவன் அமர்ந்தே' (1.3.10) என்று பாரித்ததே யாகும். அப்பாரிப்பின்படி இறைவன் சடக்கென முகம் காட்டாமையாலே, அகப்பொருள் தலைவி வாயிலாகப் பிரிவைக்

காட்டுகிறார். இருப்பினும், சீயர் உரையில் 'வினைபோம்' (1.4.10) என்பதற்கு, 'பிரிவுக்குக் காரணமான பாபத்தை புடையோமான நாம்' என்று உரைத்ததற்கேற்பவும், இப் பதிகத்தின் தோற்றுவாயில் இறைவனின் தன்மைகளைக் காட்டிக் கடைசிப் பாடலால் 'திருப்பாற்கடலில் பள்ளி கொண்ட தன்மையால் தூரமாயிருக்கையாலே தம் நிலைமையை அறியாமல் அவன் தாமதித்தான்' எனக் குறிப்பிடுகிறார்' சீயர். இதனால் தூது அனுப்புவதற்கு அவன் நெடுந்தொலைவில் உள்ளது என்னும் காரணம் காட்டினமையும் அறிய முடிகிறது.

"அவன் கொடுத்த அந்த ஞானம் பேற்றோடே தலைக்கட்டப் பெறாமை பிரிவு" (1.4.1,36படி) என்று கூறுவர் நப்பிள்ளை. மேலும் 'ஒன்றாமளவே' என்றதனால் 'அவனோடே ஒன்றா மளவும் விடாதே கொள்' என்று உரைத்ததற்கேற்பக் கைக்கிளை இலக்கணமும் அமைந்தது காணமுடிகிறது. தூது விடுவதற் குரிய கருப்பொருள்களை, 'தாயர் சேயர் ஆயர் தீங்குழல்... என்மனார் புலவர்[31]' என்று புறப்பொருள் வெண்பா மாலை பெண்பால் கைக்கிளைத் துறை உணர்த்தும். இதில் குயில், அன்றில் ஆகியவற்றோடு தலைவி இரங்குவது குறிப்பிடப் பட்டுள்ளது. எனவே ஆழ்வார் நாரை தொடக்கமானவற்றைத் தூதாகக் கொண்டு தம் இரங்கல் செய்தியைக் கூறுகிறார் எனலாம்.

மேலும்,தொல்காப்பிய அகத்திணையியலில் 'காமம் சாலா.... புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே.[32] என்றவிடத்தில் தலைவனின் கைக்கிளைக் குறிப்பைக் காட்டி அதற்கு உரை யிட்ட நச்சினார்க்கினியர் முடிவில் தலைவியாலும் இந்நூற்பா பயன்படுத்த வகை செய்தது கொண்டு,[33] ஆழ்வார் தலைவியாம் தன்மை கொண்டு புல்லித் தோன்றும் கைக்கிளையாகச் சீயர் குறிப்பது காணத்தக்கது.

மேலும், "என் நீர்மை கண்டிரங்கி இது தகாதென்னாத என் நீல முகில்வண்ணர்க்கு என் சொல்லி யான் சொல்லு கேனோ" (1.4.4) என்பதற்குச் சீயர், "கலந்த நிலையில் என்னுடைய பிரிவைப் பொறுக்க முடியாத தன்மைத் தழுவுதல், தளர்தல் முதலானவற்றில் உடல் வேறுபாட்டாலே கண்டுவைத்து இவள் மென்மைத் தன்மை என்று இரங்கி இந்தப் பிரிவு தகுதியன்று" என்று உரை வழங்குகிறார்.

மேலும், 'நாடாத மலர்நாடி' (1.4.9) என்ற பாடலில் 'வீடாடி வீற்றிருத்தல் வினை' என்று ஆழ்வார் தம்மை நொந்து உரைக்கிறார். அதற்கு உரையிட்ட ஈயுர், 'பிரிவிலே இருந்து தனியிருத்தலாகிற பாக்கியக் குறைவின் செய்கை என்ன பயன் தருவதோ' என்று கூறுவர். ஆதலால் தலைவி பிரிவு மனத்தே ஏற்பட்ட நிகழ்ச்சி எனவும், அதனால் பிரிந்த தலைவி புல்லிக் கிடந்த இருப்பை நினைத்தாள் எனக் கைக்கிளையின் இலக்கணமும் சேரவந்ததால் ஈயர் இவள் பாசுரத்தைக் கைக் கிளை என்பது சாலப் பொருத்தமாகும்.

ஆக, தலைமகளாம் தன்மைக்கும், அவள் பிரிவுக்கும், அவ்வாறு பிரிந்த தலைமகள் தூது விடுவதற்கும், மேலும் தலைமகளின் அகப்பொருள் துறை கைக்கிளையாயிருப்பதற்கும் உரிய காரணங்கள் அவர்தம் உரைமூலமும், அதற்கு அரணாக அமைந்த அகப்பொருள் நூற்பா மூலமும் அறியலாம்.

### 7.8.2 தூதுப் பதிகங்கள்

மற்ற மூன்று பதிகங்களான 'வைகல் பூங்கழிவாய்', (6 1) 'பொன்னுலகாளீரோ,' (6.8) 'எங்கானல்' (9 7) ஆகியவற்றைத் 'தூது விடக் கருதிக் கூறுவனவும்'[34] என்ற தொல்காப்பிய உரையைக் கொண்டு இவ்வாறு அமைத்துள்ளமை காணமுடி கிறது. இதனையே 'காமமிக்க கழிபடர் கிளவி'[35] என்பர் இறையனார்.

### 7.8.3. தலைவி ஆற்றாமை

நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையில்[36] வேறு சில தலைவி கூற்றுகள் காட்டியதற்கு ஏற்ப, எட்டுப் பதிகங்களில் தலைவியின் ஆற்றாமை அமைந்துள்ளது.

(1) 'ஏறாளும்' (4.8) என்னும் பதிகத்தில் தலைவனான இறைவன் விரும்பாதனவற்றைத் தாமும் விரும்புகிறதில்லை என்ற ஆற்றாமை பேசப்படுகிறது.

(2) 'ஊரெல்லாம்' (5.4) என்னும் பதிகம் இரவு நெடுமைக்கு இரங்கிக் கூப்பிட்ட ஆற்றாமையைத் தெரிவிக்கிறது.

(3) 'மானேய் நோக்கி' (5.9) என்னும் பதிகத்தில் தலைவி யின் ஆற்றாமை 'பெருமானுடைய நல்ல செயல்களைச் சொல்லி ஏத்தக் கூடுமோ?' என்று தோழியிடம் அவள் பேசும் முறையில் அமைந்துள்ளது.

(4) 'வெள்ளைச் சுரிசங்கு' (7.3) என்னும் பதிகம் தலைவி திருப்பேரைக்குச் செல்லுகையில் ஒருப்பட்டு அதனை விலக்கிய தோழிகளையும் தாய்மார்களையும் அயற்சேரியில் உள்ளார் களையும் குறித்துத் தன் துணிவை வெளியிடுவதன் வாயிலாக அவளது ஆற்றாமை மிகுதியைக் காட்டுகிறது.

(5) 'நங்கள் வரிவளை' (8 2) என்னும் பதிகம் தலைவி யானவள் தன்னுடைய பெண்மை முதலான குணங்களையும் வெறுத்துத் தலைவனான இறைவன் வடிவழகாலே இழுக்கப்பட்ட மனத்தையுடைய தன்மையைப் புலப்படுத்தித் தலைவியின் ஆற்றாமை மிகுதியைக் குறிக்கிறது.

(6) 'இன்னுயிர்ச் சேவல்' (9.5) என்னும் பதிகத்தில் தலைவன் வந்து தலைவி மனத்தில் முகம் காட்டினமையைக் கண்டு உடம்போடே செறியவேண்டி நினைக்க, அது கிடையாமை யாலே, போலி கண்டு இரங்குகிறார். அவனது குணங்களை நினைத்துத் தரித்திருந்தாளாகவும் கூறுவர்.

(7) 'மல்லிகை கமழ்' (9.9) என்ற பதிகம் திருவாய்ப் பாடிப் பெண்கள் எல்லாரும்கண்ணனைப் பிரிந்து ஒரு மாலைநேரத்தில் பட்ட துன்பத்தினைத் தலைவியான ஆழ்வார் தாம் ஒருவரே படுவதாக, அவரது ஆற்றாமையை வெளிப்படுத்துகிறார். தென்றல், மாலை, குறிஞ்சி, மேகம் முதலானவை துன்புறுத்த, அலமருகின்ற தன்மை இப்பதிகத்தில் புலப்படுகின்றது.

(8) 'வாயுந் திரையுகளும்' (2.1) என்னும் பதிகம், நாரை, அன்றில் முதலான பொருள்கள் தன்னைப்போல் தலைவனைப் பிரிந்து வருந்தி வருவனவாக நினைத்துப் போலிமைக்கு இரங்கி உரைத்ததாகக் கூறுவர் சியர். இதனைத் 'தன்னுட்கை யாறெய்திடு கிளவி' என்றும் கூறுவர். தலைவி கூற்றுள், தன்னுட் கையாறு எய்திடு கிளவி உணர்த்தும் தலைவியின் உணர்வுகள் யாவும் எல்லை மீறி ஆற்றாமையை உரைப்பனவாக உள்ளன.

இவ்வாறு பிரிவு பற்றிய ஆற்றாமைப் பதிகங்கள் தலைவன் விரும்பாததைத் தாமும் விரும்பாமை, இரவு நெடுமை, தோழிக்கு உரைத்தமை, தானே தேடிப் போதல் பற்றிக் கூறியமை, தன் பெண்மை முதலிய குணங்களை வெறுத்துரைத்தல், போலி கண்டிரங்கல், தனிமைத் துயர் மிகுதி கூறல், பிற உயிர்களின் பிரிவுத் துயர்க்காக வருந்துதல் என்னும் அமைப்பில் இருத்தல் அறியலாம்.

### 7. 8. 4. மடல்

'மாசறு சோதி' (5.3) என்னும் பதிகத்தில் தலைவனை அடைவதிலுள்ள விரைவாலே தன் குடிப்பிறப்புக்கும் பெண்மைக்கும் தகாததாம்படி அவனுடைய மெய்ப்பாட்டை அறித்து மடலூரப் பார்க்கிறாள் தலைவி. பெண் மடலூர்தல் சிறுபான்மை இருந்து வந்ததைப் பன்னிரு பாட்டியல் 37 மூலம் அறியலாம். அதாவது, கடவுள் தலைவராய் ஒரு நூலில் வருங்காலத்து மகளிர் மடலேறுதல் உண்டு என்பதற்கேற்ப, பக்தி இலக்கியமான திருவாய்மொழி இறைவனால் இயற்றப் பட்டதாகையாலும், இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டதாதலாலும், ஆழ்வார் தாமாம் தன்மையிழந்து பெண்மை ஏறிட்டு மடலூர்தலையும் ஏறிட்டுக் கொள்ளத் தட்டில்லை எனத் தோற்றுகிறது. தோழிமாரோடு உரையாடல் போக்கில் இப்பதிகம் அமைந்து, தோழி விலக்கிய கூற்றையும், அதற்கு மறுமாற்றாகத் தலைவியாம் தன்மையில் தாம் இழந்தன வற்றையும் காரணமாகக் கொண்டு மடலூரத் துணிந்தமை காண முடிகிறது.

இயற்பழிக்கும் தோழி வார்த்தையையும் மீறித் தலைவி தனது பேரமர்க் காதலின் எல்லையாலே தலைவனின் தனிக் குணங்களிலே தன் நெஞ்சு ஈடுபட்டதைக் குறிப்பது அநுபவிக்கத் தக்கது. மேலும், தோழிக்குத் தன்னெஞ்சை வெளியிடும் வகையில், எல்லா உலகமும் பழிக்கும்படி மடலூரப் போவதாகக் கூறுவள் தலைவி. அதற்குரிய காரணத்தை நுணுகி ஆராயுங் கால், "நாணும் நிறையும் கவர்ந்து என்னை நன்னெஞ்சம் கூவிக்கொண்டு சேனுயர் வானத்திருக்கும் தேவபிரான்" (5.3.9) என்ற தொடரால் அறியலாம். இத்தகைய மடல் நெறிமுறை களைச் சீயர் உரையில் வாயிலாக அறிய முடிகிறது.

### 7. 8. 5. கழற்றெதிர்மறைத் துறை

'எங்ஙனேயோ' (5 5) என்ற பதிகத்தில், தலைவி தலைவனான நம்பியின் வடிவழகில் ஈடுபட்டு, அவனை வெளியில் கலந்து அநுபவிக்கப் பெறாது துககமடைகிறாள். இதனைக் கண்ட தோழிமார்களும், தாய்மார்களும் உறுதிமொழி கூறித் தேற்ற முயற்சி செய்வர். அவர்கள் தேற்றரவை எதிர்த்துத் தலைவி தான் நம்பி திறத்து ஈடுபட்டதைச் சொல்லி எதிர் மறுத்துரைப்பள். இதனை 'கழற்றெதிர் மறைத்துறை' என்பர் சீயர்.

இறையனார் அகப்பொருள் நூற்பாவிற்கேற்ப, (38) பாங்கன் கழறத் தலைவன் ஆற்றானாய்ச் சொல்லும் சொற்கள் கழற்றெதிர் மறையாயினும், பாட்டுடை மக்களைப் பாராது, அகப்பொருளின் கண் நோக்கும்போது, சீயர் கூறியபடியே தலைவிக்குத் தோழி/தாய்மார் கழறத் தலைவி ஆற்றானாய்ச் சொல்லும் சொற்கள் கழற்றெதிர்மறை எனக் கொள்ளத் தகும். மேலும் இப்பதிகத்தில் தலைவனையே நினைத்திருக்கும் தலைவிக்குக் காணுமிடமெங்கும் அவன் வடிவே தெரிகின்றது என்றும் இதனை உருவெளிப்பாடு என்றும் கு. தாமோதரன் கூறுவதும் இங்குக் கருதத் தக்கது.[39]

இத்துறைக்கேற்ப, பிறரது உறுதிமொழி அல்லது முனிந்த மொழியாவை என ஆராயும்போது, அவற்றைத் தம் கூற்றிலேயே தம் வாயாலேயே வெருவி உரைப்பது குறிப்பிடத்தக்கது. அவ்வாறு காணும்போது, ஒரே பாடலில் (5.5.9) தான் தோழிமார்களையும் கூட்டி உரைத்தது காணமுடிகிறது. மற்றை ஒன்பது பாடல்களில் அன்னையர்கள் முனிந்த மொழிகளைத் தம் வாயாலே உரைக்கின்றார். நம்பியின் அடையாளங்களிலும் அவயவங்களின் அழகிலும் ஈடுபட்டு அவை உருவெளிப்பாடாய்ப் பதிகம் முழுவதும் அமைந்தது சீயர் உரைவாயிலாகவும் அறியப் பெறுகிறது.

### 7. 8. 6. உருவெளிப்பாடு

உருவெளிப் பாடாக அமைந்த 'ஏழையராவி' (7.7) என்னும் பதிகத்தில் தலைவனுடைய அவயவங்கள் உருவெளிப்பாடாய்த் தோன்றித் தலைவியை நலிவிப்பதாகக் கூறுவர்.

### 7. 8. 7. ஊடலும் ஊடல் தீர்தலும்

'மின்னிடைமடவார்' (6.2) என்னும் பதிகத்தில் தலைவன் தலைவி ஆகிய இருவரிடையேயும் உள்ள அன்பின் மிகுதியை எடுத்துக் காட்டும் வகையில் ஊடல் துறை அமைந்துள்ளது. மேலும் ஊடற்குரிய காரணமும், அக்காரணம் பற்றி வந்த தலைவி கூற்றும், அதனைப் போக்கும் வகையில் தலைவன் கூற்றின் நேர்மையும், அவனது முகவொளி திகழ, முறுவல் செய்தமையினால் தலைவி மறம் தீர்ந்து அவனாலே ஊடல் தீரப் பெற்றுக் கலந்தமையும் சிறப்பாக வந்துள்ளமை அறியற் பாலதாகும்.

### 7. 8. 8. தலைவன் போக்கு விலக்குதல்

'வேய்மரு தோளிணை' (10.3) என்ற பதிகத்தில் தலைவனான கண்ணன் தலைவியோடு கலந்து காலைப் போது 'அவன் பிரிவானோ' என்று ஐயுற்று, தான் பிரிவால் பட்ட துக்கம் முழுமையும் அவன் முன்னே பாடல்தோறும் காட்டிச் செல்லுகிறாள். அகப்பாடல்களில் நேரடியாகத் தலைவனிடம் தலைவி கூற்று நிகழாது. ஆனால் காமத்து மிகையால் ஆழ்வார் நாயகி அவ்வாறு கூற்றுக்குரியள் ஆகிறாள். தலைவியான ஆழ்வார் தாம் முன் 16 பதிகங்களில் பட்ட துன்பத்திற்கு மிக்கான நிலைமை இப்பதிகத்தில் காண முடிகிறது.

### 7. 9. தோழி கூற்று

அகப்பாடல்களில் களவு, கற்பு என்னும் இரு கைகோள் களிலும் தோழி கூற்று சிறந்து விளங்கும். தலைவியின் களவை ஆராய்தல், தலைவியின் மனநிலை அறிந்து களவையும் கற்பை யும் இணைத்துத் தோழி அறத்தொடு நிற்றல் முதலான துறை களில் தோழி சிறப்பாகச் செயல் புரிவதை நம்மால் உய்த்துணர முடிகிறது. ஆழ்வார் பாடலில் மூன்று பதிகங்கள் (4.6, 6.5; 8.9) தோழி கூற்றாக அமைந்துள்ளன. அகப்பாடல்களில் தலைவி வேறு, தோழி வேறு. ஆனால் ஆழ்வார் பாடலில் இருவரும் ஒருவரே. தோழியும் தானே தலைவியும் தானேயாயிருந்து தலைவியாம் தன்மையைத் தானே சொல்லுவதும், தோழி வாயால் சொல்லுவிப்பதும் ஆழ்வாரே யாவர் இதுதான் பக்தி இலக்கியமான திருவாய்மொழிக்குள்ள ஏற்றம். எனவே, தானான தன்மை விட்டுத் தலைவி கூற்றாகப் பேசிய ஆழ்வார், தோழியராம் தன்மையில் தம் மனத்தை வெளிப்படுத்தக் காரணம் அறிய வேண்டியுள்ளது.

> "தோழியாவாள், நாயக நாயகிகளை இணக்கிச் சேர்க்கும் வளாகையாலே திருமந்திரத்தில் முதல் பதத்தால் ஈச்வர னோடு ஆத்மாவுக்குச் சொல்லப்பட்ட பிறர்க்குரித்தாகா அடிமைத் தன்மை முதலான சம்பந்த ஞானமே அவனோடு இவ்வாத்மா சேருகைக்குக் காரணமாகையாலே அந்தச் சம்பந்த ஞானமாகிற அறிவின் நிலை (ப்ரஜ்ஞாவஸ்தை) தோழி"[40]

என்பர் மாமுனிகள்.

இத்தகைய அறிவின் நிலையில் தோழியானவள், வெறி விலக்கு, ஆசையறுத்தல், அறத்தொடு நிற்றல் ஆகிய மூவகைத் துறைவழித் தலைவியான ஆழ்வாரின் கற்பியல்பை வெளிப் படுத்துகிறாள். இதனையே,

''ஸகி வெறிவிலக்கி, ஆசையறுத்து, அறத்தொடுநின்ற
மூன்றில் அநந்யார்ஹத்வமும்''[41]

என அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் கூறுவது அறியற் பாலதாகும்.

## 7. 9. 1. வெறிவிலக்கு

'தீர்ப்பாரை யாமினி' (4.6) என்னும் பதிகத்தில் தலைவன் பிரிவாலே ஆற்றாளாய்த் தலைவி உடலில் வேறுபாடு கண்டு, "இவள் பக்கல் ஏதேனும் ஒரு வழியில் இவள் நோய் போக்க வேணும்'' என்பாள் தாய். இதற்குத் தோழி ஆராய்ந்து சொல்லுவாள். தலைவியின் தன்மையறிவும் திறனுடைய தோழி தாய்மார்கள் முயற்சியை விலக்கித் தான் இப்போது ஆராய்ந்து நோயின் காரணம் அறிந்தாளாகப் பாவிப்பாள். இவ்விடத்தில் இறையனார் அகப்பொருள் நூற்பாவிற்கேற்ப, தோழி அறத்தொடு நின்று,[42] தனது காவலொடு மாறுகொள்ளாமையை யும், தலைவியது கற்பினொடு மாறுகொள்ளாமையையும் வெளிப் படுத்துகிறாள்.

## 7. 9. 2. ஆசையறுத்தல்

'துவளில் மாமணி மாடம்' (6. 5) என்னும் பதிகத்தில் தாய்மார் தலைவியின் நினைவை மீட்க முயன்று தோழியை வேண்ட, தோழியானவள் இதற்கு முன்பு தலைவியைக் கூடக் கொண்டு போய்த் திருவடி தொழுவித்த போது ஆசையற்றுச் செய்யாமையால், இப்போது அவளை மீட்க நினைக்கும் ஆசையைத் தவிர்க்கச் சொல்லுகிறாள். அகப்பொருள் இலக்கணம் தோழிகூற்றோடு இதனை ஒப்பவைத்துக் காணலாம், தொல்காப்பியத்தில் களவியலில் தோழிக்குரிய 32 கூற்றுகள் கூறியபின், ''...வகையுந் தாங்கருஞ் சிறப்பிற் றோழி மேன''[43] என முடியும் நூற்பாவில் 'வகையும்' என்பதற்கு 'இக்கூற்றுக் களிலே வேறுபட வருவனவும்' என்று உரைப்பது இங்கு எண்ணத்தக்கது.

### 7. 9. 3. அறத்தொடு நிற்றல்

'கருமாணிக்கமலை' (8. 9) என்னும் பதிகத்தில் தலைவி தலைவனோடு இயற்கையிலே புணர்ந்த வேறுபாடு கண்டு இதை யறியாத பந்துக்கள் வேறே மணமுரசு அறிவிக்க முயலும் காலத்துத் தோழி, 'கலவியின் செய்கை' என அறிந்து அறத் தொடு நின்று தலைவியின் வேறுபாட்டிற்குக் காரணம் கூறுவாள். இது நம்பியகப்பொருளில் 'பாங்கி அறத்தொடு நிற்றல்' பகுதியில், 'எறிவளை வேற்றுமைக் கேதுவினாவினும்'[44] என்னும் நூற்பாத் தொடரோடு ஒப்புநோக்கத் தக்கது. இங்குத் தோழி அறத்தொடு நிற்றலைத் 'தலைமகனது பெருமைக்கு முரணாகாதவாறும், தனது காவற்குச் சோர்வு ஏற்படா வண்ணமும், தலைவிக்குத் தலைவனோடு நேர்ந்த தொடர்பு தன்னைத் தோழி செவிலிக்கு எடுத்துரைப்பாளாகக் கூறுவர் கு. தாமோதரன்.[45] இதற்கேற்பத் 'தோழிக் குரியன கோடாய் தேஎத்து மாறுகோள் இல்லா மொழியுமார் உளவே' [46] என்ற இறையனார் அகப்பொருள் நூற்பாவும் அதன் உரையும் கொண்டு ஒப்பானது காணலாம்.

தோழி அறத்தொடு நின்று பேசும் கூற்றில் தலைவனது பெருமையெல்லாம் பாடல்தோறும் அமைந்ததைத் தோற்று வாயில் சியர் தோழி சொல்லாகக் குறிக்கின்றார்.

### 7. 10. தாய் கூற்று

தாய் கூற்றாக அமைந்த ஏழு பதிகங்களில் தலைவியான ஆழ்வாரின் சொல்லற்கரிய உருக்கமான மனநிலைகள் எடுத் துரைக்கப் பெறுகின்றன.

தலைவியை ஈன்றளித்த தாயை நற்றாய் என்றும், வளர்த்த தாயைச் செவிலித்தாய் என்றும் அகப்பொருள் நூல் கூறும். அதாவது, ''கூறுதற்கரிய மறைப்பொருளெல்லாங் குறிப் பானன்றிக் கூற்றாற் கூறத்தக்கமோ ராதலின் தாயென்று சிறப்பித்துச் சொல்லப்படுவாள் செவிலியேயாம்''[47] என்பர் நச்சினார்க்கினியர். மேலும் செவிலி கூற்று நிகழும் இடத்தைக் கூறும் 13 கிளவிகளில் 'காமம் மெய்ப்படுப்பினும்' [48] கிளவி வாயிலாகத், 'தலைவி கரந்தொழுகுங் காமந்தானே அக்கள வினை நன்றாயும் தீதாயும் மெய்க்கண் வெளிப்படுப்பினும்' என்று உரைத்தற்கேற்பவும் இவ்வேழு பதிகங்களிலும் நற்றாய் வாயிலாகத் தலைவியின் தன்மைகள் யாவும் கூறப்பெறுதலால் தொல்காப்பியம் காட்டும் அகப்பொருள் இலக்கணத்தோடு ஒப்புமை காண முடிகிறது.

1. 'ஆடியாடி' (2. 4) பதிகத்தை, 'பிரிந்த தலைமகள் ஆற்றாமைக்கு நற்றாய் இரங்கின பாசுரம் என்பர் சீயர். இதனை நம்பியகப்பொருளில் 'கண்டோர் இரங்கல்' என்ற பகுதியினைக் காட்டும்போது,

"ஆயமும் தாயும் அழுங்கக் கண்டோர்
காதலின் இரங்கல் கண்டோ ரிரக்கம்"[49]

என்ற நூற்பாவுக்கு ஏற்ப நற்றாய் தலைமகளிடம் உள்ள அன்பினால் இரங்குதலைத் தெரிவிப்பதும் இப்பதிகத்திற்கு உறுதுணையாகும். ஆனால் இப்பதிகத்திலும், 'கங்குலும் பகலும்' என்ற பதிகத்திலும் நேரடியாகத் தலைவனை நோக்கித் தாய் கூறுவதாக அமைந்தது அகப்பொருள் நூல்களில் காணப் பெறாத கூற்றுகள் ஆகும்.

2. 'பாலனாய் ஏழுலகு' (4. 2) என்ற பதிகத்தில் தலைவியின் ஆற்றாமைக்குக் காரணம் காணும்போது தலைவனான இறைவன் திருவடிகளிலே இருப்பதாய் அநுபவிக்கத்தக்க திருத்துழாயைப் பெற வேண்டிப் பிறந்த ஆசையே யாகும். பாடல் தோறும் தலைவியின் நினைவு தலைவனான இறைவன் பல்வேறு அவதாரங்களிலும் விண்ணுலகிலும் இருந்த திருவடிகளில் அந்தக் காலத்தில் சாத்தின திருத்துழாயைப் பெற விரும்புவதைச் சித்திரித்துள்ளார்.

3. 'மண்ணையிருந்து' (4. 4) என்ற பதிகத்தில் தலைவனோடு ஒப்பான பொருள்களையும், தொடர்புடைய பொருள்களையும் கண்டு தலைவி தன் பிரிவின் ஆற்றாமையைத் தாய் கூற்றாக வெளிப்படுத்துகிறாள்.

4. 'கடல்ஞாலம்' (5. 6) என்ற பதிகத்தில் உருவெளிப் பாட்டாலே இறைவன் கிடையாமையால் வந்த துக்கமே விஞ்சும்படி மிக்க காதல் பிறந்து தன்னை அவனாகவே எண்ணும்படி நினைவு முதிர்ந்தது. இப்பதிகத்தில் தலைவி வாயால் தலைவன் செயல்களான கல்வி, பயன், நரகம், மோட்சம் யாவும் தானே யென்னும்படி அலற்றுகிறாள் இவ்வாறு செய்வதற்குக் காரணம் இறைவன் இவள்மீது ஆவேசித்தானோ என்ற நற்றாயின் ஐயத்தை ஒவ்வொரு பாடலிலும் காட்டும்போது நற்றாயானவள் தலைவனின் தன்மைகளைச் சித்திரிக்கிறாள்.

5. 'மாலுக்கு வையம்' (6. 6) என்ற பதிகத்தில் இறைவன் திறத்துத் தமக்குத் பிறந்த எல்லையற்ற காதல் காரியமான பரவச மிகுதியால் தலைவி தானும் தன் உடைமைகளும்

அவனிட்ட வழக்காம்படி, அவற்றில் தாம் தசையற்ற படியைச் செவிலி வாயிலாகக் கூறுகிறார் மற்ற உரைகளில் (6.6—36, 24, 9 படிகள்) இப்பதிகத்தைத் தாய்ப்பாசுரமாகக் கூறுவர். சீயர் இதனைச் செவிலித் தாய்ப் பாசுரமாகக் குறிக்கிறார். "மறை பொருளெல்லாம் குறிப்பானன்றிக் கூற்றால் கூறுதற்குரியவள் செவிலியே" என்பது தொல்காப்பியம்.[10] ஆதலின், சீயர் கூற்று இலக்கண முறைமைக்கு மிகவும் பொருந்த அமைந்ததாகும்.

6. 'உண்ணுஞ் சோறு' (6 7) என்னும் பதிகத்தில் திருவின் மணாளன் திறத்துத் தமக்குப் பிறந்த விரைவின் மிகுதிக்குக் காரணமான அவனுடைய தன்மைகளை நினைத்து, தமக்குப் பிறந்த விரைவின் மிகுதியாலே அவனை அழைப்பதில் முயன்று நடந்த இவருடைய நிலைமையைக் கூறுகிறார்.

7. 'கங்குலும் பகலும்' (7,1) என்னும் பதிகத்தில் தலைவியின் பரிதாபத்திற்குரிய நிலைமையை எடுத்து விளக்கித் தலைவனான பெரிய பெருமாளை நேரில் பார்த்து, "இவள் திறத்து என்ன செய்ய நினைத்திருக்கின்றீர்' என்று நற்றாய் முறையிடுகிறாள். முற்கூறியபடியே அகப்பாடலில் தலைவனை நோக்கி நற்றாய் கூற்று நிகழ்வதில்லை. இருப்பினும் இப்பகுதிகள் ஆழ்வார் பாடல்களில் அழகுற அமைந்து உரைமூலம் சுவை தருவனவாக விளங்குகின்றன: தலைவியைக் காப்பது தன் கடமை என்று தாய், எண்ணித் தலைவி இராப்பகலாக அழுவதும், தொழுவதும், மயங்குவதும், பிதற்றுவதும், நெடுமூச்செறிவதும் கண்டு இவள் ஆற்றாமையைப் பெரிய பெருமாளிடம் தானே அறிவிப்பது காணலாம்.

இவ்வாறாக அகப்பொருள் இலக்கண நூல்களிற் காட்டிய நூற்பாவிற்கேற்பப் பெரிதும் பொருந்தத் தலைவி, தோழி, தாய் கூற்றுகள் ஒருவாராக ஆழ்வார் பாடலில் அமைய, அவற்றைத் தம் உரை மூலம் ஆங்காங்கே சீயர் விளக்கிய திறம் குறிப்பிடத்தக்க தாகும். தாயர் கூற்றில் செவிலி கூற்றையும் கொண்டு உரைத்தது சீயர் உரையின் தனித்தன்மையாகும். தலைவன்—தாய் கூற்று நிகழ்வதாகக் காட்டியது பண்டை அகமரபிலிருந்து சிறிது பிரிந்து வளர்ந்த பக்தி இலக்கியப் போக்கு எனலாம்.

## 7. 11. சீயர் காட்டும் குறிப்புப் பொருள்

அகப்பாடல்களில் வரும் பொருள்கள் உவமை என்றும், இறைச்சி என்றும் இருவகையின. இவற்றுள் உவமையாவது உள்ளுறை என்றும், வெளிப்படை என்றும் இருவகைப்படும்.

அவ்வகையில், ஆழ்வாரின் அகப்பாடற் பதிகங்கள் நல்லாசிரியன் இலக்கணத்தையும், சீயரின் இலக்கணத்தையும், ஆழ்வார் பாடிய புள்ளொடும் விலங்கொடும் அதன் செய்கைகளோடும் ஒப்பிட்டு உள்ளுறையாக அமைத்துக் காட்டுவர். அவ்வாறு காணும்போது இரண்டு அகப்பாடல் பதிகங்களுள் சீயர் குறிப்புப் பொருள் வழங்கியுள்ளது தெளிவாகும். மேலும் இரண்டு பதிகங்களில் ஆங்காங்கேயும் குறிபபுப் பொருள் தந்த இடங்கள் உள. இவற்றுள் சேர்ப்பாரான ஆசாரியர் இலக்கணம் பற்றி 'அஞ்சிறையமடநாராய்' (1.4) யிலும்,[228] 'வைகல்பூங்கழிவாயிலும்' (6.1) கூறியுள்ளார்.

### 7.11.1. சேர்ப்பர் (கடகர்) சிறப்புகள்

தாய் தந்தைக்கு அடுத்தபடியாக ஆசாரியனைத் தெய்வமாகக் கருதுகிறது வேதம். இதனைப் பின்பற்றியே வைணவ சமயமும் ஆசாரியர்களுக்கு முதலிடம் தந்துள்ளது. ஆழ்வார்களுள் திருமழிசைப்பிரான் பேயாழ்வாரையும், ஆண்டாள் பெரியாழ்வாரையும், மதுரகவிகள் 'தேவு' மற்றறியேன்' என்று நம்மாழ்வாரையும் ஆசாரியராகக் கொண்டனர். அவ்வாறு வழித்தோன்றல்களான நாதமுனிகள் தொடங்கி ஆசாரிய பரம்பரை வைணவத்தில் சிறந்து விளங்குகிறது. இத்தகைய ஆசாரியர்களுக்கு உரிய நெறிமுறைகள் ஆழ்வார் பாடலுக்குரிய உரைகளில் வழங்கியுள்ளனர். நம்பிள்ளையும் 'அஞ்சிறையமடநாராய்' (1,4) என்ற பதிகத்தில் நல்லாசிரியன் இலக்கணத்தை ஒவ்வொரு பாடலின் குறிப்புப் பொருளாகக் காட்டுகிறார். அவ்வண்ணமே சீயரும் தமது உரையில் காட்டுவது குறிப்பிடத்தக்கது.

சீயர் தமது உரையில் சேர்ப்பாரான ஆசாரியரின் தன்மைகளைக் குறிப்பிடும் வகையில் 'அஞ்சிறைய மடநாராய்' என்ற பதிகத்தில் "நாரை தொடக்கமான பறவைகளைத் தூதாகச் சொல்லிற்று—காரியத்தைத் தலைக்கட்டிக் கொடுக்கும் ஆசாரியருடைய தன்மையைக் குறிப்பிடுகிறது" என்பர்.

'அஞ்சிறைய மடநாராய் அளியத்தாய்' என்ற தொடரால் காரியத்தைத் தலைக்கட்டிக் கொடுக்கும் ஆசாரியருடைய தன்மை சொல்லியதாகும். எவ்வாறெனில், நாரையானது தலைவிக்கு உதவுவதற்குத் தகுதியான தன்மையுடைத்தாயிருக்~~கிறாள். அவ்வாறே ஆசாரியனும் சீடனுடைய அறிவை வளர்க்கும்~~

~~பணியில் உதவுவதற்குத் தகுதியான தன்மையுடையவனாயிருக்~~ கிறது. அவ்வாறே ஆசாரியனும் சீடனுடைய அறிவை வளர்க்கும் பணியில் உதவுவதற்குத் தகுதியான தன்மையுடையவனாயிருக் கிறான் என அறிய முடிகிறது. மேலும் உதவுவதற்குத் தக்க அறிவும் பக்தியும் கொண்டவராயிருப்பர் நாரையும் இரண்டு சிறகுகளை உடைத்தாயிருப்பது பற்றி 'சிறகைக் கொண்டா டிற்று—ஞானபக்தியான இரண்டு சிறகு' என்பர் சீயர்.

இப்பதிகத்தில் வந்துள்ள மற்றைப் பறவைகளான குயில், அன்னம், மகன்றில், குருகு, வண்டு, கிளி, பூவை ஆகிய வற்றுக்கும் காரியத்தை முடித்துக் கொடுக்கும் தன்மையும், அதற்குத் தேவையான சிறகும் இருக்கிறபடியை ஆசாரியர்களின் ஞானபக்திக்கு ஒப்பாகச் சொல்லப்பட்டது.

'நீயும் நின் சேவலுமாய்' என்றவிடத்தில் பேடையான நாரையானது சேவலோடே சேர்ந்து இருப்பதை குறிப்புப் பொருளாகக் காட்டும்போது ஆசாரியன்—சீடன் ஆகியோரின் ஒருவருக்கொருவரின் ஆண்டான் அடியவன் உறவைக் கூறிப் பிடுவர்.

'இனக்குயில்காள்' என்றதனால் குயில்கள் இனமாகக் கூடி யிருப்பதை, ஆசாரியர்கள் இனமாகக் கூடியிருப்பதையும். 'நீரலிரே' என்பதனால் அந்தக் குயில்களின் பேச்சு இனிமையைக் குறிப்புப் பொருள்ளாகக் கொண்டு ஆசார்யர்களின் பேச்சும் இனிமையுடைத்தாயிருப்பதைக் கூறுவர்.

'மென்னடை அன்னங்காள்' என்பதனால் மென்மையாக நடக்கும் அன்னங்களுக்கு ஒப்பாக ஆசாரியர்களின் பிரி தொன்றிற்கில்லாப் பெருமையும் (வைலக்ஷண்யம்), 'விதியினால்' என்பதற்குப் 'பாக்கியத்தாலே' என்று பொருளையும் வழங்குவர். 'பாக்கியமாவது ஆசார்யர்களின் உயர்ந்த தன்மை' என்று குறிப்பிடுவர் சீயர்.

மகன்றில்களானவை நீல நிறத்தை யுடைத்தாயிருக்கும், அவற்றுக்கு ஒப்பாக ஆசாரியர்களின் அழகின் சிறப்பை 'மகன்றில்காள்' என்பதற்கு குறிப்புப் பொருளாக வழங்கியது அறியலாம்.

ஆசாரியர்களின் திருமேனியை எளிமையாகக் காண முடியும் என்பதைச் 'சிறுமாமனிசர்' என்ற தொடருக்குச் சேர, வடிவில் சிறுமையும், அறிவில் பெருமையும் உடைய மனிசராகக் கருதுவர். இது 'வண்சிறு குருகே' என்ற பதத்தின் குறிப்புப்

பொருளாக அறியலாம். அதாவது குருக்கு வண்மையாவது பார்ப்பவர்கள் கண்ணுக்கு இனிமையாயிருத்தல். அதனால் தான் 'கண்ணுக்கினிய சிறுகுருகே' என்றே சியரும் உரை யிட்டது காணலாம்.

'ஆழிவரிவண்டே' என்பதனால், எப்படி வண்டானது மலரில தேனை மட்டும் உண்ணுமோ, அவ்வாறே ஆசாரியன் சாரமான பொருளை எடுத்துச் சொல்லும் தன்மையன் என்பதும், வண்டு வட்டமாயும் வரிகளையுடையதாயும் இருப்பது போன்று ஆசாரியனும் . வடிவழகு தோற்ற இருப்பன் என்பதும் உணருமாறு உரைவழங்குவர் சீயர். கடகருடைய ஆத்ம குணத்தைப் போல ரூபகுணமும் உத்தேச்யம் (தேவை)' என்று நம்பிள்ளையும் பெரியவாச்சான் பிள்ளையும் உரைத்தது அறியலாம்.

ஆசாரியர்களுடைய உறுப்புக்களின் அழகையும், குற்றேவல் களை ஏற்றுக்கொள்ளும் தன்மைகளால் வந்த எளிமையையும், 'இளங்கிளியே யான் வளர்த்த நீயலையே' என்ற தொடரால் உணரமுடிகிறது. அதாவது வடிவழகும் இளமையுமுடைய கிளியை ஆசாரியரின் உறுப்புக்களின் அழகுக்கு ஒப்பாகவும், பருவத்துக்கும் இளமைக்கும் ஈடாகக் கிளியை வளர்த்ததால் ஆசாரியர் தம் சீடர்கள் செய்யும் குற்றேவல்களை ஏற்கும் எளிமைக்கு ஒப்பாகவும் தோற்றுகிறது.

'உனது வாயலகில்,இன்அடிசில் வைப்பாரை நாடாயே என்பதனால் 'ஆசாரியனுக்கு ஏதாவது உதவி செய்யாதது தன் துக்கம்' என்பதையும், 'சிறுபூவாய்' என்பதனால் ஆசாரிய னுடைய பருவச் சிறுமையும் தேவை' என்பதையும் அருளு கிறார் சீயர்.

'நாடாத மலர்நாடி' என்ற பாடலில் 'நிலைவேறுபாட்டாலே உதவாதாராயினும் அதில் கருத்து இன்றிக் கொள்ளத்தக்கவர்' என்பர் சீயர்.

'உடலாழிப் பிறப்பு' என்ற பாடலால் 'ஆசாரியரானவர் நம்பத்தகுந்த நெஞ்சு போன்றவர்' என்று கருதுவர்.

சீயர் உரையிலிருந்து ஆசாரியர்களின் நலவிலக்கணம் விளங்குகிறது. அஃதாவது: ஆசாரியானவர் காரியம் செய்து கொடுக்கும் தன்மையர்; இனமாகக் கூடியிருப்பவர்கள்; காரியம் தலைகட்டும் ஞானமும் பக்தியும் உடையவர்கள்.

பேச்சில் இனிமையுடையவர்கள்; வடிவழகையுடையவர்கள்; எளிமையாகக் காணத்தக்க திருமேனியுடையவர்கள்; சாரமான பொருளை எடுத்துச் சொல்லும் தன்மையர்; குற்றங்களை ஏற்கும் எளிமைத்தன்மை உடையவர்கள் ஆசாரியர்களுடைய பருவச்சிறுமையும் கொள்ளத் தக்கது. அவர்கள் நிலைவேறு பாட்டாலே உகவாதாராயினும் அதனை நோக்காது பயன் தருவாராகில் கொள்ளத்தக்கவர்.

2. 'வைகல் பூங்கழிவாய்' (61) என்ற பதிகத்தில் ஆசாரியர் வாயிலாக நெறியை மேற்கொள்வது (உபாயத்தை வரித்தல்) கிட்டுவதாகக் குறிப்புப் பொருள் காட்டியுள்ளார்.

'வந்துமேயும் குருகினங்காள்' என்பதனால் 'சமான இடத்தில் ஆசாரியர்கள் இருக்கும் தன்மையால் வந்த ஸந்நிதியும், 'கைகள் கூப்பிச் சொல்லீர்' என்பதனால் 'இறைவனைப் பற்றிய விஷயத்தில் தொண்டும் தோன்றுகின்றன.

ஆசாரியர்கள் சீடருடன் கூடியிருக்கும் தன்மை'காதல் மென் பெடையோடு உடன்மேயும்' என்பதிலும், ஆசார்யர்களுக்குத் திருமேனி அழகு தேவை என்பது 'கருநாராய்' என்பதிலும் குறிப்பாகக் கூறப்பட்டுள்ளன.

'திறங்களாகி எங்கும் செய்களூள் உழல் புள்ளினங்காள்' என்பதனால் ஆசாரியர்களின் சேர்க்கை (ஸமவாயம்) தேவை என்பது உணர்த்தப்படுகிறது.

'இடரில் போகம் மூழ்கி' என்பதனால் ஒருவருக்கொருவர் இறைவனை அனுபவிப்பதில் ஸௌகர்யத்தையும் காட்டியுள்ளார் சீயர்.

'உணர்த்தல் ஊடல்' என்பதனால் ஆசாரியர்கள் சீடர்கள் ஒருவருக்கொருவர் பிரிவினால் பயப்படும் தன்மையும் தேவை என்று கூறுவர்.

'யாமிரந்தேன்' என்பதனால் ஆசார்யர்கள் வாக்கினிமையும், 'மாற்றம் கொண்டருளீர்' என்பதனால் பொருள் நியதியையும் பொருளாகக் கூறுவர்.

'ஒண்கிளி' என்பதால் ஆசாரியர்கள் இறைவனோடு ஒத்த வடிவை உடையவர்கள் என்றும், 'ஒண்சிறு' என்பதனால் ஆசாரியர்கள் திருமேனியின் சுகத்தன்மை உடையவர் என்பதையும், 'திருந்தக் கண்டு எனக்கொன்றுரையாய்' என்பதனால் உள்ளபடி சொல்லும் தன்மை, நம்பத்தக்கமை தேவை என்பதையும் கூறுவர்.

ஆசாரியர்களுடைய உயர்ந்த சாதியை அன்னங்களுக்கு ஒப்பாகவும், 'அலர்மேல் அசையும்' என்பதனால் ஆசாரியர் களுக்குச் சிறந்த வித்வான்களின் சேர்க்கையால்வந்த செருக்குத் தோற்றுவதாகவும் கூறுவர்.

பகவதநுபவப் புகழ்ச்சியால் வந்த ஆசாரியர்களிடமுள்ள பரிமளம் 'வெறிவண்டினங்காள்' என்பதனால் தெரியும் என்பர்.

இவ்வாறாக, ஆசாரியர்கள் சமானமான இடத்தில் கிட்டி யிருப்பார்கள்; சீடருடன் கூடியிருப்பார்கள்; ஆசாரியர்களுக்குத் திருமேனி அழகு தேவை; கூட்டமாக இருத்தல் முக்கியம்; ஒருவருக்கொருவர் இறையநுபவத்தில் ஸௌகரியம்; ஆசாரியர்கள் சீடர்கள் ஒருவருக்கொருவர் பிரிவில் பயப்படும் தன்மை; உயர்சாதி; விலக்ஷண வித்வான்களின் சேர்க்கையால் வந்த செருக்கு; பகவதநுபவப் புகழ்ச்சியால் வந்த பரிமளம்; என்று ஆசாரியர்களின் தலையாய தன்மைகளைச் சுட்டி காட்டுகிறார்.

3. 'மின்னிடை மடவார்' (6.2) பதிகத்தில் தலைவியான ஆழ்வார் ஊடல் காரணமாகத் தலைவன் வந்த போதும் முகம் காட்டாமலிருக்க, தலைவன் முகம் பார்க்கும்படி செய்வித்துக் கொண்டு கலந்த பேச்சாகக் கூறுவர் சீயர். இதற்குக் குறிப்பாகச் சில பாடல்களில் இடம்பெற்ற பூவை, கிளி, குழமணன், அன்னை மார், பாவை, தோழிமார் முதலானவற்றைத் தலைவனான இறைவனின் தன்மையில் அவன் நினைத்ததைக் குறிப்பிடு கிறார் சீயர்.

அவையாவன:

'பூவையும் கிளியும்'—அடியார்கட்கு உசாத்துணையாகைக் குத் தகுதியான வடிவழகையுடைத்தாய் அவனாலே காக்கப் படும் சீடர்கள் பகுதி.

'குழமணன்'—அடியார்களுடைய விளையாட்டுக் கருவியும் அவனுக்கு விருப்பம்.

'அன்னைமார்'—அகங்காரம், வெளியில் ஆர்ப்பாட்டம், கர்வம் முதலானவை இறைவனின் விரோதிகள்.

'பாவை'—அடியார் விஷயத்தில் இட்டவழக்கான அறிவற்ற பொருளும் இறைவனுக்கு உத்தேசியம்.

'இணக்கி எம் தோழிமார்'—ஒரே சாதியில் கலந்து விளையாட்டு இனிமை என்கிற போலிக் காரணத்தாலே இறைவன் விஷயத்தில் மூட்டும் பாகவத விஷயத்தைக் குறிப்பிடு கின்றது.

மண்ணாட்டில் அடியார்க்குள்ள மற்ற விஷய பாரிப்பை அழிக்கும் என்னுமிடம் தோற்றுகிறது.

இவ்வாறாக, இறைவனின் தன்மைகளையும், அடியார்களின் தன்மைகளையும் சுட்டிச் செல்வர்.

தலைவன் தலைவியர் மென்தன்மைக்கு, பண்புடைமைக்கு இழுக்கு வாராவாறு உணர்த்தத்தக்க செய்திகளை மறைமுகமாக, நுட்பமாக உணர்த்த அகப்பொருள் மரபில் இடம்பெற்றது; அப்படியே, மெய்ப்பொருள் நெறியும் நுண்மையும் செறிவும் உடையது ஆயினமையின், ஆழ்வார் தம் பாடல்களிலே மறைமுகமாக, நுட்பமாக வைத்து அருளிச் செய்துள்ளார். அவையே உரையாசிரியர் வழி இங்குச் சுட்டப்பெற்றுள்ளன.

முடிபுகள்

இவ்வியலில் கீழ்க்கண்ட முடிபுகள் பெறப்படுகின்றன:

1. வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் ஏனைய திருவாய்மொழி உரையாசிரியர்களைக் காட்டிலும் இலக்கணத் தகவல்களை மிகுதியாகத் தந்துள்ளார்.

2. அவர் தரும் இலக்கணச் செய்திகள் இடைச்சொற்கள், வேற்றுமை உருபுகள், அசைகள், வேற்றுமைத் தொகைகள், பாசுரங்களின் யாப்பு ஆகியன பற்றியவாய் அமைந்துள்ளன.

3. திருவாய்மொழிப் பாசுரங்களுக்கு முதன்முதல் யாப்புக் குறிப்புத் தமிழ் இலக்கணங்களை ஒட்டித் தந்தவர் இவரே யாவர். இதனால் இவரது தமிழ் இலக்கண நூற் பயிற்சி விளங்குகிறது.

4. இக்காலத்தவர் கொச்சகக் கலிப்பாவுள் அடக்கிப் பதிப்பித்துள்ள திருவாய்மொழியின் பத்துப் பதிகங் களை வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் கலிவிருத்தம் (நாலடித் தாழிசையுமாம்) என்று குறித் துள்ளார். சீயர் வீரசோழியமுடையார் கருத்தை யொட்டிக் கொச்சகக் கலிப்பா வகையைக் கலிவிருத்த மாகக் கொண்டுள்ளார்.

5. திருவாய்மொழியின் ஏனைய உரையாசிரியர்கள் அகப் பொருட்போக்கில் அமைந்த பாசுரங்களுக்குச் சிறந்த விளக்கங்கள் தந்துள்ளனர். எனினும் அவர்கள் அப்பாசுரங்கள் அமைந்த துறை பற்றிய குறிப்பினை எங்கும் தரவில்லை. இவரே அவற்றிற்குத் துறைக் குறிப்புத் தர முயன்றுள்ளார்.

6. 'மாலுக்கு வையம்' என்னும் பதிகத்தை மற்ற உரை காரர்கள் தாய்ப்பாசுரமாகக் கூற, இவர் ஒருவரே 'மறை பொருளெல்லாம் குறிப்பானின்றிக் கூற்றால் கூறுதற் குரியவள் செவிலியே' என்னும் காரணம் கொண்டு அப்பதிகத்தைச் செவிலித்தாய் கூற்றாகக் குறித் துள்ளார்.

7. இவரது குறிப்புப் பொருளை நல்லாசிரியர் இலக்கணம் சிறப்பாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

10. 3. 1.
1. 4. 4.
6. 1. 2.
6. 2. 1.
5. 3. 10.
5. 9. 2.
2. 5. 6.
4. 1. 7.
1. 10. 1.
2. 5. 7.

1. தொல். செய்யுளியல், நூற்பா 78, பேராசிரியம்.
2. யாப்பருங்கல விருத்தி. செய்யுளியல், நூ. 1, ப. 210
3. மேலது. நூ. 1 உரை
4. தொல். செய்யுளியல், நூற்பா 1 பேராசிரியம்
5. யாப்பருங்கல விருத்தி, செய்யுளியல், நூ. 1, ப 211.
6. க. வெள்ளைவாரணன், பன்னிருதிருமுறை வரலாறு. பகுதி 1, ப. 378.
7. யாப்பருங்கலம், நூற்பா 89.
8. மேலது, நூற்பா 88, வீரசோழியம் நூற்பா 122
9. வீரசோழியம் நூற்பா 123
10. காக்கைபாடினியம், நூற்பா 83
11. யாப்பருங்கலம், நூற்பா 77
12. வீரசோழியம், நூற்பா 120
13. யாப்பருங்கல விருத்தியுரை, நூற்பா 76

14. யாப்பருங்கலக் காரிகை, ப. 100
15. கு. தாமோதரன், 'திருவாய்மொழித் திறன்' ப. 197
16 தொல். செய்யுளியல், நூற்பா 149, நச்சினார்க்கினியர் உரை
17. வீரசோழியம், யாப்பியல், உரை, நூற்பா 118
3.1, 4.9, 9.7
1.4.
3.1.
1.3.
மேலது
3.7.
18. தொல், பொருள் 351
19. மேலது

1.2.
1.8.
10.5.
1.6.
2.4.
20. தொல். பொருள். நச்சினார்க்கினியர் உரை, ப. 3.
21. மகாதேவன், டி. எம். பி. இந்திய முனிவர்கள் (ஆங்கிலம்) ப. 49
22. ஆசாரிய இருதயம், நூற்பா 121.
23. மேலது, மாமுனிகள் உரை, ப.96.
24. மேலது, நூற்பா 118.
25. ப்ர.ப. அண்ணங்கராசாரியர் சுவாமி, திவ்யார்த்த தீபிகை முதற் பத்து, நான்காம் திருவாய்மொழி அவதாரிகை, ப. 41.

26. (1) பாலசுந்தர நாயகர், ஈட்டின் அகப்பொருள் விளக்கம், தி. தி. தே. வெளியீடு.
(2) விசயலட்சுமி, ஆழ்வார் பாடல்களில் அகம், மதுரை-காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1986.
(3) கு. தாமோதரன், திருவாய்மொழித் திறன், 1984.
1.4, 6.1.

27. 2.1, 4.8, 5.4, 5.9, 7.3, 9.2, 9.5, 9.9.
5.5.
5.3
10.3.
1.4.
6.1, 6.8, 9.7.

1.4.
1.3
28. நம்பியகப் பொருள், நூற்பா 36.
29. மேலது உரை, ப. 2.
30. இறையனார் களவியல் உரை, ப. 38.
31. புறப்பொருள் வெண்பா மாலை, நூற்பா 101.
32. தொல். அகத்திணையில், நூற்பா 50.
33. மேலது உரை, ப. 115.
34. தொல். பொருள். கற்பியல், நச்சினார்க்கினியம் ப. 210
35 இறையனார் களவியல் உரை, ப 143.
36. தொல், பொருள், களவியல், நச்சினார்க்கினியம், ப, 85.
37. பன்னிரு பாட்டியல், நூற்பா 245.
38. இறையனார் அகப்பொருள்
39. கு. தாமோதரன், 'திருவாய்மொழித்திறன்', ப.86.
40. ஆசாரிய இருதயம், மாமுனிகள் உரை, ப.114.
41. மேலது, நூற்பா 134.
42. இறையனார் அகப்பொருள், ப. 95
43. தொல், பொருள், களவியல், நூற்பா 23, உரை, ப. 135.
54. நம்பியகப் பொருள், நூற்பா 177.
45. கு. தாமோதரன், 'திருவாய்மொழித் திறன்', ப.104.
46. இறையனார் அகப்பொருள், நூற்பா 14, ப.95.
47. தொல், பொருள், நச்சினார்க்கினியம், ப.150.
48. தொல், களவியல், நூற்பா 24, நச்சினார்க்கினியம், ப.137.
49. நம்பியகப் பொருள், நூற்பா 187.
50. தொல். பொருள், நூற்பா 124, நச்சினார்க்கினியர், ப.150.

இயல்—8

# தம் பெரியபோதமும் உரையின் தனித்தன்மையும்

'தம் பெரியபோதம்' இருநோக்கில் எண்ணப்படுகின்றது. 1. இவ்வுரை வழிப் புலப்படும் இவர்தம் கல்வி, கேள்வி, இயற்கை ஞானம் ஆகியன பற்றிய செய்திகள். 2. பிறர் உரைகளிலிருந்து இவர் வேறுபடும் இடங்கள். இவை சீயர் தம் உரையமைப்பு, உரை உத்திகள், உரைநயம் இவற்றிலும் ஓரளவு இடம் பெறு மாயினும் இங்கு நோக்கு வேறுபடுதலினாலும், சீயரின் 'தம் பெரிய போதமே' உரையின் தனிச் சிறப்பாக எடுத்துக் காட்டுவது ஆய்வாளன் கடமையாதலினாலும் தனித்ததோர் இயலாக அமைக்கப்பெற்றுள்ளது.

இவர் உரைவழிப் புலப்படும் இவர்தம் கல்வி, கேள்வி, இயற்கை ஞானம், ஆகியன 1. இருமொழிப் புலமை, 2. இலக்கிய அநுபவம், 3 உரை அவதாரிகைக்கு ஏற்பச் சீயர் தம் முன்னோர்களிடம் கேட்டபடியே அவர்கள் கருத்தைத் தழுவிச் செல்லல், 4. கூட்டிச் சொல்லல், 5. முன்பின் பதிகங்களுக்குச் சேரத் தொடர்பு காட்டல், 6. முன்னோர்களின் பொருளாட்சி களைப் பெயர் சுட்டாமல் தம் உரையில் இடம் பெறுவித்தல், 7. மேற்கோள் விளக்கம் தருதல், 8. ஆழ்வார் அநுபவங்கள் நிரம்பிக் கிடக்கும் சொற்களை இனம் கண்டெடுத்து அவதாரிகை யிக் காட்டல், 9. அருஞ்சொல் விளக்கம் தருதல், 10. தொகுத்துச் சுட்டல், 11. ஆழ்வார் சொற்களுக்கு அடைமொழி தந்து பொருள் கூறல், 12. அடைச் சொற்களை விரித்துப் பொருள் கூறல், 13. உரைகாட்டும் திருவாய்மொழிச் சிறப்பு, 14. பத்துக்களின் ஏற்றம், 15. அரும்பதவுரையில் சீயர் இடம்பெற்ற சிறப்பு ஆகிய வகையில் ஆய்வு செய்யப்படுகின்றன.

மணவாள மாமுனிகள் வாதிகேசரி அழகிய மணவாளச் சீயரைக் கொண்டாடுமிடத்து, அவர் 'தம் பெரியபோதமுடன்'

நுட்பமாக உரை வரைந்தவர் என்று குறித்துள்ளார் சீயரின் அப்பெரிய போதமும், அதனால் விளைந்த உரையின் தனித் தன்மையும் இவ்வியலில் விளக்கப் பெறுகின்றன.

அடுத்து, பிற உரைகளிலிருந்து சீயர்தம் உரை வேறுபாடு எண்ணப்பெறுகின்றது. அது, பொழிப்புரையாக அமைந்தமை, தத்துவ நோக்கில் அமைந்தமை, வேறுபட்டுடைமை என்னும் மூன்று நோக்கங்களை உட்கொண்டது.

## இயல்—8

## நம் பெரியபோதமும் உரையின் தனித்தன்மையும்

### 8. 1. இருமொழிப் புலமை

### 8. 1. 1. தமிழ்ப்புலமை

சீயர் உரையிலிருந்து, அவர் தமக்கு முன்னும் அவர் வாழ்ந்த காலத்தும் நிலவிய தமிழ் இலக்கண இலக்கிய நூல்களை நன்கு கற்றுணர்ந்தவர் என அறியலாம். இவர், தமது உரையில்— இலக்கணத்திறன் போக்கில்ஆங்காங்கே இலக்கணக்குறிப்புக்கள் காட்டிப் பொருள் சொல்லுவதும், அகப்பொருளில் வரும் பாடல் களுக்குத் தமிழ்மரபு நோக்கித் துறைகளைக் காட்டியதும், பதிகங்கள்தோறும் யாப்பு அமைதி காட்டிச் செல்லுதலும், இவை யல்லாமல் திவ்வியப் பிரபந்தப் பாடல்களில் பெரும்பாலும் திருவாய்மொழிப் பாடல்களையே மேற்கோளாகக் காட்டி உரையைச் செம்மைப்படுத்துதலும் இங்ஙனம் அறிவதற்குத் துணை செய்கின்றன.

இந்நெறியைப் பின்பற்றி மற்ற ஆழ்வார் பாசுரத் தொடர் களைக் கொண்டு நம்மாழ்வார் பாடலை விளக்கும் இவர்தம் புலமையும் இங்குக் கருதத்தக்கது.

மேலும், பாட்டுக்குப் பொழிப்புரை வழங்கி, அவ்வுரையில் வரும் வடசொற்கள் சிலவற்றுக்கு ஆங்காங்கே உரியதான தமிழ்ச் சொற்களையும் சீயர் மேற்கொள்கிறார்.

சான்றுகள் : பிரிவு (விச்லேஷம்) (1.4.9)

புதுமதி (கலாமாத்ரமான சந்திரன்) (2.1.6)

களைகண் (நிர்வாஹகவஸ்து) (2.2.1)

8. 1. 2, வடமொழிப் புலமை

சீயரின் உரை வடமொழிச் சொற்கள் விரவிய உரை நடையாய்ச் சிறப்புப்பெற்று விளங்குகிறது. சீயர் தமது வடமொழிப் புலமையெல்லாம் புலப்படுத்தும் வகையில் உரை அமைத்துள்ளார். ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, இருபத்து நாலாயிரப்படி ஆகியவற்றில் பயன்படுத்திய மணிப்பிரவாள நடையைக் காணும்போது வெவ்வேறு வகையில வடமொழி அதிகமாகவும் குறைந்தும் அமைந்த உரைகளாகத் திகழ்கின்றன. ஆனால், சீயர் உரையைக் காணும்போது, அவர் அமைத்துக் கொண்ட சில நெறிகள் அவர்தம் உரையில் வடமொழி விரவிய நடை மிளிர்வதற்குக் காரணங்களாகப் புலப்படுகின்றன. அவர் தம் உரையில் இறைவனின் தன்மைகளையும், அவதாரச் சிறப்புக்களையும் கூறும்போது அவர் வடமொழிச் சொல்லின் ஓசை குன்றாது தமிழ் வேற்றுமை உருபுகள் சேர்த்து வழங்கியுள்ளமை காண முடிகிறது. இவை பெரும்பாலும் பதிகத்தோறும் அமைத்த அவதாரிகைகளில் பத்துப் பாடல்களில் அமைந்துள்ள இறைவனின் தன்மைகளைச் சுட்டுவதில் விரவி வந்துள்ளமை அறியலாம். அந்த சமயத்தில் வடமொழிக்கே உரிய 32 எழுத்துக்கள் கொண்ட கிரந்த முறையைத் தமிழ்மொழிக்கு அமைத்துக் கொண்டு பன்னீராயிரம் எழுத்துக்கள் கொண்ட உரை அமைக்க எண்ணி, தமிழில் இரண்டு மூன்று சொற்கள் சேர்ந்து விளங்கும் பொருளை ஒரு வடசொல்லால் காட்டி விளங்க வைக்கிறார். எடுத்துக்காட்டாக,

> எல்லாரைக் காட்டிலும் உயர்ந்தவன்—ஸர்வாதிகன் (8.72)
> சொற்படி கேட்பவன்—பவ்யன் (8 7 4)

ஆகியவற்றைக் காட்டலாம். இவ்வாறு அமைத்துக்கொண்டு வடசொற்கள் பெய்து, அவதாரிகைகளைப் படிப்போர்க்குத் தொடர்ச்சியான இறையுணர்வு ஏற்படும் வகையில் அமைத்துள்ளார். பதிகங்களின் அவதாரிகைகளை அநுபவிக்கும்போது அவர் இறைவனின் தன்மைகளை விளக்க அமைத்துக்கொண்ட வடமொழிச் சொற்கள் அம்மொழிக்கே உரிய அழகினை அறிவிக்கும் வகையில் சீயர் அமைத்துள்ளார். மேலும் அதனைத் தமிழ்ப்படுத்திக் காணும்போது ஏற்படும் பொருள் சிதைவு அநுபவச் சிதைவு குன்றிவிடும் என்ற நோக்கத்தில் அமைத்தார் எனவும் கருதலாம். எடுத்துக்காட்டாக, 'மன்னையிருந்து'1 என்ற பதிகத்தில் ஆழ்வார் தலைவியாம் தன்மையில் இறைவனுடைய காதற் பெருக்கை நினைத்து அவன் தன்மைகளைப் பத்துப் பாட்டில் அநுபவிக்கிறார். இதற்கு அவதாரிகையிட்ட

சீயர், இறைவனின் தன்மைகளை வடமொழிச் சொற்களில் அறுதியிட்டுக் காட்டும் பாங்கு குறிப்பிடத்தக்கது. ஆக, அவதாரிகைகளில் வடமொழிச் சொற்கள் மிகுதியாகப் பயன் படுத்தியதோடல்லாமல், அவதாரிகைகளை விளக்க எழுந்த பாடலின் பொழிப்புரையிலும் சீயர் வடசொல் விரவிப் பொருள் வழங்கி உள்ளார். ஒவ்வொரு பாடலில் வரும் இறைவனின் தன்மை, வடிவு, குணம் ஆகியவற்றை உணர்த்தும்போதும் வட மொழிச் சொற்கள் கொண்டே உணர்த்துகிறார்.

எடுத்துக்காட்டாக, 'கோவை வாயாள்' (4.3) பதிகத்தின் பத்துப் பாடல்களில் வரும் இறைவனின் தன்மை முதலிய வற்றைத் தமிழ் உருபு சேர்த்துக் குறித்துள்ளார்.

ஆழ்வார் பாடல்களுக்குப் பொருள் வழங்கும் போது, தத்துவக் கருத்துகள் அமைந்த பாடல்களில் வடமொழிச் சொற் கள் மிகுதியாக விரவி வந்துள்ளன. எடுத்துக்காட்டாக, 'யவரும் யாவையும்' (2.2.6) என்ற பாடலில் "அடியார்களைக் காப்பதற் காக ஆச்ரிதரக்ஷணார்த்தமாக "பாற்கடலில் (க்ஷீரார்ணவத்திலே) கண்வளர்ந்தருளினான்" என்கிறார். "எல்லா அறிவுள் பொருளும் (சேதநரும்), எல்லா அறிவில் பொருளும் (அசேதநங் களும்) ஆகிய எல்லாப் பொருள்களும் (ஸமஸ்த பதார்த்தங்களும் சோர்வின்றித் தன் சுவருபமான இடத்திதே (ஸ்வரூபைக தேசத்திலே) அடங்கும்படியாக நின்ற பரப்பையுடைத்தான ஞானவெள்ளத்தைத் தனக்குச் சுடராகவுடைய (ப்ரபையாக வுடைய) தலைவர்களான (ஸ்வாமிகளான) எல்லாரைக் காட் டிலும் மேம்பட்டவராவர் (ஸர்வாதிகரானவர்) நமக்கு இனிமை யாய் (போக்யமாய்) அழகான (தர்சநீயமான) பாற்கடலிலே (க்ஷீரார்ணவத்திலே) கண்வளர்ந்தருகிறார்," என்று வடசொற் களோடு தமிழ் வேற்றுமை உருபுகளை அமைத்துப் பொருள் வழங்கியுள்ளார். இவை தவிர, மற்றை உரைகளில் பெரும் பாலாகத் தமிழ்ச் சொற்களைக் கொண்டே பொருள் வழங்கிய, இடங்களில் எல்லாம் சீயர் வடசொற்களைப் பயன்படுத்தி உரை வழங்கியுள்ளார்.

எடுத்துக்காட்டாக, 'கடல்' (1.4.10) என்று வந்த இடந் தோறும் பெரும்பாலும் இருபத்துநாலாயிரப் படியில் கடல் என்றே பொருள் கூறப்பட்டுள்ளது. ஆனால் சீயர் அதற்குப் பொருள் வழங்கும்வகையில்'ஸமுத்ரம்' என்றோ, 'க்ஷீரார்ணம்' என்றோ பொருள் வழங்குவர். அதே போன்று 'தடம்' (4 5 2) (5.2,4) என்று வந்த இடங்களில் சிற்சிலவற்றுக்கு 'விஸ்தீர்ண

மான (பரந்த) என்று சீயர் வடமொழி இசை குன்றாது தமிழ் உருபோடு பொருள் வழங்கியுள்ளார். ஆனால் ஈட்டில் 'பரப்பான' என்று தமிழ்ச்சொல் கொண்டே பொருள் வழங்கப்பட்டுள்ளது. சீயர் உரையிலும் சிற்சில இடங்களில், குறிப்பாக 'மாடம்' (9.10 11) என்பதற்கு 'மாடங்கள்' என்றே வழங்கியிருப்பினும், சீயர் சொற்களுக்குப் பொருள் உரைப்பதையே குறிக்கோளாகக் கொண்டு பெரும்பாலும் வடமொழி விரவிய நடையைப் பின்பற்றுகிறார் என அறிய முடிகிறது.

மேலும் 'திண்' (1.2.10) என்பதற்கு 'ஒருகாலும் விடாத' என்று இருபத்துநாலாயிரப் படியிலுள்ளதை 'ஸ்திரமான' (நிலையான) என்று சீயர் வடசொல்லால் குறிப்பிடுவர்.

| | 24 படி | 12 படி |
|---|---|---|
| ஓர்த்த (1.2.11) — | ஓர்ந்து சொல்லப்பட்ட | நிரூபிக்கப்பட்ட |
| தாயோன் (1.5 3.) — | தாய்போலே பரிவானவன் | மாத்ருவத்வத்ஸலன் |
| வாள் (2 5 1) — | ஒளி | உஜ்வலம் |
| அளித்து(7 1.11) — | பரிபாலநம் பண்ணி | ரக்ஷித்து |

இங்ஙனமே பல இடங்களில் உள.

இவற்றை ஆராயும்போது, சீயர் ஆழ்வார் சொற்களுக்குப் பொருள்விளக்கம் தர ஆழ்வார் பயன்படுத்தியுள்ள தமிழ்ச் சொல்லையே கூற விரும்பாமல் அதற்கீடான வடசொல்லைப் பெய்து உரை வழங்குகிறார். சீயரின் வடமொழிப் புலமை அவர் உரையில் பயன்படுத்திய வடமொழி மேற்கோள்களிலிருந்தும் அறியமுடிகிறது. இவர்தம் உரையில் வேதம் முதல் அவர் காலத்து நிலவிய முன்னோர் வகுத்த வடமொழி நூல்கள்வரை மேற்கோள்களாகக் காட்டப்பட்டு, ஆழ்வார் பாடல்கள் விளக்கப் படுகின்றன. இவர் தமிழ்ச் சொற்களுக்கு வடமொழியில் பொருள் தருவதனையும், வடமொழியை மிகுந்த அளவில் விரவி உரைவரைவதையும் நோக்கும்போது, இவ்வுரை வடமொழி அறிவு படைத்தவர்களுக்குத் திருவாய்மொழியின் பொருளை விளக்குவதற்காக எழுந்ததாகக் கருதத் தோன்றுகிறது. சுருக்கமாகக் கூறின் இது வடமொழி வல்லார்க்கென வரைந்த உரை எனலாம்,

8. 2. இலக்கிய அநுபவம்

பக்தி இலக்கியமான திருவாய்மொழியைக் கேட்போர் சுவைக்கும் அநுபவத்திலேயே அப்பாடல்களில் பொதிந்துள்ள இலக்கியச் சிறப்புக்கள் யாவும் உணர வழி வகுத்தனர் உரையாசிரியர்கள். நாதமுனிகள் காலம் தொடங்கி இசைச்சுவையில் அநுபவித்து வந்த இத்திருவாய்மொழிப் பாடல்களுக்குப் பொருட் சுவையும் வழங்கி வந்தனர் ஆசாரியர்கள். இத்தகைய சுவைகளை வெளிப்படுத்த ஆசாரியர்கள் சில நெறிமுறைகளை வகுத்துக் கொண்டனர். அதுவே திறனாய்வாகும். "ஓர் இலக்கியப் படைப்பின்கண் பொதிந்துள்ள இலக்கியச் சிறப்புக்களையெல்லாம் கலை நுணுக்கத்தின் உதவியால் வெளிப்படுத்துவதே சிறந்த திறனாய்வாகும்"[2] என்பது திறனாய்வாளர் பலரின் கருத்தாகும். இவ்வழியில் சீயரும் தகும் உரைகாரராகவே திகழ்ந்து, திருவாய்மொழிக்கு உரைசெய்துள்ளார். சீயர் கையாண்ட இலக்கிய அநுபவ நோக்கின் அடிப்படையில் திருவாய்மொழித் திறன்களை வெளிப்படுத்திய நெறி படைப்புக்கும் படைப்போனுக்கும் இடையின் நின்று நுகர்வோரை நோக்கி நூலின் சிறப்பையெல்லாம் அவர்தம் கொள்ளும் திறனுக்கு ஏற்ப விளக்கி உரைத்துச் சுவைக்கச் செய்தது உணரலாம். இதனை மேலை நாடுகளில் வழங்கிவரும் மூவகைப் பாகுபாட்டுள் ஒன்றாகக் காண முடிகிறது. மூவகைத் திறனாய்வுகள் ஆவன:[3]

1. விதிமுறைத் திறனாய்வு
2. கொள்கைவழித் திறனாய்வு
3. விளக்கமுறைத் திறனாய்வு

இவற்றுள் விதிமுறைத் திறனாய்வென்பது படைப்போனை நோக்கி இவ்வாறு செய்க, இவ்வாறு செய்யற்க என விதிப்பதாகும் இதற்குச் சான்றாகத் தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் இலக்கியப் படைப்பு விதிகள் வந்துள்ளமை காணலாம்.[4] கொள்கைவழித் திறனாய்வு என்பது 'இலக்கியத்தின் தன்மை. படைப்புமுறை என்பன பற்றிய கொள்கைகளை வகுத்துக் கொண்டு அவற்றின் அடிப்படையின் படைப்பைத் திறனாய்வு செய்வது என்பர்.[5] விளக்கமுறைத் திறனாய்வு என்பது 'படைப்புக்கும் நுகர்வோர்க்கும் இடையின் நின்று நுகர்வோரை நோக்கிப் படைப்பின் சிறப்புக்களை எல்லாம் அவர்தம் கொள்ளுந் திறனுக்கேற்ப விளக்கி உரைத்துச் சுவைக்கச் செய்வது'[6] என்பர். எனவே, இலக்கியமான திருவாய்மொழியில் பொதிந்துள்ள தத்துவநோக்கு, ஆழ்வார்ச் சிறப்பு, இறைவன் சிறப்பு முதலான பல்துறைகளை எடுத்து விளக்கிச் சுவைக்கும்

திறனை வளர்த்துக் கற்போர்க்குத் தெளிவும் இலக்கிய இன்பமும் அளிக்கும் சீயரின் பணி இவ்வகையில் சிறந்து விளங்குகிறது. மேலும் இத்தகைய இலக்கிய அநுபவ நோக்கில் திருவாய் மொழியை உள்ளவாறு உணரும் திறனும், அவற்றுள் சிறந்தன அறியும் தகுதியும் கொண்டு நுண்மாண் நுழைபுலமும் கொண்டவராகச் சீயர் இருப்பதும் அறிய முடிகிறது.

இத்தகைய நெறியான விளக்கமுறைத் திறனாய்வு அடிப் படையில் சீயர் உரைவகுத்துள்ளதைப் 'பின்போரும் கற்று அறிந்து பேசுகைக்காக' என்று மாமுனிகளும் அத்தொடருக்கு உரையிட்ட பிள்ளை லோகஞ்சீயரும் கூறுவது உறுதிப்படுத்து கிறது. இந்நெறியில் சீயர் அவர்தம் உரைமூலம் பயில்வோர்க்குத் திருவாய்மொழியின் பொருளும் இன்பமும் விளங்குமாறு திறனாய்வுப் பணியினைச் செய்தார் எனலாம்.

## 8. 3. சீயர் உரையில் முன்னோர் உரைகளின் கருத்துக்கள்

சீயர் தம் ஆசாரியர் வாயிலாக முன்னோர் உரைகளைக் கேட்ட நினைவிலிருந்தே ஆங்காங்கே அவ்வுரைகளை உளத்தில் கொண்டு தம் உரையை வரைந்து செல்கின்றார். இன்று ஐந்து உரைகளும் அச்சேறி நூல் வடிவில் கிடைத்துள்ளதால் அவற்றின் பின்னணியில் சீயர் முன்னோர் உரைகளில் ஈடுபட்டுள்ள பாங்கினை ஒருவாறு உணர்ந்து கொள்ள முடிகின்றது. அவ்வாறு உணரும்போது சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை ஆகியோரின் உரைகளையும் அப்படியே தழுவிச்சென்ற இடங்கள் பல உள. மேலும் முதல் உரை அருளிய பிள்ளான், அடுத்து வந்த நஞ்சீயர் இவர்களின் உரைக் கருத்துக்கள் சில ஆங்காங்கே அருமையாகக் காணப்படுகின்றன.

இந்த இயலில் முன்னோர் உரைகளை எப்படியெப்படி யெல்லாம் சீயர் பயன்படுத்திக் கொண்டுள்ளார் என்று எண்ணப் பெறுகின்றது. அவ்வாறு எண்ணும்போது முன்னோர் உரை களைப் பற்பலவிடங்களில் சீயர் அப்படியே தழுவிச் சென்றுள் ளார்; சிற்சில இடங்களில் முன்னோர் உரைகளோடு தாமும் கூட்டிச் சொல்லுகின்றார்: வேறு சில இடங்களில் மாற்றியும் சொல்லுகின்றார்; பின்னும் சில இடங்களில் முன்னோர் சொல்லி யவற்றை இடத்திற்கேற்ப விரித்தோ, சுருக்கியோ சொல்லுவர்; இன்னும் சில இடங்களில் முன்னோர் சொல்லாமல் விட்டதைச் சொல்லியும் உள்ளார். இவற்றில் சீயர் முன்னோர் உரைகளைத் தழுவிச் செல்லும் பாங்கு, கூட்டிச் சொல்லுந் திறன் ஆகிய இரு

அடிப்படையில் அமைந்துள்ளமை இப்பகுதியில் விளக்கப்படுகிறது.

8. 3. 1. முன்னோர் உரைகளைத் தழுவிச் சென்ற இடங்கள்

அ. நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை உரைகளைச் சீயர் உரையோடு ஆய்ந்து காணும்போது சொல் நோக்கிலும், தொடர் நோக்கிலும், சீயர் முன்னிருவர் உரைகளிலுள்ள கருத்துக்களையும் பொருள்களையும் தழுவித் தமது உரை வகுத்தமை அறிய முடிகிறது.

சான்றுகள் :

2. 'வீற்றிருந்தேழுலகும்' (4. 5. 1) என்ற பாடலில் 'ஆற்றல் மிக்காளுமம்மானை' என்ற விடத்தில் 'ஆளும் ' என்பதற்கு 'உள்ளேயிருந்து நடத்தி வருகிற (நியமித்துப் போருகிற)' என்று பொருள் உரைப்பர் சீயர், இச்சொல்லுக்கு ஈட்டில் உள்ளதைத் தழுவியே சீயர் உரைப்பொருளும் அமைந்துள்ளது.

2, 'மாயம் செய்யேலென்னை' (10. 10 12) என்ற பாடலில் 'அந்தோ' என்ற சொல்லுக்கு ஈட்டிலும், இருபத்து நாலாயிரப் படியிலும், 'தன்னை ஒழியச் செல்லாதபடியைத் தானே விளைத்து, நான் கூப்பிட வந்து முகம் காட்டாதொழிவதே!' என்று கூறியுள்ளதை பின்பற்றிச்சீயரும், 'ஐயோ! நீயேவிரைந்து வந்து செய்யும் காரியத்துக்கு நான் ஆணையிட வேண்டியிருப்பதே' என்று நயம்படப் பொருள் வழங்கியுள்ளார்.

ஆ. இவ்வாறு ஈட்டைத் தழுவி உரைக்கும் போக்கில் சீயர் உரை அமைந்ததுமல்லாமல், ஈட்டில் பல இடங்களில் சொற்களுக்கோ பாடல் தொடர்களுக்கோ இரண்டு மூன்றுபொருள்கள் வழங்கிய இடங்கள் உள. அவற்றுள் தாம் உகந்ததாயும் முன்னோர் வாயிலாகக் கேட்டதாயும் உள்ள இரண்டாவது பொருளுக்கு முதன்மை தந்து, அதனை முதற்பொருளாகவே சீயர் உரைத்துள்ளமை காண முடிகிறது.

சான்றுகள் :

1. 'பூவை வீயாநீர்' (4. 3. 1) என்ற விடத்தில் 'புஷ்பத்தை அகலாத நீர்' என்று ஈட்டிலும் இருபத்து நாலாயிரப் படியிலும் இரண்டாவது பொருளாகக் கூறியதைச் சீயர் பின்பற்றி உரைத்துள்ளார்.

2 'ஊர் வளங்கிளர்' (8. 9. 4) என்ற தொடருக்கு 'ஊருக்கு வளப்பமாய் உயர்ந்த சோலை' என்று இரண்டாவது பொருளைப்

பின்பற்றிச் சீயர் உரைத்துள்ளது காணலாம். (3) மேலும் ஈட்டில் காட்டிய முதற்பொருளையும் தழுவிச் சீயர் உரைத்த இடங்கள் உள.

*சான்றுகள் :*

1. 'காரார் கருமுகில் போல்' (2. 5. 5) என்பதற்கு 'என்னுடைய சேர்க்கையாலே காரார் கருமுகில் ஆனான். என்பர் நம்பிள்ளை. இதனைச் சீயர் தழுவி, 'என் நெஞ்சுக்குள்ளே கலந்து அத்தாலே கார்காலத்திலே பூர்ணமான காள மேகம் போலே இருக்கிற என் நாதன்' என்று வழங்குவர்.

(2) 'நம் சுடர் ஒளி ஒருதனி முதல்வன்' (10.1.5) என்பதற்கு, 'நமக்கு அநுபவிக்கத் தக்கதாய் எல்லையற்ற ஒளியையுடைத்தான பளபளப்பான (தேஜோமய) திவ்விய திருமேனியையுடையனாய், உலகுக்கு வினை முதல் காரணம், முதற் காரணம், துணைக்காரணமாகிய மூன்று காரணமும் தானேயாய்' என்று ஈட்டின் முதற்பொருளைத் தழுவி உரைப்பது அறியலாம்.

8. 3. 2. முன்னோர் உரையோடு கூட்டிச் சொன்ன இடங்கள்

சீயர் தம் உரையில் பாடல் சொற்களுக்கோ தொடர்களுக்கோ பொருள் தரும்போது ஈட்டைத் தழுவி உரைத்ததோடு நில்லாமல் இடத்திற்கேப மேலும் சென்று கூட்டி உரை வழங்குவர்.

*சான்றுகள் :*

(1) 'மாதவன்பாற் சடகோபன்' (1.6.11) என்ற பாடலில் 'ஓதவல்லார்' என்பதற்கு ஈட்டில் 'இத்திருவாய்மொழியைக் கற்க வல்லவர்கள் (அப்யஸிக்க வல்லவர்கள்)' என்றே உள்ளது. ஆனால் சீயர், 'ஆசாரியர் வாயிலாகக் கற்கவல்லவர்' என்று ஆசாரியருக்கு முதன்மை கொடுத்து மேலும் கூட்டியுரைப்பது புலனாகிறது.

(2) 'தடம்புனல சடைமுடியன்' (4.8.10) என்பதற்கு 'மிக்க பரந்த நீரையுடைய கங்கையைத் தரிக்கிற சடாமகுடத்தை யுடையவனாகையாலே மிக்க சக்திமானாக அபிமானித்திருக்கிற சிவன்' என்று சீயர் உரை வழங்குவர். ஈட்டில், 'மிக்கநீர் வெள்ளத்தை யுடைத்தான கங்கையைத் தன் சடையில் ஏக தேசத்தில் தரித்திருக்கையால் வந்த அபிமானத்தையுடைய ருத்ரனானவன்' என்று சடை அணிந்ததால் வந்த ஏற்றத்தைக் காட்டி உரைவழங்கியுள்ளார். ஆனால் சீயர், மிக்க சக்திமானாக' என்ற பதங்களைக் கூட்டி விரித்துரைத்தது காணலாம்.

### 8. 3. 3. முன்பின் பதிகங்களுக்குச் சேர்த் தொடர்பு காட்டல்

அரிமா நோக்காகப் பதிகங்களைத் தொடர்புபடுத்திக் காட்டும்போது, ஆழ்வாரின் நிலைமையை நன்கு அறிய முடி கிறது. அவ்வாறு அறியவே, ஆழ்வாரின் பரபக்தி, படிப்படியாக வளர்ந்து வந்த முறையைக் காணமுடிகிறது. ஆழ்வார் தம் மனத்தால் கண்ட இறையுணர்வை, முதல் திருவாய்மொழியில் அநுபவித்து, அவ்வநுபவம் உலகோர் இழக்கவொண்ணாது எனப் பிறருக்கு இரண்டாந் திருவாய்மொழியில் அறிவித்து, 'இவ் வநுபவத்தைத் தாம் அநுபவிக்கப் பெறுவதே' என்று மகிழ்வுற்று மோகித்தார் மூன்றாந் திருவாய்மொழியில். பின்னர் மோகம் தெளிந்து, 'அயர்ப்பில வலற்றுவன் தழுவுவன் வணங்குவன்' (1.3.10) என்று மூன்று கருவிகளாலும் அநுபவிக்க இழிகிறார். இந்த நிலைமையில் நான்காவது பதிகத்தின் (1 4) தோற்று வாயில், 'இறைவன் சடக்கென முகம்காட்டாமையாலே துக்க மடைந்தார் ஆழ்வார்' என்று சொல்லி, அதனால் தலைவியாம் தன்மைபெற்று, நாரை தொடக்கமானவற்றைத் தூதுவிடுவதாகப் பதிகத்தைத் தொடர்புபடுத்துகிறார். மேலும் ஆழ்வார் நிலை மையைக் காணும்போது, 'சன்மம் பலபல' (3.10) தோற்றுவாயில் இதற்கு முன் பதிகத்தின் கருத்தாய் மற்றவர்களைத் துதித்தலா லுண்டான தாழ்ச்சிகளையும், இறைவனைத் துதித்தலாலுண் டான பிறிதொன்றுக்கில்லாத சிறப்பையும் உபதேசிப்பதையுங் காட்டி, 'இப்படி பிரிதொன்றுக்கில்லாத சிறப்பையுடைய இறை வனாகிற விஷயத்தை நாம் எல்லா முறையாலும் அநுபவிக்கப் பெறுவதே' என்று மிக்க மகிழ்ச்சியடைத்தாகக் கூறுவர் சீயர். மேலும் இப்பதிகத்திலுண்டாகும் ஆழ்வார் நிலைமையைக் காட்டும் வகையில், பத்துப் பாடல்களின் திரட்சியான இறையநு பவங்களைக் காட்டி முடிவில் அதனால் ஒரு குறைவு, இடைவீடு, மனத்துப் பீடை, மிறுக்கு, துக்கம், ஆசையில்லாமை, அலமாப்பு, அழிவு முதலான எல்லாத் துன்பங்களும் ஆழ்வார்க்கு இல்லை என்று மிக்க மகிழ்வுற்றதாகப் பதிகத்தைத் தலைக்கட்டுகிறார் சீயர். இவ்வாறு பதிகங்களைத் தொடர்புபடுத்திச் செல்லவே, ஆழ்வார் நிலைமை முதலிரண்டு பத்துக்களில் இருந்த பக்தி, முதிர்ச்சியடைந்தமை எட்டு ஒன்பது பத்துக்களில் காணமுடி கிறது. அதே சமயத்தில் வெவ்வேறு பதிகங்களில் ஆழ்வாருக்கு இறைவனைக் காணாமையாலுண்டான அலமாப்பின் மிகுதி யையும் காணமுடிகிறது.

இத்தகைய பதிகத் தொடர்ச்சி காட்டும் நெறி மற்ற உரை களுக்கும் உரியன எனினும், சீயர் நேர்த் தொடர்பையே பின் பற்றியுள்ளமை அறிய முடிகிறது. நேர்த் தொடர்பாவது அடுத்

அடுத்த பதிகங்களில் ஆழ்வார் நிலைமையைக் காட்டுதலாகும். ஆனால் ஈயர் உரையில் இத்தகைய தொடர்ச்சி பதிகங்களுக்கே அமைந்துள்ளது. எனினும் அப்பதிகங்களைத் தொடர்பு படுத்து வதிலும் ஒரு நெறியைப் பயன்படுத்தியுள்ளார். எங்ஙன மெனில் ஈயர் உரை ஐம்பொருளை விளக்க எழுந்த உரை யாகும். எனவே, அதன் அடிப்படையில் இரண்டிரண்டு பத்துக்கள் ஒவ்வொரு பொருளை விளக்குவனவாக உள்ளன. அந்தந்தப் பொருளைப் பற்றிவரும் பத்துக்களிலுள்ள பத்துப் பதிகங்களைத் தொடர்புபடுத்தி உரை வழங்கினாரே யொழிய ஒரு பத்துக்கும் அடுத்த பத்துக்கும் தொடர்ச்சியை முறையாகக் காட்டவில்லை. ஆனாலும், இப்போக்கு முதல் ஆறு பத்துக்கள் வரை காணப்படுகிறது. ஏழாவது பத்தின் முதல் பதிகத்தின் தோற்றுவாயில், ஆறாம் பத்தின் பத்தாவது பதிகத்தில் ஆழ்வார் திருவேங்கடமுடையானிடம் சரணாகதி பண்ணி அது பலிக்காமையால் உண்டான துக்கம் தீர, விரோதியைக் கழிக்க வேண்டுவதாகத் தொடர்புபடுத்தியுள்ளார். இங்ஙனே எட்டு, ஒன்பது, பத்துப் பத்துக்களின் முதல் பதிகந் தோறும் முன் பத்தின் கடைசிப் பதிகத்திலுண்டான நிலைமை காட்டித் தொடர்புபடுத்துவது குறிப்பிடத்தக்கது.

### 8. 4. ஈயர் உரையில் முன்னோர்களின் பொருளாட்சிகள்

தமிழ் இலக்கண இலக்கிய உரையாசிரியர்களைப் பின்பற்றித் தாம் எழுதும் உரையேயன்றித் தமக்கு முன்பிருந்த ஆசாரியர்களின் பொருளாட்சிகளையும் பயன்படுத்தி எழுதி வரும் வழக்கம் இருந்து வருகிறது. இன்றுள்ள உரைகளில் தொன்மையான களவியல் உரையின் பாயிரக் கருத்து, தமிழ் மரபு, கருத்துத் தெளிவு, இலக்கணக் குறிப்பு ஆகியவற்றை இளம்பூரணர் பின்பற்றித் தமக்கென ஒருவகையான நடையை அமைத்துக் கொண்டார்.[7] இத்தகைய உரையாசிரியர்களின் பரம்பரை வைணவ உரையாசிரியர்கள் காலத்திலும் நிலவி வந்தது. வாழைக் கிழங்கு கண்ணுக்குத் தெரியாது. ஆயினும் அதிலிருந்து அதன் அடிப்படையில் பல்வேறு கன்றுகள் தோன்றிப், படர்ந்து, பெருகி, வளர்ந்து கண்ணுக்கு விருந்தாய்த் தோப்பாகக் காண்கிறோம். அவ்வகையில் வைணவக் கோட்பாடு களைக் கொண்ட ஆழ்வார்கள் பாசுரங்களுக்கு ஆளவந்தார் காலம் தொடங்கிப் பட்டர் காலம் வரை வழக்கில் நிலவிய பொருளாட்சிகள் (நிர்வாஹகங்கள்) ஏட்டில் ஏற்படுத்தப் பெறாமலிருந்தன. நம்மாழ்வார் நாதமுனிகளுக்கும், அவர் உய்யக்கொண்டாருக்கும், உய்யக்கொண்டார் மணக்கால் நம்பிக்கும், மணக்கால் நம்பியின் மிக்க முயற்சியால் ஆளவந்

தாருக்கும்—இப்படியாக வழித்தோன்றல்களான ஆசாரியர்கள் உபதேசமாக இரகசிய நூல்கள், திருவாய்மொழி மற்றும் பல பிரபந்தங்களின் வியாக்கியானங்கள் யாவும் வழங்கி வந்ததைக் குருப்பரம்பரைப் பிரபாவம், யதீந்திரப் பிரவணப் பிரபாவம், பெரிய திருமுடியடைவு ஆகிய நூல்கள் வாயிலாக உணர முடிகிறது.[8]

இவ்வாறு வாய்மொழியாகவும் எழுத்து வடிவாகவும் பல நூற்றாண்டுகளில் சேர்ந்துவிட்ட திருவாய்மொழி உரைகள் அனைத்தும் நம்பிள்ளையிடம் ஏரிபோல தேங்கியது.[9] ஆகவே, ஈட்டில் அவர்தம் முன்னோர்களின் பொருளாட்சிகள் இடம் பெறலாயின. இவற்றை உள்ளபடியே தம்ஆசாரியரிடம், குனிந்து கேட்டதன் விளைவாக' சீயர் தமக்கு முன் வாழ்ந்த முன்னோர் களை மதிக்கும் வகையில், தமது உரையில் பெயர் சுட்டாமல் அவர்கள் அறிவித்த ஆழ்பொருளாட்சிகளைச் சேர்த்து உரை வழங்கினார். இன்று இருந்துவரும் பதிப்புகளில், ஈடு, இருபத்து நாலாயிரப்படி ஆகியவற்றை நோக்கின், சீயர் உரையில் ஆளவந்தார் தொடக்கமாகப் பட்டர் வரை முக்கியமாகப் பதினேழு ஆசாரியர்களின் பொருளாட்சிகளைப் பின்பற்றியது காண முடிகிறது. இப்பொருளாட்சிகளைத் திரட்சியாகக் காணும் போது, இராமாநுசர் (எம்பெருமானார்) பொருளாட்சியை 17 இடங்களிலும்,[10] பட்டர் பொருளாட்சியை 18 இடங்களிலும்,[11] ஆளவந்தார், நஞ்சீயர், எம்பார் ஆகியோர்களின் பொரு ளாட்சியை ஐந்து இடங்களிலும்,[12] மற்றுமுள்ள ஆசாரியர்களின் பொருளாட்சிகளைச் சிறுபான்மையும் கொண்டு உரை வகுத் துள்ளது அறியற்பாலதாகும். ஒவ்வோர் ஆசாரியரின் பொருள் ஆட்சிகளில் சில இங்குக் குறிப்பிடப் பெறுகின்றன.

சான்றுகள்:

### 8. 4. 1. ஆளவந்தார் பொருளாட்சி

'ஊனில்வாழ் உயிரே' (2.3.7) என்ற பாடலில் 'தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுது மொத்தே' என்ற நான்காவது தொடருக்கு ஈட்டில் ஆளவந்தார் அருளிச் செய்தாராகத் திருமாலையாண்டானின் பொருளாட்சியும், எம்பெருமானார் பொருளாட்சியும் இடம் பெற்றுள்ளன. ஆளவந்தார் பொரு ளாட்சி, 'ஒரே வகையறாவைச் சேர்ந்த பொருள்கள் (ஏகஜாதீய த்ரவியங்கள்) தன்னிலே கலந்தாற்போலே' என்பது. அதாவது தேனும் தேனும் கலந்தாற் போலவும், பாலும் பாலும் கலந்தாற் போலவும், நெய்யும் நெய்யும் கலந்தாற் போலவும், கன்னலும் கன்னலும் கலந்தாற் போலவும், அமுதும் அமுதும் கலந்தாற்

போலவும் என்பது. ஆனால் எம்பெருமானார் பொருளாட்சி, 'இறைவனும் தானுமான கலவிக்குள்ளே எல்லா இனிமைகளுமாம்படி கலந்தோம்' என்பதாகும். இவற்றைச் சீயர் உரை கொண்டு ஆராயும்போது ஆளவந்தார் பொருளாட்சியைப் பின்பற்றியது நன்கு புலப்படுகிறது.

## 8. 4. 2. திருமலையாண்டான் பொருளாட்சி

'கொன்றுயிர் உண்ணும் விசாதி' (5.2.6) என்ற பாடலில் 'சென்று தொழுது உய்ம்மின்' என்பதற்கு, (1) அவர்கள் பாடே சென்று அவர்களைத் தொழுது உஜ்ஜீவித்துப் போங்கோள் என்னுதல்; (2) அவர்களோடே சென்று இறைவனை (ஸர்வேச்வரனை) அடைந்து (பிழைத்துப்) உஜ்ஜீவித்துப் போங்கோள் என்னுதல்' என்று முறையே திருமாலையாண்டான் பொருளாட்சியும், எம்பெருமானார் பொருளாட்சியும் ஈட்டில் வந்துள்ளன. இவற்றைச், சீயர் உரையில் காணும்போது, சீயர், 'அவர்கள் பக்கத்தில் (பரிஸரத்தில்) சென்று குற்றேவல்கள் (சேஷத்வாநுரூப வ்ருத்தியைப்) பண்ணிப் பிழைக்கும்படி பாருங்கோள்' என்று திருமாலையாண்டான் பொருளாட்சியைப் பின்பற்றிச் சில சொற்களை அமைத்து உரை வழங்கியது காணலாம்.

## 8. 4. 3. எம்பெருமானார் பொருளாட்சி

'அருள்தானினி யானறியேன்' (8.7.3) என்ற பாட்டில் 'இதுவல்லால் பொருள்தான் எனின், மூவுலகும் பொருளல்ல' என்பதற்கு ஈட்டிலும் இருபத்துநாலாயிரப் படியிலும் ஆளவந்தார் பொருளாட்சியாகத் திருமலையாண்டான் பணித்ததும், எம்பெருமானார் பணித்த பொருளாட்சியும் இடம்பெற்றுள்ளன. சீயர் தமது உரையில், "அவனுக்கு இவ்விருப்பொழிய வேறு பயன் உண்டோவெனில் மூன்றுவித அறிவுள் பொருள், அறிவில் பொருள்-அவற்றின் அடிமைத் தன்மைகளும் ஒரு பொருளாக இருக்கிறதில்லை" என்று எம்பெருமானார் பொருளாட்சியைப் பின்பற்றியது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு இடத்திற்கேற்ப எம்பெருமானார் பொருளாட்சியை மிகுதியாகப் பின்பற்றி வந்த இடங்கள் சீயர் உரையில் காணப் பெறுகின்றன.

## 8. 4. 4. திருக்குருகைப் பிரான்பிள்ளான் பொருளாட்சி

ஓராண்வழிக்காலவழி ஓதிவந்த வாய்மொழி உரைகள் பிள்ளானுடைய சொற்போக்கிலும் வந்து அவருடைய பொருளாட்சிகள் ஈட்டில் 32 இடங்களில் வந்துள்ளன.

'அவன் கையதே பெனதாருயிர்' (9.5.3) என்ற பாடலில் 'தவஞ்செய்திலா விளையாட்டினேன்' என்பதற்கு, 'அவனைப் போலே பிரிவுக்கு ஆற்றியிருக்கும் பாக்கியத்தைப் பண்ணாதே போலி கண்டு ஈடுபடும் படியான பாபத்தைப் பண்ணின என்னுடைய' என்று உரையில் சீயர் வழங்குவர் ஈட்டில் வழங்கிய பிள்ளான் பொருளாட்சியை அடியொற்றியும் சேர்த்தும் சீயர் உரையமைத்தது காணலாம்.

## 8. 4. 5. எம்பார் பொருளாட்சி

முழுமையாக ஒரு பதிகத்தில் இவரது பொருளாட்சியைப் பின்பற்றிச் சீயர் உரை வழங்கியது குறிப்பிடத்தக்கது. 'நண்ணாதார் முறுவலிப்ப' (4.9) என்னும் பதிகத்தில் எம்பாரின் பொருளாட்சியை ஈட்டில் காணும்போது இன்சுவையே வடி வெடுத்ததாகும். அதாவது, 'உன்னைப் பிரிந்திருந்து படுகிற துக்கத்தின் (க்லேசத்தின்) உள்ள அளவல்ல, உன்னை ஒழியப் புறம்பே பேணும் இழவுமாயிருக்கிற சம்சாரிகள் நடுவேயிருக்கிற இருப்பால் படும் துக்கம்' என்று அருளிச் செய்வர் எம்பார். மேலும் ஈட்டில் கூரத்தாழ்வானின் பொருளாட்சியும் அதிக அளவில் இடம்பெற்றுள்ளது. இவற்றைச் சீயர் உரையோடு ஒப்பிட்டுக் காணும்போது எம்பாரின் பொருளாட்சியைத் தழுவி உரைத்தது நன்கு புலப்படுகிறது. மேலும் அரும்பதவுரைகாரர் எம்பார் பொருளாட்சியை விவரிக்கையில் 'நண்ணாதார் முறுவலிப்ப' என்று தொடங்கி 'இவையென்ன வுலகியற்கை' என்று இவர்களோட்டை வாழ்ச்சி (ஸஹவாசம்) பொறுக்க முடியாது என்கிறதை நினைத்து, "கண்ணாளா கடல் கடைந்தாய்! இனி இவர்கள் நடுவிலிருக்கக் கூடாதாகையாலே, உனகழற்கே வரும்பரிசு தண்ணாவாதடியேனை-சாமாறு-பணி கண்டாய்" என்று பாடல் இருக்கிறபடியே முடிவுபடுத்திக் காட்டி யுள்ளார். எம்பார் பொருளாட்சிக்கு, 'தன்னைக் காப்பதற்குக் காரணமாக, குணங்களை நினைத்தல்' என்று அரும்பதவுரை களை அருளியது கொண்டும், சீயர் எம்பார் பொருளாட்சியைப் பின்பற்றியது அறியலாம்.

## 8. 4. 6. நஞ்சீயர் பொருளாட்சி

'நாடாத மலர்நாடி' (1 4.9) என்பதற்குத் 'தன்னுடைய விருப்பத்திற்குத் தக்க தேடவரிய பூக்களைத் தேடி' என்று ஈட்டில் வழங்கிய நஞ்சீயர் பொருளாட்சியைப் பின்பற்றிச் சீயர் உரைப் பொருள் வழங்கியது அறியலாம்.

8. 4. 7. பட்டர் பொருளாட்சி

'இரைக்கும் கருங்கடல்' (5.3.11) என்ற பாடலுக்கு ஈட்டில் அனந்தாழ்வான் பொருளாட்சியும் பட்டர் பொருளாட்சியும் இடம் பெற்றுள்ளன. அதாவது, 'கடல்வண்ணன்' என்பதிலுள்ள 'வண்ணன்' என்பதற்குத் தன்மைப் (ஸ்வபாவம்) பொருளில் அனந்தாழ்வான் உரை பணித்துள்ளார். அதனை மாற்றிப் பட்டர் "இப்பதிகம் ஆழ்வார் மடலூர்ந்தாகிலும் இறைவனை அடைய நினைப்பதால் 'வண்ணன்' என்பதற்கு 'வடிவழகை உடையவன்!" என்று பொருள் வழங்குவர். ஈட்டில் 'மடலூர்ந்தாகிலும் பெற வேண்டும் படியான வடிவழகைச் சொல்லுகிறது' என்றுள்ளது. இதனை விளக்கும் வகையில் அரும்பத வுரைகாரர், பட்டர் பொருளாட்சியில் 'வண்ணம்' என்பதற்கு 'வடிவழகு (நிறம்)' என்ற பொருள் கொடுத்ததைச் சுட்டிக் காட்டுவர். அவ்வண்ணமே, சீயர் உரையில் 'வடிவழகையுடையவன்' என்று பொருள் கூறியது கொண்டு பட்டரின் பொருளாட்சி சீயர் உரையில் இடம்பெற்றுள்ளது காணமுடிகிறது.

இவ்வாறே, கூரத்தாழ்வான், முதலியாண்டான், உய்ந்த பிள்ளை, சொட்டை நம்பி, பிள்ளையமுதனார், சிற்றாட் கொண்டான், பிள்ளை திருநறையூர் அரையர் ஆகியோர் பொருளாட்சிகள் ஒவ்வொன்றும்[13], அம்மான் என்னும் ஆசாரியர்பொருளாட்சிகள் மூன்று இடங்களிலும்[14] ஈட்டில் வந்துள்ளதைக் கொண்டு சீயர் உரையில் சுருக்கமாகவும் விளக்கமாகவும் எளிமையதாகவும் இடம் பெற்றுள்ளன. இவையல்லாமல் ஈட்டில் காட்டிய முன்னோர்கள் (பூர்வர்கள்) பொருளாட்சிகளுள் மூன்று இடங்கள்[15] சீயர் உரையிலும் இடம்பெற்றுள்ளன.

8.5. மேற்கோள் விளக்கம்

8.5.1. சீயர் உரையில் வடமொழி நூல் மேற்கோள்கள்

சீயர் வடமொழியிலுள்ள பலதுறை நூல்களை நன்கு கற்றுத் தம் உரையில் பத்துப் பத்துக்களிலும் பயன்படுத்திச் சென்றமை புலப்படுகிறது.

வேதம், உபநிடதம், ஸ்ம்ருதி, இராமாயணம், பாரதம், பாகவதம், பகவத் கீதை, விஷ்ணு புராணம் முதலான 28 வடமொழி நூல்களிலிருந்து 282 இடங்கள் மேற்கோளாகக் கொண்டு உரை வழங்கியுள்ளார். ஆனால் மேற்கோளுக்குரிய நூல் குறிப்புப் பெரும்பாலும் இவர் உரையில் இடம் பெறவில்லை. இதன் காரணம், இவர்தம் அறிவின் முதிர்ச்சி, வடமொழி நூல்

களில் கைதேர்ந்தோர் இருந்தமை ஆகலாம்; மேலும் அந்தக் கால உரையமைப்பும் அப்படி இருந்திருக்கலாம். பின்னோர்கள் படித்துப் பயன்பெறக் கலையறக் கற்ற மாந்தரான பெரியோர்கள் மேற்கோள் இடம்பெறும் நூல்களையும் இடங்களையும் தங்கள் பதிப்புக்களில் பதியச் செய்தனர்.[16] மேற்கோள் வழங்கிய இடங்களைத் தொகுத்துப் பார்க்கும்போது ஆழ்வார் சொற்களுக்குப் பொருள்விளக்கம் தருவதற்காகவும், சொற்பொருள் காட்டுவதற்காகவும், வடமொழி நூல்களோடு ஒப்புமை காட்டச் சான்றுகளாகவும் காட்டும் வகையில் மேற்கோள்கள் வந்துள்ளன. இத்தகைய மேற்கோள் வந்த வடமொழி நூல்களில் இராமாயணத்தைச் சீயர் பத்துக்கள் தோறும் ஏழு காண்டத்திலிருந்தும் பல இடங்கள் காட்டிச் சென்றிருப்பது சீயரின் ஆழ்ந்த புலமையைப் புலப்படுத்துகிறது. அவற்றில் ஆழ்வாரின் தாமான தன்மை, தலைவியாந் தன்மை, தாயாந் தன்மை ஆகியவற்றைச் சுந்தரகாண்டச் சுலோகத் தொடர்களைக் கொண்டு ஒப்பிட்டுக் காட்டும் வகை புலனாகிறது.

8.5.1.1 இராமாயணம்

*சான்றுகள் :*

1. 'ஆவியே ஆரமுதே' (3.8.7) என்ற பாடலில், அடியார்க்கெளியனாய் இனியனான இறைவனை அநுபவிக்கப் பெறுகிறிலேன் என்று கரணங்களைப்போலே கரணியான (கருவிகளை உடைய) தம்முடைய இழவைச் சொல்லுவதாகச் சீயர் உரைப்பர். இதில் 'தத்தஸ்ய ஸத்ருஸம்'[17] என்கிற ஸ்வரூபமும் இழந்தேன்; அபிமதமும் இழந்தேன்'' என்கிறார். இங்குச் சுட்டப்பட்ட மேற்கோள் இராமாயணத்தில் இராமனைப் பிரிந்த சீதை, 'அது அவருக்குத் தகுதியாக இருக்கும்' என்று தன் பொறுமையையும் விருப்பத்தையும் காட்டி உரைக்கிறார். அதனையே ஆழ்வாரும் எண்ணுவதாகச் சீயர் இந்த மேற்கோளில் சுட்டுகிறார்.

2. 'நாட்டில் பிறந்தவர் நாரணற்கு' (7.5.2) என்ற பாடலில் 'நாரணற்கு' என்ற இடத்தில், ''பவாந் நாராயணோ தேவ:[18] (நீர் நாராயணனாகிற பெருமான்) என்று இயற்கையான சம்பந்தமுடைய சக்கரவர்த்தி திருமகனுக்கு'' என்று பொருள் வழங்குவர் சீயர். இதில் இராமாயண யுத்த காண்டச் சுலோகத் தொடரைக் காட்டிச் சீயர் உரைவகுத்தது காணலாம்.

இவ்வாறே மற்ற இடங்களிலும் இராமாயணமென்னும் பத்தி வெள்ளத்தில் தோய்ந்து சீயர் தமது உரையில் அதனை மேற்கோளாகக் காட்டுகிறார்.

### 8.5.1.2. வேதம்

வேதமேற்கோளாகக் காட்டிய இடங்கள் சீயர் உரையில் இடம்பெற்றுள்ளன. இவை யாவும் யஜுர் வேதத்தில் இடம் பெற்றனவாகும். ஆழ்வார், வேதத்தைத் தமிழாகச் சொல்லியதன் சான்றாக எடுத்தாண்டார் என அறிய முடிகிறது.

சான்று:

"நேர்சரிந்தான் கொடிக்கோழி கொண்டான்—பின்னும்
நேர்சரிந்தான் எரியும் அனலோன் பின்னும்
நேர்சரிந்தான் முக்கண் மூர்த்தி கண்டீர் அப்பன்
நேர்சரி வாணன் திண்தோள் கொண்ட அன்றே" (7 4.8)

என்ற பாடலில் பாணாசுரன் போர்செய்யும் விதத்தை நினைக்கிறார் ஆழ்வார். இப்பாடலின் இரண்டாமடியை 'எரியுமனலோன் நேர் சரிந்தான்' என்று கொண்டுகூட்டி, 'ருத்ரன் தானாம்படியான சர்வத்தையுடையவனாய் மிகவும் பளபளப்பான சுடரையுடைய அக்நியானவன் எதிர்நில்லாமல் சரிந்தான்' என்று உரை வழங்கினர் சீயர். இங்கு யஜுர்வேதம் உத்தர அஷ்டகம் என்ற பகுதியில் (ருத்ரோவா ஏஷ:யதக்நி: "அக்நி என்று யாதொன்று இருக்கிறதோ அதுதான் இந்தச் சிவன்" என்று சொன்ன இடத்தை ஒப்புமையான சான்றாகக் காட்டிப் பொருள் தந்துள்ளார் சீயர்.

### 8.5.1.3. உபநிடதங்கள்

முக்கியமாகக் கருதப்படும் பதினெட்டு உபநிடதங்களுள் சீயர் 14 உபநிடதங்களிலிருந்து மேற்கோள் தொடர்களைப் பயன்படுத்தி உரைவழங்கியுள்ளார். அவற்றுள் தைத்திரீயோபநிடத்தைப் பத்துக்கள்தோறும் பயன்படுத்தி உரைவழங்கியுள்ளார். இவை பெரும்பாலும் சான்றுகளாகவும், சொற்பொருளாகவும், பொருள்விளக்கமாகவும் வந்த இடங்களாக உள்ளன.

சான்றுகள்:

(1) சோதியாகி எல்லா உலகும் தொழும்
ஆதிமூர்த்தி யென்றால் அளவாகுமோ
வேதியர் முழுவேதத் தமுதத்தைத்
தீதில்சீர்த் திருவேங் கடத்தானையே" (3.3.5)

என்ற பாடலில் மூன்றாமடியில் 'முழுவேதத்தமுதத்தை' என்பதற்கு ஆநந்தோ ப்ரஹ்ம: ரஸோவை ஸ: என்று தைத்திரீயோபநிடதத்திலிருந்து இரண்டு தொடர்களைக் காட்டிப் பொருள் வழங்குகிறார். அதாவது, "எல்லா வேதங்களிலும் 'அந்தப் பரமாத்மா ஆனந்த மயமானவன்; அவன் சுவையே வடிவெடுத்தவன்' என்று தெரிவிக்கப்பட்டமிகுதியான இனிமையுடையவன்" என்று உபநிடதத் தொடர்களின் கருத்தினை இங்குச் சீயர் பயன்படுத்தியுள்ளமை கருதுதற்குரியது. அதாவது 'அமுதம்' என்ற சொல்லின் பொருளை விளக்கும் நோக்கில் சீயர் பயன்படுத்தியது காணலாம்.

(2) 'சீரார் சுடர்களிரண்டாய்' (6 9.1) என்றவிடத்தில் மேற்கோள் சான்றாக 'சூர்யாசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்' என்று தைத்திரீயோபநிடதத்தைப் பயன்படுத்தியுள்ளார், அதாவது, "இறைவன் சூரியனையும் சந்திரனையும் முன்னிருந்தபடியே படைத்தான் என்கிறபடியே தனித்தனிப் படைப்புக்கு (வ்யஷ்டிஸ்ருஷ்டி) முக்கியமாயிருக்கும் தன்மையராய்" என்று சீர்மையின் அடிப்படையில் உபநிடத மூலமாகச் சான்று காட்டி நிறுவுகிறார். இங்ஙனமே அருமையான உபநிடதத் தொடர்கள் சீயரின் விளக்கத்திற்குப் பெரிதும் துணை புரிந்துள்ளன.

### 8.5.1.4. விஷ்ணு புராணம்

புராணங்களுள் மிகப் பழமையானது விஷ்ணு புராணம். இது சீயர் உரையில் ஆழ்வார் சொற்களை விளக்கவும் சான்றுகள் காட்டவும் வந்த இடங்களாக உள்ளன.

சான்றுகள்:

(1) 'ஆழியெழச் சங்கும் வில்லுமெழ (7.4.1) என்ற பாடலில் திருமால் திருவுலகமளந்த விதத்தை நினைக்கிறார் ஆழ்வார். உலகளந்தபோது திவ்விய ஆயுதங்கள் திருமாலிடமுள்ள பரிவாலே பளபளப்பாக முன்னே உயர்ந்து தோன்றினவாம் அவற்றுள் திருவாழி யாழ்வான், சங்கு, வில், தண்டு, வாள்— இவற்றின் தன்மைகளைக் கூறும்போது விஷ்ணு புராணத்தில் நந்தகோபன் கண்ணனுக்கு வாழ்த்துக்கள் கூறும்போது சொன்ன சுலோகத்தில் 'ஸ்ப்புரதாயுத: "துடிக்கின்ற பளபளக்கின்ற ஆயுதத்தையுடையவனாக ஆனான்" என்று திருமாலின் தன்மையைக் காட்டுகிறார். அதனை மேற்கோள் சான்றாகச் சீயரும் இவ்விடத்தில் பயன்படுத்தியுள்ளமை கருதத்தக்கது.

(2) மற்றொரு பாடலில் 'சிந்திப்பே அமையும் கண்டீர்கள்' (9.1.7) என்ற இடத்தில் 'எம்பெருமானை நினைப்பதில் என்ன

வருத்தம் இருக்கிறது?' என்று விஷ்ணுபுராணத்தில் பிரகலாதன் அசுரப் பிள்ளைகளுக்குச் சொன்ன மொழிகளைச் சான்றாகக் காட்டி உரை வழங்குகிறார் சீயர்.

### 8.5.1.5. பாரதம்

பாரதத்திலிருந்தும் மேற்கோள்காட்டி உரை வழங்கியுள்ளார்.

சான்று:

'நீர்மையில் நூற்றுவர் வீய (3.5.7) என்ற பாடலில் 'அருள் செய்து நின்று' என்பதற்குச் சான்றாகக் கண்ணன் பாண்டவர்கட்கு ஓரமாக இருந்தான் என்பதைத் தெரிவிக்கும் வகையில், "க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாஸ் ச பாண்டவா:" என்ற பாரத சுலோகத்தை மேற்கோள் காட்டியுள்ளார் சீயர். அதாவது "கண்ணனே தஞ்சமாகவும், பலமாகவும், தலைவனாகவும் கொண்டவர்கள் பாண்டவர்கள்" என்று இதனைச் சான்றாகக் காட்டி நிறுவுகிறார்.

### 8.5.1.6. பகவத் கீதை

கண்ணனின் கருணையால் வெளிப்பட்ட கீதையிலிருந்தும் சீயர் மேற்கோள் காட்டித் தமது உரையைச் சிறப்பாக்கியுள்ளார். கீதையின் மூன்று பிரிவுகளான கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் ஆகியவற்றினை ஆங்காங்கே இடம்பெறச் செய்து சொல், பொருள் தருவதற்காகவும் சான்றாகவும் காட்டியுள்ளார்.

சான்றுகள்:

1. 'பணிகண்டாய் சாமாறே' (4.9.1) என்றவிடத்தில் கீதையின் 18ஆவது அத்தியாயத்தில் பக்தி யோகத்தின் முடிவில் சொன்ன சுலபமான சரம சுலோகத்தைக் காட்டி ('மோக்ஷயிஷ்யாமி') உரை வழங்குகிறார் சீயர். அதாவது, ஆழ்வார் உலக மக்கள் படுகிற துயர் பொறாமையால் இந்தத் துயர் காணாதபடி தன் உடல் பிரிவு பிறப்பிக்க வேண்டுமென வேண்டுகிறார். இவ்விடத்தில் "அர்ச்சுனனுக்குச் சரம சுலோகம் உரைத்த கணக்கிலே ஒரு வார்த்தை அருளவேணும்" என்று வேண்டுகிறார்.

2. மற்றோர் இடத்தில் 'உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்' (6.7.1) என்ற தொடரிலுள்ள 'கண்ணன்' என்பதற்குக் கீதையில் கண்ணன், ('வாசுதேவஸ்ஸர்வம்') "எனக்குத் தாரக போஷக போக்யப் பொருள்களெல்லாம் கண்ணன் என்று நினைக்கிற மகாத்மா

கிடைத்தற்கரியன்'' என்று அருளியதை வலியுறுத்தும் வகையில், இங்கு எல்லாம் கண்ணனாய் நினைக்கும் மகாத்மா ஆழ்வார் உள்ளார் என்பதைக் காட்டுவதற்காக இந்தச் சுலோகத்தின் தொடரை மேற்கோளாகக் காட்டுகிறார் சீயர்.

இங்ஙனே மற்ற இடங்களிலும் வெவ்வேறு வடமொழி நூல் தொடர்கள் நான்கு, ஐந்து, ஆறு இடங்களாக வந்த இடங்கள் சீயர் உரையில் இடம்பெற்றுள்ளன. அதேபோல், லக்வத்ரி ஸ்ம்ருதி, அதர்வசிகோபநிடதம், முண்டகோபநிடதம், சாந்தோக்ய உபநிடதம், கேனோபநிடதம், ஐதரேயோபநிடதம், மோக்ஷதர்மம், ஸாத்வத ஸம்ஹிதை, நரசிம்ம மந்திரம், விஷ்ணுஸூக்தம் முதலான வடமொழி நூல்களின் மேற்கோள்கள் ஒவ்வோர் இடத்தில் சீயரால் எடுத்தாளப்பட்டமையைக் காணலாம்.

### 8.6. ஆழ்வார் அநுபவங்கள் தோய்ந்து கிடக்கும் சொற்களை இனம் கண்டெடுத்து அவதாரிகையில் பெய்தல்

திருவாய்மொழியில் ஆழ்வார் அநுபவங்கள் தோய்ந்து கிடக்கும் சொற்கள், தொடர்கள் பெரும்பாலும் இறைவனின் தன்மை, குணம், வடிவு, திருவிளையாடல்கள் முதலானவற்றை உணர்த்தவல்லன. அவ்வாறு ஆழ்வாரின் அநுபவச் சொற்கள் சீயர் உள்ளத்தை மலரச் செய்யவே, ஒவ்வொரு பதிகந்தோறும், பாடல்தோறும் அமைந்த அவதாரிகைகளில் அச்சொற்களின் பொருளைக் கொண்டு அவதாரிகையைச் சிறப்புறச் செய்ய முடிந்தது எனலாம். இவ்வாறு அவதாரிகைகள் அமைத்ததனால் சீயர் உரைமூலம் இன்னென்ன பாடலால் இறைவனின் நிலைத்த பெயரையோ தொழிலையிட்டு வந்த பெயரையோ சிறப்பாகத் தோற்றும்படி காணமுடிகிறது.

சான்றுகள்:

1 'கண்ணி எனதுயிர்' (4.3.5) என்ற பாடலுக்கு அவதாரிகைவருமாறு:

''நுகரத்தக்கவனாய் (போக்யனாம்), உடையவனாய் (ஸ்வாமியாய்)
உதவி செய்பவனாய் (உபகாரகனாய்), எளியனான (சுலபமான
கண்ணனுக்கு என்னுடைய ஆசை முதலானவைகள் ஆபரணம் முதலான
எல்லாமுமாகா நின்றன என்று கூறுவர்.'',

இந்தப் பாடலில் 'சக்கரத்தான்' என்ற சொற்கொண்டு 'அநுபவிக்கத் தக்கவன்' என்றும், 'எம்மான்' என்பதைக் கொண்டு 'ஸ்வாமி' என்றும், 'எம்பிரான்' என்பதற்கு 'உபகாரகன்' என்றும், 'கண்ணன்' என்பதற்கு 'சுலபன்' என்றும் பொருள் வழங்கி அவதாரிகையைச் சிறப்புறச் செய்தமை காணமுடிகிறது.

2. 'ஆட்டியும் தூற்றியும்' (7.7.2) என்ற பாடலில் அவதாரிகையில் "அடியாருடைய பொருளில் மிக்க ஆசையாலே வெண்ணெயைத் திருடினவனான கண்ணன்" என்று இறைவனின் தன்மையைக் குறிப்பிடுவர். இத்தொடரை ஆராயும்போது கண்ணன் அடியார்களது பொருளான வெண்ணெயைத் தின்ன ஆசைகொண்டு அதனைத் திருடி உண்டான்; இந்நிகழ்ச்சியை நினைவில்கொண்டு ஆழ்வார் பாடலில் 'ஈட்டிய வெண்ணெயுண்டான்' என்ற தொடர் அமைத்தார் அதனை அநுபவித்த சீயரும் அத்தொடருக்குப் பொருத்தமாக அவதாரிகை அமைத்துள்ளார்.

## 8.7. அருஞ்சொல் விளக்கம் தருதல்

உரையில் வரும் அருஞ்சொற்களையும் சீயரே ஆங்காங்கே அருஞ்சொற்களுக்குப் பொருள் வழங்குவதையும் நோக்குங்கால் உரையின் தனித்தன்மை விளங்குகிறது. (பின் இணைப்பு 6) உரையில் காணப்படும் அருஞ்சொற்களைப் காணும்போது, அவர் காலத்தில் வழக்கிலிருந்த சொல் நயத்தைப் பின்பற்றிச் சீயர் உரைத்தார் என அறியலாம். (பின் இணைப்பு 7)

'வெறியோடி'[19], 'துளும்புதல்'[20], 'முட்டக்கண்டு'[21], 'சிறாம்பித்து'[22], முதலான சொற்கள் அவர்தம் தமிழ்ப்புலமையை உணர்த்துவனவாகவும் உரைக்குச் சிறப்புத் தருவனவாகவும் அமைந்துள்ளன. சீயரே தரும் அருஞ்சொல் விளக்கத்தைக் காணும்போது இடத்திற்கேற்பச் சொற்களுக்குப் பொருள்தரும் புலமைச்சிறப்பு வெளிப்படுகிறது.

## 8.8. தொகுத்துச் சுட்டல்

நன்னூல் காட்டும் உரையினது பொதுவிலக்கணத்திற்கேற்ப சீயர் உரையில் ஒரு பாடலில் சொன்ன பலவற்றையும் திரட்டிக் காணும் போக்கில் சிறுபான்மை தொகுத்துச் சுட்டியதைக் காணலாம்.

சான்றுகள்:

(1) "மாயாவாமனனே' (7.8.1) என்ற பாடலுக்குச் சீயர் அப் பாடலிலுள்ள ஒவ்வொரு சொல்லுக்குமுரிய பொருள் வழங்கிய பின்னர் முடிவில் திரட்டிக் காட்டியுள்ளார். இவற்றை அப்பாடலின் பொழிப்புரையோடு ஒட்டிக் காணும்போது தொகுத்துச் சுட்டியது அறியலாம்.

(2) 'மானேய் நோக்கு' (5.1 1) என்ற பாடலில் அடியார் பொருட்டுத் திருவிளையாடல்கள் செய்பவனை இந்த உறவு காரணமாகக் கலவி அநுபவத்தைத் தர வேண்டுவதாகப் பாடலுக்குப் பொழிப்புரை தந்துள்ளார். இப்பாடலில் பெறப் பெறும் திரண்ட பொருளைத் தொகுத்தும் காட்டியுள்ளார். இதனைச் சிந்தித்துக் காணும்போது பொழிப்புரையாகப் பாடலுக்குப் பொருள் சொன்னதில் தெளிவு பிறக்கும் வகையில் தொகுத்துச் சுட்டியமை அறிய முடிகிறது. இதனை ஆழ்ந்து பாடல் தொடர்களை நோக்கின்,

'மானேய் நோக்கின் மடவாளை மார்பில் கொண்டாய் மாதவா' என்ற தொடரால் 'நித்தியமாக சிபாரிசு செய்யும் சம்பந்தத்தையும்', 'கூனே சிதைய வுண்டைவில் நிறத்திற் தெறித்தாய்' என்பதனால் 'அடியாரின் குறையைப் போக்கும் நேர்மையை உண்டு பண்ணுவதையும்; 'கோவிந்தா' என்ப தனால் 'காப்பாற்றுவதில் ஆசையையும்', 'வானார் சோதி மணி வண்ணா' என்பதனால் 'பரமபதத்தையும் திருமேனிச் சிறப்பையும்', 'மதுசூதா என்பதனால் 'தடையைப் போக்கும் தன்மையையும்' சொல்லியது அறிய முடிகிறது.

இவ்வாறே மற்ற இடங்களிலும் அமைந்துள்ளது.

8.9. ஆழ்வார் சொற்களுக்கு அடைமொழி தந்து பொருள் கூறுதல்

சீயர் தமது உரையில் ஆழ்வார் சொற்களுக்கு அந்தந்த இடத்திற்கேற்பவும், உரையின் செறிவு கருதியும் அடைமொழி தந்து பொருள் வழங்கியுள்ளது அறியற்பாலதாகும். இத்தகைய நெறி உரை முழுவதும் பரந்துள்ளது. மேலும் உரை வழங்கும் போது அச்சொற்களுக்குரிய இயல்பான தன்மையையும் சேர்த்துப் பொருள் வழங்குவது குறிப்பிடத்தக்கது.

சான்றுகள் :

'ஆழி' — பொய்க்குப் பெருநிலை நிற்கும் திருவாழி.

'இலங்கை' — அடியார்களின் விரோதிகளுக்கு இருப்பிட மான இலங்கை.

'தேவர்கள்' — நழுவுதலில்லாத ஞான ஒளியையுடைய நித்யஸூரிகள்.

'கழல்கள்'—எல்லையற்ற அழகாம்படி நல்ல ஒளியையுடைய வீரக்கழல்களையுடைய தன் திருவடிகள்.

8. 9. 1. அடைச்சொற்களை விரித்து விளக்குதல் :

அடைச்சொற்கள் இறைவனின் வடிவு, அவயங்கள், அடையாளங்கள் ஆகியவற்றை விளக்குவனவாக அமைந்திருக்கும். அவற்றுக்குப் பொருள்தரும்போது சீயர் அவற்றின் இயல்பான தன்மையையும் அவற்றின் முதன்மையையும் தெரிவிக்கும் வகையில் விரித்துப் பொருள் வழங்குவர்.

சான்றுகள் :

(1) 'இளங்குருகே' — வேகமாக நடப்பதற்கு உறுப்பான இளமையையுடைய குருகே'.

இவ்விடத்தில் குருகு இளமையாக உள்ளது. அவ்விளமை அது வேகமாக நடப்பதற்கு உறுப்பானது என்பதைக் காட்டும் வகையில் ஆழ்ந்து பொருள் வழங்குவது குறிப்பிடத்தக்கது.

2. 'சுரிசங்கம்' —'வடிவுதானே எதிரிகளையும் அழித்து அடியார்க்கு அநுபவிக்கத் தக்கதாம் படியான வடிவிலே கோட்டின் சுழற்சியையுடைய ஸ்ரீபாஞ்சசன்யம்.'

இவ்விடத்தில் சங்கின் இயல்பையும் பெருமையையும் உணர்த்திப் பொருள் வழங்கியது காணலாம். சுழற்சியையுடைய சங்கு என்று பொருள் கூறி இருக்கலாம். மேலும் சங்கின் பயனைத் தெரிவிக்கும் வகையில் அதன் வடிவுதானே எதிரிகளையும் அழித்து அடியார்க்கு உதவும் தன்மையோடு பொருந்தியிருப்பதைச் சுட்டுவதால் சீயரின் அறிவுத் திறன் புலப்படுகிறது.

3. 'நல்நெடுங்குன்றம்' —'தாதுப் பொருள், பொடிகள் இருக்கும் சிறப்பான நன்மையையுடைய உயர்ந்ததான மலை.'

இவ்விடத்தில் 'மலை உயர்ந்ததாயிருக்கிறது' என்பதோடல்லாமல் 'நன்மையுடைத்தாயிருக்கிறது' என்பர். நன்மையாவது எத்தகையது எனில் தாதுப்பொருள் பொடிகள் இருக்கும் சிறப்பைக் காட்டியதாகும்.

## 8.10. சீயர் காட்டும் திருவாய்மொழிச் சிறப்பு

பதிகந்தோறும் பயனுரைக்கும் பாங்கில் அமைந்துள்ள பதினோராவது பாடலில் 'ஆயிரத்து', 'ஆயிரத்து' என்று குறிப்பிடும்போது அச்சொல்லைச் சிறப்பிக்கும் வகையில் ஓர் அடைமொழியையோ, அடைத்தொடரையோ ஆழ்வார் வழங்குகிறார். இவ்வழக்கு அவ்வப்போது அவர்க்கு இயல்பாய்த் தோன்றியதாகும். இவ்வாறு இயல்பாய்த் தோன்றிய அடைச் சொற்களுக்கும் அடைத் தொடர்களுக்கும் ஆயிரத்தைச் சிறப்பிக்கும் வகையில் சீயர் ஆங்காங்கே சிறப்பாகப் பொருந்துமாறு தம் புலமைத் திறம் புலப்படுமாறு சிறப்புரை வழங்கிச் செல்கிறார். (பின் இணைப்பு 10) இவர்தம் பெரியபோதத்தை இப்பகுதிகள் தெள்ளத் தெளியக் காட்டுவனவாகும்.

சான்றுகள்:

1. 'தெருள்கொள்ளச் சொன்ன ஓராயிரத்துள்'—
'தத்துவ ஞானமானது அறிவியல் பொருளை (சேதனர்) ஏற்றுக் கொள்ளும்படி அருளிச் செய்த ஒப்பற்ற ஆயிரம்.'

2. 'சொல் நேர்பட்ட தமிழ்மாலை ஆயிரத்துள்'—
'சொல்வாய்ப்பை யுடைத்தாய் திராவிட மொழியாலே மாலையாகச் சேர்க்கப்பட்டிருக்கிற ஆயிரம்'

8.10 1. இவ்வாறே பத்துக்களின் ஏற்றங்களையும் சீயர் 'தம் பெரிய போதத்திற்கு' ஏற்பப் பல இடங்களில் காட்டுவர். (பின் இணைப்பு[11])

சான்றுகள்:

1. 'துவளில் மாமணி': 'பொருளைத் தெரிவிப்பதில் நேர்மையையுடைய தமிழான பத்து'

2. 'தேவிமார்': 'இறையநுபவம் முதலான குணத்தைத் தெரிவிப்பதில் உரிய சொற்சேர்த்தியையுடையதாயிருக்கும் பத்து'

## 8.11. அரும்பதவுரையில் சீயர் உரைத் தனிச்சிறப்பு

நம்பிள்ளையருளிய ஈட்டின் பல்வகை உரைத்திறனை யறிய, மணவாள மாமுனிகள் காலத்தில், அவர் திருப்பேரனாரான சீயர் நாயனாரும், கந்தாடை நாயனாரும் ஈட்டுத் தொடர்களை ஆராய்ச்சி செய்தனர். மாமுனிகள் ஆணைப்படி கந்தாடை நாயன் ஈட்டின் அரும்பத விளக்கம் ஒன்று முதன்முதலில் செய்

திரர் என்பது யதீந்திரப் பிரவண பிரபாவம் நூல் மூலம் அறிய லாகும்.[23] இந்நூல் இன்று கிடைக்கவில்லை. ஆனால் மாமுனி கள் காலத்திற்குப் பின்னர்த் தோன்றிய அரும்பதவுரைகளில் இரண்டு[24] உரைகள்தான் இன்று நிலவி வருகின்றன. அக்காலத் தில் வாழ்ந்த ஆசார்ய பெருமக்களில் ஆத்தான் சீயர் என்பவர் முன்னே இருந்த அரும்பத விளக்கங்களைத் திரட்டி 'அடையவளைந்தான் அரும்பதம்' என்ற ஓர் உரை எழுதினார் என்று பிள்ளைலோகஞ் சீயர் அருளிய திருவாய்மொழி நூற்றந்தாதி உரைமூலம் அறியலாம்.[25] இதனைத் தழுவிக் 'குணக்கரம்பாக்கம் ராமாநுஜ ஜீயர்' ஒரு புதிய அரும்பதவுரை எழுதியுள்ளார். இது 'சீயர் அரும்பதம்' என்றே வழங்கப்படு கிறது. திருவாய்மொழிக்கு அமைந்த ஐந்து வியாக்கியானங் களோடு சீயர் அரும்பதமும், சே.கி பதிப்பில் காணப்படுகிறது. இவ்வரும்பதவுரையில், வாதி கேசரி அழகிய மணவாளச் சீயர் உரைத்தொடர்களைச் சுட்டிக் காட்டி ஈட்டின் தொடர்களைத் தெளிவு பெறவைத்த இடங்கள் பத்துக்கள் தோறும் ஆங்காங்கே காணப்படுகின்றன. அரும்பதவுரையில் சீயர் உரை ஆங்காங்கே சிறப்பாக எடுத்தாளப் பெறுகிறது. அதனை 'உரை' என்ற பெயரில் குறித்தும், அதனையே 'சொற்பொருள்' (சப்தார்த்தம்) என்று குறித்தும் செல்வர். பாடல் உரைகட்கே இத்தகு குறிப்புகள் அமைந்துள்ளன; அவதாரிகைகட்கு அல்ல வென்பது இங்கு நினைவு கூறத்தக்கது. அரும்பதவுரையில் சீயர் உரை ஆளப்பட்ட இடங்களை இருவகையாகப் பிரிக்கலாம். 1. ஈட்டுரையைத் தெளிவு செய்யவும், சிறப்பிக்கவும், ஈடுசெய்ய வும் ஆங்காங்கே எடுத்தாளல்; 2. ஈட்டிலில்லாத உரையாக எடுத்துக்காட்டல். இவ்விருவகை ஆட்சிகளும்,

1. இறையியல்பு முதலியன
2. ஊர்ச்சிறப்பு
3. ஆழ்வார் சிறப்பு
4. திருவாய்மொழிச் சிறப்பு
5. ஈட்டின் தொடர்களைத் தெளிவுபடுத்தல்
6. ஈட்டின் சொற்பொருள் விளக்க உரையைச் சுட்டிக் காட்டல்
7. ஈட்டில் காட்டிய முன்னோர் பொருளாட்சியை விளக்க உரையை எடுத்துக் காட்டல்
8. சிறப்பாகக் கண்டெடுத்த உரைநயங்கள்
9. உரையின் கொண்டு கூட்டு முறையைக் காட்டல்

என்ற தலைப்புக்களின் கீழ் ஆராயப்படுகின்றன. இவையல்லாமல் சீயர் உரைவழங்கிய அருஞ்சொற்களையும் எடுத்துக் காட்டி

புள்ளார். மேற்கூறிய ஒன்பது தலைப்புகள் சான்றுகள் கொண்டு இங்கு விளக்கப்படுகின்றன:

சான்றுகள்:

8.11.1. இறை இயல்பு முதலியன

1. 'உணர்ந்துணர்ந்து இழிந்தகன்று' (1.3.6) என்றபாடலில் முதலடியிலுள்ள 'உணர்ந்துணர்ந்து' என்பதற்கு அறிவும் (ஜ்ஞாத்ருத்வ) தன்மையுடையனாகையாலே (ஸ்வபாவனாகையாலே) என்றுமொக்க உணருகையே தன்மை உடையவன் (ஸ்வபாவமாகவுடையவன்) என்று இறையியல்பைச் சீயர் உரையில் உள்ளபடி அரும்பதவுரைகாரர் காட்டுகிறார்.

2. 'கருத்தின்கண் பெரியன்' (10.8 8) என்பதற்குப் 'பாரிப்பில் பெரியனாயிருக்குமவன்' என்று சீயர் காட்டிய இறையியல்பைக் காட்டுகிறார்.

8. 12. 2. ஊர்ச்சிறப்பு

இஃது அரும்பதவுரையில் ஆறு இடங்களில் இடம் பெற்றுள்ளது.

'சிந்துபூ மகிழும் திருவேங்கடத்து' (3.3 2) என்பதற்குத் 'தூவின விடுபூக்கள் ஸ்வபர்சத்தாலே விகஸிதமாம்படியான திருமலையில்' என்று உரையில் சப்தார்த்தம்.''

'கொய்பூம் பொழில்' (4 1.11)—'கொய்யப்படும் புஷ்பங்களையுடைத்தான சோலையையுடைய.'

'கட்டெழில் தென்குருகூர்' (6.6.11) — 'அரணழகையுடைத்தாய் தர்சநீயமான திருநகரி.'

'மொய்புனல் பொருநல்...வண்டென்குருகூர்' (7.2.11)—'மிக்க ஜலத்தையுடைய திருப்பொருநலினுடைய, துகிலின் நிறம் போலே பரிசுத்தமான ஜலத்தையுடைத்தான பர்யந்த பிரதேசத்தையுடைய என்று உரையில் சப்தார்த்தம்.'

'செறிபொழில் அனந்தபுரம் சேமநன் குடைத்துக் கண்டீர்' (10 2.9) 'செறிந்த பொழிலையுடைய திருவனந்தபுரமானது நன்றான ரக்ஷையை யுடைத்துக்கிடிகோள்.'

'பொருநல் சங்கணி துறைவன் வண்தென் குருகூர்' (10.3.11) —'திருப்பொருநலில் சங்குகள் சேரும் துறையையுடையராய்

ஸம்பத்தையுடைய அழகிய திருநகரிக்கு நிர்வாஹகராய் உதாரரான ஆழ்வாரருளிச் செய்த என்று சப்தார்த்தம்.'

8. 11 .3. ஆழ்வார் சிறப்பு

'வளவயல் சூழ்தண்வளங் குருகூர்ச் சடகோபன்' (3.5.11)—"வளர்ச்சியையுடைய (ஸம்ருத்தியையுடைய) வயல் சூழ்ந்து குளிர்ந்ததாய் (சீரமஹரமாய்) எல்லாச் செல்வமும் வளமாகவுள்ள திருநகரிக்கு அரசரான (நிர்வாஹகரான) ஆழ்வார்."

'வண்பொழில்சூழ் வண்குருகூர்ச் சடகோபன்' (7 2.11)—"சிறந்த பொழிலாலே சூழப்பட்டு எல்லையற்ற செல்வத்தோடு கூடிய (நிரதிசய ஸம்பத் விசிஷ்டமான) திருநகரிக்கு அரசரான ஆழ்வார் என்று சப்தார்த்தம்."

'வழுதிவள நாடன்' (10.4.11)—"திருவழுதி வளநாட்டுக்கு அரசரான ஆழ்வார்."

'கோலமா மழைக்கண்' (7.2.7)—"காட்சிக்கினியதாய்ப் (தர்சநீயமாய்ப்) பெருத்துக் குளிர்ந்த கண்ணானது நீர்விஞ்சும்படி ஒரு காரியமும் செய்யாமல் (நிர்வ்யாபாரையாயிரா) நிற்கும்."

'தெய்வவுரு' (4.4.2)—கைபுனைந்தியற்றா (அப்ராக்ருதமான) வடிவையுடையவள்."

'தொழுதாடும்' (4 6.10) —"அவனைத் தொழுது பரபரப்புடன் நாட்டியம் பண்ணாநிற்கும்"

'குருகூர்ச் சடகோபன்' என்ற அடைமொழி வந்துள்ள பாடல்தோறும் 'ஆழ்வார் திருநகரிக்கு அரசன்' என்ற முறையில் கூட்டுவது அறியலாம். இதனையே அரும்பதவுரையாசிரியரும் எடுத்துக் காட்டியுள்ளார்.

8. 11. 4. திருவாய்மொழிச் சிறப்பு

அரும்பதவுரையில், நான்கு இடங்களில் சீயர் உரைக்கண் திருவாய்மொழிச் சிறப்புப் பற்றி வருகின்றன

'இவை பத்து வெறிகளும் (4.6.11) என்பதற்கு 'வெறியாட்டு விஷயமாக விளக்கியுரைத்த இப்பத்தையும்' என்று பதிகத்தின் பெருமையைக் காட்டியதும், 'சடகோபனொலி புகழாயிரம் (5.2.11) என்பதற்கு 'ஆழ்வாருடையதாய் ஸுப்ரஸித்தமான பகவத் குணப்ரதையை யுடைத்தான ஆயிரம் என்று உரையிக் சப்தார்த்தம்' என்று காட்டியதும், 'தம்மூரெல்லாம் வைகுந்தமாகும்' (5.3.11) என்று சொற்பொருளாட்சி காட்டியதும்,

'அறியக்கற்று வல்லார்' (5.5.11) என்பதற்கு 'ஜ்ஞான ப்ரகாசம் பிறக்கும்படி அப்யஸித்து அர்த்தாநுஸந்தானம் பண்ண வல்லவர்கள்' என்று சொற்பொருளாகக் காட்டியதும் கொண்டு சீயர் பல்வகைப் பெருமைகளும் ஆங்காங்கே அரும் பதவுரைகாரரும் காட்டுவது சீயரின் ஆழ்ந்த அறிவுத்திறனைப் புலப்படுத்துமாறு அமைகின்றது.

8. 11. 5. ஈட்டின் தொடர்களைத் தெளிவுபடுத்தல்

(1) 'ஓவாதிராப்பகல் உண்பாலே வீழ்த்தொழிந்தாய்'. (2.1 10) என்ற தொடருக்கு ஈட்டில் இரண்டு விதமான பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளன. அதனைச் சுட்டிக்காட்டிய அரும் பதவுரைகாரர் அவற்றாலுண்டான ஐயத்தைப் போக்கச் சீயர் உரைத் தொடர்களைக் காட்டுகிறார். அதாவது, "இத் தொடருக்கு இராப்பகல் இடைவிடாதே உன் ஸ்வபாவங்களிலே தாழ்ந்து அகப்படும்படி பண்ணினாய் என்றிருக்கையாலே, இப்படி மூலாநுகுணமாக யோஜிக்கில் சந்தேகம் தீரலாம்" என்று அரும்பதவுரைகாரர் தெளிவுபெறச் செய்கிறார்.

(2) 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி' (3 3.1) என்ற தொடருக்கு ஈட்டில் பரந்த பொருள் விளக்கம் தந்த போதிலும், அதனை விளக்கும் வகையில் அரும்பதவுரையாசிரியர் எளிய வகையில் எடுத்துக்காட்டிய பிறகு, சீயர் உரைத்தொடரையும் காட்டி முடிவு செய்கிறார். இதனால் ஈட்டின் தொடர் விளக்கத்திற்குச் சீயர் உரை பெரிதும் பயன்படுவதைக் காணலாம். இவ்விடத்தில் ஈட்டின் தொடர்களில் ஒரு அர்த்தமான 'ஸர்வகாலத்தையும் ஸர்வதேசத்தையும் ஸர்வாவஸ்த்தையையும் (எல்லா நிலைமையையும்) நினைக்கிறது' என்று சொன்னதற்கேற்ப அரும்பதவுரைகாரர் சீயர் உரைத்தொடரைச் சுட்டிக் காட்டியுள்ளார். அதாவது, 'ஒழிவில்லாத காலமெல்லாம் ஸர்வதேசத்திலும் உடையனாய் ஸர்வாவஸ்த்தையிலும் பிரியாது நின்று என்று உரையில் அர்த்தம்' எனச் சுட்டிக்காட்டுகிறார்.

8. 11. 6 ஈட்டின் சொற்பொருள் விளக்க உரையைச் சுட்டிக் காட்டல்

(1) 'நாவியல் பாடல்' (9.2.11) என்றவிடத்தில் 'மனத்தின் துணையின்றி யாயிற்றும் (மனஸ்ஸஹகார மூலமொழியலாயிற்று) சொல்லிற்று' என்றே உள்ளது. இதனை விவரிக்க அரும்பத வுரைகாரர், 'நாக்கின் தொழிலான (ஜிஹ்வாவியாபாரமான) பாடல்' என்று சொற்பொருள் உரையில் உள்ளதாகக் காட்டுவர்.

(2) 'இடைப்புக்கு ஒழிவில்லை' (8.4.9) என்றவிடத்தில் ஈடு: "நடுவே புக்கு ஒரு பொருளும் (பதார்த்தமும்) தன்வயமாய் (ஸ்வதந்த்ரமாய்) இருப்பதில்லை; அடைய பிரகாரமாய்த் தான் பிரகாரியாயிருக்கும்' என்று கூறுவர். இதனை விளக்க அரும்பத வுரைகாரர், "இடைப்புக்கு—பிரகாரமான பிரம்ம ருத்ரர்களுக்கு நடுவே புக்கு, ஒருருவும்-ஒரு பொருளும், ஒழிவில்லை-ஸ்வதந்த்ர மாயிருப்பதில்லை' என்று காட்டி உடனே உரையின் சொற் பொருளைப் பின்வருமாறு காட்டுவர். "ப்ரஹ்மருத்ரர்களுக்கு நடுவே ரக்ஷகனாய்ப் புகுந்து ஒரு பதார்த்தத்தையும் ஒழிய விடா திருக்குமவன்" என்று அருளியிருப்பதைக் காட்டித் தெளிவு பெறச் செய்கிறார்.

8. 11. 7. பொருளாட்சிகளை விளக்க உரை எடுத்துக்காட்டல்

ஈட்டில் முன்னோர்கள் வகுத்த பொருளாட்சித் தொடர் களைப் பெயர் சுட்டாமல் சீயர் உரையில் பின்பற்றியுள்ளார். அவ்வகையில் பின்பற்றிய ஓரிரு இடங்கள் அரும்பதவுரையாசிரி யராலும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது ஈண்டுக் குறிப்பிடத்தக்க தாகும்.

'வேங்கடத் துறைவார்க்கு நமவென்னலாம் கடமை அது சுமந்தார்கட்கே' (3.3.6) என்ற தொடருக்கு நம்பிள்ளை எம் பெருமானார் அருளிய பொருளாட்சியைக் காட்டுகிறார். அதனைத் தம் ஆசாரியர் வாயிலாக அறிந்த சீயரும் தமது உரை யிற் பின்பற்றியதை, அரும்பத வுரைகாரர் ஈட்டின் பொருளாட்சி யைத் தெளிவுபடுத்திய பின்னர், சீயர் உரைத்தொடரையும் காட்டி முடிக்கிறார். அதாவது, "வேங்கடத்தில் நித்யவாஸம் பண்ணுகிறவர்க்கு (அநந்யார்ஹமாம்படி ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியுக்தமான) பிறர்க்கு உரித்தாகாது தன் சுயேச்சை அகன்றதோடு கூடிய, மிக்க பாரதந்த்ரியத்தைக் குறிப்பிடுவதாய் (அத்யந்த பாரதந்த்ர்ய ஸூசகமாய்) உரியதாய் ' பூமிஷ்டாந்தே... என்ற சுருதி ப்ரஸித்தமாயிருக்கிற நமோ வாசகத்தை அதிகாரி விசேஷத்யோதகமாம்படி சுமந்தார்கட்கு" என்ற சப்தார்த் தத்தைச் சீயர் அரும்பதம் காட்டுகிறது.

8. 11. 8. சிறப்பாகக் கண்டெடுத்த உரைநயங்கள்

சீயர் அரும்பதவுரையில், தாம் உரையை அநுபவித்த இடங் களில் பெரும்பாலும் சீயரின் சொற்போக்குகள் சிறப்பாக அமைந்த இடங்கள் பலவற்றுள் சிலவற்றையே காட்டியுள்ளார்.

'மையமர்வாள் நெடுங்கண்'(6.8.2) என்பதற்கு 'மைபொருந்தி ஒளியையுடைத்தான நெடிய கண்ணையுடைய' என்று சிறப்பாக

உரைத்ததைக் காட்டுகிறார். தலைவியான பராங்குச நாயகியின் தன்மையைக் காட்டும் சொற்போக்கில், 'நம்மாவி யுண்ண நன் கெண்ணினான்' (9.5.5) என்பதற்கு 'நம்முடைய பிராணன்களை உண்பதற்கு நன்றாக ஆராயாநின்றான்' என்று சீயர் உரைத்ததை அரும்பதவுரைகாரர் சிறப்பென எண்ணிக் காட்டுகிறார்.

8. 11. 8. கொண்டுகூட்டு முறையைக் காட்டல்

'போற்றி மற்றோர் தெய்வம்' (4.10.6) என்ற பாடலில் 'மற்றோர் தெய்வம்-போற்றி-பேணப் புறத்திட்டு என்று அந்வயிப்பது' என்று உரைத்த சீயர் உரையை அரும்பதவுரைகாரர் காட்டி, அதனை 'வேறொரு தேவதையை ஸ்தோத்ரம் பண்ணி ஆதரிக்கும்படியாகத் தனக்குப் புறம்பாக்கி என்று சப்தார்த்தம்' என்று விளக்கியும் காட்டுவர்.

இவ்வாறு அரும்பதவுரையில் சீயரின் உரையாட்சி பலவகையில் இடம்பெற்று, பழமை உரையான ஈட்டின் சொற் பொருளை மிகக் குறைந்த அளவில் காட்டிய இடங்களில் அறிய வழி வகுத்துள்ளது எனலாம். அதே சமயத்தில், அழகிய மணவாளச் சீயர் அருமையாக அமைத்த சொற்பொருள்களை அகராதிப் படுத்திக் காணும்போது ஆழ்வார் பாடலின் சொற்பொருள்களை எளிமையாகப் புரிந்து கொள்ள வழி வகுத்துள்ளது. ஆகையால்தான் பிள்ளைலோகஞ் சீயரும் மற்ற நான்கு வியாக்கியானங்கள் திருவாய்மொழிக்கு இருப்பினும் இந்த உரைகொண்டே சொற் பொருள் அறுதியிட வேண்டும் என்ற முறையைக் காட்டினர் என்று கருதலாம்.

8.12. பொழிப்புரை அமைப்பு

மூன்றாவது இயலில் கூறியபடி, சீயர் திருவாய்மொழியின் பதப்பொருள்களை, பதங்களை எடுக்காமல் பாடலின் பொருளை மட்டும் முறைப்படுத்தித் தொகுத்துப் பொழிப்புரையாகச் செய்தார் என அறிந்தோம். ஆறாயிரப்படி வியாக்கியானம் எழுதிய பிள்ளானும், பின்னர்ப் பல பேருரைகள் தோன்ற வகை செய்யும்படி செறிவான முறையில் பொழிப்புரை செய்தார். ஆனால் அப்பொழிப்புரைக்கு இருமடங்கான பன்னீராயிரப்படிப் பொழிப்புரை மிகவும் விரிவாகவும் மிகவும் சுருக்கமாகவும் இல்லாமல் நன்கு அமைந்ததாகும். சீயர், 'தம்பெரிய போதத்தால்' பொழிப்புரையில் தெளிவாகப் பத்துக்கள் தோறும் தோற்றுவாய்கள் அமைத்து, பதிகங்கள்தோறும் பாடலுக்குத் தெளிவான கருத்தைக் காட்டி, பின்னர்ப் பாடலில் ஒரு சொல்லும் விடாமல்

பொருள்தந்து நெறிப்பட உரை வழங்கியுள்ளது குறிப்பிடத் தக்கது.

சான்று:

ஆறாயிரப்படியில் பத்தாம் பத்து ஐந்தாந் திருவாய்மொழி, 'கண்ணன் கழலிணை' அவதாரிகையில், 'பக்தி யோகத்தைச் சொல்லுகிறது' என்று ஒரே தொடரில் உரை வழங்கினார். ஆனால் சீயர் உரையைக் காணும்போது, அந்தப் பதிகத்தின் முடிந்த கருத்தைக் கூறி, முன் பதிகத்தோடு இயைபுபடுத்தி, பத்துப் பாடல்களின் திரண்ட கருத்தைக் காட்டி முடித்துள்ளார். இதுபோன்றே பிறவும் உள. சீயர் பொழிப்புரை தந்தோடல் லாமல் பின்னர் ஆங்காங்கே அருந்தொடர்களை விளக்கியும் உள்ளார். ஏட்டுப்பிரதிகளில் பொழிப்புரையே உள்ளது என்றும் பின்னரே பதிப்பாசிரியர்கள் பாடலின் சொற்களைப் பிரித்துப் பொருளைச் சேர்த்துப் பதிப்பித்தனர் என்றும் முன்னரே கூறப்பட்டது மேலும் "பாடலின் சொற்பொருள் அறிவதற்கு, மற்ற நான்கு வியாக்கியானங்கள் இருப்பினும், இத்தைக் கொண்டே அறிய வேண்டும்" என்ற கருத்தைப் பிள்ளை லோகஞ் சீயர் அருளியதும் குறிப்பிடத்தக்கது.

## 8.13. தத்துவ அடிப்படை

தத்துவ அடிப்படையில் ,சீயர் உரையைக் காணும்போது சீயர் உரை தொடங்கியபோதே உரைப்பாயிரத்தில் ஒரு மகா வாக்கியத்தைக் காட்டி, அது உணர்த்தவல்ல ஐம்பெரும் பொருளையும் இவ்வுரை உணர்த்துவதாகத் திருவாய்மொழிப் பதிகங்களை வகைப்படுத்தியுள்ளார். இவர்தம் பெரிய அறிவாற்ற லால் ஐம்பொருளை விளக்கும் வகையில் தமது உரைமுழுதும் உணர்த்திச் செல்லும் பாங்கு இவர்தம் புலமையைப் புலப்படுத்து கிறது. சமய நோக்கு என்ற இயலில் சீயரின் அடிப்படைத் தத்துவங்கள் விளக்கப்பட்டுள்ளதால் இங்கு இடம் பெறவில்லை.

## 8.14. உரை வேறுபடுத்திச் சொல்லல்

வைணவ உரையாசிரியர்கள் தாம்தாம் இயற்றிய உரைகள் யாவும் அந்தந்தக் காலத்துக்கும் நிலைமைக்கும் ஏற்ப எழுந்த தோடு மட்டுமில்லாமல், என்றும் நிலைத்து வாழும் இறைவனைப் பற்றியதால், அத்தத்துவப் பொருளைச் சிறப்பித்து வாழும் வகை யில் நிலைபெறுவித்தலைத் தன்னுட்கொண்டு எழுந்த உரை களாகத் திகழ்கின்றன. மேலும், அவை வாழையடி வாழையென வாழ்ந்த ஆசார்யர்களின் வாய்மொழிகளை மறுக்காது அவற்றை

வளர்க்கும் நோக்கில், விவரிக்கும் போக்கில் எழுந்த உரைகளாகும். இதுவே மணவாள மாமுனிகளின் கருத்துமாகும். (உ.மா.பா. 34). எனவே, சீயரும் இறைவனுடைய பெருமையெல்லாம் தோற்றும் வகையில் அர்த்த பஞ்சக நோக்கில் உரை அமைத்தது குறிப்பிடத்தக்கது. தாம் கேட்ட முன்னோர் உரைகளைப் பொன்னேபோல் போற்றுதல் இவர்தம் இயல்பு. என்றாலும் திருவாய்மொழி உரை நோக்கு அர்த்த பஞ்சகமாக இவருக்கு அமைந்திருத்தலால் இவர் உரை முன்னோர் உரையினின்று சிற்சில இடங்களில் வேறுபடவும் காணலாம். இந்த வேறுபாட்டை மாறுபாடாகக் கருதாமல், முன்னோர் உரைகளில் விடப்பட்டனவற்றை நிலைக்கவும், விரித்துக் கூறியனவற்றைச் சுருக்கவும் சீயர் முயன்றுள்ளார் என்பது அவர்தம் உரைவழி மூலம் காணப்படுகிறது.

உரை வேறுபாடுகள் என்ற குறிப்பு இங்கு இவற்றையே கருத்தில் கொண்டதாகும். இத்தகு உரை வேறுபாட்டிற்கு, இராமாநுசர் இடம் தந்துள்ளதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.[26] இத்தகு வேறுபாடுகள் பின்வரும் நோக்கில் சீயர் உரையில் அமைந்துள்ளமை காணலாம்:

1. அர்த்த பஞ்சக நோக்கு
2. அவதாரிகை அமைப்பு நோக்கு
3. பாடல்களின் தோற்றுவாய் நோக்கு
4. சொல்லாட்சி பயன்படுத்திய நோக்கு
5. பாட பேதம்கொண்டு உரைவகுத்த நோக்கு
6. மேற்கோள் காட்டுவதில் வேறுபட்ட நோக்கு

### 8.14.1. ஐம்பொருள் (அர்த்த பஞ்சகம்)

நம்பிள்ளை தம் உரைக்கு அமைத்த மூன்று உரைப் பாயிரத்துள் முதல் உரைப்பாயிரத்தில் திருவாய்மொழி அர்த்த பஞ்சகத்தையே விளக்குவதாகத் தம்முடையவும் முன்னோருடையவும் கொள்கையாகப் பறைசாற்றியிருக்கிறார்.[27] மேலும் ஐம்பொருள்கள் உரை யெங்கும் பரந்து வரையப்பட்டதை உரைப்பாயிரத்திலேயே காட்டியும் உள்ளார்; ஆனால், சீயர் தாம் கொண்ட கோட்பாட்டிற்கேற்ப, ஐம்பொருளைத் திருவாய்மொழிப் பத்துக்களின் அடைவே வகுத்துக்கொண்டு உரை வழங்கிய வேறுபாடு குறிப்பிடத்தக்கது.[28] இத்தகைய வேறுபாட்டிற்குக் காரணம், பின்னோரும் கற்றறிந்து பிறர்க்குச் சொல்லவேணும் என்ற நோக்கத்துடன் உரைவகுத்தார் என்று அறியமுடிகிறது. மேலும் ஐம்பொருளின் ஆம்பொருளைக்

காட்டும் வகையில் இத்தகைய முறையைக் கொண்டார் என்னக் குறையில்லை.

8. 14. 2. அவதாரிகை அமைப்பு

சீயர் தம் உரையில் பத்துக்கள் தோறும் திருத்தமான முறையில் ஐம்பொருளை விளக்கும் வகையில் அவதாரிகைகளும் அமைத்துச் சென்றுள்ளார். இத்தகைய அவதாரிகைகள் இறைவனின் வெவ்வேறு இயல்புகளுக்கு ஏற்றவாறு இருக்கும் குணங்களையும் திருவிளையாடல்களையும் அறிய வழி வகுத்துள்ளன. அவதாரிகைகளில் அந்தந்தப் பதிகங்களின் ஒவ்வொரு பாடலிலுமுள்ள இறைவனின் வடிவு, குணங்கள், திருவிளையாடல்கள் முதலியவற்றை எடுத்துக்காட்டிச் சென்றது போல நம்பிள்ளை உரையில் அமையவில்லை. இருப்பினும் ஈட்டின் அவதாரிகைகளோடு உரையை ஒப்பிட்டுக் காணும்போது, பரந்து விரிந்த பொருள் சீயர் உரையில் காணாவிடினும், அர்த்த பஞ்சகத்தை நிலைநாட்டுவதற்காகவே, அவதாரிகைகளும் அமைந்துள்ளதைக் காண முடிகிறது.

சான்று :

''வைகுந்தா' (2 6) விற்கு நம்பிள்ளையும் சீயரும் அமைத்த அவதாரிகைகள் இறைவனுடைய பயத்தைப் போக்கினபடியைச் சொன்ன போதிலும், சீயர் ''இறைவனுடைய பயம் பிரிவில் பயம் என்று கொண்டு ஆழ்வார் தன் தாழ்ச்சியால் அகலத் தேடி இத்தைக் குலைக்கில் செய்வதென்?'' என்ற சந்தேகம் இறைவனுக்கு வந்ததாகக்கூறுகிறார். ஆனால்நம்பிள்ளை''அநாதிகாலம் எதிர்சூழல்புக்குத் திரிந்த வஸ்துவை ஒருபடி அடையப் (ப்ராபிக்க) பெறுவோமோ, இவர்தான் இனி நம்மை விடில் செய்வதென்?'' என்று சந்தேகம் கொண்டதாகக் கூறுவர். மேலும் ''நம்முடைய அளவில் இவன் ஆசை இருந்தபடி என்!'' என்று ஆழ்வாரின் அதிக மகிழ்ச்சியைக் காட்டிச் சீயர் அவதாரிகை அமைத்துள்ளார். ஆனால் நம்பிள்ளை, தன் பேறாக நினைத்து இறைவன் மகிழ்ச்சி அடைந்தான் என்று காட்டுகிறார். இவ்வகையில் சீயர் காட்டும் அவதாரிகையில் வேறுபாடு காணமுடிகிறது.

8. 14. 3. பாடல்களின் தோற்றுவாய்

பதிகங்களின் அவதாரிகையில் வேறுபாட்டை உணர்ந்தது போலவே பாடல்களின் அவதாரிகையிலும் சீயர் உரைத்த இடங்களில் வேறுபாட்டைக் காண முடிகிறது. இவை பெரும்பாலும்

பாடலின் முழுப்பார்வையில் அமைந்த அவதாரிகையாகவும்' பாடலின் பின் இரண்டடி கொண்டும், சிற்சில பாடல்களில் முன் இரண்டடி கொண்டும் அமைந்த அவதாரிகைகளாக உள்ளன. சில இறைவனின் குணநலன்களைப் பாட்டின் சொற் போக்கி லேயே தெரிவிப்பதாகவே அமைந்த தோற்றுவாய்களாக உள, ஈட்டில் இறைவனின் குணத்தைக் காட்டித் தோற்றுவாய் அமைத்த பாடல்களுக்குச் சீயர் இறைவனின் வடிவத்தைக் காட்டிப் பாட்டிலுள்ள தொடருக்குச் சேரத் தோற்றுவாயில் அமைத்துக் காட்டுகிறார். இவ்வாறு அமைந்த தோற்றுவாய் இறைவனின் குணம், வடிவு, திருவிளையாடல்கள் எவ்வெவ்விடத் தில் படிக்கப்பட்டுள்ளன என்பதைத் தெரிவிக்க வல்லன.

சான்றுகள் :

(1) 'உண்ணிலாவிய' (7.1) பதிகத்தின் ஒவ்வொரு பாடலி லும் அமைந்துள்ள இறைத் தன்மைகளைத் தோற்றுவாயில் காட்டியுள்ளார் சீயர். அதாவது, "விரோதி நிரஸனத்துக்கு ஏகாந்தமான ஸம்பந்தாதிகளையுடைய நீ என்று 'எண்ணிலாப் பெருமாயனே....ஆள்வானே" என்று முதல் பாடலின் பின் இரண்டடியின் பொருளைக் காட்டியுள்ளார். ஆனால் ஈட்டில் இப் பாடலுக்கு அமைந்த தோற்றுவாயைக் காணும் போது பாட்டின் முன் இரண்டடிகளைக் கொண்டு அமைத்ததாக உள்ளது.

(2) திருமேனியடிகளுக்கு (9.7.4) என்ற பாடலுக்குச் சீயர், "அழகாகவே அடிமை கொள்ளுமவர்க்கு என் தூதாய்ச் சென்று" 'உம்முடைய திருமேனியை அவளுக்கு உபகரிப்பீர்' என்று ஒரு வார்த்தை சொன்னால் உங்கள் ஸாருப்யத்தையும் தேசவாசத் தையும் தவிர்க்குமோ'' என்று சில மேகங்களைக் குறித்து வார்த்தை சொல்லுவதாகப் பாடலின் நான்கு அடிகளையும் கொண்டு தோற்றுவாய் அமைத்துள்ளார். ஆனால், நம்பிள்ளை உரையில் இப்பாடலுக்கு, "சில மேகங்களை நோக்கி, 'என் வார்த்தையை அவனுக்குச் சொன்னால் உங்களைத் தண்டிக் குமோ?" என்று குறிப்பிட்ட தொடர் கொண்டே தோற்றுவாய் அமைத்துள்ளார்.

### 8. 14. 4. சொல்லாட்சியைப் பயன்படுத்தல்

சீயர் உரையின் சொல்லாட்சியினை ஆராய்ந்து நோக்குங்கால் அவை ஆறுவகையாக அமைந்து விளங்குதல் காணப்பெறும். அவை :

1. பலபொருள் ஒரு சொற்கிளவி
2. பாடற் சொற்களைப் பிரித்தும் இணைத்தும் பொருள் காணல்
3. பாடலிலுள்ள கருத்தையே பின்தொடருக்குச் சேர்த்து உரைவகுத்தல்.
4. வடமொழிப் புலமையில் உரை வழங்குதல்
5. தத்துவ நோக்கில் பொருள் காட்டல்
6 இலக்கணப் புலமை

என்பனவாம்.

பலபொருள் ஒரு சொற் கிளவியாவது, ஒரு சொல்லுக்குப் பல பொருள் இருப்பினும், அதனுள் மற்ற வியாக்கியானங்களில் கையாளாத ஒரு பொருள் அந்த இடத்திற்கு ஏற்பப் பயன் படுத்திச் சீயர் உரைத்துள்ளார்.

எடுத்துக்காட்டாக, 'நற்பாலுக்கு உய்த்தனன்' (7 4.1) என்ற இடத்திற்கு 'நல்ல இடமான பரமபதத்திலே வைத்தான்' என்று பொருள் வழங்கியுள்ளார் 'பால்' என்பதற்கு அகராதி கூறும் பதினொரு பொருள்களில் இடப் பொருளில் சீயர் உரை வழங்கியது மற்ற வியாக்கியானங்களில் தன்மைப் பொருளில் காட்டியதை வேறுபடுத்தி யிருப்பதாகும். சீயர் வழங்கிய பொருளை ஆசாரிய இருதய நூலில் (ப 95) அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் குறிப்பிட்டுள்ளது நோக்கத் தக்கது.

சில இடங்களில் சீயர் பாடற் சொற்களைப் பிரித்தும் இணைத்தும் பொருள் காணும் நெறியும் கொண்டுள்ளார்.

'மார்வகலம்' (1.4.7) என்பதற்கு 'மார்வு-அகலம்' என்று பிரித்து 'மார்வத்திலே பெரிய இடத்தை' என்று சீயர் பொருள் வழங்கியுள்ளார். ஆனால் நம்பிள்ளை 'மார்வகலம்' என்று முழுச் சொல்லாகக் கொண்டு அகன்ற மார்பு என்றே கூறுவர்.

ஒரு பாடலிலுள்ள கருத்தையே பின்தொடருக்குச் சேர்த்து உரை வழங்குவதைச் சீயர் தம் உரையில் புலப்படுத்தியுள்ளார். இதனால் ஆழ்வாரின் எண்ணங்களின் தொடர்ச்சியை ஆழ்ந்து அநுபவித்து சீயர் உரை வழங்கும் நெறி காண முடிகிறது.

எடுத்துக்காட்டாக, 'கன்மமன்றெங்கள்' (6.2 7) என்ற பாடலில் 'நின்மலா' என்பதற்கு 'அதுதானே பயனாம்படியான ஒளியையுடையையாய்' என்று சீயர் உரைத்துள்ளார். இவ்விடத்தில் 'அதுதானே பயனாம்படி' என்று 'இப்பாட்டின் முதலடியில் வந்துள்ள 'கடல்ஞாலமுண்டிட்ட' என்பதன்

பொருளைச் சேர்த்து, 'அதுதானே பயனாம்படி' என்று சீயர் உரை நயம்பட உரைத்துள்ளார்.

சீயர் வடமொழி இலக்கணம் கொண்டும் ஆழ்வார் பாடல்களுக்குப் பொருள் வழங்கியுள்ள இடங்கள் உள.

எடுத்துக்காட்டாக, 'தேவர்கள்' (9.5.4) என்பதற்கு "நழுவுதலில்லாத ஞான ஒளியையுடைய நித்ய ஸூரிகள்" என்று பொருள் கூறுவர். வடமொழியில் தேவ சப்தத்திற்கு அதன் மூலமான திவு என்ற நாதுவினுடைய த்யுதி (-ஒளி) என்ற பொருளை முக்கியமாகக் கொண்டு நித்யஸூரிகள் தன்மைகளை வெளிக் காட்டும் வகையில் பொருள் வழங்கியுள்ளார். நம்பிள்ளை 'நித்ய ஸூரிகள்' என்றே குறிப்பிட்டுள்ளார்.

தத்துவ நோக்கிலும் சீயர் உரையில் பொருள் வழங்கிய இடங்கள் மலிந்துள்ளன.

'மாதவன் என்றென்று' (10.9.5) என்ற பாடலில் இத் தொடருக்குத் துவயத்தின் இரண்டு பாகத்தின் திரண்ட பொருள்களான பிராட்டியின் பெருமையைக் காட்டித் தத்துவ நோக்கில் உரை செய்துள்ளார்.

இவை மட்டுமல்லாமல் இலக்கணப் புலமை புலப்படும் வகையில் உரையிலிருந்து உணரும்படி அமைத்த இடங்களும் உள. சான்றாக, 'உன்து அருளே பிரியா' (5.8.7) என்ற இடத்தில் 'உன்னுடைய அருளை ஒருகாலும் பிரியாதபடி' என்று, 'அருள்' என்பதற்கு இரண்டாம் வேற்றுமைப் பொருளில் உரை வகுத்துள்ளார். ஆனால், மற்ற வியாக்கியானங்களில் 'அருளால்' என்று மூன்றாம் வேற்றுமைப் பொருளில் வழங்கியுள்ளனர்.

இவ்வாறு சொல்லாட்சியில் அறுவகை வேறுபாட்டின் அடிப்படையில் 241 இடங்கள் காண முடிகிறது. (பின் இணைப்பு 12) இத்தகைய உரைவேறுபாட்டிற்குக் காரணங்கள் ஆராய்ந்து காட்டப்பட்டுள்ளன.

### 8.14.5 பாடபேதம் கொண்டு உரை வகுத்தல்

சீயர் மேற்கொண்ட பாடங்களும், உரையால் உணர்ந்த பாடங்களும் தொகுத்துக் காணும்போது உரையின் தனித் தன்மை விளங்குவது காணலாம். (பின் இணைப்பு 8 காண்க)

### 8.14.6. மேற்கோள் காட்டுவதில் வேறுபாடு

இத்தலைப்பின்கீழ் சீயர் உரையில் கையாண்ட மேற்கோளைத் தொகுத்து வந்த இடங்களும், அவற்றில் மற்ற உரைகளில் காணாதவையும் சேர்த்துக் காணும்போது சீயரின் அறிவாற்றலும் கேள்விஞானமும் புலப்படுகின்றன. (பின் இணைப்பு 9 காண்க )

## 8.15. முன்னோர் சொல்லாமல் விட்டதைச் சொல்லல்

சீயர் தம் கேள்வி ஞானத்தைத் தெரிவிக்கும் வகையிலும், 'அவரவர் மதிநுட்பத்திற்கேற்பத் திருவாய்மொழிக்குப் பொருள் சுரக்கும்'[39] என்று கூறிய இராமாநுசர் நினைவை மெய்ப்பிக்கும் வகையிலும், மற்ற உரைகளில் சொல்லாமல் விட்ட நுண் பொருள்களைத் தம் உரையில் கூறிச் சென்றுள்ளார். இவை பெரும்பாலும் பாடற்சொற்களுக்கு முதற்பொருள் கூறிய பிறகு, இறுதியில் இரண்டாவதாகக் கூறும் பொருளாகவும், பாடற் சொற்களுக்கே மற்ற உரைகளில்லாத பொருள்கள் வழங்கினவாகவும், மற்றும் பாடபேதம் கொண்டு கூறியனவாகவும் அமைந்துள்ளன.

### 8. 15. 1. பாடற் சொற்களுக்கு முதற்பொருள் கூறிய பின்னர் இறுதியில் இரண்டாவதாகக் கூறும் பொருள்

சீயர் உரையில் சில பாடற்சொற்களுக்கு முதலாவதாகப் பொருள் கூறிய பின்னர், முன்னோரிடம் கேட்டதும், அவர்கள் சொல்லாமல் விட்டதும் தோற்றும் வகையில் 'என்றுமாம்', 'என்றும் சொல்லுவர்' என்று முடித்துள்ளார்

சான்றுகள் :

1. 'திறம்பாமல் மண் காக்கின்றேன்' (5.6.5) என்ற பாடலில் 'திறம்பாத கடல்வண்ணன்' என்றவிடத்தில் 'திறம்பாத' என்பதைக் 'கடல்வண்ணனுக்கு' அடைமொழியாக்கி, மற்ற உரைகளில் உள்ளபடியே, பொருள்கூறிப், பின்னர் 'திறம்பாத கடல்' என்று 'கரைகடவாத கடல் என்றுமாம்' என்று கடலுக்கு அடைமொழியாக்குகிறார். இது மற்ற உரைகளில் சொல்லாது விட்டதென அறியமுடிகிறது.

2. 'வல்வினை மாய்ந்தறச் செய்குந்தன்' (7.1.7) என்ற தொடருக்கு முதற்பொருள் கூறிய பிறகு, முடிவில் "விரோதியைப் போக்கும் குந்தமாகிற ஆயுதத்தை உடையவன் என்றும்

சொல்லுவர்'' எனத் தமது அறியாற்றலைப் புலப்படுத்தும் வகையில் உரைப்பர்.

3. 'கனியைக் கரும்பினின் சாற்றைக் கட்டியைத் தேனை யமுதை' (3.5.6) என்ற தொடருக்குப் பொருள் கூறிய பின்னர், ''கனியை என்று தொடங்கி, 'தேன்' என்றுமளவும், உண்பதாயும், குடிப்பதாயும், கறிப்பதாயும், நக்குவதாயுமுள்ள நால்வகை உண்ணும் தன்மையைச் சொல்லிற்றாகவுமாம்'' என்று சிறப்பாகப் பொருள் கூறுவர். இது மற்ற உரைகளில் சொல்லாமல் விட்டதாகும்.

## 8. 15. 2. மற்ற உரைகளில் சொல்லாதவற்றை முதற்பொருளாகவே காட்டல்

சீயர் தமது உரையில் சிற்சில பாடற் சொற்களுக்குப் பொருள் வழங்கியதை நோக்குங்கால் அவை பெரும்பாலும் மற்ற உரைகளில் காணப்படாதனவற்றைச் சுட்டியதாக அறிய முடிகிறது.

சான்றுகள் :

1. 'ஆயிரத்துள்' (1 4.11) என்பதற்கு உளநிலையை விளக்குவதான 'பாவபந்த ப்ரகாசகமான ஆயிரம்' என்று 'உள்' என்பதற்குப் பொருள் உரைப்பர். ஆனால் மற்ற உரைகளில் 'ஆயிரத்துள்' என்றே உள்ளது.

2. ''ஏற்றின் எருத்த மிறுத்தாய் மதிளிலங்கைக் கோவை வீயச் சிலைகுனித்தாய் குலநல்யானை மருப்பொசித்தாய்'' (4.3.1) என்ற தொடருக்கு இயற்கையான பொருள் கூறி, முடிவில் நுண் பொருளாக முறையே ''பிறவியின் ஏழு நிலைமையைப் போக்கினதையும், பத்துப் பொறிகளோடு கூடின கெட்ட மனத்தை அழித்ததையும், இறைவனை அடையத் தடையான அகங்கார மமகாரங்களைப் போக்கினதையும்'' என்று ஆழ்வார் மனத்தை மற்ற உரைகளில் சொல்லாது விட்டதன்கீழ் காணமுடிகிறது.

3. 'காரிமாறன் சடகோபன்' (4.5.11) என்பதற்குக் ''காரி என்று பேரான தந்தை உறவையுடையதாய், மாறன் என்னும் குடிப்பேரையுடைய ஆழ்வார்'' என்று பெற்றோர் உறவையும் குடிப்பெயரையும் காட்டி உரைப்பர் சீயர்

## 8. 15. 3. பாடபேதம் கொண்டு கூறல்

உரைவேறுபாட்டில் பாடபேத அடிப்படையும் முன்னர் குறிக்கப்பெற்றது. இங்கு முன்னோர் கூறாததைக் கூறியது

என்ற வேறொரு நோக்கில் பாடபேதம் சுருக்கமாகச் சுட்டப் பெறுகின்றது. எனவே கூறியது கூறலாகக் கொள்ளல் வேண்டா. பொருள் நயம் பற்றிச் சீயர் தமது உரையில் பாடங்களை மாற்றி உரைத்த இடங்கள் சில உள. இவை ஆறு மற்ற உரைகளில் சொல்லாமல் விட்டவையாகக் கருதப்படுவன. அவை :

1. 'இனைந்துநைந்தே' (7.9 9) என்று பாடமாய், 'இனைதல்-வருந்ததல்' என்றும் சொல்லுவாருமுளர். மற்ற உரைகளில் இத்தகைய பாடம் காட்டப்படவில்லை.

2. 'நினைந்துநைந்துள்' (1.5.1) என்ற பாடலிலும் 'நினைந்து' என்று முதலில் பாடங்கொண்டு பொருள்கூறிய பின்னர், இறுதியில் 'இனைந்து' எனனும் பாடம் உள்ளதாகக் கூறுவர்.

3. 'நீங்கநில்லா' (1.5.2) என்ற பாடலில் 'தேன்கொள் சோலை' என்ற பாடத்தைக் கொண்டு பொருள் கூறி, 'தேன் கொள் சோலை' என்றும் பாடமுள்ளதாகக் கூறுவர். இது மற்ற உரைகளில் சொல்லாமல் விட்டதாகக் காணமுடிகிறது.

4. 'அரியேறே' (5 5.4) என்ற பாடலில், 'எரியேய்' என்று பாடங் கொண்டு பொருள் கூறிய பின்னர், 'எரியே' என்று விளியாகப் பாடம் கொண்டதைக் கூறுவர்.

5. 'திறத்துக்கேய்' (5.8.7) என்று பாடங்கொண்டு, 'திறத்துக்கு ஏய்' என்று பிரித்து, 'இழிந்த காரிய வகைகளுக்குத் தக்கபடி (இழிந்த காரிய ப்ரகாரங்களுக்கு அநுருபமான) என்று பொருள் வழங்குவர். ஆனால் மற்ற உரைகளுக்கு 'திறத்துக்கே' என்றே பாடம்.

6. 'நாகத்தணையானை' (10 4.6) என்ற பாடலிலும் ஈற்றடியை 'பாகத்து வைத்தானைப் பாதம் பணிந்தேனே' என்று பாடம் சொல்லுவாருமுளராகக் கூறுவர்.

## 8. 15. 4. முன்னோர் சொல்லியவற்றை விவரித்தும் சுருக்கியும் உரைத்த இடங்கள்

முன்னோர் மொழிந்தனவற்றை முறை தப்பாமல் கேட்ட தன் வாயிலாகச் சீயர் உரையில், ஈட்டில் காட்டிய சொற்பொருள் விரிவாக அமைந்துள்ள இடங்களை, உரைநயம் பயக்கச் சுருக்கியும் விரித்தும் காட்டியுள்ளார்.

*சான்றுகள்:*

(1) 'பீடுடை நான்முகனைப் படைத்தானுக்கு' (6.6.4) என்ற தொடருக்கு நம்பிள்ளை, "பதினான்கு உலகங்களையும் படைக்கவல்ல (சதுர்த்தச புவநத்தையும் ஸ்ருஷ்டிக்கவல்ல) பெருமையையுடைய நான்முகனைப் படைத்தவனுக்கு (சதுர்முகனை ஸ்ருஷ்டித்தவனுக்கு)" என்று உரைப்பர் இதில் நான்முகனின் பெருமையைக் காட்டும் வகையில் சீயர் உரையில், "படைப்புக்குத் தக்க (ஸ்ரஷ்ட்ருத்வாநுருபமான) ஞானம் முதலான குணப் பெருமையையுடைய நான்முகனைப் படைத்தவனாய்" என்று விளக்கியுள்ளார்; விரிவாக்கி உரைத்துள்ளார். 'பீடு' என்பதற்குப் 'பெருமை' என்ற பொருள் நம்பிள்ளை கூறியதை விவரித்து ஞானம் முதலான குணப்பெருமையாகக் கூறுகிறார் சீயர்.

(2) 'என்நெஞ்சும் உயிரும் உள்கலந்த' (10.7 1) என்பதற்கு ஈட்டில் "நெஞ்சென்று உடலுக்கு (தேஹத்துக்கு) உபலக்ஷணம்; உயிரென்று ஆத்மா. ஒரு நீராகக் கலந்து; சரீரத்தோடு ஆத்மாவோடு வாசியற மூழ்கா (அவகாஹியா) நின்றான்" என்று உரைப்பர். இதனை நன்கு விளக்கும் வகையில் சீயர், "என் நெஞ்சுள்ளும் உயிருள்ளும் கலந்து" என்று 'உள்' என்பதை நெஞ்சொடும் சேர்த்து "உள்ளுறை காட்டுவாரைப் போலே என் நெஞ்சுக்குள்ளேயும் ஆத்மாவுக்குள்ளேயும்" என்று விரித்து உரை வழங்குவது குறிப்பிடத்தக்கது.

(3) 'என்னை ஆள்வாய்' (9.2 4) என்ற இடத்தில் நம்பிள்ளை, "என்னை அயோக்கியன்' என்று அகலவுமாட்டாதே, பிரிவாற்றாமையாலே முடியவுமொட்டாதே, குண அறிவாலே தரிப்பித்துக்கொண்டு போந்தாய்" என்று விரிவாகக் கூறுவர். இதனைப் பின்பற்றிச் சீயர் சொல்நயம் கொண்டு சுருக்கமாகத் தேர்ந்த பொருளைக் கூறுவர். அதாவது, "உன்னுடைய நீர்மை முதலான குணங்களை வெளிப்படுத்தி என்னை அடிமை கொண்டவனே" என்று பாட்டின் முதலடியிலுள்ள குணங்களைக் கொண்டு உரைவழங்கியது காணலாம்.

(4) "பேச நின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும் நாயகனவனே" (4.10 4) என்பதற்கு, "போலிப் பிரமாணங்களாலும் காரணப் பெயர்களாலும் 'ஈச்வரன்' என்று சந்தேகமாகச் சிவனுக்கும், அந்தச் சிவனைப் பிறப்பித்தவனாய்த் தன்னாலே படைக்கப்பட்ட பெரிய உலகையும் உண்டாக்கின பிரமன் தனக்கும், இவர்கள் ஏவிற்றுச் செய்யும் தேவர்களுக்கும், அவர்கள் கீழ் அடங்கிய உலகை ஆளுபவனாய்க் கொண்டு தலைவ

னானவன்'' என்று அந்தந்த இடத்திற்கு ஏற்ப அடைமொழி தந்து சீயர் உரை வழங்குகிறார். இவ்வாறு வழங்குவது பெரும் பாலும் ஈட்டில் விரித்துச் சொன்னவற்றைச் சுருக்கிச் சீயர் வகுத்துள்ளார்.

## 8. 16. மற்ற உரைகளில் காட்டப்படாமல் சீயர் காட்டியுள்ள மேற்கோள்கள்

'மேற்கோள் விளக்கம்' என்ற தலைப்பின்கீழ் சீயர் உரையில் எடுத்தாளப்பட்ட வடமொழி நூல்கள் இருபத்தெட்டும், அவற்றை 285 இடங்களில் சுட்டிக்காட்டியது பற்றியும் மேலே விரிவாகக் காட்டப்பெற்றன. இவற்றில் சீயர் 198 இடங்களில் எடுத்தாண்ட மேற்கோள் தொடர்கள், குறிப்பாக ஈட்டிலோ, இருபத்து நாலாயிரப் படியிலோ சொல்லாது விட்டவையாக உள்ளன. (பின் இணைப்பு-9) இவ்விடங்களை மற்ற உரைகளோடு ஒப்பு நோக்கில் சிற்சில இடங்களில் சீயர் காட்டிய ஒரே நூலில் ஒரு சுலோகத் தொடரைக் கொண்டு மேற்கோள் காட்டியிருந்ததும், மற்ற உரைகாரர்கள் வேறு சுலோகத்தின் தொடரைக் காட்டி உரை வழங்கி பதுங் காணலாம் இவையல்லாமல் மற்ற உரைகாரர்கள் மேற்கோளே பயன்படுத்தாத விடங்களில் சீயர் வடமொழி நூல்களிலிருந்து மேற்கோள் இடத்திற்கேற்பக் காட்டிப் பொருள் நிறுவுகிறார்.

*சான்றுகள்:*

1· 'நாணும் நிறையும் கவர்ந்து (5.8.9) என்ற பாடலில் 'சேணுயர்' என்பதற்கு 'விச்வத: ப்ருஷ்டேஷு ஸர்வத: ப்ருஷ்டேஷு' என்ற சாந்தோக்கிய உபநிடதத் (3.13) தொடர் கொண்டு பொருள் விளக்கம் தருகிறார். அதாவது, "தனித்தனியாகப் படைத்த பொருள்களுக்கும் கூட்டாகப் படைத்த பொருள்களுக்கும் மேலே என்கிறபடியே மிகவும் உயர்ந்த'' என்று பரம பதத்துக்கு அடைமொழி காட்ட இந்த உபநிடதத் தொடர் கொண்டு விளக்குகிறார். ஆனால் இந்த மேற்கோள் இப்பாட்டில் மற்ற உரைகளில் இல்லாததாம்.

2. 'திருமேனி யடிகளுக்குத் தீவினையேன் விடு தூதாய் (9.7.4) என்ற பாடலில் 'திருமேனி யடிகளுக்கு' என்ற இடத்தில் 'ரூபமேவ அஸ்ய ஏதத்மஹிமானம் வ்யாசஷ்டே' என்ற வடிவு தானே ஸர்வாதிகத்வ ப்ரகாசமான சேஷித்வத்தை யுடையவர்க்கு' என்று வேத காண்டத்திலிருந்து (ய.வே ப்ர.1, பஞ்சாதி) மேற்கோள் காட்டி, இறைவனுடைய வடிவழகை விளக்குகிறார். அதாவது, "இந்த இறைவனுடைய இந்தத் திருமேனியே இவரு

டைய பெருமையை நன்றாகச் சொல்லுகிறது" என்று, "வடிவு தானே எல்லாரைக் காட்டிலும் உயர்ந்தவனாம் தன்மையை வெளிப்படுத்துவதான தலைவனாம் தன்மையுடையவர்க்கு" என்று பொருள் வழங்கியுள்ளார். மற்ற உரைகளில் குறிப்பாக ஈட்டிலும் இருபத்து நாலாயிரப் படியிலும் வேறு நூலிலிருந்து மேற்கோள் காட்டியது அறியலாம்.

## 8.17. தனக்கேயுரிய பாடம் காட்டல்

சீயர் உரையினைப் பயிலும்போது அவரது உரையால் அவர் மேற்கொண்ட பாடம் புலப்படுகின்றது. அவ்வாறு மேற்கொண்ட பாடல்களைக் காணும்போது அவை பெரும்பாலும் முன்னோர் மேற்கொண்டனவற்றைத் தழுவியும், மற்றும் அவர்கள் சொல்லாதனவற்றைப் பொழிப்புரை முடிவில் 'என்றும் பாடம் சொல்லுவர்' என்று காட்டியும் உள்ளார். இவையல்லாமல் தமக்கே யுரிய பாடமும் பயன்படுத்திய இடங்களும் உள்ளன. உரையின் தனித்தன்மை என்ற போக்கில் காணும்போது சீயர் அமைத்துக் கொண்ட உரிய பாடங்கள், அவர்தம் பெரிய அறிவாற்றலை அரண் செய்வனவாக உள்ளன.

சான்று:

"அண்ணல் மாய னணிகொள்செந் தாமரைக்
கண்ணன் செங்கனி வாய்க்கரு மாணிக்கம்
தெண்ணி றச்சுனை நீர்த்திரு வேங்கடத்து
எண்ணில் தொல்புகழ் வானவ ரீசனே" (3 3.3)

என்ற பாடலில் மூன்றாவதடியில் 'தெண்ணிறச் சுனைநீர், என்று பாடம் கொண்டு உரை வழங்குவார். ஆனால் மற்ற உரைகளில் 'தெண்ணிறைச் சுனைநீர்' என்றே உள்ளது. சீயர் மேற்கொண்ட பாடத்தின் பொருளைக் காணும்போது, 'அவன் தன் நிறம்போலே தெளிந்து பிரகாசமான நிறத்தையுடைய சுனை நீரை யுடைத்தான,' என்று கூறுவது அச்சொற்களுக்கு முன் செங்கனிவாய்க் கருமாணிக்கம்' என்ற தொடரால் இறைவனின் வாயின் நிறத்தையும், திருமேனியின் நிறத்தையும் கூறுகிறார், அதனைச் சேர்த்து வழங்கவே, 'தெண்ணிறச் சுனைநீர்' என்று தமக்கே உரிய பாடம் கொண்டு நீரின் நிறத்தையும் காட்டி உரைக்கிறார்.

### முடிவுகள்

1. சீயரின் இருமொழிப் புலமை நன்கு விளங்குகிறது. திருவாய்மொழிப் பாசுரங்களை மேற்கோள் காட்டி

இறைவன் தன்மைகளையும், ஆழ்வார் இயல்புகளையும் தெரிவிக்கிறார்: இஃது அவரது தமிழ்ப் புலமையைக் காட்டுகிறது.

இறைவன் தன்மை, அவதாரச் சிறப்பு ஆகியவற்றைக் கூறும்போது வடசொற்களோடு தமிழ் வேற்றுமை உருபுகளைச் சேர்த்து வழங்குகிறார். இஃது அவரது வடமொழிப் புலமையைத் தெரிவிக்கிறது.

2. அவதாரிகைகளிலும், அவற்றை விளக்க எழுந்த பாடற் பொழிப்புரைகளிலும் இறைவன் தன்மை, வடிவு, குணம் ஆகியவற்றை உணர்த்துமிடங்களிலும் வடமொழிச் சொற்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

தத்துவப் பொருள் விளக்கம் தருமிடங்களில் இவரது வடமொழிப் புலமை விச்சு நன்கு வெளிப்படுகிறது.

3. இவ்வுரை விளக்கமுறைத் திறனாய்வு வகையைச் சார்ந்தது.

4. முன்னைய உரையாசிரியர்களின் உரையினைச் சில இடங்களில் தழுவியும், சில இடங்களில் தம் கருத்துக்களைச் சேர்த்து விரித்தும், சில இடங்களில் அவர்கள் இரண்டாவதாகச் சொல்லியுள்ள பொருள்களுக்கு முதன்மை தந்தும் உரை வரைந்துள்ளார்.

5. ஐம்பொருள்களின் விளக்கமாகத் திருவாய்மொழி அமைந்திருத்தலை விளக்கும் முறை தனிச்சிறப்பாக அமைந்துள்ளது. இறையியல்பு, ஆன்ம வியல்பு, தக்கநெறி, விரோதியியல்பு, பேறு ஆகியன முறையே இரண்டிரண்டு பத்துக்களில் விளக்கப்படுகின்றன என்பது இவரது கருத்தாகும்.

6. முன்னோர் பொருளாட்சிகளைப் பின்பற்றி உரைவரையும் இடங்கள் இவருடைய ஆசாரிய பக்தி, மதிப்பு, பெருமை ஆகியவற்றைக் காட்டுகின்றன.

7. வேதம் முதலாகத் தோத்திர நூல்கள் ஈறாகப் பல வடநூல் மேற்கோள்கள் உரையில் ஆங்காங்கே காட்டப்பட்டுள்ளன. இவை ஆழ்வார் பாசுரங்களில் மறைந்துள்ள மறைப் பொருள்களை வெளிபடுத்துகின்றன.

8. ஆழ்வாரின் அநுபவச் சொற்கள் சீயர் உள்ளத்தை மலரச் செய்ய, அச்சொற்களின் பொருளைக் கொண்டு அவதாரிகைகளைச் சீயர் சிறப்புற அமைத்துள்ளார்.

9. தொகுத்துச் சுட்டல், ஆழ்வார் சொற்களுக்கு அடைமொழி தந்து பொருள் கூறுதல், அடைச்சொற்களை விரித்துப் பொருள் கூறுதல், பதிகங்களின் இறுதிப் பாசுரத்தில் வரும் 'ஆயிரத்து' என்னும் சொல்லுக்குச் சிறப்பான விளக்கம் தருதல் ஆகியன உரையாசிரியரின் நுண்மான் நுழைபுலத்தைக் காட்டுகின்றன.

10. ஈட்டின் தொடர்களை விளக்க எழுந்தது அரும்பதவுரை. அதில் ஈட்டின் தொடர்களைத் தெளிவுபடுத்த சீயர் உரைப் பகுதிகள் சுட்டப்படுகின்றன. இதனால் மற்ற உரைகளை அறிய இவ்வுரை வாயிலாக அமைந்து உதவுகிறது

11. பிறவுரைகளிலிருந்து இவ்வுரை வேறுபடும் இடங்களை நோக்கும்போது, இது பொழிப்புரையாக அமைந்த ஒன்று என்பதும், பின்பு பதவுரையாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது என்பதும் தெளிவாகின்றன. தெலுங்கு லிபியில் அமைந்த பதிப்பில் பொழிப்புரையாகவே காணப்படுவது இதனை வலியுறுத்துகிறது.

12. சீயர் சில பாசுரங்களுக்கு முன்னோர் கூறாத புதிய பொருள்கள் கூறியுள்ளார். சில இடங்களில் வேறு பாடங் கொண்டும் உரை வரைந்துள்ளார். புதிய மேற்கோள்கள் இடம்பெற்றுள்ளன. இவை இவரது பெரிய போதத்தை நிறுவும் சான்றுகள் ஆகும்.

## இயல் 8

### குறிப்புகள்

1. 4.4. அவதாரிகை
   1. இரண்டு செல்வங்களையுடைமை (விபூதித்வயயோகம்)
   2. எல்லாராலும் அடையப்படும் தன்மை (ஸர்வ ஸமாச்ரயணீயத்வம்)
   3. வெப்பமாயும் குளிர்ச்சியாயும் இருக்கும் தன்மை (ப்ரதாபநுக்ரஹவத்தை)
   4. குளிர்ச்சியான திருமேனிச் சிறப்பு (ச்ரமஹரமான விக்ரஹ வைலக்ஷண்யம்)
   5. காப்பதன் பொருட்டு மூளுகை (ரக்ஷணார்த்த ப்ரவ்ருத்திகள்)
   6. அநுபவிக்கத்தக்க திருவிளையாடல்கள் (அநுபாவ்ய சேஷ்டிதங்கள்)

7. மேன்மைத் தன்மைக்குரிய அடையாளங்கள் (பரத்வ சிஹ்நங்கள்)
8. அன்பாயிருக்கும் தன்மை (ஆதரணீயத்வம்)
9. உதவி செய்யும் தன்மை (உபகாரவத்தை)
10. கண்ணுக்கு இலக்காம் தன்மையின் பெருமை (ஸௌலப்ய பாரம்யம்)

2. Helen Gardner, The Business of Criticism, p. 10

3. Waison George, The Literary Critioism, pp. 11-15,

4. தொல். பொருள். இளம். 57, 58, 88, 200, 298, 299, 300, 305.

5. இ. சுந்தரமூர்த்தி, 'பரிமேலழகர் திருக்குறள் உரைத் திறன்', ப. 160.

6. மேலது, ப. 160.

7. மு. அரவிந்தன், 'உரையாசிரியர்கள்', ப.

8. குருபரம்பரைப் பிரபாவம்
நாதமுனிகள், ப. 119, 122, 124.
உய்யக்கொண்டார், ப. 126—127.
மணக்கால்நம்பி, ப. 127, 129, 135, 137, 150, 155.
இராமாநுசர், ப. 172.
திருமலைநம்பி, ப. 185.
எம்பார், ப. 187, 188, 190, 191, 198, 199, 201.
உடையவர் வாய்மொழி, ப. 207, 214, 287, 295.
பிள்ளான், ப. 528.
பெரிய திருமுடியடைவு, பக். 565—599.
யதீந்திரப் பிரவணப் பிரபாவம், பக். 18—19.

9. இரா. அரங்கராசன், 'நம்பிள்ளை சுட்டுத் திறன்', ப. 35.

10. இராமாநுசர் பொருளாட்சிகள்: 17 இடங்கள்.
1. அறியாமாமயத்து....வைத்தாயால் (2.3.3)
2. அவதாரிகை (2.7.5)
3. அந்தாமம் வாழ்முடிசங்கு ஆழிநூலாரம் உள (2.5.1)
4. 'இளரொளி இளமை' அவதாரிகை (2.10)
5. கருமவன் பாசம் கழித்துழன்றுய்யவே (2.10.4)
6. இனிவந்து கூடுவன் (3.2.1)
7. என்றுன்று நாமிருந்து...மேவுதுமே(3.2.1)

8. கடங்கள்மேல் வினைமுற்றவும் வேம் மெய் (3.3.6)
9. ஆதுமோர் பற்றிலாத (3.4.10)
10. தேவார் கோலத்தொடும்....அடியேனொடுமானான் (5.1.9)
11. நின்றவாறும் இருந்தவாறும் கிடந்தவாறும் (5.10.6)
12. என்னையும் உளன் என்மின்கள் (6 1.10)
13 மூவுலகாளியே, கடிகமழ்கொன்றைச் சடையனே, நான்முகக் கடவுளே (7.2.10)
14. அடியடையாதாள்போல் இவள் அணுகி அடைந்தனள் (7.2.10)
15. இதுவல்லால் பொருள்தானெனில் மூவுலகும் பொருளல்ல (8.7.3)
16. புகழும் செழும்கதிர் ஆழி முதலாகப் பொருபடை (8.9.3)
17. அருள் பிழைக்கின்றது என்று பேதுறுவேனே (6.4.3)

11. பட்டர் பொருளாட்சிகள்:

1. பற்றிலனீசனும்...(1.2.6)
2. புரிவதுவும் புகைபூவே (1.6.1)
3. தீது அவமின்றி ஏதமிலுரைத்த (1.6.11)
4. ஓடும் புள்ளேறி பதிகம் அவதாரிகை (1.8)
5. பொருமா நீள்படை பதிகம் அவதாரிகை (1.10)
6. இவள்அரக்கும் மெழுகும் எரியணை ஒக்கும் (2 4.3)
7. தேவும் தன்னையும் (2.7.4)
8. சிரீதரன் செய்ய தாமரைக்கண்ணன்.... இருடீகேசன் (2.7.9)
9. வாழ்த்துவார் பலராக (3.1.7)
10. மாசூணா...மழுங்காதே (அவதாரிகை) (3.1.8)
11. சொல்மாலைகள் சொல்லுமாறு அமைக்கவல்லேற்கு (4.5.8)
12. என்கொள்வன்...கண்ணனே (5.1.4)
13, இரைக்கும் கருங்கடல் வண்ணன் (5.3.11)
14. ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய் (5 7.10)
15. பணியின் திருவருள் (4.1.5)
16. போழ்துபோக உள்ளகிற்கும் புன்மை இலாதவர்க்கு (9-1-9)
17, மதியாலே (8.7.9)

18. தமைநல்ல வின்பம் தலைப்பெய்து எங்கும் தழைக்கவே (9.5.10)

12. ஆளவந்தார் பொருளாட்சிகள்

1. தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதுமொத்தே (2.3.1)
2. மேவித்தொழுதுய்மின் (5.2.8)
3. என்னையும் உளன் என்மின்களே (6.1.10)
4. மெய்மேல் வினை (3.3.6)
5. அருள்பிழைக்கின்றது என்று பேதுறுவனே (9.4.3)

நஞ்சீயர் பொருளாட்சிகள்

1. பெருநிலங் கடந்த நல்லடிப்போது...வணங்குவன் (1.3.10)
2. நாடாத மலர்நாடி (1.4.9)
3. சிந்தை மற்றொன்றின் — அவதாரிகை (7.10.10)
4. என்னே என்பாருமில்லை (9.1.3)
5. ஆருயிர் பட்டது (9.6.9)

எம்பார் பொருளாட்சிகள்

1. ஆக்கை விடும்பொழுதெண் (1.2.9)
2. தவளவண்ணர் தகவுகளே (2.4.5)
3. அவ்வல்லல் எல்லாம் (3.2.10)
4. வீடும் தரும் நின்று நின்றே (3.9,9)
5. நண்ணாதார் முறுவலிப்ப பதிகம் முழுவதும் (4.9)

பிள்ளான் பொருளாட்சிகள்

1. ஒட்டுவேனோ (1.7.6)
2. நெடுமாலே என்று கூவும் (4.4.4 )
3. எண்ணிலாப் பெருமாயனே (7.1.1)
4. மங்கிய அருவாம் நேர்ப்பம் வான்புலனிறந்ததும் நீயே (8.1.6.)
5. நல்நாடு (8 5.2)
6. தவம் செய்திலா விளையாட்டியேன் (9.5 3)

13. கூரத்தாழ்வான் பொருளாட்சி

1. பிறந்தவாறும் (அவதாரிகை முடிவில்) (5.10)

முதலியாண்டான் பொருளாட்சி

1. நெஞ்சினால் நினைப்பான் யவன்
அவனாகும் நீள்கடல்வண்ணன் (3.6.9)

உய்ந்தபிள்ளை பொருளாட்சி

1. பச்சிலைநீள்கமுகும் பலவும் தெங்கும் வாழைகளும் (5.9.4)

சொட்டைநம்பிகள் பொருளாட்சி

1. தன்தனக்கு (4.5.7)

சிற்றாட்கொண்டான் பொருளாட்சி

1. தெளிவிசும்பு திருநாடாத் தீவினையேன் மனத்துறையும் (9.7.5)

பிள்ளை திருநறையூர் அரையர் பொருளாட்சி

1. நீசனேன் நிறை ஒன்றுமிலேன் (3.3.4)

வங்கிப்புரத்து நம்பி பொருளாட்சிகள்

1. மேகலையால் குறைவில்லா (4.8.9)
2. பால துன்பங்கள்.... (7.2.7)

பிள்ளை அமுதனார் பொருளாட்சி

1. அம்மான் ஆழிப்பிரான் அவன் எவ்விடத்தான் யானார்? (5.1.7)

14. அம்மாள் பொருளாட்சிகள்

1. தொல்லருள் நல்வினையால் சொலக்கூடுங்கொல் (5.9.10)
2. ஊளி எழ (7.4.4)
3. அல்லல் என்னும் இருள் சேர்தற்கு உபாயம் என்னே (8.5.5)

15. முன்னோர்கள் பொருளாட்சிகள்

1. நிலைவரம்பில (1 3 2)
2. என்கொள்வன் உன்னை விட்டென்னும் (5.1.4)
3. துவளில் மாமணி-அவதாரிகை (24 படி) (6.5)
4 பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல்

16. தெலுங்கு எழுத்தில் பதிப்பான பகவத் விஷயப் பதிப்பிலும், 1925-26ல் (குரோதன வருடம்) ஸ்ரீமான் புதுப்பட்டு திருவேங்கடாசாரியரால் பதிப்பிக்கப்பட்ட பகவத்விஷய புத்தகங்களிலும் சீயர் உரைக்கண் அமைந்த மேற்கோள் நூல்களும் இடங்களும் இடம் பெறுகின்றன. முதல் எழு பத்துக்கள் வரையில்தான் இரண்டாவது பதிப்பில் உள்ளன; மற்றவை பெரியோர் வாயிலாகவும், தெலுங்கு எழுத்துப் பதிப்பின் மூலமாகவும் அறிய முடிந்தது.

17 வா.ரா., சுந்தர காண்டம், 39-30.
18 வா. ரா., யுத்தகாண்டம் 120-13.
19. வெறியோடி—ஒன்றும் தெரியாமல் திகைத்து (4.1.2)
20 துளும்புதல்—நிரம்புதல்/துளித்தல் (4.4.10)
21. முட்டக்கண்டு—பூர்த்தியாகக் கண்டு(5.6.7)
22. சிலாம்பித்து—முகந்துகொண்டு(6 1.8)
23. பிள்ளைலோகஞ்சீயர், ஸ்ரீயதீந்த்ர ப்ரவண ப்ரபாவம், ப.93.
24. அடையவளைந்தான் அரும்பதமும், சீயர் அரும்பதமும்.
25. பிள்ளைலோகஞ்சீயர், திருவாய்மொழி நூற்றந்தாதி.
பாடல் 34.
26. குருபரம்பரா ப்ரபாவம், 6 படி, ப. 359.
27. திருவாய்மொழி ஈடு மகாபிரவேசம், புதுப்பட்டு
திருவேங்கடாசாரியார் (ப.ஆ), ப.33,
28 12 படி, அவதாரிகை, புதுப்பட்டு திருவேங்கடாசாரியார்
(ப.ஆ), பக் 8—9.
29. மேலது எண் 26 காண்க.

# முடிவுரை

இந்த ஆய்வினால் பன்னீராயிரப்படி உரையாசிரியரான வாதிகேசரி அழகிய மணவாளச் சீயரின் "தம்பெரிய போதம்" பற்றிய பின்வரும் முடிபுகள் கண்டறியப் பெற்றன.

அ. சீயர்தம் பெரிய போதம்

1. காலங் கடந்து கற்றாலும் ஒருவர் ஒரு துறையில் நிறை ஞானமுடைய அறிஞராகக் கூடும் என்பதற்குச் சீயருடைய வாழ்வும் பணியும் ஒரு நல்ல எடுத்துக் காட்டாகும்.

2. தமிழ்மொழி, வடமொழி ஆகிய இருமொழிகளிலும் சீயர் புலமை பெற்று இருக்கிறார். வைணவ தத்துவத்தில் சீயர் வல்லவராக விளங்குகிறார்; விளக்க முறைத் திறனாய்வில் இவ்வுரையை அமைத்துள்ளார்.

3. ஐம்பொரு ளடிப்படையில் ஆழ்வார் பாடலுக்கு இவர் உரை வகுத்துள்ளதிலிருந்து ஆழ்வார் அகக்கிடக்கையை இவர் ஆழ்ந்து உணர்ந்தமை புலப்படுகிறது.

4. பிறருரைகளை விளக்கவும் தெளிவு செய்யவும் இவர் உரை பயன்படுவதிலிருந்து இவர்தம் பெரும்புலமை பெறப்படும்.

5. தொகுத்துக் கூறல், ஆழ்வார் சொற்களுக்கு அடை மொழி தந்து பொருள் கூறுதல், அடைச்சொற்களுக்கு மேலும் அடைமொழி தந்து சிறப்பாகப் பொருள் கூறல், பதிகங்களின் இறுதிப் பாசுரத்தில் வரும் 'ஆயிரத்து' என்னும் சொல்லுக்குச் சிறப்பான விளக்கம் தருதல் ஆகியன சீயரின் நுண்மான் நுழைபுலத்தை விளக்கு வனவாக அமைந்துள.

6. முன்னோர் உரையைத் தழுவியும், விளக்கியும், அன்னார் கூறாத புதுப்பொருள் சில கூறியும், புதிய

பாடங்கொண்டு உரைவகுத்தும், புதிய மேற்கோள் கொண்டு தெளிவு செய்தும் இவர் தம் பெரிய போதத்தை இவ்வுரையுள் புலப்படுத்துகிறார்.

ஆ. உரையின் தன்மை

1. சீயர் உரை பதவுரையோடு கூடிய பொழிப்புரை. இதனால் இது பிற திருவாய்மொழி உரைகளினின்று வேறுபடுகிறது; தனிச்சிறப்புப் பெறுகிறது

2. இவ்வுரை திருவாய்மொழிக்குரிய பிற உரைகளை நன்கு விளக்கிக்கொள்ள உதவும் கருவி நூலாகவும் திகழ்கிறது.

3. திருவாய்மொழி உரைகளுள் இவ்வுரைக்குப் பின் வேறு எவ்வுரையும் தோன்றாமையும் இதன் சிறப்பை உணர்த்தும்.

4; சீயர் உரை அர்த்த பஞ்சகத்தை ஆழ்வார் பாடல் வழி உணர்த்த வல்லதாக அமைந்துள்ளது. இவர் உரை தொகுதி நோக்கு, பகுதிப் பார்வை முதலிய வகைப் பாடுகளைக் கொண்டு அமைந்துள்ளது.

5, ஆழ்வார் பாடல் தொடர்களைக் கொண்டும் வடமொழி, தமிழ் மேற்கோள்களினாலும் ஆழ்வார் பாடல்களைத் தெளிவு செய்து இவ்வுரை அமைகிறது.

6. வேத, உபநிடத, இதிகாச, புராணச் செய்திகள் இவ்வுரைவழி விளக்கம்பெறக் காணலாம்.

7, ஆழ்வாரின் உள்ளக் கிடக்கையைப் பெரிதும் புலப் படுத்துவது இவ்வுரையில் தனித்தன்மைகளுள் ஒன்றாகும்.

8. இவ்வுரைவழி உரைப்பாயிரம் முதலிய பத்தொன்பது உரை உத்திகளைக் கண்டறிய முடிகிறது.

9. வைணவ சமய மும்முறைகளை, ஐம்பொருள்களை, இறைவனின் ஐவகை நிலைகளை இவ்வுரை சிறப்பாகத் தொகுத்து விளக்குகிறது.

10. ஆழ்வார் தொடர்களுக்கு முன்னோர் காணாத புதுப் பொருள் தருதல், ஆழ்வார் சொற்களுக்கு அடைபிடுதல், ஆழ்வார் தந்த அடைசொற்களுக்குச் சிறப்புப் பொருள் வழங்குதல், சொற்களை முன்பின்னாக மாற்றி

அமைத்தல், இடைச்சொற்களுக்குச் சிறப்புப் பொருள் தருதல், உணர்ச்சிகளைக் குறிப்பாக உள்ளடக்கிய சிறு தொடர்களை விரிவாக விளக்குதல், ஆழ்வாரின் ஆர்வ வளர்ச்சிக்கு ஏற்ப அடுக்கடுக்காக வினா பல எழுப்புதல், ஈடான அருஞ்சொற் பொருள் குறித்தல், ஆழ்வாரின் பாடலில் பொதிந்து கிடக்கும் இதிகாச, புராண, வடநூல் கருத்துகளைப் புலப்படுத்துவதோடு பொருந்தும் மேற்கோள் கொடுத்தல், நுண்பொருளை உவமைகளால் உணர்த்துதல், பண்டைய பழக்க வழக்கங்களை—பண்பாடுகளைப் பொதிய வைத்தல், பாடபேதம் சுட்டுதல் ஆகிய பதின்மூன்று வகையான உரைநயங்கள் இவ்வுரையின்பால் அமைந்துள்ளன.

மேலும் இந்த ஆய்வு, பொதுவாக உரைநெறிகள், உரை உத்திகள், உரையமைப்பு முதலான பிற ஆய்வுகளும், சிறப்பாக வைணவ உரைகள், ஆழ்வார் பாடல்களில் வைணவம், திருவாய் மொழித் திறன் முதலானவற்றுக்கும் பயன்பெறும்.

அன்றியும், இதுபோல, இராமாநுசர் பேரருளால் முதல் வியாக்கியானமாகத் திருக்குருகைப்பிரான் பிள்ளானால் செய்யப் பட்ட இன்பம் மிகுதியான ஆறாயிரப் படியை ஆய்வு செய்யவும், பட்டரின் நல்லருளால் நஞ்சீயர் ஓர் ஆயிரமான திருவாய் மொழிக்கு ஒன்பதாயிருக்கும்படி அமைத்த ஒன்பதினாயிரப்படி யின் திறன் அறியவும், நம்பிள்ளையின் நல்லருளால் இராமாயண சுலோகங்களின் எண்ணுக்கு ஒப்பாக அமைந்த இருபத்து நாலாயிரப் படியின் பொருள் பற்றியும், அதனை இயற்றிய பெரியவாச்சான் பிள்ளையின் அறிவுத் திறன் பற்றியும் ஆய்வு செய்யவும், தெளிந்த தெளிவை உண்டுபண்ண வல்ல செப்பு நெறியை வடக்குத் திருவீதிப்பிள்ளையால் வெளிக்கொணர்ந்த நம்பிள்ளையின் முப்பத்தாறாயிரப்படி என்னும் ஈட்டின் திறன் அறியவும் இவ்வாய்வு துணைசெய்யவல்லது.

பின்னிணைப்பு : 1

# பழநடை விளக்கம்

## குருபரம்பரை அடைவு




*74 சிம்மசேனாதிபதிகளுடைய வம்சத்தவருக்குத் தனித் தனியே உடையவர் தொடங்கி ஆச்ரயண குருபரம்பரை இருக்கிறது.

| | | | |
|---|---|---|---|
| மணக்கால்நம்பி | பிள்ளைலோகாசாரியார் | நம்பிள்ளை | நாயனாராச்சான் பிள்ளை |
| ஆளவந்தார் | | | |
| பெரியநம்பி | கூரகுலோத்தம தாஸர் | வடக்குத் திருவீதிப் பிள்ளை | |
| உடையவர் | திருவாய்மொழிப் பிள்ளை | ஈயுண்ணி மாதவர் | வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் |
| எம்பார் | பெரியசீயர் | ஈயுண்ணிப் பற்பநாபர் | வாதிகண்டீரவர் |
| பட்டர் | | கோலவராக நாயனார் | முதலானோர் |
| நஞ்சீயர் | | நாலூர் தேவராஜர் | |
| நம்பிள்ளை | | திருவாய்மொழிப் பிள்ளை | |
| வடக்குத்திருவீதிப் பிள்ளை | | பெரியசீயர் | |
| லோகாசாரியர் | | | |
| திருவாய்மொழிப் பிள்ளை | | | |
| பெரியசீயர் | | | |

**பின்னிணைப்பு : 2**

## திருவாய்மொழி

சீயரின் உரை காட்டும் அர்த்த பஞ்சக அடைவு

| | |
|---|---|
| அர்த்த பஞ்சகத்துள் நிலையான கூறுகள் | அர்த்த பஞ்சகத்துள் பெறவேண்டிய கூறுகள் |
| முதல் ஐந்து பத்துக்கள் | மேல் ஐந்து பத்துக்கள் |
| இறையியல்பு, உயிரியல்பு, உபாய இயல்பு | உபாயத்தை வரித்தல், தடை அழிகை, விருப்பத்தைப் பெறுதல் |

| இவை நித்யம் | இவை சாதித்துப் பெற வேண்டியவை |
| --- | --- |
| முதலிரண்டு பத்துக்கள் — இறைவனைப் பற்றியன | ஆறாம்பத்து — உபாயத்தை வரித்தல் |
| மூன்று நான்கு பத்துக்கள் — சீவாத்மாவைப் பற்றியன | ஏழு, எட்டு பத்துக்கள் — தடைஅழிதல் |
| ஐந்தாம்பத்து—எப்போதும்உள்ள உபாயத்தின் இயல்பு | ஒன்பது,பத்து பத்துக்கள் -விருப்பத்தைப் பெறுதல் (வீடுபேறு) |

*ச்ரீபதி: சேதநஸ்யாஸ்ய ஹேதுத்வேன*
*ஸமாச்ரிதः அநிஷ்டஹாநிம்*
*இஷ்டஸ்ய ப்ராப்திம்ச குருதேஸ்வயம்*

*ச்ரீபதி*:-திருமகள் கேள்வனான நாராயணன்; *ஹேதுத்வேன* —ரக்ஷணத்துக்குக் காரணமாக (தஞ்சமாக — உபாயமாக); ஸமாச்ரித: (ஸந்) — சேதநனாலே அடையப்பட்டவனாய்க் கொண்டு; அஸ்ய சேதநஸ்ய—(தன்னை உபாயமாக அடைந்த) இந்தச் சேதனனுக்கு; அநிஷ்டஹாநிம், இஷ்டஸ்யப்ராப்திம்ச— அநிஷ்டவிரோதியான அவித்யா கர்மவாஸநா ருசி ப்ரக்ருதிஸம் பந்தங்களின் நாசத்தையும் இஷ்டமான மோக்ஷமடைவதையும் (அதாவது ரக்ஷணத்தை), ஸ்வயம்—தானாகவே (வேறொரு காரணத்தை எதிர்பாராமலேயே); குருதே—செய்கிறான்.

**பின்னிணைப்பு: 3**

**பழம்பெரும் உவமைகள் கொண்டு பொருள் தருதல்**

| எண் | பாடல் எண் | பாடல் தொடர் | உவமைகள் |
| --- | --- | --- | --- |
| 1. | 1.7.3 | என் மாணிக்கச் சோதியை | சாணையிலேறிட்ட மாணிக்கம்போலே |
| 2. | 1.7.3 | என் மாயப்பிறவி மயர்வு அறுத் தேன் | போகார்த்தமாகப் பால்குடித்தவனுக் குப் பித்தம் தன்ன டையே நசிக்குமா போலே |
| 3. | 1.8.11 | நீர்புரை வண்ணன் | ஒருக்கினவிடத்திலே சென்று பாயும் நீரின் செவ்வைபோலே |

| | | | |
|---|---|---|---|
| 4. | 1.9.3 | பூமகளார் | பூவில் மணம் வடிவு கொண்டாற்போலே |
| 5. | 1.9.6 | என்னுடைய தோளிணை | பெரிய திருவடியை மேற் கொள்ளுமாப் போலே |
| 6. | 2.1.3 | காமுற்ற கையற வோடு | காமிக்கப்பட்ட போகங்கள் கைப் படாத விழவோடே கூடினாற் போலே |
| 7. | 2.2.11 | கூத்தனை | வல்லார் ஆடினாற் போலே |
| 8. | 2.3.1 | ஊனில்வாழ் உயிர் | இந்தளத்தில் தாமரை போலே |
| 9. | 2.3.9 | செடியார் நோய்கள் | ஒன்றோடொன்று மிடைந்து தூறுமண்டி னாற் போலே |
| 10. | 2.3.9 | வாய்மடுத்துப் பருகி | பெருவிடாயன் தண்ணீர் குடித்தாற் போலே |
| 11. | 2.4.1 | ஆடி ஆடி | வல்லாராடினாற் போலே |
| 12. | 2.4.1 | இசை பாடிப் பாடி | இசையிலே பலகாலும் பாடுவாரைப் போலே |
| 13. | 2.4.1 | கண்ணீர் மல்கி | கரைந்த நெஞ்சு ப்ரவஹிக்குமா போலே |
| 14. | 2.4.3 | எரியணை யொக்கும் | அக்நிஸகாசத்தில் ஒக்கவுருகுமா போலே |
| 15. | 2.4.5 | வண்டு திவளும் தண்ணந் துழாய் | வண்டுகள் மதுபான பண்ணி ரஸாயந ஸேவை பண்ணினாரைப் போலே |
| 16. | 2.4.10 | இவள் மாழை நோக்கு | இவளுடையமுக்தமான மானின் நோக்குப் போலே |

| | | | |
|---|---|---|---|
| 17. | 2.7.4 | எம்பிரான் | ஊரை வளைந்து ஒருவனைப் பிடிக்குமா போலே |
| 18. | 2.7.4 | திருத்தி என்னை | இரும்பைப் பொன்னாக்குவாரைப் போலே |
| 19. | 2.7.12 | என் ஆழி வண்ணன் | கடுகிலே கடலை மடுத்தாற்போலே |
| 20. | 3.2.4 | எந்தாய் | ஊரை வளைந்து ஒருவனைப் பிடிக்குமா போலே |
| 21. | 3.2.8 | கூவுகின்றேன் | ஸாதநாநுஷ்டாநம் பண்ணியிழந்தார் கூப்பிடுமா போலே |
| 22. | 3.4.8 | மணி ஒளி வண்ணன் | சாணையில் ஏறிட்ட மாணிக்கம் போலே |
| 23. | 3.5.7 | சேனைபவத்த | விளக்கு அவித்தாற் போலே |
| 24. | 3-6-7 | கன்னல் கனியினை | கன்னல் சேர்ந்த கனிபோலே |
| 25. | 3-8-2 | தண் இலங்கை | குளவிக்கூடு போலே |
| 26. | 3-8-8 | கோலமே | ஒப்பனை ரூபம் தரித்தாற் போலே |
| 27. | 3-9-1 | மூரல் திருவேங்கடத்து | ஆனத்தி வைப்பாரைப் போலே |
| 28. | 3-10-2 | மணி ஒளி | தகட்டில் அழுத்தின மாணிக்கம் போலே |
| 29. | 4-3-2 | பூசும் சாந்து | கூனியிட்ட சாந்து போலே |
| 30. | 4-3-2 | புனையும் கண்ணி | ஸ்ரீமாலாகாரர் இட்ட மாலைபோலே |
| 31. | 4-3-9 | இரைத்து | பெருங்கடல் கிளர்ந்தாற் போலே |

| | | | |
|---|---|---|---|
| 32. | 4-4-4 | ஆலும் | மேக ஸந்நிதியில் மயில் ஆலிக்குமா போலே |
| 33. | 4-4-5 | கோமளவல்லி | கொள் கொம்பில்லாத கொடி போலே |
| 34. | 4-6-3 | மதுவார் | பாலுமாய் மருந்துமாய் என்னுமா போலே |
| 35. | 4-7-2 | கள்ளம் மாயா | கண்ணுக்குத் தோற்றாதே க்ருத்திமரைப் போலே |
| 36. | 4-7-4 | ஆணி செம் பொன் | ஒட்டற்ற ஆணிச் செம்பொன் போலே |
| 37. | 4-8-2 | வரைதோள் | மலையைக் கணையமாக வகுத்தாற் போலே |
| 38. | 4-8-5 | தனிச் சிறையில் | ப்ரபாப்ரபாவான்களைப் பிரிக்குமா போலே |
| 39. | 4-8-6 | குறிய மாண் | மகாமேருவை மஞ்சாடியாக்கினாற் போலே |
| 40. | 4-8-7 | வளர்ஒளிய கனலாழி | இரை பெறாத பாம்பு போலே |
| 41. | 4-8-9 | துணித்து | தின்றவிடம் சொறிந்தாற்போலே |
| 42. | 5-1-11 | உரைப்பார் | அம்ருதபானம் பண்ணுவாரைப் போலே |
| 43. | 5-4-3 | என் காகுத்தன் வாரான் | ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்கு உதவினாற் போலே |
| 44. | 5-4-8 | தைவந்த | நலிய வருவாரைப் போலே |

| | | | |
|---|---|---|---|
| 45. | 5-5-6 | நான்கு தோளும் | பச்சிலை மரம் பணைத்தாற் போலே |
| 46. | 5-8-1 | செந்நெல் கவரி வீசும் | கவரி வீசினாற் போலே |
| 47. | 6-1-9 | அசையும் அன்னங்கள் | தூங்கு மெத்தையில் இருப்பாரைப் போலே |
| 48. | 6-2-1 | இனி அது கொண்டு | ஒரு பேதைக்குப் பொய் குறிக்குமாப் போலே |
| 49. | 6-8-5 | கருமுகிலை | பொன்மலையின் மீமிசைக் கார்முகில் போலே |
| 50. | 6-8-11 | மணல்போல் | மணல் நீர்வளத்தில் ஒழுகுமா போலே |
| 51. | 6-9-2 | நண்ணி | யஞ்ஜ வாடத்திலே வந்தாப் போலே |
| 52. | 3-10-2 | செந்தாமரைக் கண் உறைபவன் போல் | சிவந்த தாமரை போலே இருக்கிற திருக்கண்கள் மலரும் படி உறங்குவான் போலே |
| 53. | 7-1-2 | கார்முகில் வண்ணனே | ஸர்வோபகாரகமான காளமேகம் போலே |
| 54. | 7-1-3 | மதுசூதனனே | விரோதியை அழிக்கும் இடத்தில் மதுவை அழித்தாற் போலே |
| 55. | 7-2-1 | கண்ணநீர் கைகளால் இறைக்கும் | கடலைக் கையிட்டிறைப்பாரைப்போலே |
| 56. | 7-2-7 | கோமளக் கொழுந்து | ம்ருதுஸ்வபாவமான லதாக்ரம் போலே |
| 57. | 7-2-7 | கடல்வண்ணா | கடலிலே ஒரு கடல் சாய்ந்தாற் போலே |
| 58. | 7-6-8 | இலங்கை கடந்து | குளவி கூட்டை விட்டுப் பறந்து போமா போலே |

| | | | |
|---|---|---|---|
| 59. | 7-8-1 | வாமனனே | மகாமேருவை மஞ்சாடி யாகச் சுருக்கினாற் போலே |
| 60. | 8-1-3 | எடுத்த பேராளன் | தரித்திரன் மகா நிதியை எடுத்தாற் போலே |
| 61. | 8-1-9 | நரகம் நான் அடைதல் நன்றும் அஞ்சுவன் | ஸ்ரீகௌஸ்துபத்தைச் சேற்றிலே புதைத்தாற் போலே |
| 62. | 8-2-11 | ஓர் இவை பத்தும் | கடலிலே முத்துப் பட்டாற் போலே |
| 63, | 8-3-1 | பூமகள் | புஷ்ப பரிமளம் வடிவு கொண்டாற் போலே |
| 64. | 8-4-1 | கஞ்சனைத் தகர்த்த | பசளைக் குடம் உடைத்தாற் போலே |
| 65. | 8-5-1 | வாமனா | மகாமேருவை மஞ்சாடி யாக்கிச் சுருக்கினாற் போலே |
| 66. | 8-6-2 | அன்று | நீரிலேநெருப்பு எழுந்தாற் போலே |
| 67. | 8-7-1 | வாமனன் புகுந்து | மகாபலி யஜ்ஞ வாடத்துக்குப் போனாற் போலே |
| 68. | 8-7-1 | வீறு | பெறாப்பேறு பெற்றாற் போலே |
| 69. | 8-7-2 | கண்டு கொண்டு | நிதி எடுத்துக் கண்டு கொண்டிருப்பாரைப் போலே |
| 70. | 8-7.4 | வஞ்சித்து | அடியாரல்லாரைச் செய்யுமா போலே |

| | | | |
|---|---|---|---|
| 71. | 8-7-9 | வயிற்றிற் கொண்டு | தாயானவள் வயிற்றிலே வைத்து நோக்குமா போலே |
| 72. | 8-9-7 | மல்லிலை மடல் வாழை | இம்மிதுந போகத்துக்கு சிசிரோபசாரம் பண்ணும் பரிசாரிகைகள் போலே |
| 73. | 8-9-8 | மறைக்கும் | திரைவளைத்தாற் போலே |
| 74. | 8-10-6 | நிகர்ச் செம் பங்கி எரி விழி | ஒப்பமிட்ட ஒளியையுடைய செம்பு காய்ந்த நெருப்புப் போலே |
| 75. | 9-9-1 | தென்றல் ஈரும் | நஞ்சு ஊட்டின வாள் போலே |
| 76. | 9-9-3 | ஆகம் தோய்ந்து | விடாயர் மடுவிலே முழுகுமா போலே |

பின்னிணைப்பு : 4

சீயர் காட்டும் திருமந்திர விளக்கமான உரையமைப்பு

| திருமந்திரம் | பொருள் | உரையில் அதன் இடம் |
|---|---|---|
| ஓம்: | | |
| அ | தலைமைத் தன்மை[1] (சேஷித்வம்) | முதற்பத்திலும் இரண்டாம் பத்திலும் இறைவனுடைய காத்தற்றன்மை, அவனுடைய அநுபவிக்கத்தக்க இனிமை இவற்றோடு கூடிய தான தலைமைத் தன்மையைச் சொல்லுகிறது. |
| ம | அடிமைத் தன்மைக்கு இருப்பிடம்[2] (சேஷத்வாச்ரயம்) | மூன்றாம் பத்திலும் நாலாம் பத்திலும் திருமாலுக்கே உரிய தொண்டனான ஜீவாத்மா அவன் ஒருவனையே அநுபவிக்கும் அநுபவம், அவன் ஒருவனையே தனது அன்புக்கு இலக்காகக் கொண்டமையாகிற அடிமைத் தன்மையைச் சொல்கிறது. |

| | | |
|---|---|---|
| உ | ஆண்டான்—அடியான் தன்மை[3] (உபயோஸ்ஸம்பந்த தாத்பர்யத்தைச் சொல்லுகிற ப்ரணவார்த்தம்) | முதல்நான்கு பத்துக்களினாலும் தொடர்ச்சியாக வந்த தலைமைத் தன்மை அடிமைத் தன்மைகளினுடைய தனிப்பட்ட தன்மைகளைச் சொல்லுகிறது. |
| நம: | 1. நேரான சொல்லாலே எப்போதும் நித்தியமான நமந நாமவானான இறைவனுடைய உபாய பாவம். பொருளாற்றலாலே எப்போதும் நித்ய நமந நாமவானான இறைவனுடைய உபாய பாவம் | அஞ்சாம் பத்தாலே உபாயத்தின் இயல்பு |
| | 2. நமநரூபமான சரணாகதி இயல்பு | ஆறாம் பத்தாலே உபாயத்தைப் பற்றும் முறை |
| | 3. ஆத்மாவால் உண்டாகும் அகங்காரம், அதன் உடைமையால் வந்த மமகாரம் ஆகிய விரோதி இயல்பு | ஏழாம் பத்தாலே வெறுக்கத் தக்க பாபங்களின் தன்மை |
| | 4. அவற்றைப் போக்கும் தன்மை | எட்டாம் பத்தாலே அப்பாபங்கள் நீங்கும் வகை |
| நாராயண | எல்லாமுறையாலும் உறவுடைமை[5] (ஸர்வவிதபந்துத்வம்) | ஒன்பதாம் பத்தாலே பெறத்தக்க பேற்றின் தன்மை |
| ஆய | கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்ளும் தலைவனாம் தன்மை[6] (கைங்கர்யப்ரதி ஸம்பந்தித்வம்) | பத்தாம் பத்தாலே அப்பேற்றை அநுபவிக்கும் விதம் |

1. மும்முட்சுப்படி நூற்பா 35.
2. மேலது நூற்பா 66.
3. மேலது நூற்பா 72.
4. திருமந்திரத்தின் நடுப்பதமான நம: என்பதின் பொருளான உபாயத்தின் இயல்பை அஞ்சாம் பத்து விளக்குவதாகச் சீயர் உரைப்பர். இவ்விடத்தில் நம:என்ற நேரான சொல்லாலும் பொருளாற்றலாலும் எப்போதும் நித்தியமான நமந்நாம வானான இறைவனுடைய உபாய பாவத்தைச் சொல்லு வதாக உரைப்பர், 'நமந்நாமவாந்' என்று சீயர் உரைத்த சொல்லை ஆராயும்போது,

நமநம்—நம:—நம என்ற பதத்தைத் தனக்கும் பெயராகக் கொண்டவன் இறைவன் என்றபடி,

'நம: என்ற சொல்லால் சொல்லப்படுபவன்' என்பதனை 'நமந்நாமவாந்' என்று கூறுகிறது.

திருமந்திரத்திலுள்ள நம: பதத்தை ஒரே பதமாகக் கொண் டால் நம: வணக்கம், சரணாகதி என்றபடி, இது ஸ்தூல யோசனை.

ந,ம: என்று இரண்டு பதமாகக் கொண்டால், ம: என்று விரோதியையும், 'ந' என்று அது மீளுகையையும் குறிக்கும். விரோதி மீளுகையாவது தன் வயத்திலிருந்து மீளுகை என்றபடி. இது சூட்சும யோசனை.

ந,ம,: என்று மூன்று பதமாகக் கொண்டால் 'ந' என்று வழி யையும், 'ம' என்று முக்கியத்தையும், ':' என்று இறைவனையும் குறிக்கிறது. அதாவது முக்கியமான வழி இறைவன் என்றபடி. இது பரயோசனை.

ஆகவே, நம: பதத்திற்கு வணக்கம் என்றும், தன்வயத்தி லிருந்து மீளுகை என்றும், இறைவன் என்றும் மூன்று பொருள்கள் தேறுகின்றன.

எனவே, நேரான சொல்லாகவும் பொருளாற்றலாகவும் எப்போதும் நித்தியமான நமந்நாமவானான இறைவ னுடைய உபாய பாவத்தை அஞ்சாம் பத்து சொல்லுவ தாகக் கூறியதைக் காணும்போது, நம: பதத்திற்குத் தன் வயத்திலிருந்து மீளுகையைப் பொருளாகக் கொண்டால் 'எனக்கு என்னைக் காத்துக் கொள்ளும் தன்வயமில்லை'

என்று தேறும் இது நேரான சொல்லின் பொருள். இதனால் அவனே உபாயம் என்று பொருளாற்றலால் அறிய முடிகிறது. மேலும் நம:பதத்திற்கே 'இறைவன்' என்று பரயோசனைப்படி பொருள் கொண்டால் நேரான சொல்லாகவே அவனே உபாயம் என்று கிடைக்கிறது. எனவே, இறைவன் நமந்நாமவாந்—நமநம் நம:பதம்—அது தன்னைத் தனக்கு நாமமாகக் கொண்டவன்—நம:பதத்தில் சொல்லப்படுபவன் நமந்நாமவாந் என்பது சீயர் கருத்தாகும்.

5. முமுக்ஷப்படி, நூற்பா 95.

6. மேலது, நூற்பா 105.

---

1. பாஞ்சராத்ரம், அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை.

2. வேதாந்த தேசிகர், இரகசிய த்ரய சாரம், திருமந்திரப்பிரகரணம்;

3. பாலதந்வீ வீரராகவாச்சார்யஸ்வாமி, முமுக்ஷப்படி வடமொழி வியாக்கியாநம், தெலுங்கு புத்தகம் ப.31

பின்னிணைப்பு : 5

# பதிகங்களின் கருத்துக்களில் உள்ள வடசொற்களின் தமிழாக்கம்

| பத்து திருவாய் மொழி | வடமொழி | தமிழாக்கம் |
|---|---|---|
| 1.1 | ஸர்வஸ்மாத்பரத்வம் | எல்லாரையும்விட இறைவனுக்குள்ள உயர்த்தி |
| 1.2 | ஸர்வ ஸமாச்ரயணீயத்வம் | எல்லோராலும் அடையப்படும் தன்மை |
| 1.3 | ஸௌலப்யம் | அவதாரம் செய்து எல்லாருக்கு இலக்காய் நிற்கும் எளிமை |
| 1.4 | ஆச்ரித அபராத ஸஹத்வம் | தன்னை யடைந்தவர்களின் குற்றங்களைப் பொறுக்கும் பான்மை |
| 1.5 | ஸௌசீல்யாதிசயம் | தாழ்ந்தாரோடு தன்பெருமை பாராது புரையறக் கலக்கும் நீர்மை |
| 1.6 | ஸ்வாராதனை | எளிதாக ஆராதிக்கப்படும் தன்மை |
| 1.7 | ஆச்ரயணத்தில் அத்யந்த ஸ்வாரஸ்யம் | அவனைப் பற்றுவதிலுள்ள மிக்க இனிமை |
| 1.8 | ஆர்ஜவ குணம் | பற்றுமவர்களிடம் இறைவன் மனமொழி மெய்களால் ஒருப்படிப்பட்டிருக்கின்ற நேர்மை |
| 1.9 | ஸாத்ம்ய போக ப்ரதத்வம் | பொறுக்கப் பொறுக்கத் தன்னை அநுபவிப்பிக்கும் தன்மை |

| | | |
|---|---|---|
| 1.10 | நிர்ஹேதுக் மஹோப காரம் | நம்மிடம் எதையும் எதிர்பாரா மல் தன்னை நமக்குத் தந்துதவும் தன்மை |
| 2.1 | க்ஷண விளம்பத்திலும் க்லேசாதிசய ஜநகம் | சிறிது தாமதத்திலும் மிக்க துக்கம் உண்டாக்கும் தன்மை |
| 2.2 | உத்துங்கலலிதத்வம் | மென்மையாலே மேம்பட்ட வனாயிருக்கும் தன்மை |
| 2.3 | ஸர்வஸாரஸ்ய ஸமவாய திவ்ய போக்யதை | எல்லா இனிமையோடுங் கூடிய வடிவழகின் திவ்விய இனிமை |
| 2.4 | போகாலாபத்தில வந்த ஆர்த்தியைப் போக்கி ரக்ஷிப்பவன் | அநுபவம் கிடையாமையால் வந்த துக்கத்தைப் போக்கிக் காப்பவன் |
| 2.5 | ஸௌந்தர்யாதிசயம் | அழகின் மிகுதி |
| 2.6 | ஆச்ரிதஸம்ச்லேஷப்ரீத னுடையதத்விச்லேஷ பீருத்வம் | அடியார்களைக் கலப்பதில் ஆசையுடையவன், அவர்கள் பிரிவில் பயப்படும் தன்மை |
| 2.7 | ஸமாச்ரித ஸம்பந்தி குல ஸந்தாந ஸம்ரக்ஷணம் | தன அடியார்களின் பரம்பரை களைத் தான் காப்பாற்றும் தன்மை |
| 2.8 | மோக்ஷ ப்ரதத்வம் | காக்கும் தன்மைகளின் எல்லையான வீடுபேறு அளிக்கும் தன்மை |
| 2.9 | மோக்ஷ தாத்பர்யமான பாரதந்த்ரயம் | வீடுபேற்றுக்குக் கருத்தான இறைவன் பக்கல் வசப்பட்டு இருத்தல் |
| 2.1 | போகப்ரதி ஸம்பந்தி தயா ஸாந்நித்யம் | கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்ளுமவனாகக் கிட்டி யிருத்தல் தன்மை |
| 3.1 | ஆத்ம சேஷத்வத்தி னுடைய ஸ்வாபாவி கத்வம் | ஆத்மாவின் அடிமைத்தனத்தின் இயற்கைத் தன்மை |
| 3.2 | அதுக்கு விரோதியான தேஹ ஸம்பந்தாதி நிவர்த்தநீயம் என்னு மிடம் | இயற்கைத் தன்மைக்கு விரோதி யான உடலோடு சேர்ந்திருத்தல் முதலானவை போக்கத் தக்கவை என்னும் விஷயம் |

| | | |
|---|---|---|
| 3.3 | சேஷ வ்ருத்தி ப்ரகாரம் ப்ரார்த்தயம் | கைங்கர்ய வகை வேண்டத் தக்கது |
| 3.4 | அப்ருதக்ஸித்த ப்ரகார த்வம் சேஷத்வ வேஷம் | இறைவனுடன் விட்டுப்பிரிக்க முடியாத விசேஷணமாய் இருக் கும் தன்மை அடிமைத் தன்மை |
| 3.5 | சேஷத்வ ரஸத்தால் வந்த ப்ரேம விகாரம் | அடிமையின் இனிமையால் வந்த காதலின் வேறுபாடு |
| 3.6 | சேஷத்வ ப்ரதிஸம்பந்தி அர்ச்சாவதார பர்யந்தம் | அடிமைத் தன்மை ஏற்று கொள்ளுவது அர்ச்சாவதாரம் வரை |
| 3.7 | ததீய சேஷத்வ காஷ்டை | அந்த அடிமைத் தன்மையின் வளர்ச்சியாகி, அடியார்க்கு அடிமைத்தன்மையின் எல்லை |
| 3.8 | ததீய பாரதந்த்ரய நிதானமான ததநுப வாபி நிவேசம் | அடியார்க்கு அடிமையாயிருப் பதற்கு அடிப்படையான அவனை அநுபவிப்பதில் ஊக்கம் |
| 3.9 | வாசிகாநுபவ வைலக்ஷண்யம் | வாக்கினால் அநுபவிப்பதன் பிறிதொன்றிற்கு இல்லாச் சிறப்பு |
| 3.10 | ஸமஸ்தவிரோதி நிவ்ருத்தி | எல்லா விரோதியும் நீங்குகை |
| 4.1 | சேதநனுடைய அநந்ய போக்யத்வம் | இறைவனொருவனையே ஆத்மா தனது அநுபவத்துக்கு இலக்காக்கும் தன்மை |
| 4.2 | விப்ரக்ருஷ்டார்த்த போகேச்சை | காலத்தாலும் தேசத்தாலும் தூரமான அனுபவத்தையடைய ஆசை |
| 4.3 | ஈச்வரன் இவரோடு கலந்த ப்ரணயம் | இறைவன் ஆழ்வாரோடு கலந்த ஆர்வம்/ஆசை |
| 4.4 | ஸ்மாரகத்வேந ஆர்த்தி | அவனை நினைவூட்டும் வாயி லாக ஏற்பட்ட துக்கம் |
| 4.5 | போக்தாவுக்குண்டான ஹர்ஷ உத்கர்ஷம் | அநுபவிப்பவரான ஆழ்வாருக் குண்டான மிக்க மகிழ்ச்சி |
| 4.6 | ததநுபந்தமே ஆச்வா ஸகரம் | அவனைச் சேர்ந்தவே ஆறுதல் உண்டுபண்ணும் |

| | | |
|---|---|---|
| 4.7 | குணாநுபவ இச்சையிலே தீவிர சைதில்யம் | இனியவனானவனுடைய குணத்தை அநுபவிப்பதில் ஆசையாலே மிக்க தளர்ச்சி பிறத்தல் |
| 4.8 | அவன் ஆதரியாத ஆத்மாத்மீயங்கள் அநாதரணீயங்கள் | அவன் விரும்பாத ஆன்மா, அதன் உடைமைகள் விரும்பத் தக்கவையல்ல |
| 4.9 | ச்ரிய:பதி சரணமே அதிசயித்த புருஷார்த்தம் | திருமகள் கேள்வனின் திருவடிகளே உயர்ந்த உறுதிப் பொருள் |
| 4.10 | ஸர்வாதிக சேஷி கைங்கர்யமே ப்ராப்யம் | யாவரிலும் மேம்பட்ட தலைவனுக்குச் செய்யும் கைங்கர்யமே அடையத்தக்கது |
| 5.1 | உபாயபூதனுடைய க்ருபா பாரவச்யம் | இறைவனது - கருணையின் பரவசப்பட்ட தன்மை |
| 5.2 | க்ருபையடியாக பாகவதரையிட்டுத் திருத்திக் கொள்ளும் ஆகாரம் | கருணைகாரணமாகப் பாகவதரைக் கொண்டு திருத்திக் கொள்ளும் தன்மை |
| 5.3 | ப்ராப்யத்வரையை ஜநிப்பித்தல் | அடைதனில் விரைவை உண்டாக்குதல் |
| 5.4 | ரக்ஷகத்வ ஸாமர்த்யம் | காக்கும் தன்மையின் ஆற்றல் |
| 5.5 | ப்ரீதி அப்ரீதிகளை ஸமமாக நடத்தல் | ஆசை, ஆசையின்மைகளைச் சமமாக நடத்தல் |
| 5.6 | அநுகாரத்தில் அவன் இவருக்கு அஹம்பாவ விஷயமாதல் | அநுகாரத்தில் இறைவன் ஆழ்வாருக்கு 'யானே' என்ற எண்ணத்தில் விஷயமாதல் |
| 5.7 | அகிஞ்சநர்க்கு தன் உபாய பாவம் காட்டல் | வேறு உபாய மில்லாதார்க்குத் தான் உபாயமாயிருத்தலைக் காட்டல் |
| 5.8 | உபாயத்தில் ப்ரதிபத்தி விசேஷ கரத்வம் | அவன் உபாயமாமிடத்தில் நம்பிக்கையை உண்டுபண்ணும் தன்மை |
| 5.9 | உபாயத்தில் விச்வாஸ ஜநகத்வம் | உபாயத்தில் நம்பிக்கையை உண்டு பண்ணும் தன்மை |

| | | |
|---|---|---|
| 5.10 | விச்வாஸத்தை யாவத் ப்ராப்தி அநுவர்த்திக் கும்படி செய்தல் | அவனை அடையும் வரை நம்பிக்கையைத் தொடரும் படி செய்தல் |
| 6.1 | நிருபாதிக சேஷித்வ ஸம்பந்தம் | இயற்கையான தலைவனாகும் தன்மையாகிய சம்பந்தம் |
| 6.2 | ஆபத்ஸகத்வம் | ஆபத்தில் தோழனாய் உதவும் தன்மை |
| 6.3 | ரக்ஷகத்வ போக்யத்வ விசிஷ்டமான ஆதிக்ய விசேஷம் | காத்தற்றன்மை, அநுபவிக்கப் படும் தன்மை ஆகியவற்றோடு கூடிய பெருமை |
| 6.4 | ஆச்ரித பவ்யதையி னுடைய அதிசயம் | அடியார்களின் கையாளாய் இருக்கும் பெருமை |
| 6.5 | போக்யத்வசேஷித்வத் தால் வந்த பூர்த்தி விசேஷம் | அநுபவிக்கப்படும் தன்மை, தலைவனாம் தன்மை ஆகிய வற்றால் வந்த நிறைவு |
| 6.6 | ஸூரி நிர்வாஹகத்வம் | நித்ய சூரிகளை ஆளும் தன்மை |
| 6.7 | அநுபாவ்ய அஸாதாரண லக்ஷணங்கள் | அநுபவிப்பதற்கே வுரிய தனிப் பட்ட அடையாளங்கள் |
| 6.8 | விலக்ஷண லக்ஷணங் களாலே ப்ரகாசிதமான விசேஷாதிக்யம் | சிறந்த அடையாளங்களாலே வெளிப்பட்ட தன் பெருமை |
| 6.9 | அத்யந்த வ்யாமோஹம் | மிக்க பேரன்பு மையல் |
| 6.10 | விரோதி நிரஸந ஸாமர்த்யம் | விரோதிகளை யழிக்கும் ஆற்றல் |
| 7.1 | சரீர இந்திரியாதிகள் நிவர்த்தகனான ஈச்வரன் இட்டவழக்கு | நீக்கப்படுபவைகளான உடல், புலன்கள் யாவும் இறைவன் இட்ட வழக்கு |
| 7.2 | விரோதி நிவ்ருத்தி பிற வாத போது ப்ராப்யகத ப்ராவண்யம் ஆர்த்தி ஜநகம் | விரோதி அழிதல் பிறவாத போது திருமாலிடத்திலுள்ள ஆசையால் துக்கம் உண்டாதல் |
| 7.3 | ஆர்த்தி சமிப்பது அபி நிவிஷ்டனான ஈச்வர னுடைய தேசப்ராப்தி | துக்கம் தணிவது ஆசையுடையனான இறைவ னுடைய தேசத்தை அடைதல் |

| | | |
|---|---|---|
| 7.4 | ஆர்த்தி ஹேதுவான விரோதி ஸர்வசக்திக்கே நிவர்த்தநீயம் | துக்கத்துக்குக் காரணமான விரோதி எல்லா ஆற்றலுடைய இறைவனாலேயே போக்கத் தகுந்தது |
| 7.5 | ரக்ஷகனானவனை ஒழிய வேறு நிவர்த்தகர் இல்லை என்னுமிடம் ஸர்வஸம்மதம் | காப்பாற்றுபவனைத் தவிர வேறு காப்பார் இல்லை என்னுமிடம் எல்லாரும் ஒப்புக் கொண்டதே |
| 7.6 | ஸர்வஸ்ரஷ்டாவானவன் காலைக் கட்டிக் கூப்பிட்டு விரோதியைக் கழித்தல் | எல்லாவற்றையும் படைப்பவனானவனுடைய காலைக் கட்டிக் கூப்பிட்டு விரோதியைக் கழித்தல் |
| 7.7 | அலாப ஜநிதையான ஆர்த்தி, விரோதி கார்யம் | கிடையாமையா லுண்டான துக்கம், விரோதியின் செயல் |
| 7.8 | விரோதி நிவர்த்தனத்தில், விசித்ர விபூதி விசிஷ்டனான விசித்ர சக்தியுக்தன் வேணும் | விரோதியைப் போக்குவதில் வியப்பான உடைமையோடு கூடிய, வியப்பான ஆற்றலோடு கூடியவன் வேணும் |
| 7.9 | வாசிக கைங்கர்யம் கொண்ட ப்ரீதி அதிசயத்தாலே விரோதியை விஹஸ்தமாக்கின ஹர்ஷம் | வாயினால் பண்ணும் கைங்கரியம் வந்த மிக்க ஆசையாலே, விரோதியைக் கையில்லாதவனாக்கிய மகிழ்ச்சி |
| 7.10 | ப்ராப்ய விஷயத்தில் ப்ராவண்யாதிசயத்தால் உபாயபூதன் ப்ரதிபந்தகம் போக்கும் | இறைவன் திறத்து ஆசை மிகுதியால் உபாயனான இறைவன் தடையைப் போக்கும் |
| 8.1 | விரோதி நிவர்த்தகனுடைய ஆச்ரித ஆகாங்க்ஷாதீந ஸாந்நித்யம் | விரோதியைப் போக்குமவனுடைய — அடியார்கள் ஆசைப்பட்டபடியே கிட்டித் தலைக் கட்டிக் கொடுக்கும் தன்மை |
| 8.2 | ஸ்வவிஷயத்தில் ஸங்கமுண்டேயாகிலும் இதர ஸங்க மற்றார்க்கல்லது சுலபன் ஆகாமை | தன் திறத்து ஆசை உண்டேயாகிலும், மற்றவர்களிடத்தில் ஆசையற்றார்க்கல்லது எளியனாகாமை |

| | | |
|---|---|---|
| 8 3 | ஸ்வாச்ரித ஜந விச்லேஷத்தில் தான் அஸஹாயன் என்னும்படியான ப்ரேமஜநகத்வம் | தன் அடியார்களின் பிரிவில் தான் துணையற்றவன் என்றும் படியான ஆசை உண்டாக்கும் தன்மை |
| 8 4 | ஆச்ரிதர்கள் சம்பத்தே சம்பத்தாய் இருக்கும் ஆகாரம் | அடியார்கள் செல்வமே தன் செல்வமாயிருக்கும் தன்மை |
| 8.5 | ப்ராப்யனானவன் பக்கலிலே ப்ராவண்யம் உண்டானால் ப்ரதிபந்தகம் தன்னடையே விலகும். | இறைவன் பக்கலிலே ஆசை உண்டானால், தடை தன்னடையே விலகும். |
| 8.6 | ஆச்ரித விரோதியைப் போக்குகைக்கு ஆஸந்நமாயிருக்கும் இருப்பு | அடியார்களின் விரோதியைப் போக்குகைக்குக் கிட்டியிருக்கும் இருப்பு |
| 8.7 | அசேஷ விரோதி நிவர்த்தகனாம் தன்மை | எல்லா விரோதிகளையும் போக்குகிறவனாயிருக்கும் தன்மை |
| 8.8 | ஔபாதிக தோஷத்தினுடைய அதி தூரீகரணம் | வந்தேறியான குற்றத்தைப் பூர்த்தியாகப் போக்குதல். |
| 8.9 | அதிகாரியை அதிசயித தாஸ்யாம்ருதத்திலே மக்நனாக்கும் தன்மை | பாபம் விட்டுப்போன அதிகாரியைப் பெருமை மிக்க கைங்கர்யம் என்கிற ஓர் அமுதத்திலே மூழ்கியவனாக்கும் தன்மை |
| 8.10 | விரோதி நிவர்த்தந ப்ரகாரம் | விரோதியைப் போக்கும் வகை. |
| 9.1 | ஈச்வரனுடைய நிருபாதிகதை . | இறைவனுடைய-இயற்கையான உறவை உடையவனாகும் தன்மை |
| 9.2 | கைங்கர்ய ப்ரதிஸம்பந்திதயா நித்ய ப்ரார்த்யத்வம் | குற்றேவல்களை ஏற்றுக் கொள்பவனாக எப்போதும் வேண்டத்தகுந்தவனாகும் தன்மை |
| 9.3 | நிரதிசய சீலாதி குணயோகம் | எல்லையற்ற நீர்மை முதலான குணசம்பந்தம் |

| | | |
|---|---|---|
| 9.4 | நித்ய அபூர்வ போக்யதை | எப்போதும் புதியதான அழகுடைமை |
| 9.5 | ஸ்மரணதசையில் சைதில்ய ஜனகமான போக்யகுணவத்தை | நினைக்கும் சமயத்தில் தளர்ச்சியை உண்டாக்குகிற— பகவானுடைய அநுபவிக்கத் தக்க குணமுண்டமை |
| 9.6 | ஸ்ம்ருதி சைதில்யமுடையாரை புஜிப்பிக்கையில் உண்டான ப்ரதமோத்யோகவத்தை | நினைவினால் மனம் கட்டுக் குலைந்தாரை, தன்னை முன்னம் அநுபவிக்கையில் உண்டான முதல் முயற்சியுடையனாயிருக்கை |
| 9.7 | அத்யந்த ஆதரணீய க்டகத்வம் | மிக்க வருந்தின ஆழ்வாராலே விரும்பத் தகுந்த புருஷகாரத்தினால் அடையப்படும் தன்மை |
| 9.8 | பத்நீ பரிஜநாதி பூர்த்தி | பிராட்டிமார் மற்றுமுள்ளாரால் வந்த நிறைவு |
| 9.9 | அல்பகால விளம்பத்திலும் அதிக்லேசாவஹத்வம் | சிறிது கால தாமதத்திலும் மிகுந்த துக்கத்தை உண்டாக்கும் தன்மை |
| 9.10 | பக்தி காரிதமான கைங்கர்ய ப்ரதி ஸம்பந்தித்வம் | பக்தியினாலுண்டான கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளும் தன்மை |
| 10.1 | ஆப்தனான அவனுடைய கதிஸஹாயதை | நம்பத் தகுந்தவனானவனுடைய வழித்துணையாயிருக்குந் தன்மை |
| 10.2 | போக்ய நாமாதி யோகம் | இனிமையான திருநாமம் முதலியவற்றின் சம்பந்தம் |
| 10.3 | ஸாரஸ்யாதிசயம் | இனிமையின் மிகுதி |
| 10.4 | ப்ராப்யனாமாகாரம் | பக்தி செய்பவர்களுக்கும் அடைந்து அநுபவிக்கத்தக்கவனான தன்மை |
| 10.5 | அநிஷ்ட நிவ்ருத்தி இஷ்ட ப்ராப்திகளுக்குத் தானே நிர்வாஹகன் | விரோதியைப் போக்கி, விருப்பத்தைக் கொடுப்பதற்குத் தானே செயலாற்றுந் தலைவன் |
| 10.6 | பல ப்ரதாநத்திலே உத்யுக்தனாம் தன்மை | பயன் கொடுப்பதில் முயற்சி செய்பவனாம் தன்மை |

| | |
|---|---|
| 10.7 சரீராதிகளை விடுவிக்கும் தன்மை | சரீரம் முதலானவற்றை போக்கும் தன்மை |
| 10.8 ஆநுகூல்யமே பற்றாசாக யதாவத் போக ப்ரதனாகை | தன்னிடம் த்வேஷம் நீங்கிச் சிறிது உண்டான அன்பே பற்றாசாக உள்ளபடியே அநுபவத்தைக் கொடுக்கும் தன்மை |
| 10.9 ஆதிவாஹிக ஸத்கார ப்ரதர்சநம் | வழி அனுப்புவோர்களைக் கொண்டு கௌரவிக்கும் தன்மை |
| 10.10 ஸ்த்திர ஸாயுஜ்ய ப்ரகாசம் பண்ணும் தன்மை | நிலையாகத் தன்னோடு கூடி யிருப்பதைத் தெரிவிக்கிற தன்மை |

பின்னிணைப்பு : 6

# சீயரின் அருஞ்சொல் விளக்கம்

| பாடல் எண் | பாடல் சொல் | சீயர் வழங்கிய பொருள் |
|---|---|---|
| 9-6-6 | அங்கண்ணன் | (அதி சபலன்) மிக்க ஆசையுடையவன் |
| 1-5-7 | அடியராவார் | அதிசயகரர் |
| 4-8-2 | அணி | ஆபரணம் |
| 3-3-3 | அண்ணல் | குறிஞ்சி நிலத் தலைவன் |
| 1-3-3 | அமைவு | நிரப்பம் |
| 10-1-9 | அரட்டன் | மிடுக்கன் |
| 1-10-3 | அராவு | அரவு, அராவுதல்—குறைத்தலாய்க் கொம்பை இழைத்ததாகவும் ஆம். |
| 2-6-10 | அரி | பெயர் (ஸம்ஜ்ஞை) |
| 1-9-3 | அருகல் | குறையாய், க்ஷயம் என்றபடி |
| 5-8-3 | அரு | அணுவான சுவரூபம் |
| 5-9-10 | அருள் | உபகாரம் |
| 4-8-5 | அலங்கல் | மாலை |
| 10-1-2 | அலங்கல் | மாலை, அலங்காரம் |
| 3-10-7 | அல்லல் | அலமாப்பு |
| 10-3-9 | அவத்தம் | அநர்த்தம், யுத்தம் |
| 9-7-3 | அவை | ஓலக்கம் |
| 2-10-9 | அழம் | பேய் |
| 1-7-9 | அழும்புதல் | செறியக்கலத்தல் |
| 6-5-4 | அற்கம் | அல்குதலாய், அடங்குதல் |
| 3-3-5 | அளவு | பெருமை |
| 4-8-5 | அளி | தண்ணளி, உபகாரம் |
| 3-5-3 | ஆதனம் | நிலம் |
| 4-1-6 | ஆர்தல் | இடமுடைமை |

| | | |
|---|---|---|
| 7-6-6 | ஆறு | உபாயம் |
| 4-5-1 | ஆற்றல் | பொறையும் மிடுக்கும் |
| 6-1-6 | ஆற்றல் | அமைதியாய், மதிப்புடையவன் |
| 2-6-11 | இசை | ஸ்தா பிரகாரம் |
| 3-10-4 | இடர் | இடைஞ்சலாய், மிறுக்கு என்றபடி |
| 7-5-7 | இண்டை | மாலை, செறிவு |
| 1-1-8 | இயத்தல் | கொடுத்தல் |
| 2-10-4 | இருமை | பரப்பு |
| 4-6-2 | இல் | இருப்பிடம் |
| 3-8-3 | இளமை | உதயாவஸ்தை |
| 4-1-10 | இறுகல் | சங்கோசமும் சிக்கெனவும் |
| 4-7-3 | ஈவு | அழிவு (வ்யயம்) |
| 10-8-7 | உகளித்தல் | மிகுதல் |
| 7-2-3<br>7-7-11 | உட்கு | மிடுக்கு |
| 10-2-2 | உம்பரூர் | பரமபதம் |
| 1-3-1 | உரவிடை | மார்பிடை, உரத்த ஏறுபோலே செருக்கன் |
| 3-1-5 | உலக்க | முடிய |
| 10-9-2 | உலகம் | லோகப்ரதானரைக் காட்டுகிறது |
| 10-3-9 | உழிதருகை | திரிகை (சஞ்சரிக்கை) |
| 4-6-9 | ஊழ்மை | பழமை |
| 4-2-4 | ஊழ்வினை | பழவினை |
| 4-6-9 | உன்னித்து | நினைத்து |
| 7-4-4 | ஊளி | பசி, உறிஞ்சின ஓசை |
| 7-4-2 | ஊறு | உடம்பு |
| 2-2-11 | ஊனம் | குறைவு |
| 2-6-11 | எண் | ஞானம் |
| 7-6-7 | எயில் | மதிளாய், புரத்தைக் காட்டுகிறது |
| 8-5-11 | எல்லி | இரவு |
| 5-3-5 | எல்லே | என்னே என்றாய் ஆச்சரியமாதல், தோழியை எல்லே என்று விளித்தல் |
| 1-3-1 | எளிவு | எளிமை |
| 5-3-1 | ஏசுதல் | பழித்தல் |
| 2-8-8 | ஏண் | வரையாய் ரேகையைக் காட்டுகிறது |

| | | |
|---|---|---|
| 2-7-6 | ஏறுதல் | கொள்ளுகையாதல்/தகுதி |
| 6-9-3 | ஐ | கோழை (ச்லேஷ்மா) |
| 2-7-8 | ஓசிவு | தளர்த்தி |
| 3-1-2 | ஒட்டு | உவமைச் செறிவு |
| 2-9-1 | ஒல்லை | சடக்கென |
| 6-7-8 | ஒல்குதல் | ஒடுக்கமாய், அசைதல் |
| 1-8-4 | ஒற்கம் | ஒடுக்கம், ஒல்குதல் |
| 6-7-8 | ஒற்கம் | ஒல்குதலாய் ஒடுங்குதல் என்றபடி |
| 5-4-7 | கங்கு | எல்லை நிலம் |
| 4-6-5 | கடாம் | மதமாதல், ஆனையின் கதுப்பாதல் |
| 3-1-1 | கடி | அரைக்கட்டு |
| 1-6-9 | கடிதல் | முனிதல் |
| 4-8-4 | கடையா | கறக்கும் மூங்கிற்குழாய் |
| 6-6-10 | கட்டு | மரியாதை; கட்டடங்க |
| 2-2-1 | கண் | களைகண் |
| 4-9-1 | கண்ணாளன் | கண்ணையுடைய ஆளன் என்று கிருபையை உடைய நிர்வாகன் என்றபடி |
| 8-9-9 | கரவு | முதலை |
| 3-5-9 | கருமம் | செய்ய வேண்டியவை (கர்த்தவ்யம்) |
| 2-2-6 | கவர்வு | சோர்வு |
| 5-3-1 | கவ்வை | அலர் |
| 6-2-6 | கழகம் | திரள், குழுமணம் |
| 4-8-4 | கழிகோல் | பசுக்கள் பாயாமல் வீசும் கோல் |
| 7-7-9 | களகை | களவிலே கொள்கை |
| 4-8-5 | களி | தேன் |
| 6-6-5 | கற்பு | அறிவுடைமை |
| 2-1-7 | கனையிருள் | திணுங்கின இருள் |
| 5-8-3 | கன் | தொழில்; சிக்கெனவு |
| 2-7-3 | கன்னல் கட்டி | கருப்புக்கட்டி |
| 3-8-10 | காணிய | காண்கைக்கு |
| 10-3-1 | காமருகுயில் | அழகிய குயில் |
| 3-3-2 | கார் | மேகம் |
| 4-4-5 | கிடக்கை | படுக்கை |
| 2-3-8 | கிறி | விரகு |

| | | |
|---|---|---|
| 3-4-4 | [illegible] | ஒளி |
| 3-1-6 | சாதுவாய் | நன்றாய் |
| 9-9-1 | சிதைக்கை | செதுக்குகை |
| 2-9-4 | சிறப்பு | பயன் (ப்ரயோஜனம்) |
| 2-7-2 | சிரணங்கு | இலக்குமி |
| 5-8-1 | சீர் | அழகு |
| 4-7-1 | சீலம் | கண்யான சரிதம் (தூய வரலாறு) |
| 1-9-5 | செக்கம் | செருத்தல், முடிதல் |
| 2-9-1 | செப்பம் | செப்போம், சொல்லோம், செவ்விதாம் |
| 4-1-1 | செம்மின் | சிவந்த ஒளி |
| 3-2-11 | செயிர் | குற்றம் |
| 7-4-5 | தகர்தல் | நெரிதல் |
| 3-1-6 | தகை | பிரகாரம் |
| 3-6-8 | தஞ்சம் | ஆபத்துக்கு உறுதுணை |
| 4-8-2 | தடம் | சுற்றுடைமை |
| 3-5-3 | தடுகூட்டம் | கீழுமேலாகை |
| 9-9-1 | தவர்தல் | துளைத்தல் |
| 4-6-5 | தவளம் | வெளுப்பாய், கீர்த்தியைச்சொல்லுகிறது. |
| 3-4-4 | தவிவு | அழிவு (விநாசம்) |
| 9-9-1 | தாது | புஷ்பகேசரம் (பூந்தாது) |
| 3-3-10 | தாழ்வர் | தாழ்வரை |
| 6-10-5 | திணர் | கதிப்பாய் பெருமையைச் சொல்லுகிறது |
| 7-6-9 | திறல் | சௌர்யம் |
| 3-10-8 | துக்கம் | பாபத்தை அநுபவித்தல் (அநிஷ்டாநுபவம்) |
| 9-9-4 | துதைகை | மிதிக்கை |
| 1-3-9 | துந்தி | நாபி |
| 7-9-9 | துப்பரவு | மிடுக்கு |
| 1-9-6 | துயக்கு | விபரீதஜ்ஞாதம் (மனத் திரிவு) |
| 3-1-11 | துயக்கு | மனத்திரிவு |
| 4-7-5 | துவர்ச்சி | உலர்ச்சி |
| 4-8-4 | துவருடுக்கை | துவரூட்டின உடைத்தோல் |
| 6-4-11 | துவளின்றி | குற்றமின்றி |
| 5-4-7 | தூய்மை | அழுக்கறுதி |
| 9-1-4 | தேப்பர் | துச்சர் |
| 3-3-1 | தெழித்தல் | முழங்குதல் |

| | | |
|---|---|---|
| 5-1-9 | தேவு | அழகு, திவ்யமாய் அப்ராகி ருதம் |
| 10-8-5 | தேன் | மது |
| 5-4-8 | நைவுருதல் | நடவுதல் |
| 10-2-11 | தொடி | வளை |
| 10-9-6 | தொடுதல் | தோண்டுதலாய், ஆழத்தைக் காட்டுகிறது |
| 8-5-3 | தொலைவு | அழிவு (நாசம்), துலைவு |
| 5-8-5 | தொழுவன் | தண்ணியன் |
| 3-3-7 | நமன்று | வணங்கி |
| 9-9-3 | நமுகுதல் | குழைதல் |
| 1-10-8 | நம்புதல் | தன்னுடையனவாக நம்புதல் |
| 1-3-2 | நலம் | கல்யாண குணங்கள் |
| 1-10-2 | நல்வாபு | தரிக்கும் தன்மையின் சிறப்பு (தாரகத்வ வைலக்ஷண்யம்) |
| 9-7-3 | நவை | குற்றம் |
| 8-10-2 | நள்ளி | பெண் நண்டு |
| 8-10-7 | நனி | மிகுதி |
| 7-3-7 | நாடி | நாட்டம் பெற்று |
| 2-1-6 | நாண்மதி | புதுமதி |
| 4-6-9 | நாழ்மை | தகுதியில்லாத மேனாணிப்பு |
| 3-8-3 | நாள் | புதுமை |
| 7-3-2 | நானம் | மயிருக்கு இடும் வாசனைப் பொருள்; புழுகு |
| 7-4-2 | நான்று | நான் |
| 6-10-11 | நிலாவுதல் | நிலைநிற்க நடத்தல் |
| 5-4-11 | நிறம் | பண், சந்தம் |
| 7-4-7 | நுகுதல் | அருந்தல்(நசித்தல்) |
| 5-10-11 | நுற்கை | பண்ணுகை |
| 4-8-4 | நெடும்பனை | நீண்ட மூங்கில் |
| 10-5-11 | நொடி | சொலவு |
| 10-7-8 | நொடி | க்ஷணம் |
| 4-4-9 | பகவர் | சந்நியாசிகள் |
| 5-7-8 | பகர் | விளங்குதல் |
| 6-10-10 | " | ஒளி |
| 8-10-6 | பங்கி | நான்றகுழல் (தொங்குகிற குழல்) |
| 3-4-5 | படமருந்து | திருமேனி (விக்ரஹம்) |
| 9-2-5 | படர் | பற்றை |

| | | |
|---|---|---|
| 3-1-1 | படி | நன்மை (சுபாவம்) |
| 9-7-10 | படி | ஒப்பு |
| 10-3-4 | பணிமொழி | தாழ்மை உடைத்தான மொழி (சொன்ன மொழி) |
| 8-4-2 | பணை | நீர்நிலம் |
| 2-6-11 | பண் | ஸ்வரம் |
| [illegible] | பண்பு | தன்மை (சுபாவம்) |
| 2-2-6 | பவர்வு | பரப்பு |
| 1-5-11 | பரிவு | இக்கம் |
| 6-6-4 | பாடு | பரப்பு |
| 5-3-1 | பாசறவு | நிறமழிவு |
| 2-7-4 | பாற | ஓட |
| 1-5-11 | பாலேய் தமிழர் | தமிழ்ப்பகுதியான நூலோடு பொருந்தினவர் |
| 5-4-7 | புரல் | தன்மை (சுபாவம்) |
| 2-6-3 9-5-11 | பான்மை | தன்மை (சுபாவம்) |
| 4-4-6 | பித்து | பிச்சு இருந்தபடி |
| 4-9-7 | பிணி | தரித்திரம் |
| 2-10-6 | பிணை | மான்பேடை |
| 4-7-4 | பிறந்தல் | விளங்குதல் |
| 6-6-3 | பீடு | பெருமையாய் மதிப்பைச் சொல்கிறது |
| 1-5-8 | பீர் | வெளுப்பு |
| 6-10-4 | புணர்த்தல் | கிட்டுவித்தலாய், சேர்த்துக் கொண்டருள வேணும் |
| 9-1-2 | புணை | தெப்பம் |
| 2-8-1 | புணைவன் | தெப்பமானவன் |
| 8-9-9 | புரவு | கட்டளைச் சேர்த்து |
| 3-1-2 | புற்று | புன்மை |
| 4-5-5 | புனைதல் | தொடுத்தல் |
| 9-5-10 | புயக்குதல் | புயத்தல் |
| 9-6-6 | புன்கண்மை | பேகணிப்பாய், தைத்யம் ஈன்ற படி. புல்லிதானி தன்மையில் பெய்தி என்று சிறிது அறிவு பெற்றது. |

| | | |
|---|---|---|
| 1-7-10 | பொரு | எதிரியாய் தலையைக் காட்டுகிறது அன்றியே பொருத்தமாய் இறைவன் ஒருவனையே பற்றும் அநந்யரைச் சேரவல்லவன் |
| 1-9-6 | மயக்கு | சந்தேகமான அறிவு (சம்சய ஞானம்) |
| 3-1-10 | மலர் | மலர்த்தியாய் விகாரம் |
| 3-1-4 | மலர்த்தலை | மலர்மேல் |
| 2-10-6 | மறி | குட்டி |
| 7-7-2 | மல்லல் | பெருமை |
| 4-1-10 | மறுகல் | தன்மை வேறுபாடு (ஸ்வபாவ பேதம்) |
| 4-9-5 | மறுக்குதல் | கலக்குதல் |
| 10-2-2 | மன்று | மன்றலாய், பரிமளத்தைப் பரப்புகிற பொழில் |
| 6-6-4 | மாடு | செல்வம் (தநம்) |
| 3-1-4 | ,, | இடம் |
| 7-7-2 | மாட்டிய | தூண்டின |
| 2-10-10 | மாதிமை | மென்மை |
| 4-2-7 | மாதுமை | பெண்தன்மை |
| 2-10-10 | மாதுறவு | பெடையோடே சேர்ந்த |
| 2-1-8 | மாநீர் | கறுத்தநீர் |
| 4-8-2 | மாயவன் | கரியவன் |
| 5-3-5 | மால் | பெருமையும் பேரன்பும் |
| 2-1-6 | மாழந்து | மழுங்கி |
| 4-8-2 | மானம் | அளவுடைமை |
| 7-5-8 | மிறை | மிடுக்கு |
| 7-6-8 | மினி | மிடுக்கு (வலிமை) |
| 7-6-9 | மீனி | மரணம் |
| 3-1-7 | மூழ்த்த | நிரம்பின |
| 2-1-6 | மைவானிருள் | கறுத்த பெரியவிருள் |
| 6-5-5 | மையாத்தல் | மயங்குதல் |
| 3-3-10 | மொய் | செறிவும் அழகும் |
| 7-6-9 | மொய்ம்பு | மிடுக்கு |
| 7-4-1 | மோழை | குமிழி |
| 7-8-4 | யோகு | உபாயம் |
| 4-2-7 | வடங்கொள்கை | தழைத்தல் |

| | | |
|---|---|---|
| 9-8-2 | வடி | மாவடுவாய், மாவடுப் பிளவு போலவும், வேல் போலவும் |
| 7-1-9 | வட்குதல் | வெட்குதலாய் லஜ்ஜை |
| 6-10-3 | வண்ணம்ஞ்சு | வள்ளல்தன்மை (உதார ஸ்வ பாவம்) |
| 5-10-2 | வதுவை | மணம் (விவாஹம்) |
| 3-3-3 | வம்புர் | புதியராகை |
| 7-1-9 | வலம் | பிரபலமான பிரசாதத்தைக் குறித்தல் |
| 10-9-1 | வளம் | புதுக்கணிப்பு |
| 7-7-2 | வன்மை | நிலைத்திருத்தல் (ஸ்த்தைர்யம்) |
| 1-4-7 | வாய் | வார்த்தை |
| 7-7-2 | வாலிமை | பெருமை |
| 4-8-3 | விடநெஞ்சம் | மீமிசை |
| 1-7-5 | விடவு | பொல்லாத காரியம் (தௌர்த்தயம்) |
| 3-8-3 | விடுத்தல் | விரித்தல் |
| 1-3-6 | வியத்தல் | வேறுபாட்டாலே (சிறப்பாயிருத் தல் (விலக்ஷணமாயிருத்தல்) |
| 10-3-9 | ,, | ஆச்சரியப்படுதல் |
| 3-1-11 | வியப்பு | ஆச்சரியம் |
| 4-8-3 | வியவு | வியக்கப்பட்டன |
| 1-4-9 | வீடு | பிரிவு |
| 4-4-8 | வீழ்தல் | மோகித்தல் |
| 9-1-8 | வீழ்துணை | விரும்பிய துணை |
| 4-4-8 | வெருவுதல் | அஞ்சுதல் |
| 4-5-6 | வெளியம் | மை (அஞ்ஜனம்) |

பின்னிணைப்பு: 7

## உரையில் காணும் அருந்தமிழ்ச் சொற்களின் பொருள்கள்

| பாடல் எண் | உரையில் வந்த சொல் | பொருள் |
|---|---|---|
| 1.1.6 | ஏறிட்ட கட்டி | வீசப்பட்ட கல் |
| 1.1.6 | ப்ரேரகர் | தூண்டுபவர் |
| 1 1.6 | உண்ட | விழுங்கின |
| 1 2.2 | இறை | தலைவன்/ஸ்வாமி |
| 1 2.7 | இராபாதே | பின்வாங்காமல் |
| 1 3.1 | நலம் | கல்யாண குணங்கள் |
| 1.3.4 | படி | தன்மை |
| 1.3.7 | சடக்கென | சீக்கிரமாக |
| 1.4.1 | கடர் | சேர்ப்பிப்போர் |
| 1.4.3 | சிந்தயந்தி | தியானம் பண்ணி இருந்தவள் (ஓர் இடைப் பெண்) |
| 1.4.4 | மகன்றில் | அன்றிலின் உட்பிரிவு |
| 1.4 5 | பொழில் | உலகம் |
| 1.4.10 | ஆழி | ஆழம் |
| 1.5.1 | தளவு | செம்முல்லை |
| 1 6.4 | கொள்கை | கோட்பாடு |
| 1.7.8 | பணைத்தோள் | சுற்றுடைத்தான தோள் |
| 1.7.11 | தென் | வள்ளலான (பரமோதாரனான) |
| 1.9.7 | ஒன்றும் | சிறிதும் |
| 1 10.5 | வயிற்றிலே வைத்து | வயிற்றிலே உண்டு |
| 1.10.10 | அற | புகுராதபடி |
| 1.10.11 | தென் | கட்டமைப்பட்ட (அழகான) |
| 2.1.1 | கானல் | நெய்தல் நிலம் |
| 2.1.1 | உகளும் | அழுக்கி நடப்பதாய் |

| | | |
|---|---|---|
| 2.2.2 | ஈதல் | ஒழிதல் |
| 2.2.8 | பிரான் | ஈச்வரன் (பெருமான்) |
| 2.3.1 | ஊன் | மாமிசம் என்கிற சொல் லாலே உடலைச் சொல்லிய படி |
| 2.3.6 | காற்றவரிய | காற்றுதல்-கக்கவைத்தல் (காறுதல்-கக்குதல்போல்) |
| 2.3.9 | வாளை மடுத்து | ஆசைப்பட்டு |
| 2.4.7 | முற்றாட்டாக | நன்றாக, அனுபவித்து |
| 2.4.9 | ஏழை | சபலை |
| 2.4.9 | வாய் | நுனி |
| 2.7.9 | அலமந்து | தேடித் தேடி |
| 2.8.6 | பூ | அழகிய |
| 2.8.6 | சேர்த்தி | சமர்ப்பித்து |
| 2 10.1 | சதிர் | பெருமை |
| 2.10.4 | செய்யக்கடவபடி | செய்ய வேண்டுவது |
| 3.3.7 | பரகுபரகற்ற | போக்யம் போக்யம் என்றில் லாது பரபரப்பாய்க் கொள்ளு டில்லாது |
| 3,5.2 | நிருபித்தல் | ஆலோசித்தல் |
| 3.6.5 | கடினம் | கெட்டியான |
| 3.6.5 | வெடித்து | பிரிந்து விள்ளுகை |
| 3.6.5 | அலகலகாய் | தனித்தனியாய் |
| 3.6,5 | ஆவிர்ப்பாவம் | தோற்றம் (அவதாரம்) |
| 3.8.10 | மறியவிட்ட | உள்ளங்கால் தெரியும்படி திருப்பிக் காட்டிய |
| 3.9.4 | ஆர்தல் | பொருந்துதல் |
| 3.9.5 | கொள்ளலாவது | கொள்ளக்கூடிய |
| 3.9.7 | திறவிய | உறுதியான |
| 3.9.8 | பசுமை | மஞ்சள் நிறம் |
| 3.9 8 | திரட்சி | திரண்டு இருத்தல் |
| 3.9.8 | செவ்வை | நேர்மை |
| 3.10.1 | வைகல்யம் | அநுபவிக்காமல் எஞ்சி நின்ற பகுதி |
| 3.10.7 | அலமாப்பு | துக்கம் |
| 4.1.2 | வெறிபோடி | ஒன்றும் தெரியாமல் திகைத்து |
| 4.2.7 | தழைத்தல் | தளிர்த்தல்/ அரும்புதல் |
| 4.3.1 | அதரம் | கீழ் உதடு |

| | | |
|---|---|---|
| 4.3.9 | கோஷித்து | உயர்ந்து ஒலித்து |
| 4.4.10 | ததும்புதல் | நிரம்புதல்/துளித்தல் |
| 4.5.6 | அஞ்சனம் | மை |
| 4.5.8 | உடைகுலைப் படுதல் | மனம் உருகுதல் |
| 4.6.7 | சுணம் | சுண்ணம்/பொடி |
| 4 6.8 | கைகழிதல் | வரம்புமீறுதல்/கைவிட்டு |
| 4.7.3 | க்ஷயம் | அழிவு |
| 5.1.5 | நிர்வாணம் | ஆனந்தம் |
| 5.2.3 | ஏகாகாரமாய் | நல்ல யுகமாய் |
| 5.2.3 | கோலாஹலம் | ஆரவாரம் |
| 5.2.3 | நிலமாம்படி | இருப்பிட மாம்படி |
| 5.3.3 | நிரப்பம் | அடக்கம் |
| 5.3.5 | துடி | உடுக்கை |
| 5.3.9 | நாண மற்ற பெண் | அடங்காப் பெண் |
| 5.4.1 | ஊராக | ஊர் முழுதும் |
| 5.4.3 | கல்பம் | படைப்புக்காலம் குறைவாயும் பிரளயகாலம் அதிகமாயு மிருப்பது |
| 5.4.4 | ஆராய்தல் | தேடுதல் |
| 5.4.5 | ஆராயும் | விசாரிக்கும், கேட்கும் |
| 5.4.7 | அழுக்கறுதி | அழுக்கற்றமை |
| 5.4.9 | சதைத்தல் | கொழுத்தல் |
| 5.5.6 | பணைத்தல் | கிளைவிடுதல் |
| 5.5.8 | புஜ சிகரங்கள் | கை மேல்பாகம், தோள் |
| 5.6.7 | முட்டக் கண்டு | முழுமையாகக் கண்டு |
| 5.8.3 | சிக்கெனவு | உறுதிப்பாடு |
| 5.8.4 | அலமந்து | தேடி |
| 5.8.11 | வங்கியம் | புல்லாங்குழல் |
| 5.9.6 | பழுப்பு | சிவப்பு |
| 5.9.7 | பரிக்கும்படி | சுமக்கும்படி |
| 5.9.8 | ஆடுதல் | கரும்பு செக்கு ஆடுதல் |
| 5.9.9 | பூரிக்கும்படி | கையிலே நிறைந்து இருக்கும் படி |
| 5.10.1 | கைவகுத்தல் | அணிவகுத்தல் |

| | | |
|---|---|---|
| 5.10.1 | சமைந்து | முடிந்து |
| 5.10.2 | வாரவிடுதல் | பெருக விடுதல் |
| 5.10.6 | முட்ட | முழுமையாக |
| 5.10.7 | கலசி | கலந்து |
| 5.10.9 | மறாத | மறுக்காத |
| 6.1.5 | உணர்த்தல் | தவறு இல்லை என்று தெரியப்படுத்துவது |
| 6.1.7 | இகலி இகலி | போட்டியிட்டு போட்டியிட்டு |
| 6.1.8 | சிறாம்பித்து | முகந்து கொண்டு |
| 6.1.9 | இடையாட்டம் | விஷயம் |
| 6.1.11 | இசையும்படி | ஏமாறும்படி |
| 6.2.4 | அல்லையோ | அன்றோ |
| 6.6.11 | கட்டு | வகுப்பு/பிரிவு |
| 6.7.1 | உசாவுதல் | கேட்டல் |
| 6.7.4 | சிலுகிடுகை | பழிச்சொல் |
| 6.7.7 | புலற்றுதல் | அழைத்தல் |
| 6.8 8 | மறித்தல் | திருப்புதல் |
| 7.1.9 | படுகுழி | அகப்படுத்தும் குழி |
| 7.2.2 | சுவறுதல் | வற்றுதல் |
| 7.3.9 | பூர்த்தி | அடக்கம் |
| 7.4.7 | மடுத்து | சேர்க்கப் பெற்று |
| 7.4.8 | ஒதுங்கின | பின்னிட்ட |
| 7.4.10 | சுனை | குளம் |
| 7.6.5 | கைகழிதல் | எல்லை கடந்த |
| 7.6.5 | அவிகலம் | நிறைந்த |
| 7.6.5 | நியமித்தல் | உத்தரவு இடுதல் |
| 7.7.4 | அடுதல் | தொந்தரவு செய்தல் |
| 7.7.6 | தழைத்தல் | தளிர்த்தல் |
| 7.7.9 | கந்தல் | கெட்டது (அஸாரம்) |
| 8.1 | நெரித்த | அடக்கிய |
| 8.2.4 | துவக்கு | உறவு |
| 8.3.5 | முசியாதே | ஊக்கம் குன்றாமல் |
| 8.3.5 | எய்த்த | இளைத்த |
| 8.3.8 | கவடடித்துக் கொண்ட | எட்டி வைக்கும் ஓர் அடி |
| 8.4.3 | ஈடுபடுதல் | வருந்துதல் |
| 8.4.8 | பூமி தேவர்கள் | பிராம்மணர்கள் |
| 8.5 (அவ) | களிப்பித்தல் | மிகுதிப்படுத்தல் |
| 8.5 (அவ) | கணிசம் | எண்ணம் |

| | | | |
|---|---|---|---|
| செங்கதிர் முடியன் (3.4.3) | சிவந்த கதிரையுடைத் தான திருவபிஷேகத்தை யுடையவன் | தலைவனாம் தன்மையைத் தெரிவிக்குமதான திருவபிஷேகத்தை உடையவன் | செம்மை-பலபொருள் ஒருசொற் கிளவி |
| ஆறுமில்காலத் தெந்தை (3.4.4) | ஒன்றுமில்லாத அழிவு (பிரளய) காலத்தில் இயற்கையான உறவு காரணமாகப் பிரித்து அறியவியலாத பேர், உருவம் உடைய அறிவில் பொருள், அறிவுள் பொருள் ஆகியவற்றைச் சரீரமாக வுடையைாய் | எனக்குத் துணையில்லாத பிறவி நிலைமையிலே தன்னோடு உண்டான உறவை அறிவித்தவன் (24) | காலம்-அழிவு காலம் என்று உரை |
| மாமருந்தம் (3.4.5) | பசுமருந்து (திருமேனி) | மாமருந்து (மஹௌஷதம்) | திருமேனியை மருந்து என்றது துக்கத்தைப் போக்கும் தன்மையாலே |
| நலங்கடலமுதம் (3.4.5) | (பாற்கடலிலுள்ளதன்மை-யால் வந்த சிறப்புடைத் தாய் இறைவன் சம்பந்தத் தாலே) அழகிய கடலில் அவன் கடைந்து எடுத்த அமுதம் | கடையவேண்டாத கடலிலே கிடக்கிற அமுதம் | நல்,அம், கடல் என்று பிரித்து 'நல்' 'அம்' ஆகியவற்றைக் கடலுக்கு அடைமொழியாக்கி உரை. |

| | | | |
|---|---|---|---|
| வானவர் ஆதி<br>(3 4.7) | அநுபவிப்பதில் ஆசை<br>யுடையரான தேவர்<br>களை உண்டாக்கினவன் | நித்யஸூரிகளுக்குத்<br>தலைவன் | ஆதி-காரணம்<br>என்று உரை |
| ஞாலமுண்டுமிழ்ந்த<br>மாலை<br>(3.4.9) | பேரன்புடையவனை<br>(வாத்சல்யத்தை<br>உடையவனை) | சர்வேச்வரனை<br>(24) | பலபொருள் ஒரு<br>சொற்கிளவி |
| முற்றுமாய்<br>(3.6.1) | மஹாதாதி ஸமூகமும்<br>(ஸமஷ்டியும்) உண்டாம்<br>படி துணைக்காரணமாய்<br>(உபாதாநமாய்) | முற்றுமான இவை<br>யெல்லாம் | 'பஹு ஸ்யாம்' என்ற<br>கருதிக்கு மிகவும்<br>பொருந்திய உரை |
| விண்ணோர்<br>இறை<br>(3.6.5) | நித்யஸூரிகளுக்கு எப்<br>போதும் அநுபவிக்கத்<br>தக்க மேன்மையை<br>உடையவன் | அந்நிலையிலே<br>நித்தியஸூரிகளும்<br>வந்து அடையும்<br>படியான மேன்மையை<br>உடையவன் | பாடல் அடிகொண்டே<br>உரை |
| நறுந்துழாய்ப்<br>போதனை<br>(3.7.3) | பரிமளம் நிறைந்த<br>திருத்துழாய்த் தாராலே<br>அலங்கரிக்கப்<br>பட்டவனாய் | திருமேனியின் தொடு<br>தலாலே நறுநாற்<br>றத்தையுடைத்தாய்<br>செவ்வி பெற்றிருக்கிற<br>திருத்துழாய்ப் பூவை<br>உடையவனை | திருத்துழாயின்<br>இயற்கை மணத்தில்<br>நோக்கு |

| | | | |
|---|---|---|---|
| எந்தைபிரான் தன்னை (3 7.3) | எல்லையற்ற தலைவனை | உபகாரகனை | பெருமைப் பொருளில் உரை |
| பிரான் (3.7 10) | தலைவன் | உபகாரகன் | |
| அடியோங்கு (3 7 11) | உயர்ந்துவரும்படியான | வேர்விழுந்த | ஓங்கு என்பதனைக் கொண்டு உரை |
| தண்ணிலங்கைக்கு (3 8 2) | குளவிக்கூடுபோலே இராட்சதர் சேர்ந்த தன்மையுடைத்தான இலங்கைக்கு | கட்டளைப்பட்ட இலங்கைககு | மேலே இராவணனைக் கொன்றதைக் காட்டும் சொல் கொண்டு உரை |
| ஆனாயர் தாயவனே (3.8.3) | இடையருடைய உயிர் இருப்புகளை (ஸத்தாதி-கள்) பெருகச் செய்பவனே (வர்த்தக னானவனே) | ஆனாயர்க்குத் தாய் போலே பரி வானவனே | சேயுடைய உயிர் இருப்பு வளர்ச்சி தாய்க்குச் சொந்தம் அன்றோ? |
| ஆழிப்பிரான் (3.9 9) | கவிபாடுவார் நெஞ்சு தன்வசத்திலேயாம்படி நியமித்துக்கொடுக்கும் திருவாழியையுடைய பெரிய உதவியாளன் | இக்குணங்களைக் காத்தூட்டவல்ல பரிகரத்தை யுடையவன் | 'பிரான்' என்பதற்கு 'உதவியாளன்' என்று உரை. |

| | | | |
|---|---|---|---|
| ஆழ்ந்தார் (4.1.6) | ஆழ்ந்து நிறைந்த | ஆழ்ந்து பரந்த | பல்பொருள் ஒரு சொற்கிளவி |
| பூதம்சாந்து ...வாசகம்செய் மாலையே (4.3.2) | கூனியிட்ட சாந்துபோலே தகுதியான சாத்துப் படி என் நெஞ்சாகா நின்றது; ஸ்ரீமாலாகாரர் மாலை போலே உகந்து சாத்தும் திருமாலை என்னுடைய வாகின் வளர்ச்சியானசொல்லாலே தொடுக்கப்பட்ட மாலையா நின்றது. | இவருடைய பாவ பந்தம்...மணம் கொடுப்பது | கிருஷ்ணாவதாரத்திலே நடந்த நிகழ்ச்சியைக் காட்டி உரை |
| உன்னதாவி என்னதும் என்னதாவி உன்னதும் (4.3.8) | என் ஆத்ம இயல்பு உனது சுவையும உன திவ்விய ஆத்ம இயல்பு எனது சுவையும் | என்னுடைய ஆத்மா நீ இட்ட வழக்காய் உன்னுடைய திவ்விய ஆத்ம இயல்பு நானிட்ட வழக்கு | சொற்களை மாற்றி ஆழ்வார் அநுபவத்தைக் காட்டி உரை |
| நல்ல மேன் மீக்கள் (4.3.9) | சிறந்த அறிவு, பக்தி ஆகிய தன்மையராய் எல்லாரைக்காட்டிலும் உயர்ந்தவர்களான நித்திய சூரிகள். | பரமபக்தியோடு கூடியவரான நித்தியசூரிகள் | முன் உள்ள தொடர்களின் கருத்தை 'நல்ல' என்பதற்குச் சேர்த்து உரை |

| | | | |
|---|---|---|---|
| மாயோன் (4.4.7) | வியப்பான மேன்மைத் தன்மை அடையாளங் களை உடையவன் | பிறந்த அறிவுக் கலக்கத்திற்கு உடலாம்படி பண்ண வல்ல வியப்பானவன் | 'நாறுதுழாய்மலர்' என்று பாட்டில் உள்ளதிலே நோக்கு |
| நெடுமா லடியார் (4.4.7) | அடியார்கள் பக்கல் மிகவும் மையலையுடைய னான இறைவனுடைய அடியார் | இறைவனுடைய அடியார் (36) | பலபொருள் ஒருசொற் கிளவி |
| உலகளந்தான் (4.4.8) | திருவுலகளந்தருளின போது ஒருநாளே வளர்ந்தருளின செவ்வி யையுடைத்தான வடி வழகை யுடையவன் | திறம்மட்டும் மாமிசக் கண்ணுக்கு இலக்கான எளிவந்த தன்மையும் கண்டு குணமுடைமை, இல்லாமை ஆராய்ச்சி பண்ணாதே எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்தவன் | உலகளந்த விதத்தையும் வடிவழகையும் காட்டி உரை |
| பகவர் (4.4 6) | ஞானம் முதலான குண நிறைவாலே அடியார் களைத் தன் அபிமானத் திற்கு உள்ளாக்கிக் | ஞானம் முதலான குணங்கள் நிறைந்த வராய் வேறுசப்தம் முதலான விஷயங் | 'பகவ' என்ற மூன்றெழுத்து களை உரையிலே |

| | | | |
|---|---|---|---|
| | காப்பாராயுள்ள பகவர்களாகிற சந்நியாசிகள் | களில் முற்றும் துறந்தவரான சந்நியாசிகள் | |
| மாயோன் (4.4.9) | இப்படி உபகாரத் திருவிளையாடல்களையுடைய வியப்பானவன் | காதல் முதலான கல்யாண குணங்களைக் காட்டிப் பெற்றாரை உறவறுக்குமவன் | பாட்டில் கூறிய உதவிகளைச் சேர்த்து உரை |
| ஆற்றநல்ல வகைகாட்டும் அம்மான் (4.5 5) | அடியாராகிய ஆன்மாவுக்குத் தக்கபடி பொறுக்கப் பொறுக்க அநுபவத்திற்குக் கருவியாம்படி சிறப்பாயுள்ள ஞானபக்திகள், பரபக்தி, பரஞானம், பரமபக்திகளாகிற வகைகளை அநுபவிக்கிறவர்களுக்குத் தெரியப்படுத்தும் இயற்கையான தலைவன் | அமைய, பொறுக்கப் பொறுக்கத் தன் குணங்களையும் திருவிளையாடல்களையும் அநுபவிப்பித்தவன் | பயிற்சியிலே நோக்கு |
| என்றும் ஒன்றாகி (4.5.7) | மேன்மைத்தன்மையோடு அவதாரத்தோடு வாசியற எல்லா நிலைமையிலும் ஒன்றாகி | மேன்மையைத் தோற்றாதே மனிதன் முதலான மாத்திரமாய் வந்து அவதரித்து | முன்பாட்டில் தொடர்ச்சியாக அவதாரிகையில் மேன்மைத்தன்மையைக் |

| | | | |
|---|---|---|---|
| | | நிறைவிடத்திலும் | காட்டியதால் இங்கும் எல்லா நிலைமையிலும் என்றபடி |
| வண்தமிழ் (4.5 10) | சிறந்ததாய் எல்லாராலும் சுலபமாகச் சொல்லப் படுவதான தமிழ் பிரபந்தம் | வள்ளலான/உதார மான | வண்மையாவது எல்லாராலும் சுலபமாகச் சொல்லும் தன்மை |
| வேரிமாறாத (4.5.11) | மதுப்பெருக்கு மாறாத | பரிமளம் மாறாத | மலரில் எப்போதும் தேன் இருப்பதால் அதனைக் கொண்டு 'தேன் பெருக்கு மாறாத எனறபடி- மேலும் பிராட்டி தாமரையில் பிறப்பாலே தேன்பெருக் குக்குக் கேட்கவும் வேணுமோ? |
| கொள்ளமாளா இன்பவெள்ளம் (4.7.2) | இந்த வையம் கொண்ட வாமன வேடத்தைக் காட்டி உதவின தன் மையை அநுபவிக்க அநுபவிக்க எல்லை காணமுடியாத இன்பக் கடல். | அநுபவிக்க அநு பவிக்கக் குறை பிறவாதபடியான இன்பக் கடல் | இப்பாட்டில் உதவியதைக் காட்டின வடிவைச் சொல்லிப் பொருள் தருகிறார். |

| | | | |
|---|---|---|---|
| நெடுமாயன் (4.8.3) | எல்லையற்ற வியப்பான குணம், திருவிளையாடல்களையுடைய கண்ணன் | என்மடியிற் சுவையறிந்த பின்பு படுக்கையில் பொருந்தியறியாதவன் | பாட்டின் முதலிரண்டு அடிகளில் நோக்கு |
| அடியேனை (4.9.3) | உன் வடிவழகுக்குத் தோற்று அடிமை புகுந்த என்னை | ஸ்வரூப அறிவுடைய என்னை | பாட்டிலுள்ள 'கடல் வண்ணா' என்ற சொல்லின் பொருள் கொண்டு 'வடிவழகுக்குத் தோற்று' எனறபடி. |
| மணிவண்ணா (4.9.5) | அடியார்கட்கு முடிந்தாளலாம்படி நீலமணி போலே அழகிய சுலபமான வடிவையுடையவனே | கண்டபோதே துக்கமெல்லாம் தீரும்படியான வடிவழகை உடையவனே | மணியின் அழகையும் நீர்மையையும் காட்டி உரை. |
| என்னை (4.9.8) | இம்முட்டுக்கோட்டையில் வழியறியாதே அகப்பட்டேன் என்று இருக்கிற என்னை | இதில் இருப்பு துக்கமாய் உன்னை அடைகையிலே ஆசையையுடைய என்னை | ஆழ்வாருடைய துக்கத்தையும் ஆசையையும் காட்டி உரை |
| கண்டு... திருவடியே (4.9.10) | கண்டு...இன்பமும், தெரிவரிய....சிற்றின்பமும் ஒண்தொடியாள்....நீயும் | கண்டு...இன்பத்தை விட்டேன் தெரிவரிய சிற்றின்பத்தை விட் | நிலாநிற்ப என்பதற்கு இந்தச் செல்வமும் ஆத்மாநுபவமும் பிராட் |

| | | | |
|---|---|---|---|
| | இவையெல்லாம நிலா நிற்கக் கண்ட இந்த மூன்றும் ஒருபடிப்பட்டு இருக்கும்படி நீ ஆராய்ந்து வைத்த சதிரை நான் கண்டு, செல்வத்தையும் ஆத்மாநுபவத்தையும் ஒழிந்தேன். | டேன் என்று நிர்வகித்து பின்னர் திருமகளும் நீயும் நிலாநிற்க கண்டேன் | டிக்கும் இறைவனுக்கும் தாம் இட்டவழக்காம்படி ஒருபடிப்பட்டு நிற்கும்படி யாகவுள்ளது என்று உரை. |

(ஆனால் ஈட்டில்/24 படியில் நிலாநிற்ப என்பதற்கு இப்பாட்டில் காட்டிய செல்வமும் ஆத்மாநுபவமும் அடங்கியது என்று சொல்லாமல் பரமபதம் அடங்கியுள்ளது என்று கூறி வேறுபட்டமை காண முடிகிறது)

| | | | |
|---|---|---|---|
| அமரர் சிரங்களால் வணங்கும் (4.10.3) | நித்தியரான பிரமன் சிவன் முதலான தேவர்கள் தங்கள் பதவி கைகூடுவ தற்காக பலவிதமாகத்தலைகளாலே வணங்கும் | தலை படைத்த பயன் பெற்றோம் என்று வணங்கும் | தேவர்கள் வேறு பயனில் ஊற்றமுடையவர்களன்றோ என்று உரை கருத்து |
| பொலிந்து நின்ற (4-10.5) | மேன்மைத் தன்மையைத் தெரிவிப்பதான குணங்களோடே சீலம், எளிவந்த தன்மை முதலான குணங்களும் கூடித்தெரி | பரமபதத்தைவிட்டு இவ்வருகே தாழ நிற்க நிற்கக் குணங்கள் மேன்மேலென விஞ்சி | 'பொலிவு'—மேன்மைத் தன்மையோடு கூடினாலன்றோ எளிவந்ததன்மை பொலிவது கேவல எளிவந்த தன்மை குண |

| | | | |
|---|---|---|---|
| | யும்படி நிறைந்தவனாய் நிற்கிற | வருகிறபடி | மன்றே புல்லுக்கும் குட்டைக்கும் கேவல எளி வந்த தன்மை உண்டு. |
| ஈசன்பால் (4.10.4) | அந்தக் கபால விமோசனத் தன்மை தோற்ற எழுந் தருளியிருக்கிற இயற்கை யான இறைவன் திறத்தில் | இறைவன் (ஸர்வேச்வரன்) பக்கலில் | பாட்டில் கபாலமோட்சம் சிவனுக்குத் தந்தது பற்றி உரை |
| யான் (5.1.7) | இறைவனாகிறவிஷயத்தில் பொய்யுரைகளைப் பண்ணும் தாழ்ச்சியை யுடைய நான் | நித்திய சம்சாரி களுக்கும் இவ்வரு காயிருக்கிறவன் | 'பொய்யே கைம்மை சொல்லி' என்று முதல் பாட்டில் சொன்ன பொய் யுரைகளை நினைத்து உரை. |
| நிலத்தேவரும் (5 1.8) | இவ்விபூதியில் இறைவ னிடத்து ஞானம் பக்தி ஆகியவற்றிலே ஒளியை யுடைய தன்மையரான பாகவதர் | பூமியில் உண்டான ஸ்ரீவைஷ்ணவர்கள் | 'தேவ! என்ற சொல்லுக்கு வடமொழியில் திவு என்ற தாது அடியாக ஒளி என்ற பொருள் கொண்டு உரை. |
| கார்வண்ணன் (5.2.10) | தனக்கே வுரிய திரு மேனியை யுடையவன் | தன்மையன் | வர்ணம் என்று கொண்டு உரை |
| வண்டார் (5.2.2) | வண்டுகளாலே நிறைந்ததாய் | வண்டுகள் மாறாதபடியான | ஆர்தல்—நிறைதல் என்ற பொருளில் உரை. |

| | | | |
|---|---|---|---|
| மாதவன் (5.2.2) | அவ்வழகை யநுபவிக்கிற இலக்குமிக்கு வல்லபனான இறைவன் | பிராட்டியோட்டை சேர்த்தியழகு (24) திருமகள்கேள்வன் (36) | ‘தண்ணந்துழாய்’ என்ற முன்பதத்தைச் சேர்த்து ‘அவ்வழகை’ என்று உரை. அதாவது பிராட்டி, துழாய் மாலையோடு இருக்கிற இறைவன் அழகை அநுபவிக்கிறபடி |
| தேவர்கள் (5.2.3) | நழுவுதலில்லாத ஞான ஒளியையுடைய நித்திய சூரிகள் | நித்தியசூரிகள் | வடமொழியில் தேவ சப்தத்திற்கு திவு என்ற தாது அடியாக நழுவுதல் இல்லாமையும், த்யுதி என்பதனால் ஒளியும் சேர்த்து உரை. |
| கடல்வண்ணன் பூதங்கள் (5.2.3) | எல்லையற்ற குணக்கடலான இறைவனுடைய தன்மைகளிலே ஈடுபட்ட பாகவதர் | வடிவழகிலே ஈடுபட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் | இறைவன் குணத்தில் உரைக்கு நோக்கு |
| மாசறுசோதி (5.3.1) | அழுக்கற்ற ஒளியையுடையவன் | அழுக்கற்ற அழகையுடையவன் | பல பொருள் ஒரு சொற்கிளவி |
| வலையுள் அகப்பட்டேன் (5.3.6) | இப்படி நாலுபாடும் (மேன்மை, நேர்மை, அழகு, குலம்) ஆகிய ’மனத்தை இழுக்கிற | நோக்கிலும் முறுவலிலும் அகப்பட்டேன் (24) | இப்பாட்டில் வந்த பதங்களின் தொடர்க் கருத்தில் காட்டிய குணங்களைக் கொண்டு |

| | | | |
|---|---|---|---|
| | விளையாடல்களான வல்லிக்குள்ளே தப்ப முடியாதபடி அகப்பட்டேன் | | உரை |
| வண்துவராபதிமன்னன் (5.3.6) | எல்லையற்ற செல்வத்தையுடைய ஸ்ரீமத் துவாரகைக்குத் தலைவனான நீர்மையையுடையவன் | அம்மேன்மையைத் தப்பிலும் தப்பவொண்ணாத் நீர்மையுடையவன் | ஊரின் சிறப்பு காட்டிய உரை |
| பிரான் (5.3.8) | அடியார்களான கோபிமாரை அநுபவித்த உபகாரகன் | அவ்வுபகாரங்களெல்லாம் தனக்காகச் செய்தது என்று இருக்கிறான் | குவலயாபீடத்தை அழித்த உதவிசெய்தது குறித்து உரை |
| யாமடமின்றி (5.3.10) | மிக்க ஆசையாலே ஏதேனும் ஒருபடியாலும் பெண்மைக்குத் தக்க ஒடுக்கமின்றியே. | அதுவோ! பெண்மையில்லாதார் செய்வதெல்லாம் முதலிலே செய்யக்கடவோம் | யா, மடமின்றி என்று பிரித்து உரை |
| எல்லே (5.4.1) | என்னே என்று துக்கக் குறிப்பு | வியப்பாதல் விளியாதல் | ஆவிகாப்பார் இனியார் என்ற துக்கமிகுதியாலே எல்லே-துக்கக் குறிப்பாக உரை. |

| | | | |
|---|---|---|---|
| வல்வினையேன் (5.4 5) | [உரியராய் ஆராய்வாரும் ஆராயாமைக்கு) ஈடான கொடிய பாபத்தையுடையேனான | முடிகை தேட்டமான வளவிலும் முடியப் பெறாத பாபத்தைப் எனக்குபண்ணின | 'அன்னையரும் தோழியரும் கண்ணனும்' என்ற சொற்களில் நோக்கு. |
| தீப்பால வல்வினையேன் (5-4-7) | அக்நிபோலோ கொளுத்தும் தன்மையதாய்க் கொடிய பாபத்தையுடையேனான நான் | தீமையே தன்மையாக உடைத்தாய் போக்கப் போகாதபடியான பாபத்தைப் பண்ணின நான் | உவமை காட்டி உரை |
| நான் கண்ட பின் (5-5-2) | அவன் அருள் காரணமாக நான் கண்ட பின்பு | சோலையிலும் ஒப்பனையிலும் ஆழங்கால் படும் நான் | அவனைக் காண அவனது அருள் தேவை என்பதில் நோக்கு |
| தெய்வ நாயகன் (5-7-11) | நித்தியசூரிகளுக்குத் தலைவனானவன் | இறைவன் (ஸர்வேச்வரன்) | முன்பாட்டின் கடைசி சொல்லின் பொருள் அப்படியே கொண்டு உரை |
| ஆழிப்பிரான் தன்மை (5-3-7) | அவ்வழகைக் காப்பாற்றியும் அநுபவிப்பிக்கும் திருவாழியையுடைய பெரிய உதவியானன் | எட்டாதபடி இருந்தாலும் கையும் திருவாழியுமான சேர்த்திபழகு விடவொண்ணாதாயிருக்கிறபடி(24) | முன்தொடரைச் சேர்த்து உரை, சக்கரத்தின் செயலையும் காட்டி உரை |

| | | | |
|---|---|---|---|
| கற்கும் கல்விக்கு (5-6-2) | புத்தகத்தைப் பார்ப்பது, எழுதுவது முதலான வற்றால் அன்றியே ஆசாரி யன் வாயிலிருந்து கற்கப் படும் வேதமான வித்தைகளுக்கு | சாந்தீபனோடே நான் கற்ற வித்யைகளுக்கு | வேதத்தைக் கற்கும் முறை யிலே குருசீடர் பொதுவாக அமைவது கொண்டு உரை 'கற்கும்' என்பதில் நோக்கு |
| உன் அடி சேரும் ஊழ் (5-8-6) | நான் உன்திருவடிகளைச் சேர்ந்து உனக்கே உரிய னாயிருக்கும் பழைமையை | உன் திருவடிகளைச் சேரும் முறைமையை | 'ஊழ்' என்பதற்குப் பழைமையாக இருக்கும் அவனுக்கே உரிய தன்மை காட்டி உரை |
| தீர்த்தன் (5-8-6) | தூயவனான (பாவன பூதனான) கண்ணன் | தூய்மையில்லாரையும் தூயராக்க வல்லவன் | முன்பாட்டில் காட்டிய கிருஷ்ணாவதாரத்தைக் கொண்டு உரை |
| உனது அருள் பிரியா (5-8-7) | உன்னுடைய அருளை ஒருகாலும் பிரியாதபடி | அருளாலே என்னுதல் | இரண்டாம் வேற்றுமைப் பொருளில் உரை |
| உனக்காட்பட்டும் 5-8-10 | இப்படி எளிமை, அழகு முதலானவற்றோடு கூடினவனான உனக்கு | ஸம்சாரிகளை அநுபவிப் பிக்க வந்து கிடக்கிற உனக்கு | பாடலிலுள்ள முன் சொற் களைச் சேர்த்து உரை |

| | | | |
|---|---|---|---|
| விளையேன் (5-9-1) | நினைத்தபடி அவனைக் கிட்டிப் பரிமாற முடியாத பாபத்தையுடையனான | நாள்செல்ல நாள் செல்ல ஆசை கழி யாதபடியான பாபத்தைப் பண்ணினேன் (36) | இறைவன் மேலுள்ள அதிக ஆசையைக் காட்டி உரை |
| தேனார் சோலைகள் (5-9-1) | மதுப்பெருக்கால் இழுக் கப்பட்ட வண்டுகளாலே நிறைந்த சோலைகள் | தேன் வெள்ளமிடுகிற சோலைகள் | 'தேன் என்பதற்குப் பல பொருள் ஒரு கிளவி யாகக் கொண்டு பொருள் சொல்லி, ஆர்தல்—நிறை தல் என்று உரை |
| பாவை நல்லீர் (5-9-7) | நித்தியமாகப் பாவை போலே உறுப்புக்களி னுடைய வகுப்பழகை யுடைய சிறந்த தன்மை யுடையவர்களே! | இவளை வீடுகைக்குக் குறைகளின்றிக்கே (க்ஷமையின்றிக்கே) மென்மையாக இருந்தபடி (ஸ்த்மிதை) | பாவையின் தன்மையைக் காட்டி உரை |
| சுழலில் (5-9-9) | சக்கரத்தினுடைய ஒளி சுற்றுதலாலே | சக்கரம் சுற்று தலாலே | சக்கரத்துக்கு இயற்கைத் தன்மை சுற்றுவது—ஒளி சுற்றுவது உரைக்கு விசேஷம் |
| அடிமேல் சேமம்கொள் (5-9-11) | திருவடிகளின் மேலே நினைத்தபடி அநுபவிக் | அவனைப் பெறாதே நோவுபட நோவு பட | 'சேமம்கொள்' என்ப தற்கு இப்பத்து உபாயத் |

| | | | |
|---|---|---|---|
| | கப் பெறாத பெருங்காதல் நடக்கச் செய்தேயும் நன்மையை உண்டு பண்ணும் அறிவான நம்பிக்கையை உடையராய் | அவன் திருவடிகளே காப்பாகப் பற்றும் ஆழ்வார் | தின் தன்மையைக் காட்டுவதின் நோக்கில் உரை |
| கோல்கொள்ள நீ (5-10-3) | எல்லாரையும் உன் கோல்கீழே நடத்தும்படி எல்லா ஆற்றலுமுடையவனான நீ | வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டும் அழகையுடைய நீ | கையில் கோலைக் காட்டி ஆற்றலுடையவன் என்று உரை |
| கூடி நீரைக் கடைந்த வாறும் (5-10-10) | தேவர் அசுரர் ஆகிய இருவரோடு கூடிநின்று பாற்கடலை மத்தும் கயிறும் ஆதாரமும் முதலான கருவிகளைக் கொண்டு கடைந்த முறையும் | ‘நாம் சமவிபாகம் பண்ணி அநுபவிக்கக் கடவோம்’ என்று அசுரர்களோடு கூடிக் கடலைக் கடைந்த படியும் | கடைந்த விதத்தைக் காட்டி உரை |
| நச்சு நாகணையானே (5-10-10) | அநுபவ விரோதிகளை அழியச் செய்யும் விடத்தையுடையனான திருவனந்தாழ்வானோடே தினமும்/எப்போதும் பரிமாறுபவனே! | நித்தியமாக அநுபவம் பண்ணுகிற திருவனந்தாழ்வானைப் போலே தரித்து நின்று அநுபவிக்கும்படி பண்ணவேணும் | திருவனந்தாழ்வானின் தன்மையைக் காட்டி உரை |

| | | | |
|---|---|---|---|
| திணர்த்த (6.1.5) | கதிப்பையுடைத்தான | திணுங்கின (24) செறுமின (36) | பலபொருள் ஒரு சொற் கிளவி |
| புன்னைமேல் (6.1.6) | பசுத்த நிறத்தையும் பரபாகமாய் பலவித நிறமான பூவையுமுடைய புன்னையின் மேல் | வைமாநிகரைப் போலே மனுஷ்ய கந்தம் தட்டாத படி உயர இருக்கை | புன்னையின் பண்பு காட்டி உரை |
| செக்கர் வேலை (6.1 7) | செக்கர் காலத்தை யுடைத்தான | சிவந்த பர்யந்தங் களையுடைத்தான | செக்கர்-சிவந்த வான மாக இருந்த காலத் தைக் காட்டி உரை |
| விடிவை சங்கு ஒலிக்கும் (6.1.9) | விடிவைத் தெரிவிப்பதான (விடிவுக்குப் பிராகாசக மான) சங்கு ஒலிக்கும் | விடிவுகள் தோறும் காலை வேளைகள் தோறும் சங்கின் ஒலி செல்லா நிற்கும் | சங்கு விடிவைத் தெரி விப்பதில் நோக்கு |
| நின்மலா (6 2.7) | அதுதானே பயனாம்படி ஒளியையுடையையாய்! | ....குற்றங்கட்கு எதிர்த்தட்டானவ னாய் (36) | 'கடல் ஞால முண்டிட்ட' என்று முன்தொடரின் பொருளில் நோக்கு |
| நெடியாய் (6.2.7) | 'இன்னமும் செய்தது போராது' என்று அவற்றை வெளிநாடு காட்டிக் காக்கும் பெருமையையுடையவனே! | அளவிடற்கரிய பெருங்குணனான வனே (36) | 'கடல்ஞால முண்டிட்ட தைக் கொண்டு, பெருமை வந்ததைக் காட்டி உரை |

| | | | |
|---|---|---|---|
| நின்றிலங்கு முடியினாய் (6.2.10) | எல்லா உலகத்தைக் காப்பாற்றுவதற்கும் ஒருநாளும் தாழ்வில்லா மையாலே நிலைநிற்க விளங்குகிற திருவபிஷே கத்தையுடையையாய் | என்னைத் தோற்பிக் கையிலே நிலை நின்று விளங்கா நின்ற திரு வபிஷேகத்தையுடை யவனே! (24) | இறைவனின் காப் பாற்றும் தன்மையில் நோக்கு |
| நின்தன்னால் (6.2.10) | இப்படி எல்லா முறையிலும் காக்குமவனாகையாலே எங்களுக்குத் தலைவனாய் எங்கள் மறத்தையும் அழித்து, அழிந்த உயிரை யும் உண்டாக்கி, எங்க ளோடுறவும் உடையையாய், அநுபவிக்கத் தக்க வடிவை யுடைய உன்னாலே | இவ்வநுபவம் கனவு போலேயாய் ஆற்றாமையன்றோ எங்களுக்கு... | பாடல் தொடர்களின் கருத்தில் நோக்கு |
| இவையுமோர் பத்து (6.2.11) | பாராமுகத்தாரைப் பார்க்கும்படியாக்கிக் கொண்ட ஒப்பற்ற இவை பத்தையும் | அடியாரோடுண்டான பாவபந்தத்தை வெளியிட்ட ஒப்பற்ற தான பத்து | 'இசையொடும்' என்பதில் உள்ள உம்மை சேர்த்து 'இவையும் ஓர் பத்து' என்று உரை |
| நாத்தன்னால் நவில உரைப் பார்க்கு (6.2.11) | நாவுக்குப் பயனாகச் செறிய உரைப்பார்க்கு | ஆசையோடு சொல்லு வார்க்கு | நாவின் பயன் காட்டுவதில் நோக்கு |

| | | | |
|---|---|---|---|
| விண்ணோர் சிரங்களால் வணங்கும் (6.3.7) | பிரமன் சிவன் முதலா னோர் தாங்கள் விரும்பிய பயன் பெறுவதன் பொருட்டுத் தங்கள் தங்கள் தலைகளாலே வணங்கும்படி | தலைபடைத்த பயன் பெற்றோம் என்று வணங்கும்படி (36) | விண்ணோர்கள் பயன் பெறுவதில் நோக்கு |
| திருவிண்ணகர்ச் சேர்ந்த பிரான் (6.3.7) | இறைவன் (ஸர்வேச்வரன்) | உபகாரகன் | பெருமான் என்ற பொருளில் நோக்கு |
| தாளிணையன் தன்னை (6.3.11) | திருவடிகளையுடைய திரி விக்கிரம சரிதத்திற் போலே வெவ்வேறு பொருள்களில் பலவகை யும் பரந்த இறைவன் | திருவடித்தாமரை களையுடையவன் | பதிகத்தின் அவதாரிகை யில் தாம் இறைவனின் எங்கும் பரந்த தன்மை யைக் காட்டுவதாகச் சொல்லியதை இங்குச் சொன்னபடி. |
| மாயக்கோ வப்பிரான் (6,4.2) | வியப்பான வடிவை யுடையனான கண்ணன் | மிக்க வியப்பான ஒப்பனையுடைய உபகாரகன் (24) (36) | 'கோலம்' என்பதற்கு வடிவு என்றும் 'பிரான்' என்பதற்குக் கண்ணன் என்றும் உரை |

| | | | |
|---|---|---|---|
| புகர்கொள் சோதி (6.4.3) | மிகவும் பளபளப்பான ஒளியுடையவன் | விரோதி அழித்த தாலே ஒளிபெற்ற சோதி | இறைவனின் இயல்பான பெருமையைக் காட்டி உரை |
| அன்று அன்னை புண்டு புலம்ப (6.4.5) | பெற்ற தாயான தேவகி யானவள் கம்சபயத் தாலே அப்போதே எடுத்து அணைத்துக் கதற. | பிறந்த அன்றே தேவகியார் முன்பே ஆறு பிள்ளைகளை இழக்கை யாலும், பிள்ளையிடம் அன்பாலும், கம்ச பயத் தாலும் திருவடிகளைக் கட்டிக் கொண்டு கதற. | கண்ணன் சிறுகுழந்தை யாகையாலே எடுத்து அணைப்பதில் நோக்கு |
| எம்தேவ பிரானுக்கு (6.6.5) | எம்போல்வாரோடு பிரமன் முதலாரோடு வாசியற உபகாரம் செய்தவனுக்கு | பிரமன் முதலானோர்க்கு உதவி செய்தவனுக்கு | எம் பிரானுக்கு, தேவ பிரானுக்கு என்று பிரித்து உரை |
| நல்வேங்கடம் (6.6.11) | இறைவனுடைய எளி வந்த தன்மையைத் தெரிவிப்பதான நன்மை யையுடைய திருமலை | அடியான்-ஆண்டான் (சேஷ-சேஷிகள்) இருவருக்கும் முக்கிய மான திருமலை | திருமலைக்கு நன்மை யாவது இறைவனைக் கண்டு பற்றுவதில் நோக்கு-ஊணத்தில் உரை. |

| | | | |
|---|---|---|---|
| கட்டெழில் சோலை (6-6-11) | செறிவினுடைய அழகை யுடைத்தாயுள்ள சோலையையுடைத்தாய் | பரிமளத்தையுடைத் தான சோலை | பலபொருள் ஒருசொற் கிளவி. 'அழகு' என்ற பொருளில் நோக்கு |
| கொடியேன் (6-7-2) | தன்னைப் பரிகைக்கு ஈடான கொடுமையை யுடைய என் பெண் பிள்ளையாய | இவளைப் பெறுகைக்கு பாக்கியம் பண்ணி வைத்து, இவ்வளவு உங்களைக் கேட்க வேண்டும்படியான பாபத்தைப்பண்ணினேன் | ஆழ்வாரின் தன்மையைக் காட்டுவதில் நோக்கு |
| எல்லே (6-7-4) | இதென்னாயிருக் கிறதோ என்று துக் கத்தின் குறிப்பு | கீழில் அவர்களை விளித்ததால், இதோர் வியப்பு இருந்தபடி என் என்றதாதல | திருக்கோளூர்க்கே போக ஒருப்பட்டுவிட்டதலைவியை ஊரார் என்ன சொல்லு வார்களோ என்று துக்கத் தின் மிகுதியாலே எல்லே என்றபடி |
| மல்குநீர்க் கண்ணொடு (6-7-7) | பிரிவால் மிக்க நீரை உடைத்தான கண்கள் | பகவத்குண மிகுதி யாலே நீர்மல்கின கண்கள் (24) | முன்பாட்டில் ஆழ்வார் நிலைமை கொண்டு உரை |
| ஒந்துநூற்றுளிப் பத்து (6-7-11) | 'ஓரோ அர்த்தவிசே ஷங்களுக்கு வாசக | கடலில் அமுதம் போலே ஆயிரத் | இப்பதிகத்தின் சிறப்பைச் சொல்லுவதில் நோக்கு |

| | | | |
|---|---|---|---|
| | ரான பத்தான நூற் றுள்ளும் அட்டைகையில் வின்ரவைத் தெரிவிப்ப தான இப்பத்து | திலும் வைத்துக் கொண்டு இப்பத்து (36) | |
| ஒளிமர்மலர் (6-8-3) | செவ்வியை யுடைத்தாய் உயர்ந்த மலர் | ஒளியையுடைத்தாய் | மலருக்கு ஒளி செவ்வை யன்றோ |
| மாமதுவார் தண்டுழாய் முடி (6-8-4) | இப்பிரிவுதானே செந் தலிப்புக்கு உறுப்பு என்னலாம்படி பெரு வெள்ளமான மதுஒழுகு கிற குளிர்ந்த திருத் துழாயாலே அலங்க ரிக்கப்பட்ட திருமுடி யையுடையனாய் | திருக்குழலில் செவ்வி யாலே மிகவும் மது தாரையை உடைத்தான திருத்துழாயாலே அலங் கரிக்கப்பட்ட திருமுடி யையுடையவன் | பதம்தோறும் பொருள் சொல்லுவதில் நோக்கு |
| தூமது வாய்கள் (6-8-4) | தூய மதுவை அடையாக வுடைத்தான (நிருப மாக) வாய்கள் | தூயதாய் இனிதான பேச்சையுடைய வாயை | 'மது' என்பதற்குத் தேன் என்று பொருள் சொல்லி அது எப்போ! தும் வாயில் இருப்பதைக் காட்டுவதில் நோக்கு |

| | | | |
|---|---|---|---|
| செங்கட் கருமுகிலை (6-8-5) | நெஞ்சைக் கவர்ந்ததன் காரணமான அந்தச் சிவந்த திருக்கண்ணையும், அதுக்குப் பரபாகமாய் பொன்மலையின் மீமிசைக் கார்முகில் போல் பெரிய திருவடி திருத்தோளிலே பொருந்தவிருக்கிற காளமேகம் போலே வடிவையுடையவனாய் | கண்ணாலே குளிர நோக்கி வடிவை முற்றூட்டாக்கி நின்ற நிலை (36) | பாடலில் முன் அடிகளின் கருத்தைச் சேர்த்துரைப்பதில் நோக்கு |
| வம்மின் (6-8-5) | மிக்க ஈடுபாட்டாலே (அதிபரிசயத்தாலே) வெறுத்திராதே (அநாதரித்திராதே) வாருங்கோள் | என் காரியத்துக்கு உபாயசிந்தைபண்ணி இருக்கிற உங்களுக்கு ஒரு விரகு சொல்ல வாருங்கோள் (24) | தலைவனான இறைவனைப் பிரிந்தது தூது விடுகிற பதிகமாகையாலே துக்கத்தின் மிகுதியில் நோக்கு |
| உம்மையான் (6-8-6) | சிறுபிள்ளைத்தனமாகச் செருக்கடித்திருக்கிற உங்களைக் கட்டாயப் படுத்தி உங்களைக் கொண்டு காரியம் கொள்ள இருக்கிற நான். | காப்பாற்றப்படுபவைகளான உங்களைக் காப்பாற்றும் நான் | தூதுப் பதிகமானதாலே பூவைகளைப் பார்த்து வேண்டிய முறையில் நோக்கு |

| | | | |
|---|---|---|---|
| உன் அடிப் போது (7-1-4) | ஆபத்திலே உதவுமவனான உன்னுடைய மிக்க அழகான திருவடித் தாமரையை | உன் திருவடிகளாகிற செவ்விப் பூக்களை | பாடலின் மூன்றாமடி கருத்தைக் கொண்டு உரை |
| பெருமானே (7-1-5) | எல்லையற்ற அழகனான ஆளுமவன் | நித்திய சூரிகளுக்கு ஓலக்கம் கொடுத்திருக்கிற படியை.... | ஆழி ஏந்தி, விண்ணோர் என்ற பதங்களில் நோக்கு |
| சங்கொடு சக்கரம் (7-3-3) | அந்த மேன்மைத்தன்மையை நிர்வகித்துக் கொடுக்கும் திவ்விய ஆயுதங்கள் | ஆயுதமும் ஆபரணமுமாய் இருக்கிற ஆழ்வார்கள் | 'செஞ்சுடர் நீள்முடி' என்ற பதத்தில் நோக்கு |
| அப்பன் (7-4-5) | அடியார்பக்கல் ஓரத்தை உடைய கண்ணனை | பூமி பாரத்தைப் போக்கின உதவியாளன் | பஞ்சபாண்டவர் பக்கல் நின்று உதவியதில் நோக்கு |
| நேர்சரிவாணன் (7-4-8) | ருத்திரர்கள் முதலானோரை முன்னிட்டு ஒதுங்கின வாணன் | முதன்மையான வாணன் | ஒதுங்குதல்- பின்னடைதல் என்ற பொருளில் உரை |
| நற்பாலுக்குய்த்தனன் (7-5-1) | நல்ல இடமான பரமபதத்திலே வைத்தான் | நல்ல தன்மையை உடைத்தாம்படி பண்ணினான் | பலபொருள் ஒருசொற் கிளவி |

| | | | |
|---|---|---|---|
| சூழ்கள் சிந்தித்து (7-5-4) | சங்கல்பம், படைப்பு, உட்புகுதல், உருவை உண்டாக்குதல், பேர் வைத்தல் தொடக்கமான உபாயங்களை வேதாந்த சாத்திரங்கள் வாயிலாகத் தெரிந்துகொண்டு | நல்வீரகுக்களை நினைத்து | சூழல்கள் யாவை யாவை என்பதைக் காட்டுவதில் நோக்கு |
| ஒரு நூற்றுவர் (7-5-9) | தயையில்லாத தன்மையாலும் அவமானம், உயிரைப்பிரிக்க முயற்சி செய்தல் ( அரக்கு மாளிகை) முதலான வரம்பு கடந்த செயலால் உண்டான கொடிய செய்கையாலும் ஒப்பற்றவர்களான துரியோதனன் முதலானோர்கள் | ஒருபக்கம் முழுவதும் பெருமிடுக்கனான துரியோதனன் முதலானோர்கள் | துரியோதனன் முதலானோர் செய்த செயல்களில் நோக்கு |
| பெருந் பம் (7-5- 0) | எல்லையற்ற துக்கமான கர்ப்பநரக துக்கங்கள் | பிறவி போனால் பின்னர் வரக் கடவதான கைவல்யமாகிற மகாதுக்கம் | பாபபுண்ணியங்களால் வரும் துன்பத்தைக் காட்டி உரை |

| | | | |
|---|---|---|---|
| தனியேன்தனி ஆளாவோ (7-6-1) | பாபத்தின் மிகுதியாலே உதவியில்லாதவனான என்னுடைய பாபத்தைப் போக்கும் தன்மையில் ஒப்பற்றவனாய் ஆள்கின்றவனே! | மூன்றாவது செல்வம் போலே (த்ருதீய விபூதி) தனியே ஆள்கிறவனே | ஆழ்வாரின் பாபத்தின் மிகுதியைக் காட்டி உரை. |
| ஏத்தருங் கீர்த்தியினாய் (7-6-3) | அந்த மேன்மை, எளிமை ஆகியவற்றுக்கு எல்லை கண்டு ஏத்த அரிய கீர்த்தியை உடையவனே! | பேசி முடிக்கவொண்ணாத கீர்த்தியை யுடையவனன்றோ (24) | பாட்டின் முன் அடிகளில் நோக்கு |
| எழில்மூவுலகும் நீயே (7-6-4) | பார்க்கத்தக்க அழகை யுடைய மூன்று உலகமும் நீ இட்டவழக்காய் | 14 லோகங்களிலுண்டான உயர்த்தியும் நீ இட்டவழக்கு (24) 3 லோகத்திலுண்டான பொருளுடைய உயர்த்தியும் நீ இட்டவழக்கு (36) | 'எழில்'-மூவுலகுக்கு அடைமொழியாக்கி உரை |
| என் திருமார்பன் தன்னை... நான்முகனை (7-6-7) | தலைமைத் தன்மையைக் குறிப்பதான பிராட்டியோடுகூடிய தன்மையை எனக்குத் தெரிவித்த | 'என்' என்பது இறைவன்படியே நினைத்து ஆசையாலே சொன்னதாக உள்ளது | 'என்' என்ற சொல்லாட்சியால் ஆழ்வாருக்குச் செய்த உதவியை நினைத்து உரை |

| | | | |
|---|---|---|---|
| | வனாய். பார்வதியை சரீரத்தின் ஒரு பக்கத்திலேயுடைய சிவனைச் சரீரமாகவுடையவனாய் நிற்கிற நிலையை எனக்குக் காட்டினவனாய்.... | | |
| மாயங்களே (7.6 10) | பூதனை, சகடம், யமளார் சுனர் முதலானவற்றை அழித்த மிக்க வியப்பான செயல்களையே | ரஜகனைக் கொன்று ஆயுத சாலையிலே புக்கு வில்லை முறித்து, குவலயாபீடத்தைக் கொன்று, மல்லரை அழியச் செய்து, வியப்பான திருவிளையாடல்களைப் பண்ணி (24) | பாடலின் முதலடியில் 'ஈற்றிளம்பிள்ளை ஒன்றாய்' என்பதற்குப் பொருத்தமாகப் பிள்ளை பிறந்த உடனே செய்த செயல்களில் நோக்கு |
| முற்றவிம் மூவுலகும் (7.7.10) | மூன்றுவித அறிவில் பொருள் அறிவுள் பொருள்களைக் கொண்ட உலகம் முழுவதும் | எல்லா உலகங்களும் ஓரிடம் ஒழியாமே (24) | சொற்களை விரித்து உரைப்பதில் நோக்கு |
| அச்சுதனே (7.8 2) | வாமனனாய் யாசித்த பொருள் கைபுகுந்த | இவ்வழகுக்கு ஒருநாளும் நழுவுதல் இல்லாதவனே (24) | முன்பாடலில் வாமனனாய்ப் பண்ணியதைக் கொண்டு உரை |

| | | | |
|---|---|---|---|
| | வாறே தலைவனாம் தன்மையின் நிறைவாலே நழுவுதலில்லாத தன்மை யானவனே! | | |
| கள்ளவிழ் தாமரை (7.8 4) | மதுவைப் பெருக்குகிற செவ்வித்தாமரைப்பூப் போலே | அப்போதலர்ந்த தாமரைப்பூப்போலே | கள், அவிழ்—பல பொருள் ஒருசொற் கிளவி |
| மாயங்கள் (7.8 5) | சரீரம் முதலானவற்றிலே மூழ்கும்படி அறிவின்மை, கருமம், வாசனை, ருசிகளாகிற வஞ்சனங்கள் | பிறப்பிறப்பு வியப்புகளை உண்டாக்கி | பிறப்பிறப்புக்குக் காரணம் காட்டுவதில் நோக்கு |
| என்னை (7 8.5) | உன் ஒருவனுக்கே அடியனாய், உன் ஒருவனாலே காக்கப்படுமவனான தன்மையையுடைய என்னை | வேறு விஷயங்களில் கால்தாழ்ந்திருக்கிற என்னை | முன் இரண்டு பாடல்களில் கருத்தில் நோக்கு |
| மாயத்தால் (8.1.8) | வியப்பான திருவிளையாடல்களாலே | பெருங் காதலாலே | 'மாயத்தால் வல்வினையேனை ஈர்கின்ற' என்று கொண்டு கூட்டி உரை |
| தொல்லையஞ் சோதி (8.2 6) | அவனுக்கேவுரிய எல்லையற்ற அவனுடைய ஒளி | மற்றவைகளுக்கு ஒப்பாகாத திருமேனியையுடையவன் | சோதி-பலபொருள் ஒருசொற் கிளவி |

| | | | |
|---|---|---|---|
| நன்னுதல் (8.2.9) | பளபளப்பான நெற்றி | இந்த துக்கம் அறியாமை யாலே அழகிலும் குறை வற்று, பரிபூர்ணர் களாய் | சொல்லுக்குப் பொருள் சொல்லும் நியதி. |
| தேவ பிரார்க்கு (8.2.9) | பிரமன்சிவன் ஆகியோர்க் குத் தலைவனான அவனுக்கு | இந்திரனிழந்த இராச்-சியத்தைக் கொடுத்துத் தேவர்களுக்கு உதவி செய்தவனுக்கு | 'பிரான்' என்பதற்குத் தலைமைப் பொருளில் நோக்கு |
| நல்நெடுங்குன்றம் (8.2.10) | வேறு வேறு தாதுப் பொருள் பொடிகளி லிருக்கும் சிறப்பை உடைத்தாய் உயர்ந்த தான மலை | மற்றும் அழகுகளோடு கூடியதாய் அளவற்றதா யிருப்பதொரு மலை | மலையிலுள்ள பொருள்களைக் காட்டுவதில் நோக்கு |
| வெந்நோய் (8.3.6) | மிக்க வெம்மைக்குக் காரணமான அறிவின் மை, கருமம், பழக்கம் ருசி, பிரகிருதி ஸம், பந்தமான விரோதிகள் | மூவகைத் துன்பங்கள் முதலானவைகள் | விரோதிகளைப் போக் கும் தன்மையைச் சொல்லும் பத்தாகை யாலே, விரோதிகள் யாவை யாவை என்று விரித்துச் சொல்வதில் நோக்கு |

| | | | |
|---|---|---|---|
| உருஆர் சக்கரமும் சங்கும் (8.3.6) | வடிவழகால் பொருத்தமான சக்கரமும் சங்கும் | அழகு மிக்கிருந்துள்ள ஆழ்வார்கள் | சொற்களுக்குப் பொருள் சொல்லும் நியதி |
| சூழ்பரண்மேல் (8 4.1) | யுத்த ரங்கத்தைச் சூழ்ந்த மச்சுக்களிலே நிற்பாராய் | சுற்றுமுண்டான மஞ்ச இடத்தின் மேலே நின்ற | போர்க்களத்தில் மச்சுக் களிலிருந்து யுத்தத்தை அரசர்கள் பார்ப்பார் கள் போலும். |
| அணரி (8.4.4) | நிரைகள் | திரள் | பல பொருள் ஒரு சொற் கிளவி |
| பு (8.5.3) | அழகியதாய் | மனத்தை இழுக்குமதாய் (மனோஹரமாய்) | |
| மற்றுத்தான் (8.5.7) | அந்தராத்மாவாய் நிற்கிற [அகவாயல் நின்றாதல் | தூணிலே வந்து தோற்றினாற் போலேயாதல் | ஆழ்வார் மனத்தைக் காட்டி உரை |
| பூத்த பொழில் (8.6.6) | புஷ்பங்கள் நிறைந்த பொழில் | நித்திய வசந்தமான பொழில் | ஊரில் மலர்கள் எப்போதுமுள்ளதில் நோக்கு |
| கோவிந்தன் (8.6.7) | எல்லாருக்கும் எளிய னான ஒளியையுடையவன் | எல்லாருக்கும எளியனானவன் | 'கோ' கிரணமுடையவன் என்பதைக் கொண்டு ஒளியையும் சேர்த்து உரை இரட்டுற மொழிதல் |

| | | | |
|---|---|---|---|
| மாயத்தினால் (8.6.9) | வியப்பான அழகு முதலான திருமேனி குணங்களோடு கூடியவனாய் | பெருங்காதலாலே | அர்ச்சாவதாரத்தில் நோக்கு |
| நாராயணன் (8.6.10) | அதுக்குத் தக்கதான உறவை உடையவன் | தன்னுடைமையை விட்டுக் கொடாத அன்பன் | ஆண்டான்-அடியான் உறவில் நோக்கு |
| என்னை (8.7.1) | தன்னையொழியச் செல்லாமையையுடையேனான என்னை | தன்வாசியறியாதே சப்தம் முதலான விஷயங்களில் ஊன்றின என்னை | ஆழ்வாரின் மிக்க துக்கத்தைக் காட்டுவதில் நோக்கு |
| வீறு (8 7.1) | எண்ணிலும் தனக்குப் பிறந்த ஆசையின் வேறுபாடு தோற்றும்படி | இவரைப் பெற்ற அத்தாலுண்டான வேறுபாடு வடிவிலே தோற்ற | முன்பு சொன்ன வரிக் கொண்டு பாட்டில் நோக்கு |
| எவ்வாய்ச் சுடரும் (8.7.7) | எல்லா அவயங்களினுடைய ஒளியும் | மற்றுமெவ்விடத்திலும் உண்டான ஒளியும் | பல பொருள் ஒரு சொற்கிளவி. வாய்-அவயவம் |
| பைத்தேய் சுடர் பாம்பு (8.7.10) | விரிகிற பணங்களையுடையனாய் இயற்கையான ஒளியையுடையனான திருவனந்தாழ்வானை | அநுபவத்துக்குத் தகுதியான ஒளியையுடைய திருவனந்தாழ்வானை | ஏய்தல்-பல பொருள் ஒருசொற்கிளவி. பாம்பின் தன்மையில் நோக்கு |

| | | | |
|---|---|---|---|
| நான்கு தோளன் (8.8.1) | அந்த இறைவனாம் தன்மைக்குத் தக்கபடி நாலு திருத்தோள்களையுடையவன் | இவரை அணைக்கையாலே தோள்களும் பணைத்தது | இறைவனுக்கு அடைகொளியாக நான்கு தோள்கள் இருப்பதில் நோக்கு |
| நின்ற வொண்சுடர் (8.8.5) | அழிவதாய் பலவித வடிவான அறிவில் பொருள் போலன்றியே நித்திய மாய்ஞானத்தையே வடிவாகவுடையதான ஆத்மா | உடல் பொறிகளுக்குத் தலைவனான ஆத்மா | ஆத்மாவின் இயல்பான குணத்தைச் சொல்வதில் நோக்கு |
| எய்த்தார் எய்த்தார் எய்த்தாரே (8.8.7) | மனக்கலக்கம் பிறந்தவர்கள் பிறவி, நரகம் ஆகிய இரண்டாலும் எய்த்தே விடுவார்கள் | இளைத்தார் இளைத்தார் என்று உருவ துக்கப்பட்டே போமித்தனை | சொல்லுக்குப் பொருள் தரும் நோக்கு |
| மணித்தடம் (8.9.1) | அழகிய ஒளியையுடைத்தாய், பெருத்த | தெளிந்த தடாகம் | தடம்-பலபொருள் ஒரு சொற் கிளவி |
| துன்று (8.9.2) | செறிந்து | நெருங்கி | பலபொருள் ஒருசொற் கிளவி |
| பல்கலன் (8.9.2) | "முதலான பலவகைப்பட்ட திருவாபரணங்கள் | அல்லாத திருவாபரணங்கள் | பாட்டில் சொன்னவற்றை நக் காட்டுவதில் நோக்கு |

| | | | |
|---|---|---|---|
| தண்பணை (8.9.4) | குளிர்ந்த நீர்நிலங்கள் | அழகிய நீர்நிலம் மருத நிலம் | பல பொருள் ஒருசொற் கிளவி |
| தேவபிரான் (8 9.4) | சூரிகளால் அநுபவிக்கப் படுபவன் (ஸூரி போக்யன்) | அயர்வறுமமரர்கள் அதிபதி | 'பிரான்' என்பதற்கு உதவி செய்பவன் என்ற பொருளில் நோக்கு |
| வான்புகை (8.9.8) | பெரிய புகை | மிக்க புகை (24) செறிந்த புகை (36) | வான்-பலபொருள் ஒரு சொற் கிளவி |
| வியன் மூவுலகும் (8 10.1) | பரந்ததான மூன்று உலகச் செல்வத்தையும் | வியப்பான மூன்று உலகையும் | 'வியல்' என்றுகொண்டு உரை |
| வியன் மூவுலகும் (8.10.2) | பெரிய மூன்று உலகச் செல்வத்தையும் | வியப்பான மூன்று உலகச் செல்வத் தையும் | 'வியன்'-பெருமை என்ற பொருளில் நோக்கு |
| நறுமாவிரை (8.10.3) | பரிமளத்தையுடைத்தாய் உயர்ந்ததான மதுவை உடைத்தான | நன்றான மிக்க பரிமளம் | பூவில் உள்ள தேனைச் சுட்டுவதில் நோக்கு. விரை-பலபொருள் ஒரு சொற் கிளவி. |
| இருமாநிலம் (8.10 4) | பரந்ததாய் உயர்ந்த தான உலகம் | மிக்க பரப்பை யுடைய பூமி | பல பொருள் ஒருசொற் கிளவி |

| | | | |
|---|---|---|---|
| சதுமூர்த்தி (8.10.9) | ஆற்றலையுடைய தலைவன் | விரோதியைப் போக்குகைக்குத் தக்க பல வடிவுகளையும் கொள்ளாநிற்கும் (36) | 'சதிர்மூர்த்தி' என்று பாடம் கொண்டு உரை 'மூர்ச்சா' என்ற தாதுப் பொருளில் உயர்ந்தவன் என்ற பொருள் |
| எம்கோக்கள் (8.10.10) | எனக்கும் என்னோடு உறவுடையார்க்கும் தலைவர்கள் | என் தலைவர்கள் | 'எம்' என்று பன்மை உரையில் |
| உன் தாமரை மங்கையும் நீயும் (9.2.3) | உன்னைவிட்டுப் பிரியாதவளாய் (அநபாயிநியாய்) பூவிற் பிறப்பால் உண்டான அழகையும் பருவத்தையுமுடையளான இலக்குமியும் | அடிமை செய்யுமிடத்திலும் இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்வதாகச் சொல்லிப் போகுமத்தைப் பற்றச் சொல்லுகிறது அழகு | பிராட்டியின் பெருமையில் நோக்கு |
| கவளமா களிற்றினிடர் (9.2.5) | ஸ்ரீ கஜேந்திரன் ஆயிரம் தேவ வருடம் ஆதாரமில்லாமல் நின்று பட்ட துக்கத்தைக் கெடும்படி | முதலை என்ற சிறிய பொருளின் வாயில் யானை அகப்பட்டதைக் காட்டி உரைகள் | யானையின் துயரத்தைக் காட்டுவதில் நோக்கு |
| பல்நிலா (9.2.5) | பல்லாய், நிற்கிற | பல்லாகிற நிலவை | நிலா-செய்யும் என்னும் வாய்ப்பாட்டுப் பெயரெச்சத்தில் உரை. நிலாவு-தோக்கியது |

| | | | |
|---|---|---|---|
| நம்முடையார் (9.2.7) | நம்முடையார் என்னும் படி உனக்கே வுரிய அடியரான நித்திய சூரிகள் | உன்னடியார் ('திருப் புளிங்குடியில் ஸ்ரீ வைஷ்ணவர்களை' என்று அரும்பதம் காட்டியுள்ளது) | 'ஒரு நாள்' என்ற பதம் நித்யஸூரிகளைக் காட் டிலும் வேறுபட்டவர் களைச் சொல்லிற்று அரும் பதம் மாறாக உள்ளது. |
| இமையவர்தமக் கும் ஆங்கு அனையாய் (9.2.7) | இமைகொட்டாதவர் களான பிரமன் முத லான தேவர்களுக்கும் அங்கு அவர்கள் விரோதியைப் போக்கி விருப்பத்தைப் பண்ணிக் கொடுத்துக் காப் பாற்றுபவனாய் | வேறு உபாயமில்லா மையான எங்களுக்கே அன்றிக்கே இறைவன் நான் என் றிருக்கிற பிரமன்முதலா னோர்க்கும் அப்படி ஆளுபவனானவன் | காக்கும் தன்மையில் நோக்கு. கண் இமைக் காதவர்—இமையோர். |
| அடியோம் (9.2.9) | உனக்கே வுரிய அடிய ரான நாங்கள் | வேறு பயனைக் கரு தாததையிட்டு நாங்கள் | அடிமைத் தன்மையில் நோக்கு |
| சேற்றிள வாளை (9.2.9) | தன்னிலமான சேற்றிலே வளருகையாலே இளகிப் பதித்த வாளைகள் | முத்தரைப் போலே யிருக்கிற வாளைகள் | வாளையின் இளமைக்குக் காரணம் காட்டி உரை |
| மேவிநன் கமர்ந்த (9.2.11) | அவனுடைய இசைவைப் பெற்று அத்தாலே | இந்த இயல்பான நினைவாலே பொருந் | மேவி—இசைவுபெற்று; புதுமையான பொருள் |

| | | | |
|---|---|---|---|
| | நன்றாகத் தரித்தவராய் | திக் கால் தரையிலே பாவினராயிற்று | |
| அணிஆர்தோள் (9.3.6) | ஆபரணங்களாலே நெருங்கின திருத் தோள்கள் | மிகவும் அழகிதான பெரியபிராட்டியார் திருத்தோள் | மலர்மங்கைக்கு அடை மொழியாக்கிச் சீபகுரை |
| பிரமனை முன் படைத்தானை (9.4.5) | பேரின்பம் பெற இச்சை யுடைய மக்களைப் படைக்கவேணும் என்கிற இச்சையாலே முற்படவே பிரமனை உண்டு பண்ணினவனாய் | உலகைப் படைப்பதற்காகப் பிரமனை முதலிலே உண்டாக்கினவனை | சீயர் மேலும் இறைவன் நினைவைக் காட்டும் வகையில் உரை |
| மார்வலகம் (9.4.7) | மார்வு அகலம் என்று பிரித்து மார்பத்திலே பெரிய இடத்தை | மார்வகலம் என்றே கொண்டு அகன்ற மார்பு | அகலம் என்பதற்குப் பெருமை என்ற பொருளில் பெரிய இடம் என்று சீயர் அருளியபடி |
| மிகுத்தானவன் (9.4.7) | வரபலபுஜபலங்களாலே கொழுத்த அசுரனான இரணியன் | ப்ராதிகூல்யத்தில் ஓரளவில் நில்லாதவன் | இரணியனுடைய பலத்தைக் காட்டி சீயர் உரை |
| உருகுமால் பெருகுமால் (9.6.7) | 'ஆல்' என்ற அசை வியப்பைக் காட்டுகிறது. | தம்மால் நியமிக்க ஒண்ணாத துக்கம் | பாடலில் 'உயிரின் பரமன்று' என்பதால் ஆச் |

| | | | |
|---|---|---|---|
| | | தோற்றச் சொல்லுகிறார் | சர்யத்தைக் காட்டுவதாக சியர் உரை |
| பூஞ்சோலை (9.6.2) | பூஞ்சோலைகளை உடைய | அழகிய சோலைகளை உடைய | பூ என்பதற்குப் பல பொருள் கிளவியாதலால் பூ-மலர் என்று சியர் கொண்டார் |
| வண்ணன் (9.6.3) | தன்மையன் | வடிவு | பலபொருள் கிளவி யாதலால் தன்மைப்பொருளில்சியருரை |
| உன்னைக்.... விழுங்குவன் (9.6.10) | உன்னைக்காணப்பெறில் ஸ்வரூப குண விபூதியிலே ஒன்றும் மிஞ்சாதபடி விழுங்கி அநுபவிப்பன் | ...வழுவிலா வடிமை செய்யவேண்டும் என்று பாரித்தது | மற்ற உரைகள் ஆழ்வாரின் கைங்கர்யத்தின் பாரிப்பைக் காட்டி உரை |
| தீவினையேன் விடுதூதாய் (9.7.4) | அவரோடு உறவு உண்டாயிருக்க அநுபவிக்கப் பெறாத கொடிய பாபத்தைப் பண்ணின நான்விடுகிற தூதாய்ச் சென்று | ஸர்வ ஸாதாரணமான உடம்பை யிழந்து உங்கள் காலிலே விழவேண்டும்படியான பாபத்தைப் பண்ணின என்னுடைய | இறைவனோடு உள்ள தலைவன்-அடியவன் உறவைக் காட்டி சீயர் உரை |
| மாதரை... வைத்தார்க்கு (9.7.6) | நாரீணாமுத்தமையான லக்ஷ்மியை அவனும் | நீங்கள் சொல்லும்... உங்கள் வார்த்தை | பிராட்டி இறைவனின் சேர்த்தியழகில் ஆசைப் |

| | | | |
|---|---|---|---|
| | 'அகலகில்லேன்' என்னும்படி போக்யமான தன் திருமார்பிலே உறையும்படி வைத்தார்க்கு | கொண்டாடிக் கேட்பிக்கும் புருஷகாரமும் உண்டென்கை | பட்டு சயர் உரை மற்றவை புருஷகாரத்திலே நோக்கு |
| பங்கயக்கண் சுடர் பவள வாயான் (9.7.7) | கலந்தபோதோடு பிரிந்தபோதோடு வாசியறச் செவ்வியழியாதபடி பங்கயம் போன்ற திருக்கண்களையும் ஒளியையுடைய பவளம் போன்ற திருவதரத்தையுமுடையவன் | பொகட்டுப்போனாலும் விடவொண்ணாதபடியான அவயவ சோபையை உடையவன் | |
| தாம் தம்மைக் கொண்டு (9.7.9) | சேஷித்வத்தையும் போக்யத்வத்தையும் சீலத்தையுமுடைய தாம் தம்மை யறிந்து வைத்துக் கொண்டு | அழகையும் சீலத்தையும் உடைய தாம்... | இறைவன் நினைவைக் காட்டி சயர் உரை |
| நீர் ஆர்மலர் (9.8.4) | ஓங்கி நிறைந்த பூவை உடைத்தான | ஓங்கிப் பரப்பு மாறப் பூத்த | ஆர்தல்-நிறைதல் பொருளில் சயருரை. |

| | | | |
|---|---|---|---|
| நான்ஏல் (9.8.4) | நானாகில் | ஏல்- அசை | அசைக்குப் பொருள்கூறி சீயர் உரை |
| தேவன் (9.8.9) | எல்லாக் கல்யாண குணங்களை உடையவன் | ஸர்வவிஸஜாதீயன் (வேறுபட்டவன்) | தேவ சப்தத்திற்கு வட மொழியில் ஸ்த்துதி என்ற தாது அடிப்படையில் குணம் என்ற பொருள் பற்றிச் சீயர் உரை |
| திண்ணம்மதிள் (9.8.11) | திண்ணியதாய் அழகிய பதியையுடைய | திண்ணிதான மதிளை உடைத்தான | திண் அம் என்று பிரித்து மதிளுக்கு அடையாக்கி சீயர் உரை. |
| மல்லிகைமணம் கமழ்வர் (9.8.11) | மல்லிகைபோலே தூய் தான மணம் பரவப் பெறுவர்கள் | 'ஸர்வகந்த:' என்கிற விஷயத்தோடு ஒப்புமை யாக்கப்படுவர்கள் | நித்யஸூரிகளால் கொண் டாடப்படுபவர்கள் என்று சீயர் உரை |
| நாரணநம்பீ (9.8.7) | ஸமஸ்தகுணவிபூதியோடு கூடும் தன்மையால் வந்த நாராயணனாம் தன்மையின் நிறைவை யுடையையாய் | அதுக்கு உறுப்பாக அடியார்கட்கு தாயன்பு டையனாய் அவர் களுக்கு உறுப்பாகப் பெற்றோம் என்றத் தால்பரிபூரணனான வனே | நாராயண பதத்தின் பொருளைக் காட்டி சீயர் உரை |

| | | | |
|---|---|---|---|
| சிவனொடு...<br>திருவாகம்<br>(9.9.6) | ஈச்வராபிமாநியான<br>சிவனோடு அவனுக்கும்<br>உத்பாதகனான பெரு<br>மையையுடைய பிரம<br>னோடு எல்லா கல்யாண<br>குணாத்மிகையான<br>நிரதிசய சம்பத்ருபை<br>யான நாரீணாமூத்த<br>மையான லக்ஷ்மியோடு<br>வாசியற அபாச்யமாகப்<br>பற்றும்படியான சீல<br>ஸம்பத்தையுடைத்தான<br>திருமேனி | பிராட்டியோடு அந்ய<br>பரரான ருத்ராதிக<br>ளோடு வாசியற உடம்பு<br>கொடுக்கும் சீலம்<br>ஸ்மாரகமாய் நித்ய<br>மான ஆத்மா முடியா<br>நின்றது | சிவன் பிரமன் பிராட்டி<br>மார்களின் இயற்கை<br>யான தன்மைகளைக்<br>கூட்டி சீயர் உரை |
| இக்கூர்தண்<br>வாடை<br>ஆருயிரள<br>வன்று<br>(9.9.7) | இப்படி பரிகர ஸாமக்ரி<br>யோடே செறிந்து<br>குளிர்ந்த வாடையானது<br>என்னாத்மாவினள<br>வன்று | மிக்கிருந்துள்ள குளிர்ந்த<br>வாடை இவ்வாத்மா<br>வோடு போமள<br>வன்று | இப்படி பரிகர ஸாகமக்ரி<br>யோடே என்று சொன்னது<br>அகிற்புகை, யாழின் நரம்<br>பொலி, பஞ்சமம், தன்<br>பகர்சாந்து முதலிய<br>வற்றைச் சேர்த்துச்<br>சொன்னபடி. இங்குக்<br>கூர் என்பது வாடைக்கு<br>அடைமொழியாக்கி மற்ற<br>உரைகள். சீயர் கூர் மேல் |

| | | | |
|---|---|---|---|
| | | | சொன்ன வற்றினோடு சேர்ந்து என்ற பொருளில் சொன்னார் |
| தனதாளடைந் தார்க்கெல்லாம் சரணமாகும் (9.10.5) | தன் திருவடிகளைக் குறித்து ப்ரபத்தி பண்ணின எல்லா அதிகாரிகளுக்கும் தானே உபாயமா னவனாய்க் கொண்டு | ஐந்மவ்ருத்தஜ்ஞாதங்க ளால் குறைய நின்ற நேரமாகிலும், தன் திருவடிகளையே உபாயமாகப் பற்றி னார்க்கெல்லாம் ரக்ஷகனாம் | 'சரணமாகும்' என்ற முற்றை எச்சமாக்கி சரணமானவனாய்க் கொண்டு என்று சிபர் உரை |
| தனதாளடைந் தார்க்கெல்லாம் அன்பனாகும் (9.10.6) | தன் திருவடிகளைப் பற்றினார்க்கெல்லாம் எல்லையற்ற மைய லையுடையனாய் | தன் திருவடிகளே உபாயம் என்று பற்றி னார்க்கு...என்கிற படியே அவர்கள் குற்றம் தோன்றாத படி மையலையுடைய னாயிருக்கும் | 'அன்பனாகும்' என்ற முற்றை எச்சமாக்கி உரை |
| நான்கு தோளுடை (10.1.1) | தாழ்ப்பாள் போன்ற தாய், வழிப்போக்கில் நிழலைச் செய்யும்படி கற்பகப்பணைபோலே | விரோதிகளைத் துணிக்கவல்ல தோளையுடையவன் | தோளின் தன்மையைக் காட்டுவதில் நோக்கு |

| | | | |
|---|---|---|---|
| | இருக்கிற நாலு திருத் தோள்கள் | | |
| ஈன் தண் துழாய் (10.1.2) | பூந்தாரை ஈன்கின்ற குளிர்ந்த திருத்துழாய் | தாரையும் குளிர்த்தி உடைய திருத்துழாய் | திருத்துழாயின் தன்மையில் நோக்கு |
| சுடர்கொள் சோதி (10.1.4) | பேரொளியையுடைத்தான ஒளிமயமாயுள்ள தனது திருமேனி | ஆபத்து காலத்திலே யாகிலும் நம்பாடே வரப்பெற்றோமே என்று பளபளப்பா யிருக்கிறவன் | இறைவனின் இயற்கை யான தன்மையில் நோக்கு |
| வான்பெரும் புகழ்தனி (10.1.7) | அஜாமேகாம் என்கிற உற்பத்தி....ப்ரகருதி முதலாக | கார்யஜாதமழிந்தாலும் அறியாமையாலே வலி தாய் அபரிச்சிந்நமாய் போகக்ஷேமங்களை விளைப்பதாய் அத்விதீய மான மூலப்ரக்ருதி தொடக்கமாக. | மூலப்ரகிருதி தன்மைகளை விளக்கமாகக் காட்டுவதில் நோக்கு |
| அரக்கர் புக்கழுந்த (10.1.8) | விபீஷணன்பேறு பெற்ற தைக் காட்டி அப்படி யில்லாமல் புக்கழிந்த | பெருமிடுக்கான அசுரர்கள் புக்கழுந்தும்படி | இராமாயணத்தின் கருத்தில் நோக்கு |

| | | | |
|---|---|---|---|
| அடியவர் (10.1.8) | குணத்துக்குத் தோற்று அடியரான நீங்கள் | வழித்துணையில்லை என்று துக்கப்படுகிற நீங்கள் | இராம வரலாறு பற்றிப் பாட்டின் பின் அடிகள் வந்தது கொண்டு குணம் காட்டி உரை. |
| அணிக்கொள் நாய்தடந் தோள் | எல்லா விதமான ஆபர ணங்கள் அடைவதற்கு ஏற்ற நான்குவகைப் பட்ட திருத்தோள்கள் | தனக்குத் தானே ஆப ரணமாய்ப் பெரிய நாலு திருத்தோள்கள் | தோள்களின் சிறப்பைக் கூறுவதில் நோக்கு |
| பள்ளி விரும்பினான் (10-2-1) | விரும்பினான் பள்ளி என்று மாற்றி அடியா ரைப் பரிமாறுவதில் ஆசை தோன்றும்படி விரும்பிக் கண்வளர்ந்த ருளுகிறவன் | பர்யங்க வித்தையிற் சொல்லுகிறபடியே யாய்த்து அங்குக் கண்வளர்ந்தருளுகிறது | முன்பின் மாற்றி உரை |
| சிக்கெனப் புகுதிராகில் (10-2-3) | அநந்ய ப்ரயோஜநத்வ வ்யவஸாயத்தை உடை யீர்களாய்க் கொண்டு அடைந்தீர்களாகில் | 'ந ச புநராவர்த்ததே' என்கிறபடியே மீளாத ருசியையுடையீர்க ளாய்க் கொண்டு | நம்பிக்கை நிலையில் வேறுபாடு |
| தீரும் நோய் வினைகளெல்லாம் (10.2.3) | வேறு பயனான ஐச்வர்ய கைவல்ய ஆசையான | கிட்டுவுதிகோளாகில் துக்கங்களும் துக்க | சொற்பொருள் |

| | | | |
|---|---|---|---|
| | நோயும் அதுக்குக் காரணமான கருமங்களு மழியும் | ஹேதுக்கள் எல்லாம் நசிக்கும் | விளக்கம் |
| திண்ணம் நாம் அறியச் சொன்னோம் (10-2-3) | நாம் அறிய‌த் திண்ணம் சொன்னோம் என்று மாற்றி, இவ்வர்த்தத்தில் நிலவரான நாங்கள் உங்களுக்கு அறியும்படி த்ருடமாகச் சொன்னோம் | அநுபவித்துக் கைவந்த நாங்கள், ஒருத்தர்க்கும் தெரியாத ரகசியத்தை வ்யக்தமாக அறியும்படி சொன்னோம் | திண்ணம் என்பதைச் சொன்னோம் என்பதற்கு அடையாக்கி உரை |
| புண்ணியம் செய்தவாறே (1(-2-4) | ஏகாரம் அசை | ஏகாரம் ஆச்சரியத்தில் | உபதேச பதிகமாதலால் அசையாக்கி உரை |
| கோவிந்தனா3ர (10-2-7) | 'தமஸ்ஸானது உயர்ந்த தேவனான இறைவனினிடத்தில் ஒன்றிவிடுகிறது' என்கிறபடியே அந்த நிலையில் விளங்குவதான திருமேனியோடு கூடியவன் | | கோ என்பதற்கு சாந்தி என்ற வடமொழிப் பொருள் கொண்டு இங்கு விளங்குவதான என்றபடி |

| | | | |
|---|---|---|---|
| எம்பரம மூர்த்தி (10-2-7) | இக்காரணத்வத்தை நமக்குத் தெரிவித்த ஸர்வாதிக சேஷி | அடியார்க்கு எளியனான ஸர்வேச்வரன் | மூர்த்தி என்பதற்கு ஸமுச்சாயம் என்ற தாதுப்பொருள் உயர்ந்தவன் என்பதைக் கொண்டு உரை |
| ஆய்ந்து கொண்டு (10.2.10) | பல ஸங்க, கர்த்ருத் வங்களாகிற தூராலும் மயிரும் புழுவும் படாதபடி ஆராய்ந்து கொண்டு | புஷ்பாத்யுபகரணங் களைக் கொண்டு | ஆராதனையில் சீயர் நெறி |
| நீ தகவிலை தகவிலை (10.3.1) | 'நீ பெண்களை நலியலாகாது' என்கிற பொதுவான கிருபையையும் உடையவனில்லை. 'நோவுபட்டாரை நலியலாகாது' என்கிற விசேஷ க்ருபையும் உடையவனில்லை' என்று இந்த க்ருபையில் லாமை என்பது தன்மையாகியே விட்டது என்று கருத்து | நீ தகவுடையையல்லை என்னுமிடத்துக்குக் கொடியெடுக்கிறேன் என்கிறாள் | தகவுகள் யாவை என்பதை விளக்கி உரை |

| | | | |
|---|---|---|---|
| வடித்தடங் கண்ணிணை (10.3.6) | உன்னைப்போலேவன்மை யின்றியே பலமில்லாதவர் களான எங்களுக்கு ஆற்றாமையாலே மாவடு விற் பிளவு போலே அழகிய தாய்ப் பெருத்து, நீ கொண் டாடும் கண்கள் இரண்டில் | கூர்த்துப் பெருத்த கண்கள் | உவமை காட்டி உரை |
| பேர் வான வர்கள் (10.4.1) | இவ்வுழுக்கும் ப்ராப்தி க்கும் ரக்ஷகத்வத்துக்கு மான திருநாமங்களை, பரமபத வாஸிகளான வர்கள் | இவ்வருகில் ஆக்க ரான தேவர்கள் அன் றிக்கே அவ்வருகில் பெருமக்கள் ஏத்தும்படி யான பெருமையை யுடையவன் | பாடலின் முதல் மூன்று அடிகளில் உள்ள இறைத்தன்மை யைச் சேர்த்து சியர் உரை |
| வாள்கெண்டை ஒண்கண் (10.4.3) | கூர்மை நெடுமையாலே வாளும், குளிர்த்திமிளிர்த்தி யாலே கெண்டையும் போலியாம்படி விலக்ஷண மான கண்ணையுடையள் | ஒளியையுடைத்தான கெண் டைபோலே முக்தமாய் வைத்த கண்வாங்காதே கண்டுகொண்டு இருக்க வேண்டும்படியான அழகிய கண்களை யுடையவள் | வாளின் தன்மையும் கெண்டையின் தன்மை யும் சேர்த்து சியர் உரை |
| கைச்சக்கரத் தண்ணல் (10.4.5) | காப்பாய், போக்யமான திருவாழியைக் கையிலே | கையிலே திருவாழியை யுடைய எல்லாருக்கும் | திருவாழியின் பெருமையைக் |



| | | | |
|---|---|---|---|
| | யுடையவனாய், தனக்கே உரிய ஸ்வாமி | தலைவன் | காட்டி உரை |
| மணி நின்ற சோதி (10.4.7) | நீலமணியின் நிறத்தில் ஒளிபோலே யிருக்கிற நிறத்தையுடையவன் | நீலமணியொளியை வடிவாக வகுத்தாற்போலே யிருக்கிற வடிவையுடையவன் | சோதி—பலபொருள் ஒரு சொற்கிளவி |
| பண்டே பணித்த பணிவகை (10.4.9) | பூர்வகாலத்திலே ஸர்வாதிகனான ஸர்வேச்வரன் அருளிச்செய்த மந்த்ர ரஹஸ்ய ப்ரகாரம் | நமக்காக இன்றன்றிக்கே ஸர்வாதிகன் ஸர்வஸாதாரணமாக அன்று அருளிச்செய்த பாசுரத்தின் படியே 'மாமேகம்'.... என்றிறே பாசுரம் | திருமந்திரத்திலே நோக்கு |
| புகையால் விளக்கால் புதுமலரால் நீரால் (10.4.10) | 'புது' என்பதை நான்கிற்கும் கொண்டு சீயர் உரை | பாட்டின்படியே | புதுமை காட்டி உரை |
| மாதவன் (10.5.6) | 'பிராட்டியோடே கூடிக் களிக்கிறான் என்கிறபடியே' | நம் பூர்வவ்ருத்தம் பாராதே விஷயீகரிப்பிக்கைக்கு அருகே இருப் | பிராட்டியின் சேர்த்தியில் நோக்கு |

| | | | |
|---|---|---|---|
| | அலர்மேல்மங்கை யோடே | பாரு முண்டு | |
| மாதவன் என்றென்று (10.5.7) | புருஷகாரயோக மென்ன, கைங்கர்யத்தை வளர்க்கும் தன்மை என்ன....பயனைக் கொடுப்பவன் என்றும் நினைத்து | நாராயணசப்தத் தோடே இத்தைச் சேர்த்துச் சொல்லப் பாருங்கோள் | துவயத்தில் நோக்கு |
| வினைவல்லிருள் என்னும் முனைகள் (10.5.10) | பூர்வாகோத்தராகாதி ருபகர்மங்களும், அதுக் கடியான அந்யதாஜ்ஞான விபரீதஜ்ஞானருபமான ப்ரபல தமோ விகாரங் களும், என்றென்று பரி கணிக்கப்பட்ட விரோதி வர்க்கத்தினுடைய தேஹ ஸம்பந்தம் ருசிவாசனை களாகிற உத்யோகங்கள் (முயற்சிகள்) | வினை-கர்மம் வல்லிருள்-ப்ரபல மான அஜ்ஞானம்; அதுக்கடியான தேஹஸம்பந்தம் இவற்றைப் பற்றி வரும் ருசிவாசனை களாகிற இத்திரள்கள் | முனை என்பதற்கு முயற்சி என்ற பொருளில் சீயர் உரை. தேஹஸம்பந்தம் சேர்த்து முனை என்ப தற்கு உரைவழங்கினார் |
| வளம்மிக்க வாட்டாற்றான் (10-6-3) | சீலஸௌலப்யாதி குண ஸம்பத்தினுடைய மிகுதி யை உடையனாய்க் | பரமபதத்திற்காட்டில் ஸம்ருத்தி மிக்கிருந் துள்ள திருவாட்டாற் | இறைவனுக்கு வளம் என்பதை அடை யாக்கிச் சீயர் உரை. |

| | | | |
|---|---|---|---|
| | கொண்டு திருவாட்டாற் றிலே நிற்கிறவன் | றைத் தனக்கு நிருபக மாகவுடையவன் | மற்றவர்கள் ஊருக்கு அடையாக்கினர் |
| தானேறித் திரிவான் அத்தாளிணை (10.6.5) | தான் விரும்பியேறி ஆச்ரி தார்த்தமாக ஸஞ்சரிக்கும வனுடைய அந்த போக்ய மான திருவடிகள் இரண்டும் | அவனுக்காகவுமன் றிக்கே அவனோட்டை சுகஸ்பர்சத்துக்காகத் தானே ஏறி ஸஞ்சரிக்கு மவனுடைய திருவடிகள் | பாடலின் மூன்றாம் அடியிலுள்ள 'திகழ் பாதன்' என்பதைக் கொண்டு சீயருரை |
| பணிவகையே (10.6.5) | "பண்டே பரமன் பணித்த பணிவகையே" என்கிற படியே | அவன் திருவுள்ளமான படியே அதாவது மா மேகம் சரணம் வ்ரஜ என்றத்தைச் சொல்லு கிறார்... | சீயர் திருமந்தி ரத்தைக் காட்டி உரை |
| தாமரைக் கண் என்னப்பமான் (10.6.6) | திருவடிகள் தலைமேல் வைத்ததால் வந்த உகப்பு தன்னதாம்படி தோன்ற, தாமரைபோலே சிவந்த திருக்கண் களையுடையனாய் என்னைப் பெறாப்பே றாகப் பெற்றானாய்க் கொண்டு எனக்குத் தலைவனானவனாய் | என் முன்னே நின்று குளிர நோக்கி ஜிதம் என்னப் பண்ணா நின் றான் | ஆழ்வாரைப் பற்றி இறைவன் உயர்ந்த வனாக எண்ணியதைக் காட்டி சீயர் உரை. |

| | | | |
|---|---|---|---|
| நம் கோவிந்தன் குடி கொண்டான் (10.6.7) | 'நிலைபேரான்' என்கிற படியே நமக்கு பவ்ய னாக கண்ணனானவன் பரிபூர்ணமாக நம் நெஞ்சைக் குடியிருக்கும் வீடாகக் கொண்டான் | ஆச்ரிதவத்ஸலனான க்ருஷ்ணன் 'அகம்படி வந்து புகுந்து' என்கிற படியே வந்து புகுந்தான் (24) | முன்பாட்டில் நிலை நின்று பேராமல் இருந்ததைக் காட்டி சீயர் உரை |
| ஒருமாவயிற் றினுள்ளே (10.7.6) | நிகரற்றதாய் அடக்கின விடம் தெரியாமல் அடக்கவல்ல பெரிய சக்தியையுடைய திருவயிற் றினுள்ளே ஒருபுடையிலே | நிகரற்றதாய்ச் சிறிதான வயிற்றிலே | மா என்பதற்குப் பெருமையைக் காட்டி சீயர் உரை |
| ஓர் மாயையே (10.8.3) | அஜ்ஞாநத்தை | மூலப்ரக்ருதியை | கருத்துப்பொருள் ஒன் றாயினும் பதத்திற்குப் பொருள் சொன்னதில் பிறவியில் நிற்கை யாகிற அறியாமையைக் காட்டி சீயர் உரை |
| சொல்லார் தமிழ் ஆயிரத்துள் (10.8.11) | ஆழ்வாருடைய சொல்லாய்ச் சேர்ந் திருக்கிற தமிழான ஆயிரத்துள் | சொல்சேர்ந்த தமிழான ஆயிர | ஆழ்வாருக்கு முதன்மை காட்டுவதில் நோக்கு |

| | | | |
|---|---|---|---|
| கதிரவர் அவரவர் கைநிரை காட்டினர் (10 9.4) | 12 சூரியர்களும் தம் தாம் முறையிலே முக்தன் சூரியகிரணம் வழியாக மேலுக்குச் செல்லுகிறான் என்கிற படியே, கிரணங்களாகிற கைகளை வரிசைவரிசை யாகக் கொடுத்தார்கள் | ஆதித்யர்கள் நிலவிளக்குப் போலே இங்ஙனே எழுந்தருள... பார்த்தருள, பார்த்தருள எ‹ று கைகளை நிரையே கா ட்டினார்கள் | கதிரவர் தன்மையைச் சொல்வதில் சிறப்பு |
| விதிவகை (10.9.10 | நம்முடைய பாக்யரூப மான ஈச்வர நியோக ப்ரகாரம் | பாக்யம் | இரட்டுற மொழிதலில் சியர் உரை |
| அம்தண் பாழேயோ (10.10.4) | உனக்கு லீலோபகரண மாகையாலே விலக்ஷ ணமாய், குணத்ரய ஸாம்யாவஸ்த்தமா கையாலே, குளிர்ந்தி ருப்பதாய், போக மோக்ஷங்களை விளைத் துக்கொள்ளுகைக்கு... | தன்னுடைய ஏகதேசத் திலே சக்தியை யுடைத்தாய்.... நிர்வாஹகனான வனே | அழகையும் குளிர்ச்சி யையும் காட்டிப் பாழுக்கு அடையாக்கி உரை |
| எம்பரம் (10.10.4 | என்னுடைய தாய் அவ னிட்ட வழக்கான உடல் | என் காரியம் | ஆழ்வார் தன்மையில் நோக்கு |

| | | | |
|---|---|---|---|
| என்னை (10. 0.4) | ப்ராப்தி வரையில் மனத்தில் நேராகக் காணும்படி செய்து உன்னை ஒழியச் செல்லாத என்னை | உன்னாலல்லது செல்லாத என்னை | ஆழ்வாரின் நினைப்பில் நோக்கு |

□ □ □

# துணை நூற் பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்

1. கிருஷ்ணமாசாரியார், சே. (ப.ஆ), 'பகவத் விஷயம்' (10 பகுதிகள்), நோபில் அச்சுக்கூடம், சென்னை, 1926.

2. திருவேங்கடாசாரியார், புதுப்பட்டு, (ப.ஆ), 'திருவாய் மொழி ஆறாயிரப்படி, பன்னீராயிரப்படி உரை, ஈடு அவதாரிகைகள்' (7 பகுதிகள்), ஸ்ரீநிகேதன முத்ராக்ஷர சாலை, குரோதன வருடம் 1925—26.

## துணைமை ஆதாரங்கள்

1. அண்ணா (உ.ஆ), 'தைத்திரீயோபநிடதம்', ஸ்ரீராம கிருஷ்ண மடம், சென்னை, 1963, 2 ஆவது பதிப்பு.

2. அண்ணா (உ.ஆ.), 'உபநிடத சாரம்', ஸ்ரீராம கிருஷ்ண மடம், சென்னை, 1967, மறுபதிப்பு.

3: அண்ணா (உ.ஆ), 'உபநிடத சாரம்' (ப்ரச்ன-முண்டக-மாண்டூக்ய-ஐதரேய உபநிடதங்கள்), ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை, 1965, மறுபதிப்பு.

4. அண்ணா (உ.ஆ) 'உபநிடத சாரம்' (5ஆம் பாகம்), ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை, 1968.

5. அண்ணா அப்பங்கார் ஸ்வாமி, 'பழநடை விளக்கம்', ஸ்டார் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை, 1891.

6. அண்ணா அப்பங்கார் ஸ்வாமி, 'த்ரிம்சத் ப்ரச்நோத்தரம்', ஸ்டார் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை, 1891.

7. அண்ணங்கராசாரிய ஸ்வாமி, ப்ர. ப., 'திருவிருத்தம், திவ்வியார்த்த தீபிகை', மாடல் அச்சுக்கூடம்- சென்னை, 1930.

8. அண்ணங்கராசாரிய ஸ்வாமி, ப்ர. ப., 'ஸ்ரீராமாநுஜன் 224', காஞ்சி.

9. அண்ணங்கராசாரிய ஸ்வாமி, (ப. ஆ), 'ஆசாரிய இருதயம்', கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சி, 1950.

10. அண்ணங்கராசாரிய ஸ்வாமி, ப்ர. ப., 'நித்தியாநு சந்தானம்', பகுதி இரண்டு, காஞ்சி, 1953.

11. அண்ணங்கராசாரிய ஸ்வாமி, (ப. ஆ), 'ஸ்ரீமத் வரவர முனி கிரந்தமாலை (ஸ்ரீவசன பூஷணம்).'

12. அண்ணங்கராசாரிய (ப, ஆ.), 'பகவத் விஷயம்-ஒன்பதி னாயிரப்படி, இருபத்துநாலாயிரப்படி, ஈடு முப்பத்தா றாயிரப்படி (1 முதல் 10 பத்துக்கள்) 5 பகுதிகள்', குரு அச்சகம், சென்னை, 1975-76.

13. அண்ணங்கராசாரிய ஸ்வாமி, ப்ர. ப., 'ஸ்ரீராமாநுஜன்' 334 முதல் 347, காஞ்சி, 1976-77.

14. அண்ணங்கராசாரிய ஸ்வாமி, ப்ர. ப., 'வால்மீகி ராமாயண வசனம்', பாலகாண்டம் முதல் சுந்தர காண்டம் வரை, ஜி. எல். அச்சுக்கூடம், சென்னை, 1871, 4ஆவது பதிப்பு.

15. அண்ணங்கராசாரியார் சுவாமி, ப்ர. பி. திருநாங்கூர், 'வரவரமுநி சதக உரை', ஸ்ரீவாதிபீகரார்ய ஸூக்தி மாலிகா, இரண்டாம் பாகம், ப்ர. ப. அண்ணா கைங் கர்ய சபை, காஞ்சீ, 1986.

16. அரங்கராசன், இரா., 'நம்பிள்ளை உரைத்திறன்', அமுத நிலையம், சென்னை, 1986.

17. அரவிந்தன், மு. வை., 'உரையாசிரியர்கள்', மணி வாசகர் நூலகம், சிதம்பரம், 1977.

18. அருணாசலம், மு., 'தமிழ் இலக்கிய வரலாறு', 10 ஆம் நூற்றாண்டு, 11 ஆம் நூற்றாண்டு, காந்தி வித்தி யாலயம், மாயூரம், 1971,

19. அழகிய மணவாளச் சீயர், 'பகவத் கீதை வெண்பா', ஸ்ரீரங்கம் வாணி விலாச அச்சகம், 1906.

20. இராமகிருஷ்ணய்யங்கார், 'அமுதவிருந்து', குரு அச்சகம், சென்னை, 1982.

21. இராமகிருஷ்ணய்யங்கார், 'திவ்வியப் பிரபந்த அகராதி', அரசாங்கக் கையெழுத்துச் சுவடி வெளியீடு, சென்னை, 1961,

22. கிருஷ்ணசாமி அய்யங்கார், எஸ். (ப. ஆ), 'ஆழ்வார் ஆசாரியர்கள் வைபவம்', பா. பூ. ஸ்ரீவைஷ்ணவ சபா பொன்விழா மலர், ஸ்ரீநிவாசம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி, 1978.

23. கிருஷ்ணசாமி அய்யங்கார், (ப. ஆ), 'குருபரம்பரா பிரபாவம் ஆறாயிரப்படி', ஸ்ரீநிவாசம் பிரஸ், திருச்சி, 1968.

24. கிருஷ்ணசாமி அய்யங்கார், (ப. ஆ), 'முமுட்சுப்படி', ஸ்ரீநிவாசம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி, 1970.

25. கிருஷ்ணசாமி அய்யங்கார், (ப. ஆ), 'பெரிய திருமுடி யடைவு', (கந்தாடை நாயன் அருளியது), ஸ்ரீநிவாசம் பிரஸ், திருச்சி, 1975.

26, கிருஷ்ணசாமி அய்யங்கார், (ப. ஆ), 'வார்த்தாமாலை' ஸ்ரீநிவாசம் பிரஸ், திருச்சி, 1983.

27. கிருஷ்ணசாமி அய்யங்கார், (ப. ஆ), 'நாலாயிரத் திவ்ய பிரபந்தம்' 3 பாகம், ஸ்ரீநிவாச அச்சுக்கூடம், திருச்சி, முதல் பதிப்பு, 1981.

28. கிருஷ்ணசாமி அய்யங்கார், (ப. ஆ), 'ஸ்தோத்ர ரத்ந வ்யாக்யாநம், சதுச்சலோகி வ்யாக்யாநம், ஜிதந்தே ஸ்தோத்ர வ்யாக்யாநம்,' ஸ்ரீநிவாசம் பிரஸ், திருச்சி, இரண்டாவது பதிப்பு, 1976.

29. கிருஷ்ணமாசாரியார் ஸ்வாமி, தி. அ. 'திருமலை அனந்தாழ்வான் வைபவம்' (தமிழாக்கம்), திருமலை திருப்பதி தேவஸ்தானப் பதிப்பு, திருப்பதி, 1985.

